முதற்பதிப்பு 1949
இரண்டாம் பதிப்பு 1952
மூன்றும் பதிப்பு 1955 திருத்திய பதிப்பு

## புலவர் குழந்தையின் பிற நூல்கள்



★

1 இராவண காவியம் (அரசினரால் தடை செய்யப்பட்டது)

2 தமிழ் வாழ்க (நாடகம்)

3 தமிழெழுத்துச் சீர்திருத்தம்

4 இன்னூல் (இலக்கணம்)

5 திருக்குறளும் பரிமேலழகரும்

6 நெருஞ்சிப் பழம் (காதற் செய்யுள்)

7 கொங்கு நாடும் தமிழும்

8 கொங்குக் குலமணிகள்

9 தீரன் சின்னமலை

விலை ரூ. நான்கு



சாந்தி பிரஸ், சென்னை - 1

திருவள்ளுவர்

செய்த

# திருக்குறள்

குழந்தையுரை

புலவர் குழந்தை

எழுதியது

வெளியிடுவோர் :

சிவலிங்க நூற்பதிப்புக் கழகம்

ஈரோடு

# பொருளடக்கம்



## பால் இயல் அதிகாரம்

# அதிகார அடைவு

## 1 அறத்துப்பால்

**1 முதலியல்** : முதலியல் முப்பாற்கும் பொதுவாகலின் நூலின் முதலிலில் வைக்கப்பட்டது.

இனி, முதலியலில் கூறப்படும் அதிகாரங்கள் நான்கனுள், மக்கள் அறம் பொருளின்பம் என்னும் முப்பாலிலும் முதன்மையுற்று வாழவேண்டும் என்பதே வள்ளுவர் கருத்தாகலின், அம் முதன்மையான குணங்களின் உருவகமான **இறைநலம்*** முதலிலும், அத்தகைய குணங்களுடன் மக்கள் இனிது வாழ மிகமிக இன்றியமையாதது உணவு. அவ்வுணவைத் தருவது மழை. ஆகையால், அதன்பின் **வான்சிறப்பும்**, உலகியல் தட்டுத் தடையின்றி இனிது நடைபெற மழை எங்ஙனம் இன்றியமையாததோ அங்ஙனமே, மக்களை நல்வழியில் இனிது வாழவைப்பதே தங்கள் கடமையாக வுடையராகையால் அதன்பின் **நீத்தார் பெருமையும்**. செய்வன தவிர்வன முப்பாற்கும் பொதுவும், அறத்துப்பாற்குச் சிறப்பு முடைமையோடு, அங்கீத்தார் வகுத்தமையாகலின் **அறன் வலியுறுத்தல்** இறுதியிலும் வைக்கப்பட்டன.

**இல்லறம், துறவறம்** : இல்லறம் இனிது நடத்தி மூப்பெய்திய பின், இல்லறத்தை நீத்துத் துறவறம் மேற்கொள்வதால் **இல்லறம்** முன்னும் **துறவறம்** பின்னும் வைக்கப் பட்டன.

**2 இல்லறவியல்** : இவ் வியலுக்கு உரியதாகையால் **இல்வாழ்க்கை** முதலிலும், இல்வாழ்க்கை இனிது நடைபெற இல்லாளின் மாட்சியே காரணமாகையால் அதன் பின் **வாழ்க்கைத் துணைநலமும்**, இல்வாழ்க்கையின் பயனாகிய **மக்கட்பேறு** அதன் பின்னும் வைக்கப்பட்டன. இனி மன

---

* இப் பெயர், தமிழ்ப் பெரியார், **திரு. வி. க.** அவர்கள் கூறியது.





மொழி மெய்களின் நற்பண்புகளான **அன்புடைமை இன்சொல், விருந்தோம்பல்** என்னும் மூன்றும் இல்வாழ்வானுக்கு இன்றியமையாச் சிறப்புடையன வாகலின் அவை அம்முறையே வைக்கப்பட்டன. அதாவது இல்வாழ்வான் சுற்றத்திடத்தும், விருந்தினரிடத்தும் முதலில் அன்புகாட்ட வேண்டும்; பின் இன்சொல் சொல்லவேண்டும்; அதன்பின் விருந்திட்டுப் போற்றவேண்டும் என்பதாம். இனி, இல்வாழ்வாரும் விருந்தினரும் பிறர் செய்த நன்றியை அறிந்து நடத்தல் வேண்டும் ஆகையால், விருந்தோம்பலின் பின் **செய்ந்நன்றி யறிதல்** வைக்கப்பட்டது. அது நல்லொழுக்க முடையார்க்கே அமையுங் குணமாகையால் அதன்பின் **ஒழுக்க முடைமையும்,** ஒழுக்க முடையார்க்கே மனமொழி மெய்கள் தீநெறிக்கட் செல்லாமல் அடக்கியாள முடியுமாகையால் அதன்பின் **அடக்க முடைமையும்,** மனமொழி மெய்களை அடக்கியாளும் அடக்கமுடையாராலேயே எல்லோரிடத்தும் ஒப்ப நடக்க முடியுமாகையால் அதன்பின **நடுவுநிலைமையும்,** நடுவு நிலைமை என்னும் நற்குணம் உடையாரே தம் மனைவியைப் பிறர் விரும்பினல் தமக்கு எப்படியிருக்குமோ அப்படியே பிறர்க்கும் இருக்கும் என்னும் பொதுமையை உணர்வாராகையால் அதன்பின் **பிறனில் விழையாமையும்,** தனக்குள்ளது பிறர்க்கும் உண்டு என்னும் நற்குணமே பொறுமைக்குக் காரணம் என்பது தோன்ற அதன்பின் **பொறையுடைமையும்,** பிறர் குற்றத்தைப் பொறுத்தலேயன்றிப் பிறர் பெருமை கண்டு பொருமைப் படுதலும் கூடாதாகையால் அதன்பின் **அழுக்காருமையும்,** பிறர் பொருட் பெருமைகண்டு பொருமைப் படுதல் பிறர் பொருளை விரும்புதற்குக் காரணமாகுமாதலால் அதன்பின் **வெஃகாமையும்,** காணுத விடத்தே பிறர் பொருளை விரும்புதல் போல, பிறரைக் காணுத விடத்தே பழித்துக் கூறப்படுதலின் அதன்பின் **புறங்கூருமையும்,** புறங்கூற்றோடொத்த சொற்குற்ற முடைமையானும், கேட்போர்க்கும் தமக்கும் பயனின்மையானும் அதன்பின் **பயனில சொல்லாமையும்,** இவையனைத்தினும் குற்றமுடையதாகலின் **தீவினையச்சத்தை** இறுதியினும் வைத்து, இல்வாழ்க்கையின் பயனை பிறர்க்குப் பயன்பட வாழும் **ஒப்புர வறிதல், ஈகை** என்பனவற்றை அதன்பின்னும், ஒப்புரவறிதல் ஈகையினும்

## 2 பொருட்பால்

பொருட்பாலில் கூறப்படும் ஆட்சித் தலைமையுடைமையின் அரசியல் முதலிலும், அரசரோ டுடனிருந்து ஆட்சி நடத்தலின் அமைச்சியல் அதன் பின்னும், ஆட்சி நடப்பதற் கடிப்படையாகலான் கூழியல் (நாடு) அதன்பின்னும், அரசுக்குப் பாதுகாப்பாக உடைமையான் அரணியல் அதன் பின்னும், அரசோடு அரணுக்கும் பாதுகாப்பாக உடைமையால் படையியல் அதன்பின்னும், படைபோல அரசுக்கு ஒரு புடை ச ப்புடைமையான் நட்பியல் அதன்பின்னும், ஆளப்படுவோ ராகிய குடிமக்களின் தன்மை கூறும் குடியியல் இறுதியினும் வைக்கப்பட்டன,

1 அரசியல் : அரசியற்கு உரியதாகலின் இறைமாட்சி முதலில் வைக்கப்பட்டது. அரசர்க்கும் ஏனையோர்க்கும் கல்வி பொதுவாகலானும், அரசியல் நடத்தற்கு இன்றியமையாமையானும் இறைமாட்சியின் பின் கல்வியும், அதன் பின் அதன் மறுதலையான கல்லாமையும், கற்பினும் கற்றோர் பேச்சைக்கேட்கவேண்டும் என அதன்பின் கேள்வியும், அறிவின் சிறப்பிற்குக் கல்வியே காரணமாகையால் அதன் பின் அறிவுடைமையும், அறிவுடையோர்க்கே குற்றங்களையறிந்து நீக்கி வாழ முடியுமாகையால் அதன்பின் குற்றங் கடிதலும், தங்கண் நிகழும் குற்றங்களை எடுத்துரைத்து அவை செய்யாமல் வாழ்விப்போர் கற்றுணர்ந்த சான்றோரே யாகையால் அதன்பின் பெரியாரைத் துணைக்கோடலும், பெரியார்க்கு மறுதலையான சிறியாரோடு சேரக்கூடாதாகையால் அதன்பின் சிற்றினஞ் சேராமையும், சிற்றினஞ் சேரார், பெரியார் போலவே உற்றிடத்துதவும் சுற்றத்தினரைத் தழுவிக்கொள வேண்டுமாகலின் அதன்பின் சுற்றந் தழாலும், இனி இவ்வாறு கற்றறிவைப் பெற்று, பெரியாரைத் துணைக்கொண்டு சிற்றினஞ் சேராது சுற்றந் தழுவிக்கொண்ட பின்னரே அன்னோரோடும் சூழ்ந்து செய்யவேண்டுவன செய்தலின் அதன்பின் தெரிந்து செயல் வகையும், அவ்வாறு ஒரு வினையைச் செய்ய மேற்கொள்ளின் அவ்வினை செய்யுந் திறன், காலம், இடம் இவற்றை யறிந்து அவற்றிற் கேற்பச் செய்யவேண்டு மாகலின் அதன்பின் முறையே

வலியறிதல், காலமறிதல், இடனறிதல் என்பனவும், இனி வலி யும் காலமும் இடனும் அறிந்து செயல் செய்வோன் செய் யும் வகையை மறவாமல் செய்யவேண்டு மாகலின் இடனறி தலின் பின் பொச்சாவாமையும், கால முதலியன வறிந்து மற வாமல் எண்ணிச் செய்வோன் அச் செயல் செய்தற்குத் தகுதியுடையோரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டு மாகலின் அதன்பின் தெரிந்துதெளிதலும், தெரிந்து தெளிந்த வரில், இவன் இவ்வினையை முடிக்கத் தகுதியுடையவன் என்று பார்த்து, அவனிடம் அவ்வினையை ஒப்படைக்க வேண்டுமாகலின் அதன்பின், தெரிந்து வினையாடலும், ஒற் றாடலும் அதனேடொத்தலின் அதன்பின் ஒற்றாடலும் வைக் கப் பட்டன.

இவ்வாறு கற்று அறிவைப் பெற்றுக் குற்றங் கடிந்து பெரியாரைத் துணைக்கொண்டு செய்யும் வகையை மறவாமல் தெளிந்து தெளிந்தாரைக் கொண்டு உளவறிந்து நாடாள், வோர்க்கு நல்லாட்சி முறை இன்றியமையாத தாகலின் ஒற்றாடலின்பின் செங்கோன்மையும், அதன்பின் அதன் மறுதலையான கொடுங்கோன்மையும், குடிமக்கள் அஞ்சுதற் குக் காரணமான செயல்கள் கொடுங்கோன்மையினும் கொடியதாகலின் அதன்பின் வெருவந்த செய்யாமையும், வெருவந்த செய்தல் காணின் பழகிய நண்பரும் வெருவுவரா கலின் அதுவிலக்க அதன்பின் கண்ணோட்டமும் வைக்கப் பட்டன.

இனி, கண்ணோடிச் செங்கோல் நடத்தும் அரசன் வினை செய்தற்கண் சோம்பலின்றி, மனமுயற்சி மெய்முயற்சி யுடன் வினைசெய்ய வேண்டுமாகலின் அதன்பின் முறையே மடியின்மை, ஊக்கமுடைமை, ஆள்வினையுடைமை என்பவை வைக்கப்பட்டன. அவ்வாறு இருவகை முயற்சியுடன் வினை செய்வோன், அதனால், வருந் துன்பத்திற்கு மனமழியக் கூடாதாகையால் அதன்பின் இடுக்கணழியாமை வைக்கப் பட்டது.

2 அமைச்சியல்: அமைச்சியலுக் குரியதாகலின் அமைச் சர் தன்மை கூறும் அமைச்சு முதலிலும், அதன்பின் அமைச்சர்க்கு இன்றியமையாத சொல்வன்மையும், சொ வன்மை யிருக்கினும் அதை அவையின் தன்மையறிந்

சொல்லவேண்டு மாகலின் அதன்பின் அவை... நிலை அவையின் தன்மையறிந்துபேசுவோன், அவ்... வை... நின்றுங் கண்டு அஞ்சினுல் பேச்சின் பயன் முழுதும் பெ... தாகையால் அதன்பின் அவையஞ்சாமையும், ஓரவையன... பேசுவோர் அவ்வவையோர் குறிப்பறிந்து பேசுதலே ஏற்புடைத்தாகலின் அதன்பின் குறிப்பறிதலும், குறிப்பறிந்து கூறிச் செய்யும் செயல் நற்செயலாக இருக்கவேண்டுமாகலின் அதன்பின் வினைத்தூய்மையும், தூய்மையான வினையையும் திறமையுடன் செய்யவேண்டுமாகலின் அதன்பின் வினைத்திட்பமும், அவ்வினையை எளிதில் செய்யும் வகையான வினை செயல் வகை அதன் பின்னும் வைக்கப்பட்டன. இனி, அமைச்சரே தூதுக்குரியராகையால் அதன்பின் தூதும், இத்தகைய அமைச்சர், மன்னரிடம் எவ்வாறு பழகவேண்டும் என்பதை அறிந்து அவ்வாறு பழகவேண்டுமாகலின் அதன்பின் மன்னரைச் சேர்ந்தொழுகலும் வைக்கப்...

4 அரணியல்: அரண் போலப் பாதுகாப்... யிலும் யான் அரணுக்குப்பின் பொருள்செயல்வகை வை... ...னன் ...பின் டது.

5 படையியல்: மாட்சிமைப்பட்ட படையே செருக்குற்று வெல்லுமாகையால் படைமாட்சியின் பின் படைச்செருக்கு வைக்கப்பட்டது.

6 நட்பியல்: இவ்வியலுக்கு உரிமையுடைமையின் நட்பு முதலிலும், அந்நட்பை ஆராய்ந்து கொள்ளவேண்டுமாகலின் அதன்பின் நட்பாராய்தலும், அவ்வாறு ஆரா... கொண்ட பழைய நண்பரது பிழையைப் பொறுத்... கொள்ளவேண்டு மாகலின் அதன்பின் ...ழமை... ...த் வாறு பொறுக்க முடியாத குற்றம் செய்யும் கெட்ட... பர்களை யறிந்து அவர் நட்பைக் களைந்து வ...ழ... ...ளா மாகலின் அதன்பின் தீநட்பும், தீ நட்புப்போல் ...லும் நடந்துகொள்ளாமல், வெளிக்கு நண்பர்போல் உ... நட்புக்கொள்ளாமல் இருப்போர் தன்மைய...ந்... அரிதாகலின் அதன்பின் கூடா நட்பும் வை...

இனி, நட்கப்படாதவற்றிற்கு அடிப்... தும், கூடா நட்பை அறிய முடியாமல் இரு...

சொல்லவேண்டு மாகலின் அதன்பின் அவை ்றநிலே அவையின் தன்மையறிந்துபேசுவோன், அவ் வைய் னின்றுங் கண்டு அஞ்சினுல் பேச்சின் பயன் முழுதும் பெற ்வின் தாகையால் அதன்பின் அவையஞ்சாமையும், ஓரவையன ச பேசுவோர் அவ்வவையோர் குறிப்பறிந்து பேசுதலே ஏற் புடைத்தாகலின் அதன்பின் குறிப்பறிதலும், குறிப்பறிந்து கூறிச் செய்யும் செயல் நற்செயலாக இருக்கவேண்டுமாக லின் அதன்பின் வினைத்தூய்மையும், தூய்மையான வினையை யும் திறமையுடன் செய்யவேண்டுமாகலின் அதன்பின் வினைத்திட்பமும், அவ்வினையை எளிதில் செய்யும் வகையான வினை செயல் வகை அதன் பின்னும் வைக்கப்பட்டன. இனி, அமைச்சரே தூதுக்குரியராகையால் அதன்பின் தூதும், இத்தகைய அமைச்சர், மன்னரிடம் எவ்வாறு பழகவேண் டும் என்பதை அறிந்து அவ்வாறு பழகவேண்டுமாகலிட் அதன்பின் மன்னரைச் சேர்ந்தொழுகலும் வைக்கப்

4 அரணியல்: அரண் போலப் பாதுகாப்ப யிலும் யான் அரணுக்குப்பின் பொருள்செயல்வகை வை ்னன் டது.

5 படையியல்: மாட்சிமைப்பட்ட படையே செருக் குற்று வெல்லுமாகையால் படைமாட்சியின் பின் படைச் செருக்கு வைக்கப்பட்டது.

6 நட்பியல்: இவ்வியலுக்கு உரிமையுடைமையின் நட்பு முதலிலும், அந்நட்பை ஆராய்ந்து கொள்ளவேண்டு மாகலின் அதன்பின் நட்பாராய்தலும், அவ்வாறு ஆரா் கொண்ட பழைய நண்பரது பிழையைப் பொறுத் ் கொள்ளவேண்டு மாகலின் அதன்பின் ்ழை ்த் வாறு பொறுக்க முடியாத குற்றம் செய்யும் கெட்ட ் பர்களை யறிந்து அவர் நட்பைக் களைந்து வ ழ ளா மாகலின் அதன்பின் தீநட்பும், தீ நட்புப்போல் ெ ிலும் நடந்துகொள்ளாமல், வெளிக்கு நண்பர்போல் உ நட்புக்கொள்ளாமல் இருப்போர் தன்மைய ி அரிதாகலின் அதன்பின் கூடா நட்பும் வை

இனி, நட்கப்படாதவற்றிற்கு அடிப் தும், கூடா நட்பை அறிய முடியாமல் இரு

...கலான் கூடா நட்பின் பின் பேதைமையும், அறி ...ருந்தும் அறிவுடையார் போல் நடிப்பதால் அதன் ...றி வாண்மையும், பேதைமை, புல்லறிவாண்மையே ...புகூடாதற்குக் காரணங்களாகையால் புல்லறிவாண் ...யின் பின் இகலும், எளிதில் வெல்லும் பகையை அறிந்து ...வல்லுதல் வேண்டுமாகலின் அதன்பின் பகைமாட்சியும், ...பகைவரிடம் நடந்துகொள்ள வேண்டிய முறை தெரிந்து நடந்து பகையில்லாமல் இருக்க வேண்டுமாகலின் அதன் பின் பகைத்திறந் தெரிதலும், வெளிப் பகையைத் தெரிந்து அப்பகை தம்மை வெல்லாமல் நடந்து கொள்ளுதல்போல, உட்பகையைத் தெரிந்து அவ்வாறு நடந்துகொள்ளுதல் கூடாமையின் அதன்பின் உட்பகையும், தம்மினும் வலிமிக்க ...பெரியார்கட்குத் தீங்கு செய்தல் உட்பகையினும் கேடு ...வதோன்றுகலின் அதன்பின் பெரியாரைப் பிழையாமையும் ...ப்பட்டன.

...ரி, ஆசை காரணமாக நிகழும் ஐந்தனுள், ஒருவன் ...ரிமை யின்றி, மனைவிக் கடிமையாய் அவள் கை ...வாறின், இல்லறத்தார்க்குரிய விருந்தோம்பல் முதலியன செய்து குடும்பம் இனிது நடத்தற் கிடையூறுய்க் குடும்பங் கெடுவதோடு, மதிப்புங் கெட்டுவிடுமாகையால் பெண்வழிச் சேறல் முதலிலும், தமக்குரிய மனைவி போலாது, தமது நலத்தை விலைகொடுப்பார் யாவர்க்கும் வரைவில் லாது விற்கும் பொது மகளிரை விரும்பல், தமக்குரிய மனை வியான் வருங் குற்றத்தினும் பெரிதாகலின் அதன்பின் ...வின் மகளிரும், உணர்வைக் கெடுத்து, ஒழுக்கத்தைக் ...கெடுத்துக் குடியையுங் கெடுப்பதில் அவ்வரைவின் மக ...ொத்தலான் அதன்பின் கள்ளுண்ணாமையும், கள் ...றிவை மயக்கிக் குடியைக் கெடுப்பதுபோல, அறிவு மயங் ...சூ...ாடி உள்ளதை யிழந்து குடியைக் கெடுப்பதால் ...ின் சூதும், அளவறிந் துண்ணுமல் ஆசைப் பெருக் ...அறிவு மயங்கி மிக வுண்பதாலும், அடிக்கடி யுண்ப ...நோயுண்டாவதால் அதன்பின் அந்நோய் தீர்க்கும் ...க்கப்பட்டன.

...ல்: இவ்வியலுக்கு உரித்தாகலின் குடியை ...நடிப்பிறந்தார்க் குரிய குணங்களில் மிகவும்

இன்றியமையாததாகலின் அதன்பின் மானமும், நிலை
யினின்று மேன்மேல் உயர்வது, நின்ற நிலையின்
தாழாமையாகிய மானம் உண்டாயவிடத் துள்ளத
அதன்பின் பெருமையும், சால்பு என்பது பெருமை
அடங்காத குணங்கள் பலவற்றின் தொகுதியாகலின் அ
பின் சாற்றுண்மையும், பல குணங்களும் நிறைந்திருப்பி
பிறருடைய இயல்பறிந்து நடத்தல் இன்றியமையாததா
லின் அதன்பின் பண்புடைமையும், பிறர் இயல்பறிந்து நடக்
கும் பண்புடையோர், தமக்கொவ்வாத செயல் செய்வதற்கு
நாணுவிடின் முற்கூறிய பண்பு கெடுமாகலின் அதன்பின்
நாணுடைமையும், தமது தகுதிக்குத் தகாதன செய்ய நாணு
வார்க்குத் தாம் ஈட்டிய செல்வத்தைத் தாமும் பயன்படுத்
தாமல் பிறர்க்கும் பயன்படச்செய்யாமல் இவறுதல் தகா
தொன்றாகலின் அதன்பின் இவறன்மையும், வைக்கப்ப
டன.

இனி, குடிமக்கள் தங்குடியைப் பலவகை
உயரச் செய்தல் இன்றியமையாததாகையாலும், பிச
குடி தாழுமேயன்றி உயராதாகையாலும் இவறன்மை
பின் குடிசெயல் வகையும், குடியை உயரச் செய்வதற்கும்,
உரிமையுடன் வாழ்வதற்கும் உழைப்பு இன்றியமையாத
தாகும். உழைப்பின் பயனே தொழிலாகும். தொழில்
களில் சிறந்தது உழவுத் தொழிலேயாகலின் அதன்பின்
உழவும், உழவு முதலிய தொழிலெதுவும் செய்யாதார் வறு
மையுறுவா ராகையால் அதன்பின் நல்குரவும், வறுமையுற்
றோர் பிறரிடம் சென்று இரக்க நேருமாகையால் அதன்
பின் இரவும், இரத்தல் இழிவாகையால், அவ்வாறு ஒரு
கால் இரக்க நேரினும் இழிவிற்கஞ்சி இரக்காமல் இரு
தல் மக்கட் பண்பாகலின் அதன்பின் இரவச்சமும், கு
மக்கட் குரிய குணங்கள் ஒன்றுமில்லாத—குடி மக்க
காத—கீழ் மக்கள் தன்மை கூறும் கயமை இறுதி
வைக்கப்பட்டன.

## 3 இன்பத்துப்பால்

**களவும் கற்பும் :** களவின் வழிவந்ததே கற்பாகலின் களவியல் முன்னும் கற்பியல் பின்னும் வைக்கப்பட்டன.

**1 களவியல் :** முதன் முதல் தலைவன் தலைவியைக் கண்டதும் அவள் அழகு தன்னை வருத்துதலைக் கூறுதலான் **தகையணங் குறுத்தல்** முதலினும், தலைமகன் குறிப்பினையும் தோழி குறிப்பினையும் அறிதலும், தோழி அவ்விருவர் குறிப்பினையறிதலும் தகையணங்குற்ற தலைமகன் தலைமகளைக் கூடுங்கால் நிகழ்வதாகலின் அதன்பின் **குறிப்பறிதலும்,** அங்ஙனம் குறிப்பறிந்து கூடிய தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறுதலான் அதன்பின் **புணர்ச்சி மகிழ்தலும்,** புணர்ச்சி மகிழ்ந்த பின்னரே தலைமகன் தலைமகளின் அழகினைச் சிறப்பித்துக் கூறுகின்றானாகலின் அதன்பின் **நலம்புனைந் துரைத்தலும்,** புணர்ச்சியின்பமும் எழிலின்பமும் பற்றித் தலைமகனும் தலைமகளும் கூறுவதாகலின் அதன்பின் **காதற் சிறப்புரைத்தலும்,** காதல் மிகுந்த விடத்தே தலைமகனும் தலைமகளும் தங்கள் நாண் நீங்கியதைக் கூறுவாராகையால் அதன்பின் **நாணுத்துற வுரைத்தலும்,** நாண் நீங்கிய வழியே தலைவனும் தலைவியும் ஊரார் கூறும் அலரைக் கூறுவாராகையால் அதன்பின் **அலரறிவுறுத்தலும்** வைக்கப்பட்டன.

**2 கற்பியல் :** இனி, கற்பினுள், காமவின்பத்தினை மிகுவிப்பது பிரிவேயாகையால் **பிரிவாற்றாமை** முதலினும், தலைவன் பிரிந்து செல்ல, தலைமகள் பிரிவாற்றாது தானுறுகின்ற துன்பத்தினை எப்போதும் நினைந்து அதனால் மெலிதலின் அதன்பின் **படர்மெலிந்திரங்கலும்,** பிரிவாற்றாத வருத்தத்தால் மெலிந்த தலைவியின் கண்கள் தலைவனைக் காண விரைதலின் அதன்பின் **கண்விதுப் பழிதலும்,** தலைமகனைக் காணப் பெறாத வழியே தலைமகள் மேனி பசந்து வருந்துவாளாகலின் அதன்பின் **பசப்புறுபருவரலும்,** பசப்புற்று வருந்திய தலைவி, அவ்வருத்தம் தலைவனுக்கில்லை, தனக்கேதான் உண்டெனக் கூறுவதால் அதன்பின் **தனிப்படர் மிகுதியும்,** தலைமகனும் தலைமகளும்தாம் முன்கூடிய இன்பத்தினை நினைந்து

வருந்துதல் இருவர்க்கும் பொதுவாயினும், படர் மிகுதி தன் கண்ணதாக நினைத்த தலைமகட்குரிய சிறப்புப்பற்றி அதன் பின் **நினைந்தவர் புலம்பலும்**, நனவின்கண் உள்ள நினைவு மிகுதியால் இரவில் கனவு நிகழ்தலின் அதன்பின் **கனவு நிலையுரைத்தலும்**, முன்னாட் கனவு கண்டு ஒருவாறு ஆற்றியிருந்த தலைவி, மாலைப் பொழுது வரவும் தலைவன் வராததால் இரங்குதலின் அதன்பின் **பொழுதுகண்டிரங்கலும்**, மிக்க இரக்கத்தினால் கண் முதலிய உறுப்புக்கள் அழகிழக்குமாகலின் அதன்பின் **உறுப்புநலனழிதலும்**, அவ்வாறு உறுப்புக்கள் அழகிழந்த வழி இன்னது செய்வதென்றறியாது தலைமகள் தன் நெஞ்சொடு கூறுதலின் அதன்பின் **நெஞ்சொடு கிளத்தலும்**, நெஞ்சொடு கிளந்தவள் பின் மனத்தகத் தடக்கக்கூடியதை அடக்கமாட்டாது வாய்விட்டே கூறுதலின் அதன்பின் **நிறையழிதலும்**, இருவரும் வேட்கை மிகுதியால் ஒருவரை யொருவர் காணற்கு விரைதலாலும், தலைமகள் நிறையழிதலின்பின் நிகழ்வதாகலானும் அதன் பின் **அவர்வயின் விதும்பலும**, பிரிந்து சென்ற தலைவன் வந்துழி, தலைவன தலைவி தோழி ஆகிய மூவரும் தத்தம் குறிப்பினைக் கூறுதலின் அதன்பின் **குறிப்பறிவுறுத்தலும்**, தலைமகன் பிரிதற்குறிப்பறிவுறுத்த, தலைமகள் புணரவிரைதலின் அதன்பின் **புணர்ச்சி விதும்பலும்**, தலைவனிடம் புலக்கக் காரணமுண்டாய வழியும் புலக்கக் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலக்கின்றாளாகலின் அதன்பின் **நெஞ்சொடு புலத்தலும்**, உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகனும் நெஞ்சொடு புலப்பான். நெஞ்சொடு புலந்தவர் புணர்ச்சி விரும்பாது ஒருவரை யொருவர் புலத்தலின் அதன்பின் **புலவியும்**, புலத்தற்குக் காரணமின்றாகவும் பொய்க்காரணங் கற்பித்துக்கொண்டு புலத்தலின் அதன்பின் **புலவி நுணுக்கமும்**, அப்புலவியாகிய ஊடலால், கூடலின்பஞ் சிறத்தலின் அவ்வூடலை இருவரும் உவத்தலான் அதன்பின் **ஊடலுவகையும்** வைக்கப்பட்டன.

# திருக்குறள் அதிகார அகராதி

———

# முகவுரை

தமிழர் பண்பாட்டுக்குச் சான்றாக உள்ள பழந்தமிழ் நூல்களுள் திருக்குறளே தலையாய நூலாகும். திருக்குறள் திருவள்ளுவர் என்னும் பழந்தமிழ்ப் பெரியாரால் செய்யப்பட்டது. தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் கட்டாயம் படித்துப் பயன் பெறவேண்டிய இன்றியமையாச் சிறப்பினையுடையது திருக்குறள். வள்ளுவர் குறளைப் படிப்போர், வள்ளுவர் காலநிலை, வள்ளுவர் நூல் செய்த முறை, திருக்குறளின் பெருமை, பொருள் கொள்ளும் முறை ஆகியவற்றை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும்.

**வள்ளுவர் காலநிலை:** வள்ளுவர் காலத்தே, அவர் காலத்திற்குப் பன்னெடு நாள் முன்னர் இமயமலைக்கு வடபாலிருந்து வந்து, இமய மலைக்கும் விந்தமலைக்கும் இடைப்பட்ட நிலமாகிய வடநாட்டில் குடியேறி வாழ்ந்து வந்த வடபுல மக்கள் சிலர் தமிழகத்தில் குடியேறி வாழ்ந்துவந்தனர். தமிழ் மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்றுப் போற்றி வந்தனர். அவ்வடபுல முதியோர், தமிழ்த் துறவிகளான அந்தணர்களைப்போல மதிக்கப்பட்டு வந்தனர். அக்குடும்பத் தலைவர்களில் பெரும்பாலோர் தமிழ்ச் செல்வர்களிடம் பாங்கத் தொழிலின் ஒரு பகுதியான பார்ப்பனத் தொழில் செய்து வந்தனர். வந்தேறிகளான அவ்வடபுல மக்கள் தங்கள் குலத் தொழிலெனக் கொலை வேள்வி செய்து வந்தனர் (259). அவ்வேள்வியால் பெரும்பயன் உண்டாகும் என்னும் அவர் கூற்றினைத் தமிழ் மக்கள் நம்பி வந்தனர் (268). அவ்வடவர் கொள்கைகள் சில தமிழரிடைப் பரவியிருந்தன. அன்னார் கூறிய பல கற்பனைக் கதைகளைத் தமிழ் மக்கள் தெரிந்திருந்தனர்; சில கற்பனைகளை உண்மையென நம்பியும் வந்தனர். அவ்வடபுலப் பிறவி வேற்றுமைப் பிணி தமிழ் மக்களை ஒருவாறு பிணிக்கத் தொடங்கி யிருந்தது (972). அதனால், தமிழ் மக்களின் ஒன்றுபட்ட ஒருமை வாழ்வு சிதையத் தலைப்பட்டது. தமிழர் பண்பாட்டை அவ் வடபுலப் பண்பாடு விழுங்கி வந்தது.

**வடபுலத்தார்:** அவ்வடபுல மக்கள், தாங்கள் முன்பு இருந்துவந்த தங்கள் பழைய தாயகத்தில் வாழும் தம்மவர் மேலானவர்; இந்நாட்டு மக்களிலும் உயர்ந்தவர்; யாதொரு கட்டுப்பாடுமின்றித் தம் விருப்பம்போல் நடந்துகொள்ளும் இயல்பினர் (1072). அவர்கள் தலைவனான இந்திரன் மிக்க வலியும் பெருமையும் உடையவன் (25). அந்நாடு செல்வ மிக்க நன்னாடு; துன்பமென்பது அங்கில்லை; இன்ப வடிவானது. என்பன போன்ற தம் இனப் பெருமையைத் தமிழ் மக்கள் நம்பும்படி செய்திருந்தனர்.

தமிழ் மக்கள் அவ்வடவரின் பழந்தாயகத்தினரான அவ்வடபுலத்தாரை **வானோர்** (18, 336), **விசும்புளார்** (25), **இமையார்** (906), **புத்தேளிர்** (58, 213, 234, 320, 966), **தேவர்** (1072), **தெய்வம்** (50), **புலவர்** (234) எனவும்; அவ்வட புலத்தார் வாழ்விடத்தை **வானகம்**.(101), **மேலுலகம்** (22), **புத்தேளுலகம்** (213, 234, 320), **புத்தேள் நாடு** (966, 1323), **தாமரைக் கண்ணா னுலகு** (1103) எனவும் அழைத்து வந்தனர்.

**வானவர்:** மேற்குத் தொடர்ச்சி மலைச்சாரலின் உயர்ந்த மேட்டு நிலத்திலிருந்து சேரநாட்டை யாண்டுவந்த சேர மன்னரை, **வானவர்** (புறநானூறு 36, 126), **வான வரம்பர்** (புறம் 2, பதிற்றுப்பத்து 35, 58) என்று அழைத்து வந்தது போலவே, இமயமலையின் வடபால் உயர்ந்த மேட்டு நிலத்தில் வாழ்ந்து வந்ததால் தமிழ் மக்கள் அவ்வடவரை வானோர் என அழைத்தனர். வான்—உயர்வு. வானகம்—உயர்ந்த இடம். வானவர், வானோர்—உயர்ந்த இடத்தில் வாழ்பவர். இதுபற்றியே வடவர் அன்னாரை 'உயர்ந்தவர்' என்றதும்.

**விசும்புளார்:** விசும்பு - வான். விசும்புளார் - விசும்பில் உள்ளவர் - வானகத்தார். மேலுலகம் என்றதும் அப்பொருளதே. திசைபற்றி ஐரோப்பா மேனாடு எனவும், மலேயா முதலிய கிழக்கு நாடுகள் **கீழ்நாடு** எனவும் வழங்குதல்போல, இடம்பற்றி அது மேலுலகம் எனப்பட்டது. உலகம் என்பது நாட்டைக் குறிக்கும். 'மாயோன் மேய காடுறை உலகமும் (தொல்: அகத் - 5) என முல்லை நிலம் உலகம் எனப்படுதல் காண்க.

**இமயவர்:** இமயமலையில் வாழ்பவர் என்னும் காரணப் பெயர். அமச்சு—அமைச்சு என அகரத்திற்கு ஐகாரம் போலியானாற் போல, இமயவர் என்பது இமையவர் என்றாயது. இமையோர் - இமையவர். கோவை திரு, **துடிசைக்கிழார்** அவர்கள் பதித்துள்ள **திருமந்திரம் 17-ஆம் பக்கத்தில்,** **'தமிழ்நாட்டின் வடவெல்லையாகிய இமயமலையின் ...... இந்திரன், மால்,** அயன் **முதலிய இமயவர்க்கு'** என்றெழுதி, **இமையவர்- இமயமலைவாசிகள்** என்று குறிப்பும் எழுதியுள்ளார்.

**புத்தேள்:** இது, புத்தாள் என்பதன் திரிபு. அது ஆள் - புத்தாள்; புது ஆடை - புத்தாடை என்பது போல. புதியவர் என்பது பொருள். புத்தேளிர் - பன்மை. அவ்வடபுலத்தார் புதிதாக இங்கு வந்த போது இட்டு வழங்கிய பெயர். இன்றுங்கூட, வேற்றூரிலிருந்து வந்து குடியேறினவனைப் **புதுக் குடியான்** என்று அழைப்பது வழக்கில் உள்ளது. புத்தேளுலகம், புத்தேள் நாடு - வானகம்.

**தேவர்:** மேலானவர், போற்றற் குரியவர் என்னும் பொருளது. முன்னது மேலானவர் என்னும் வடவர் கூற்றினைக் கொண்டு கூறியது. மேலிடத்தினர் என்பது பொருள். பின்னது புதிதாக வரும் அயல் நாடரை அன்புடன் வரவேற்றுப் போற்றும் தமிழர் பண்பாட்டினுல் வந்தது.

தேவர் என்னும் பெயர் திருவள்ளுவர் பெயர்களுள் ஒன்றாக இருப்பதும், அருண்மொழித் தேவர் - சேக்கிழார், மெய்கண்ட தேவர் (சிவஞான போத ஆசிரியர்), "மேழித் தேவர் பெருமைக்கு வேறுந் தேவர் கூறேனே" (ஏரெழுபது) என வேளாண்குடி மக்களுக்குத் தேவர் என்னும் பட்டப்பெயர் வழங்கி வருவதும், மறக்குடி மக்களாகிய தமிழ் மறவர் குலம் தேவர் குலம் என்னும் பெயராலேயே இன்றும் அழைக்கப்பட்டு வருவதோடு, அக்குல மக்களும் தேவர் என்னும் பட்டப் பெயரிட்டு வழங்கி வருவதும், வடமொழியைத் தேவ மொழி என்பதும், கிழக்கு நாட்டு மக்கள் நாகர் என அழைக்கப்பட்டது போல, தேவர்களுக்கும் நாகர் என்னும் பெயர் இருப்பதும், இத்தென்னாட்டில் இருந்த அசுரர், அரக்கர் என்போர்க்கும், அத்தேவர்களுக்கும் அடிக்கடி போர் நடந்தது; அசுரரும் அரக்கரும் தேவர்களைச் சிறையிட்டனர், தேவமளிரை ஏவற்றொழில் செய்ய அமர்த்தி

வந்தனர் என்பதும், தேவர் என்போர் மக்களில் ஒரு வகையினரே என்பதற்குச் சான்றாகும்.

**தெய்வம் :** தெய்வம் என்பதும் மேலானவர் என்னும் பொருளைக் கொண்டு கூறிய பெயரே யாகும். தெய்வம் - மேன்மை, சிறப்பு. தெய்வத்தமிழ், தெய்வப் புலவர், தெய்வப் புலமை, தெய்வத்தன்மை, தெய்வத் தாமரை, தெய்வவுத்தி, தெய்வப் புணர்ச்சி எனக்காண்க. தெய்வத் தமிழ் - மேலான, சிறந்த தமிழ். பிறவு மன்ன. "பணியுமாம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம் தன்னை வியந்து" (குறள் - 978) என்பது போலத் தேவரைத் தெய்வம் என்றார். பெருமை-பெருமையுடையார். சிறுமை-சிறுமையுடையார். பெருமை, சிறுமை-பண்புப் பெயர்கள். பண்பால் பண்பியைக் குறித்தல் தமிழில் பெருவழக்கு.

**தெய்வம் என்னும் சொல் :** மலையில் மூங்கில் ஒன்றோடொன்று தேய்வதனால் தீ உண்டாகிறது. கல்லைச்செதுக்கும் போது தீப் பொறி தோன்றுகிறது. இவற்றிலிருந்தே முதன் மாந்தர் தீக்கடை கோலும், சக்கிமுக்கிக் கல்லும் கண்டுபிடித்திருக்கவேண்டும். பொருள்கள் ஒன்றோடொன்று தேய்வதனால் தீ யுண்டாவதால், பழங்காலத் தமிழ் மக்கள் அதைத் தேய் என்றனர். 'தேயு' வடமொழி. தேய் என்பதே நாளடைவில் தேய்-தே-தீ எனத் திரிந்தது. அயற்சொல்லானதால் வடமொழியில் திரியாது அப்படியே உள்ளது. உணவு சமைத்தல், குளிர் நீக்கல் முதலிய நன்மை குறித்துத் தீயை மேலானது எனப் போற்றி வந்தனர். தேய் என்னும் சொல்லினடியாகப் பிறந்தவையே தேவன், தேவி, தேவர், தெய்வம் என்னும் சொற்கள். தேவன் - ஆண்பால். தேவி - பெண்பால். தேவர் - பலர் பால். தெய்வம் - பண்புப் பெயர்.*

அரசனைத் தேவன் என்றதும், அரசியைக் கோப்பெருந்தேவி என்றதும் முதன்மையும் மேன்மையும் பற்

---

*தேய் உ - தேய்வு - தேவு. தேவு அன் - தேவன். தேவு இ - தேவி. தேவுஅர் - தேவர். தேய்வு - தெய்வு. தெய்வுஅம் - தெய்வம். (ஒப்பியல் மொழிநூல் - பக்கம் 237. தேவநேயப் பாவாணர்.)

றியேயாகும். தெய்வம் என்னும் சொல் குறள் 43, 55, 672 ஆகிய மூவிடத்தும் மேன்மையே குறித்தல் காண்க.

**புலவர் :** புலவர் - புலம் என்பதனடியாகப் பிறந்த சொல். புலம் - புல அர் - புலவர். ஐம்புல நுகர்ச்சி யுடையோர், மனம் போனபடி நடப்பவர் (1072) என்னும் பொருளது. புலவு அர் - புலவர். புலவு - புலால். வேள்வி மூலம் புலவு உண்பவர் என்பதாம். வடபுலர், வடபுலவர் என்பன முதற்குறைந்து புலவர் என்றாயது எனினுமாம். **தாமரைக் கண்ணான்** - இந்திரன். ஆயிரங்கண்ணன் என்னும் அவன் பெயர் காண்க.

சீனர் முதலிய வெளிநாட்டினர் யாத்திரையாய் அன்று தமிழ் நாட்டிற்கு வந்து போனது போலவே, அவ் வடபுலத்தாரும் அன்று இங்கு வரப்போக இருந்தனர். தமிழ் மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்றுப் போற்றி வந்தனர் (குறள் 18). தமிழர் பெருமை அவ் வானுலகெங்கும் பரவியிருந்தது (குறள் 234). தமிழ் மக்களும் அவ்வட புலத்திற்குப் போகவர இருந்திருக்கின்றனர். பாண்டியன் ஒருவன் இந்திரன் அவைக்குப் போயிருப்பதாகக் கூறப்படுவதும், இந்திரன் அவனுக்குச் சிறந்த மாலையொன்றையணிந்து பெருமைப்படுத்தினதாகக் கூறப்படுவதும்,* பாண்டி நாட்டை யாண்டுவந்த மீனாட்சி என்னும் தமிழரசி, அவ் வடபுலத்திற்குப் படையெடுத்துச் சென்று, சோமசுந்தரன் என்னும் அவ்வடபுலத்தரசனை வென்று பின் அவனையே மணஞ் செய்து கொண்டாள் என்பதும் இன்னோரன்ன செய்திகள் இதற்குச் சான்றாகும். மீனாட்சி- மீன் ஆட்சி - மீனக்கொடி யுயர்த்திப் பாண்டி நாட்டை யாண்டவள்.

எனவே, வானோர், வானுலகம், தேவர், மேலுலகம் என்னும் இவ்வரலாற்றுண்மையே காலக் கடப்பால், தமிழ் மக்களின் கருத்தில்லாப் போக்கால், கற்பனை மயக்கால், உட்பகைப் பெருக்கால், சமயச் சார்பால், தன்னுணர் விழப்பால், புராணப் புதுமையால் இன்றையத் தமிழ் மக்

* 'தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே' (சிலப் 17). 'தேவரார மார்பன் வாழ்க' (சிலப் : 29)

கள் எண்ணும் புதிய நிலையை அடைந்துவிட்டது. வானுலகம், மேலுலகம், புத்தேளுலகம் என்பவையும் இம் மண்ணுலகத்தில் உள்ளவையே. வானவர், புத்தேளிர், தேவர் என்பவரும் நம் போன்ற மக்களே யாவர் என்பதைச் சிறிதும் ஐயமின்றித் தெளிக.

**வள்ளுவர் நூல் செய்த முறை:** வள்ளுவர் ஓர் அறிவு நூற் புலவர்; அரசியலறிஞர்; தமிழர் பண்பாட்டின் பெருமையை நன்குணர்ந்தவர்; தமிழினப் பற்றுடையவர்; தமிழர் வாழ்வின் தகுதிப்பாட்டை வரையறுத் துணர்ந்த மாபெருந்தகையர். ஆகையால், அவ் வடபுல மக்களின் பொய்க் கூற்றுக்களும், போலிக் கொள்கைகளும் தமிழ் மக்களிடைப் பரவி வருவதைத் தடுத்து விலக்கி, மேலும் பரவாமலிருக்க, தமிழ் மக்களின் பழக்கவழக்கங்களாகிய ஒழுக்க முறைகளை அகம்புறப் பாகுபாட்டைத் தழுவி, அறம் பொருளின்பம் என முப்பாலாக்கி ஒரு நூல் செய்து, தமிழர் பண்பாட்டை நிலைநிறுத்த எண்ணினர். எனவே, தமிழர் மரபுக்கொவ்வாத அயற்கொள்கைகளை மறுத்தும், அவற்றை நம்பி வாழும் பொதுமக்களுக்கு எளிதில் பொருள் விளங்குதற் பொருட்டுப் பொதுமக்களிடைப் பரவியிருந்த அவ் வயற் கொள்கைகளைக் கொண்டு கூறியும், தமிழ் மரபு சிறிதும் கெடாது, தமிழ் இலக்கிய மரபுக்கேற்றவாறு பொருள் விளங்குதற் பொருட்டு உலகவழக்கில் உள்ள சில வழக்காறுகளை நூல் மரபாக் கொண்டும், செய்யுள் வழக்கில் சிறிதும் குறைவுபடாது, மிகச் சிறுபான்மையான மக்களிடை ஒரோருகால் நடந்துவந்த தீய ஒழுக்கங்களையும் மிகைபடக் கூறி விலக்கியும், தமிழர் ஒழுக்கச் சட்ட நூலாகிய திருக்குறளைச் செய்து முடித்தார்.

**திருக்குறளின் பெருமை:** திருக்குறள் ஒரு தனித்தமிழ் நூலாகும். திருக்குறள் அயற்கொள்கை எதிர்ப்பு நூலேயன்றி எந்த ஒரு அயற் கொள்கையையும் உடன்பட்டுக் கூறும் நூலன்று. தமிழர் வாழ்வே திருக்குறள், திருக்குறளே தமிழர் வாழ்வு என்னும் அவ்வளவு இன்றியமையாச் சிறப்பினையுடைய நூல் திருக்குறள். திருக்குறள், உள்ளதை உள்ளபடியே உயரிய முறையில் எடுத்

துரைக்கும் உண்மை நூல்! தமிழர் வாழ்வின் படப்பிடிப்பு! பழந்தமிழர் நாகரிக நல்வாழ்வை அப்படியே நமக்குக் காட்டும் களங்கமற்ற காலக் கண்ணாடி! தொன்மையும் எதிர்மையும் ஒருங்கொப்பக் காட்டும் தொலை நோக்காடி! தமிழ் மக்களின் வாழ்க்கைச் சட்டம்! தமிழ் மக்களுக்கு வள்ளுவர் வகுத்தமைத்து வைத்த பாதுகாப்புப் படை! ஏன்? தமிழர்க்கு மட்டு மன்றி, குறள் உலகப் பொது நூல்! மக்கட் பண்பாட்டுச் சரக்கறை! எக்காலத்துக்கும் உரிய நூல்! இறவா நூல்! காலங்கடந்த நூல்! கன்னித் தமிழ் நூல்! எனல் மிகையாகாது. தமிழ் மக்கள் செய்வன தவிர்வன வாகிய ஒழுக்கமுறைகளை வகுத்துக் காட்டுவதால், திருக்குறள் ஓர் ஒப்புயர்வற்ற இலக்கியமே யன்றி, இலக்கண நூலுமாகும். 'அகர முதல' எனத் தமிழ் மொழியின் முதலெழுத்தில் (அ) தொடங்கி, 'கூடி முயங்கப் பெறின்' என ஈற்றெழுத்தில் (ன்) முடிவதால், **'தமிழ் மொழியே திருக்குறள்'** என்னும் குறிப்புப் பொருளும் கொள்க.

குடியியலில், குடிமக்கட் குரியனவாகக் கூறப்படும் நடுவு நிலைமை (951), ஒழுக்கமுடைமை (951), ஈகை, இன்சொல் (953), அன்புடைமை (992), ஒப்புரவறிதல் (983), பொறையுடைமை (987), புறங்கூறாமை (984) முதலியன இல்லற வியலிலும், வாய்மை (952), இன்னா செய்யாமை (987) முதலியன துறவறவியலிலும், கண்ணோட்டம் (983), ஈகை (952), ஆள்வினையுடைமை (1022) மடியின்மை (1028) முதலியன அரசியலிலும், வினைத்தூய்மை (954), வினைத்திட்பம் (1027) முதலியன அமைச்சியலிலும் கூறப்படுவதால், அறம் பொருள் என்னும் பொருள் பற்றி, அவை வெவ்வே றிடங்களில் கூறப்படினும், ஆள்வோர் ஆளப்படுவோர் என்னும் இருபாலாரும் இல்லறம் துறவறம் என்னும் இரண்டற்கும் உரியர் என்பதும், குடிமக்கள், அரசரும் அமைச்சரும் ஆதற் குரியர் என்பதும், அரசர் அமைச்சர் குடிமக்கள் யாவரும் பருவ முதிர்ந்த பின் துறந்து பொதுநலஞ் செய்தற் குரியர் என்பதும் வள்ளுவர் காலத் தமிழ் மக்கள் வாழ்விய லென்பது அறிந்தின்புறற் பாலது.

அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் கூறப்படும் 108 அதிகாரங்களையும் செய்வன, தவிர்வன என இருவகையாகப் பிரிக்கலாம். செய்வன-செய்யத் தக்கவை-கடைப்பிடித்து நடக்கத் தக்கவை. தவிர்வன-செய்யத் தகாதவை-கடைப்பிடித்து நடக்கத் தகாதவை-விலக்கத் தக்கவை. இவை விதிவிலக்கு எனப்படும். செய்யத் தக்கதைச் செய்தும், விலக்கத் தக்கதை விலக்கியும் வாழ்வதே மக்கட் பண்பும் பகுத்தறிவின் பயனுமாகும். மழையின் சிறப்பறிந்து அதைப் பயன்படுத்தி நல்வாழ்வு வாழ்தலும், நீத்தார் பெருமையறிந்து அதற்கேற்ப அவரிடம் நடந்துகொள்ளுதலும் ஊழின் இயல்பறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளுதலும், அதாவது ஆகூழெனில் இன்புற்றுப் போகூழெனில் துன்புறுமையும், நாட்டை நன்னாடாக்கி நலமுடன் வாழ்தலும், உழவின் சிறப்பறிந்து அதைச் செய்து வாழ்தலும் செய்வனவேயாம். அவை வருமாறு:

செய்வன: அதிகாரம் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 13, 14, 16, 22, 23, 24, 25, 30, 34, 35, 37, 38, 39, 40, 42, 43, 45, 47, 48, 49, 50, 51, 53, 54, 55, 56, 59, 61, 62, 64, 65, 66, 68, 69, 70, 71, 72, 73, 74, 75, 76, 77, 78, 79, 80, 81, 96, 97, 98, 99. 100, 101, 103, 104 —66.

தவிர்வன: அதிகாரம்-15, 17, 18, 19, 20, 21, 26, 27, 28, 29, 31, 32, 33, 36, 41, 44, 46, 52, 57. 58, 60, 63, 67, 82, 83, 84, 85, 86, 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 102, 105, 106, 107, 108—42. (66+42—108).

இந் நூற்றெட்டே யன்றி, அஞ்சாமை (382), துணிவுடைமை(383), காட்சிக்கெளிமை (386), குடியோம்பல் (390), செருக்கின்மை (431), வியவாமை (439), தெளிவுடைமை (533), தாழ்த்தாமை (595), நகை-முகமலர்ச்சி, இகழாமை (953), குன்றுவ செய்யாமை (954), பணிவுடைமை (960), பழிப்பன செய்யாமை (970), குற்றங் கூறுமை (980), இனியவே செய்தல் (987) முதலிய செய்வன தவிர்வனவுங் கூறுதலான், கூறியன கொண்டு மக்கள் நல்வாழ்வுக்கு வேண்டிய எல்லா விதிவிலக்குகளையும் உய்த்

துணர்ந்துகொள்ள வேண்டுமென்பது வள்ளுவர் கருத் தாகுமென்க.

இன்பத்துப் பால் 25 அதிகாரங்களிலும் கூறப்படுவன ஆண் பெண் இருபாலாரும் கூடி வாழும் வாழ்க்கை முறை யாகலின், ஒவ்வொரு ஆண்மகனும் பெண்மகளும் அவற் றைக் கட்டாயம் கற்றுணர்ந்து கடைப்பிடித்து நடக்க வேண்டியவையாகும். அவற்றில் கூறுகிறபடி ஆண் பெண் இருபாலாரும்—வாழ்க்கைத் துணைவர்கள் ஒவ்வொருவரும்— நடக்கத் தலைப்பட்டால் பெண்ணினத்தை இழிவாக எண்ணுதல், பெண்ணை வெறுத்தல், பெண்ணுரிமைத் தடை, பெண்ணடிமை, ஏறுமாறான வாழ்க்கை, மகளிர் இன்பத்தை விற்றுப் பிழைத்தல், ஆடவரின் ஒழுக்க மின்மை முதலிய தீமைகள் ஒழிந்து, நாட்டில் நற்குடும்ப வாழ்க்கை நிலை பெறும். பெண்ணுலகம் தன்னுரிமையுடன் வாழும். ஆண்களின் பரத்தைமை யுணர்ச்சி யகலும். நன் மக்கட்பேறு வாய்க்கும். தமிழினம் தனிச் சிறப்புறும். பழந்தமிழ்ப் பண்பாடு புத்துயிர் பெறும்.

இனி, 26, 27, 30, 33, 34, 55, 56, 57, 72, 75, 77, 78 87, 88 அதிகாரங்கள் நீங்கலாக மற்றவை யெல்லாம் பொது. இவ்வதிகாரங்களிலும் பொதுப் பொருள் உள்ள குறட்பாக்கள் சில உண்டு. இன்று மக்களாட்சி நடப்ப தால், அரசர், அமைச்சர், ஒற்றர், தூதர், மறவர் ஆகியோர் இயல்பு, தகுதி, திறமை, கடமை முதலியவற்றையும் பொது மக்கள் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அரசியல் தலைவர்களும் அதிகாரிகளும் அரசர் நிலையிற்படுவர்.

உலகியல்பை யறிந்து இன்ப வாழ்வு வாழ்வதற்காக இல்வாழ்வாரும் துறவற அறிவைப் பெறுதல் வேண்டும். இல்லறத்திலிருந்தே பயிலும் துறவற இயல்புகளும் சில உண்டு. மக்களைத் 'தமர் பிறர்' என வேறுபடக் கொள் வது இல்லறம். 'தமர் பிறர்' என வேறுபடுத்தாது எல் லோரையும் ஒப்பக் கொள்வது துறவறம் என்பதை உணர வேண்டும். இறைநலம் முதலிய நான்கதிகாரங்களும் உல கியற்கு அடிப்படை யானவை யாதலால் நூலுக்கு முத லுறுப்பாகும். ஊழ் முப்பாலுக்கும் பொது. பொருட்பாலில்

கூறும் அரசியல் முறை பொதுப் படையாகவே உள்ளதால், எந்த ஒரு அரசியல் முறையை விரும்புவோர்க்கும் ஒப்பவுரியதேயாகும். இன்பத்துப்பால் ஆண் பெண் இரு பாலாரின் பொதுவுடைமை. எனவே திருக்குறட்கு வேண்டுவார் வேண்டாதாரின்றி எல்லா மக்களும் உரியராவார். வள்ளுவர் காலத் தமிழர் வாழ்வை நினைவு கூர்ந்தே குறளின் பொருட்பயன் கொள்ளுதல் வேண்டும்.

**பொருள் கொள்ளு முறை:** திருக்குறள் இவ்வாறு எல்லோர்க்கும் ஒத்த உடைமையாக உடைய பெருமையுடையதேனும், அதன் பால் இயல்களுக்கேற்றவாறு அதிகாரப் பொருளைக் கொள்ளுதல் வேண்டும். எல்லாம் பொதுவெனக் கொண்டு பொருள் கொள்ளுதல் கூடாது. துறவறத்திற்குரிய 'புலால் மறுத்தல், தவம், நிலையாமை' முதலியன அப்படியே இல்லறத்திற்கும், 'அருளுடைமை, கொல்லாமை, வெகுளாமை' முதலியன அப்படியே அரசியற்கும், இன்பத்துப்பால் துறவறத்திற்கும் பொருந்தா. 'படைச் செருக்கு, 'பகை மாட்சி' இவற்றின் முன் அருள் நில்லாது. 'பொருள் செயல்வகை' நிலையாமைக்கு முரண். "குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து மானங் கருதக் கெடும்" (2028) என்பது, 'காலமறிதல், மானம்' என்னும் அதிகாரங்கட் கொவ்வாமை அறிக. எலி, கொசுக்களைக் கொன்று ஊர்நலம் பேணும் ஊர் மன்றத்தார்க்கும், பயிர் நோய்ப் பூச்சிகளைக் கொன்று பயிர் வளர்த் துலகூட்டும் உழவர்க்கும் 'கொல்லாமை' என்பது எங்ஙனம் பொருந்தும்!

வள்ளுவர் ஒன்றனைப் பற்றிக் கூறும்போது அது ஏனைய எல்லாவற்றினும் சிறந்தது என்பர். அதனால், மற்றவை சிறப்புடையவை யல்லவென்பது பொருளன்று. ஒவ்வொன்றையும் அவ்வாறு சிறப்புடையதெனக் கூறுதல் ஒவ்வாக் கூற்றெனில், அற்றன்று. ஒன்றனைக் கற்போர் அதில் கருத்தைச் செலுத்தி ஆர்வத்தோடும் அக்கறையோடும் ஊன்றிக் கற்கும்பொருட்டும், அதனை மனத்தில் நன்கு பதித்துக்கொண்டு அதன்படி நடக்கும் பொருட்டுமேயாம். திருக்குறளில் கூறப்படும் ஒவ்வொரு பொருளும் இன்றியமையாச் சிறப்புடையனவேயாகும். எனவே, செய்வன

வாகக் கூறப்படும் ஒவ்வொன்றையும் கட்டாயம் கடைப் பிடித்து நடத்தலும், தவிர்வனவாகக் கூறப்படும் ஒவ் வொன்றையும் கட்டாயம் விலக்கி நடத்தலும் தமிழ் மக் களின் இன்றியமையாக் கடப்பாடாகும். வள்ளுவர் கட் டளையை மீறி நடத்தல் தமிழ் மக்களுக்கு மரபுடைத் தன்று.

**நூன்மரபு:** பொருள் குணங்களை ஆண்பாலாகவும், பெண்பாலாகவும் கூறுதல் நூல்மரபாகும் 'நிலமென்னும் நல்லாள்' (*1040*), 'அழுக்கா றெனவொரு பாவி' (*163*) என நிலம் என்னும் பொருளைப் பெண்பாலாகவும், அழுக் காறு என்னும் குணத்தை ஆண்பாலாகவும் கூறுதல் காண்க. பாவி - தீயோன்.

செய்யாள் (*94*), செய்யவள் (*167*), தாமரையினுள் (*617*) எனச் செல்வத்தையும், தவ்வை (*167*), முகடி (*167, 936*) ன வறுமையையும் பெண்பாலாகக் கூறியவாறு. செய்ய ள் - இளையவள் - தவ்வை - மூத்தவள். முகடி - மூதேவி- த்தவள். செல்வந் தீர்வதே வறுமையாதலால், செல் த்தை இளையாள் எனவும், வறுமையை மூத்தாள் என ம் கூறினர். மேலும், செல்வம் விரும்பப் படுதல் பற்றிச் ாள் எனவும், வறுமை வெறுக்கப்படுதல் பற்றிக் யாள் (*617*) எனவும் கூறினர். தாமரையினுள் - திரு ம ள். திரு - செல்வம். கல்வியும் செல்வமும் மனத்தை விட்டகலா மாண்பொருள்க ளாதலால் அவற்றைப் பெண் ளாக்கி, மனத்தை தாமரை யாக்கி, அதன்மேல் உள் ர் என்பது மரபு. பயன் கருதி நிலம், ஆறு முதலியவற் பெண்ணாகக் கூறுவதும் நூன்மரபேயாகும்.

கூற்று: உடலும் உயிரும் கூறுபடும் சாவினைக் று (*266, 765, 1083*) என உயிருடையதாகக் கூறிய று. கூற்று - உடலும் உயிரும் கூறுபடும் நேரம். கூறு தல் - வேருதல் - பிரிதல். கூறு உ - கூற்று, தொழிற் பயர். கூறு அம் - கூற்றம் (*299, 894, 1085*) என்பது து. உடலும் உயிரும் கூறுபடும் காலத்தையும் தொழிலை உயிருடையதாகக் கூறியது. **கூற்றுவன்** என ஆண்பா க் கூறுதலு மொன்று.

**அணங்கு, காமன்:** ஆண்களை வருத்தும் பெண்பாற் காமத்தை அணங்கு (918, 1081, 1082) எனப் பெண்பாலாகவும், பெண்களை வருத்தும் ஆண்பாற் காமத்தைக் காமன் (1197) என ஆண்பாலாகவும் கூறுதல் நூன்மரபு. அணங்கு - வருத்தம். 'தகையணங்குறுத்தல்' என்னும் 109 ஆம் அதிகாரத்தைக் காண்க.

**எழுமை:** 'காலேந்தெடு, ஏழெட்டுப்பேர்' என்னும் வழக்குப் போல, எழுமை என்னும் எண்ணும் பெயரைப் பல என்னும் பொருளிலேயே ஆளுகின்றார் வள்ளுவர் (62, 107, 126, 398, 518, 835). 'எழுபது கோடி' (639) என்பதும் பலகோடி - மிகப்பல என்னும் பொருளதே.

**பிறப்பு:** பிறப்பு என்னும் சொல் இருவினைக் கீடாக உயிர் எடுக்கும் பல பிறப்புகளைக் குறிப்பதன்று. மறு பிறப்பு என்பது சமயக் கொள்கை. 10, 347, 972 குறளில் வாழ்க்கை எனவும், 1315 குறளில் இப்பிறப்பில் எனவும், 62, 107 குறளில் தலைமுறை எனவும், 113ல் குடி எனவும், 114ல் மக்கட் பிறப்பு எனவும், 335, 369ல் தோற்றம் எனவும் 351ல் துன்பம் எனவும் பொருள்படும்.

**இம்மை, மறுமை** (88): நாம் உயிரோடிருக்கும் நி[illegible] இம்மை எனப்படும். நாம் வாழ்வது இம்மை. நாம் இற[illegible] பிறகு நம்மைப்பற்றி இங்கு பேசப்படுவது மறுமை எ[illegible] படும். ஒருவன் இறந்த பின்னர் தன் பெயர் இவ்வுல[illegible] பேசப்படும்படி செய்வதே மறுமைப் பயனாகும். வள்ளு[illegible] மறுமையில் உள்ளார். அதாவது மறுமை வாழ்வு வாழ்[illegible] றார்.

பிற்காலப் புராண சமயப் புலவர்கள் [illegible]யவள் தவ்வை, கூற்று, அணங்கு, காமன் என்பவற்றை[illegible]டவுட் சாதியினர் எனவும், எழுமை என்பதை எழுவகை[illegible]றப்பு எனவும், பிறப்பு, மறுமை என்பவற்றை மறுபி[illegible] என வும் கற்பித்து விட்டனர்.

**உரை:** இன்றியமையாச் சிறப்பினையுடைய [illegible]க் கருநூலமாகிய திருக்குறளை, இக்காலத் தமிழ[illegible]ர் எல்லோரும் கற்றுப் பயன் பெற முடியாத வ[illegible] அதன் பழைய உரை அமைந்துள்ளது; வள்ளுவர்

துக்கு மாருக, அயற்கொள்கைகள் பல வலிந்து புகுத்தப் பட்டுத் தமிழ்ப் பண்பாடு மறைக்கப்பட்டுள்ளது*. கருத்து விளக்கமும் உரையின் நடையும் கடினமாக உள்ளன. எனவே, அக் குறைபாடுகளைப்போக்கி, எழுதப் படிக்கத் தெரிந்த எல்லாத் தமிழ்மக்களுக்கும் திருக்குறளை எளிதில் படித்துப் பயன் பெறும்படியான ஓர் உரை வேண்டும், என்பது பெரும்பாலான தமிழறிஞர்கள் கருத்து. அத்தகைய உரை ஒன்று எழுதவேண்டும் என்று நெடு நாளாய் நினைவு கூர்ந்து வந்தனன். அந் நினைவின் முனைப்பி ஞல் இவ்வுரையை எழுதி முடித்தேன். எழுதி முடித்ததும் அச்சிட்டு வெளியிட விரைந்ததால், நூலினுள் யாதொரு திருத்தமும் செய்யாது அப்படியே வெளியிட நேர்ந்தது. இரண்டாம் பதிப்பும் அப்படியே வெளிவந்தது. இப் பதிப்பு வேண்டிய திருத்தங்களுடன் வெளிவருகிறது. தமிழ் மக்கள் இவ்வுரையின் துணைக்கொண்டு முப்பாலின் பயன் முழுதும் பெறுவார்களாக.

---

*திருக்குறளும் பரிமேலழகரும் (புலவர் குழந்தை) என்னும் நூலில் காண்க.

# 1 அறத்துப்பால்

மக்களின் பழக்கவழக்கங்களாகிய ஒழுக்கமுறைகளை அறம் பொருளின்பம் என முப்பாலாக்கி, அம் மூன்றுமே மக்களால் அடையப்பெறும் உறுதிப்பொருள்கள் எனக்கொண்டனர் நம் முன்னையோராகிய பழந் தமிழ் மக்கள். அம்மூன்றனுள் மக்களின் வாழ்க்கைப் பயன் முழுவதையும் அடக்கித் தமிழ்மக்களுக் கேற்ற சிறப்புவகையில் நூல் செய்தனர் வள்ளுவர்.

அவற்றுள், அறமாவது—செய்வனவும் தவிர்வனவுமாகிய நடக்கை முறைகள். அறம்—செய்வன தவிர் வனவற்றை அறுதி செய்யப்பட்டது, வரையறை செய் யப்பட்டது·என்னும் பொருளது. அறு+அம் - அறம்; தொழிற்பெயர். பால்-பிரிவு. இலக்கியத் துறையில் அறமும் பொருளும் புறப்பொருள் எனவும், இன்பம் அகப் பொருள் எனவும் வழங்கப் பெறும்.

அந்நடக்கை முறைகள் இல்லறம், துறவறம் என இருவகைப்படும். இல்லறமாவது-ஆணும் பெண்ணுமாகிய வாழ்க்கைத் துணைவர்கள் மக்கள் தமருடன் கூடித் தமது முயற்சியால் பொருளீட்டிப் பகுத்துண்டு வாழும் இல்வாழ்க்கை நிலை, துறவறமாவது—இல்லறத்தே இன்புற்று வாழ்ந்து, பருவமுதிர்ந்த விடத்துக் குடும்பத்தைத் தம் மக்களிடம் ஒப்படைத்து விட்டுப் பொருட் பற்றின்றி, அதாவது தன்னலமின்றிப் பொது நலஞ் செய்து வாழும் துறவு வாழ்க்கை நிலை. இயல் - இலக்கணம்.

# 1 முதலியல் - (4)

இனி, முதலில் முப்பாலுக்கும் பொதுவாகிய முதலியல் கூறுகின்றார்.

## அதிகாரம் 1 இறைநலம்

இறை நலம் - இறையாகிய நலம்; பண்புத் தொகை. இறை - முதன்மை. நலம் - குணம். மக்கள் முதன்மையாகிய குணங்களை அடையவேண்டும் என்பதே இவ்வதிகாரத்தின் உட்கருத்தாகும். மக்களின் வாழ்க்கைப் பயனாகிய அறம் பொருளின்பங் கூறப் புகுந்தார், அம்முப்பாலையும் இனிது நுகரவேண்டின் உயரிய மக்கட் பண்புகளை அடையவேண்டும் என முதற்கண் அக்குணச் சிறப்புக் கூறுகின்றார். 'அன்பே கடவுள், அறிவே கடவுள், ஆற்றலே கடவுள்' என்னும் கடவுட் கொள்கையும் குணங்களையே குறித்தலால், அக்கடவுட் கொள்கையும் இதனிற் புறம்பானதன்று. கடவுள் - மேலானது, மேன்மையானது, சிறந்தது.

1. முதன்மையானது, 2. உண்மை அறிவு, 3. உயர்ந்த அறிவு, 4. விருப்பு வெறுப்பின்மை, 5. முதன்மையான உண்மைப்புகழ், 6. அவாவின்மை, பொய்தீர் ஒழுக்கம், 7. ஒப்பில்லா உயர்குணம், 8. அறவுணர்ச்சி, செந்தண்மை, 9. எளிமைக்குணம், 10. முதன்மை என்னும் உயர் குணங்களையே ஆசிரியர் இப்பத்துக் குறட்பாவினும் ஆதி பகவன், வாலறிவன்,......இறைவன் என ஆண்பாலாகப் படைத்துக் கூறுகின்றார். பொருள், குணங்களை ஆண் பாலாகவும், பெண்பாலாகவும் கூறுதல் நூன் மரபு. 'நிலமென்னும் நல்லாள்' (1040), 'அழுக்கா றெனவொரு பாவி'(168) என நிலத்தையும், அழுக்காற்றையும் பெண்ணாகவும், ஆணாகவும் கூறுதல் காண்க.

ஓரதிகாரத்தில் வரும் சொல்லேயோ, சொற்றொடரையோ, அவ்வதிகாரப் பொருளேயோ கொண்டே அவ்வதிகாரத்திற்குப் பெயரிடும் ஆசிரியர் கொள்கைப்படியே இவ்வதிகாரத்தின் பெயரும் அமையப்பெற்றதாகும். முப்பாலாகிய இந்நூலுட் கூறப்படும் உயர்குணங்களின் உருவகமே இவ்வதிகாரம் என்பதை மறுமுறையும் நினைவுகூர்க.

1 அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே உலகு.

எழுத்தெல்லாம் அகரம் முதல - எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன ; உலகு ஆதிபகவன் முதற்று - அதுபோல, உலகம் ஆதிபகவனை முதலாக உடையது.

அகரம் - அ. உலகம் என்றது மக்களை. அகரம் எழுத்துகளுக்கெல்லாம் முதலானற்போல, ஆதிபகவன் மக்களுக்கெல்லாம் முதல்வன் ஆவான். ஆதிபகவன் - முதன்மையானவன். ஆதி - முதல். பகவு - பகுதி. 'எள் பகவு அன்ன' (889) எனக்காண்க. ஆதிபகவு - முதன்மைப்பகுதி. முதன்மையானது - குணங்களின் முதன்மைப்பகுதி. அதாவது எல்லாக் குணங்களினும் முதன்மையான குணம் என்பது பொருள். ஆதிபகவு + அன் - ஆதிபகவன். முதன்மையான குணத்தையே ஆதிபகவன் என ஆண்பாலால் கூறினர். மக்கள் முதன்மையான குணமுடையராய் வாழவேண்டும் என்பது கருத்து. (க)

2 கற்றதனுல் ஆய பயனென்கொல் ? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

வால் அறிவன் நல்தாள் தொழார் எனின் - உண்மையறிவினை உடையவனது நல்லதாள்களைத் தொழா

ராயின், கற்றதனால் ஆய பயன் என் - ஒருவர்க்குக் கற்றதனால் உண்டாகிய பயன் ஒன்றுமில்லை.

கொல் - அசை. குணத்தை உயர்திணை யாண்பாலாகக் கொண்டதற்கேற்ப 'நற்றாள்' என்றார். வருகின்ற பாட்டுக்களில் வரும் 'மாணடி' முதலியவற்றிற்கும் இஃதொக்கும். வால் - உண்மை. உண்மையறிவைப் பெறுவதே கல்வியின் பயனாகும். (உ)

3 மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார் - உயர்ந்த அறிவினை உடையவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தவர், நிலமிசை நீடுவாழ்வார் - உலகத்தில் நிலைபெற்று வாழ்வார்.

மலர் - உள்ளத்தின் உருவகம். மிசை - மேல். ஏகுதல் - எழுதல். மிசை ஏகுதல் - மேலே எழுதல் - உயர்தல். மலர்மிசை ஏகினான் - உயர்ந்த அறிவன். நிலைபெற்று வாழ்தல் - துன்பமின்றி இன்புற்று நெடிது வாழ்தல். உயர்ந்த அறிவினை அடைந்தவர் உலகில் இன்புற்று நெடிது வாழ்வர். (ங)

4 வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை இல.

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு - விருப்பு வெறுப்பற்றவனது அடிகளைச் சேர்ந்தவர்க்கு, யாண்டும் இடும்பை இல - எப்போதும் துன்பம் இல்லை.

துன்பத்தின் காரணங்கள் இல்லாதுபோகவே துன்பமும் இல்லையாயிற்று. விருப்பு வெறுப்பற்றவர்க்கு எப்போதும் துன்பம் இல்லை. (ச)

5 இருள்சேர் இருவினையுஞ் சேரா; இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு இறைவனது மெய்ப்பொருள் சேர்ந்த புகழை விரும்பினவரிடத்து, இருள் சேரும் இருவினை சேரா-அறிவின்மையால் உண்டாகும் பெரிய துன்பங்கள் சேரா.

மெய்ப்பொருள் சேர்ந்த புகழ் - உண்மைப் புகழ். இறைவன் - முதல்வன், தலைவன். மக்கள் தலைவனை மன்னனை இறைவன் என்றே வழங்குகிறார் (720, 733, 778). தலைமை இடம்பற்றி அரசனை இறைவன் என்றதும், தலைமைக்குணத்தை இறைவன் என்றதற்குச் சான்றாகும். இறைவன் - முதன்மை குறித்தது. வினை - ஆகுபெயராய்த் துன்பத்தை உணர்த்திற்று. இருள் - அறிவின்மை. முதன்மையான உண்மைப் புகழை விரும்புவோர் அறிவுமயங்கித் துன்பந் தரும் செயல்களைச் செய்யார் என்பது கருத்து. (ரு)

6 பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

பொறிவாயில் ஐந்து அவித்தான் - ஐம் பொறி வழியே செல்லும் ஐம்புலன்களையும் அடக்கினவனது, பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் - உண்மையான ஒழுக்க நெறியில் நின்றவர், நீடு வாழ்வார் - உலகில் நிலைபெற்று வாழ்வார்.

ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி. ஐம்புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம். ஊறு - தொட்டறியும் உணர்வு. நாற்றம் - மணம். ஐந்தவித்தான் ஆற்றலாகிய (25) அவாவின்மை என்னும் உயர் குணத்தையே 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்றார். அவாவின்மையோடு உண்மையான ஒழுக்க நெறியில் நிற்பவர் நெடிது வாழ்வார். (சா)

7 தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.

*தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் - ஒப்பில்லாதவனது தாளைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல், மனக்கவலை மாற்றல் அரிது - மற்றையோர்க்கு மனக் கவலையை நீக்கமுடியாது.*

*தனக்குமேல் ஒருவன் இருந்தால்தானே தான் அவனிலும் தாழ்ந்தவன் என்னும் கவலை உண்டாகும்? வண்டியில் செல்வோர்க்குத் தானே வானூர்தி இல்லையே என்ற கவலை? வானூர்தியில் செல்வோர்க்கு அதற்கு மேல் செல்லும் ஓர் ஊர்தியின்மையால் கவலை உண்டாக இடமில்லை என்பதை அறிக. ஒப்பில்லாத உயர்குண முடையோர்க்கு மனக்கவலை இல்லை.* (எ)

8 அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது.

*அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் - அறக் கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல் மற்றையோர்க்கு, பிற ஆழி நீந்தல் அரிது - பிறகடல்களைக் கடக்க முடியாது.*

*அறம் - 'மனத்துக்கண் மாசிலன் ஆதல்' (34). அற ஆழி - மிக்க அறம்; உருவகம். அந்தணன் - 'எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுபவன்' (30). ஆழி-கடல். புணை - தெப்பம். அறத்தை ஆழி என்றதனால், பிற என்றது பொருளையும் இன்பத்தையும். மனத்துக்கண் மாசிலராகி, உயிர்களிடத்துச் செந்தண்மையும் உடையவரே, பொருளின்பங்களை எளிதில் துய்க்கமுடியும்.* (அ)

9 கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

*எண் குணத்தான் தாளை வணங்காத் தலை - எளிமையாகிய குணம் உடையவனது தாளை வணங்காத தலைகள்,*

கோள் இல் பொறியில் குணம் இலவே - புலன்களைக் கொள்ளுதலில்லாத பொறிகள் போலப் பயனில்லா தனவேயாகும்.

பொறி, புலன்களை 6-ஆம் குறளுரையில் காண்க. கோள் இல் பொறி - கேளாக் காது, காணாக் கண், பேசா வாய் ஆகிய செவிடு, குருடு, ஊமு. எண்மை - எளிமை (424, 558), செருக்கற்ற தாழ்வான குணம். 'பணியுமாம் என்றும் பெருமை' (978) எனக் காண்க. எளிமையான குணமில்லாதவர் குருட்டுக் கண், செவிட்டுக் காது போலப் பயனற்றவர் ஆவர். எண்ணம் சொல் செயல் மூன்றும் எளிமையாக வேண்டும் என்பார், எளிமைச் செயல் தோன்றத் 'தாளை வணங்காத் தலை' என்றார். (கூ)

10 பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் ;
இறைவன் அடிசேரா தார்.

இறைவன் அடி சேராதார் - இறைவனது அடியாகிய புணையைச் சேராதவர், பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் - இப்பிறவியாகிய பெரிய கடலை எளிதில் கடக்க வல்லராய் இருக்கினும் கடவார்.

இறைவன் - தலைவன். தலைமையான குணங்களை யெல்லாம் கொள்ள 'இறைவன்' என்றார். பிறவி - வாழ்க்கை. வாழ்க்கை பல துன்பங்களுக்கு உறைவிடமாய் இருப்பதனால் கடல் என்றார். கடத்தல் - வாழ்க்கையில் வறுமை முதலிய துன்பமின்றி வாழ்தல். நீந்துவர் - வினையாலணையும் பெயர். நீந்துபவரும் என்னும் உயர்வுசிறப் பும்மை தொக்கது. தலைமையான குணங்கள் இல்லாதவர் வாழ்க்கையை எளிதில் நடத்தக்கூடிய செல்வ முதலியன உடையராய் இருக்கினும் துன்பமின்றி இன்ப வாழ்க்கை வாழ முடியாது என்பதாம். உயர் குணங்கள் நல் வாழ்வுக்கு இன்றியமையாதவை என்பதை எதிர்மறை முகத்தால் விளக்கினார். (ய)

## 2 வான் சிறப்பு

வான்-மழை. வான்சிறப்பு - மழையினது சிறப்புக் கூறுதல். அறம்பொருளின்பமாகிய உலகியல் நடத்தற்கேதுவாகலின், மழை முப்பாற்கும் பொதுவாயிற்று. மழையின் சிறப்புணர்ந்து அதன் பயன்கொண்டு வாழ்தல் இதன் பயன்.

11 வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று.

வான் நின்று உலகம் வழங்கி வருதலால் - மழையினால் உலகத்து உயிர்கள் நிலைபெற்று வருவதால், தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று - அம்மழையே உலகத்துயிர்களுக்குச் சாவா மருந்து என்று உணரவேண்டும்.

நின்று - ஆல் என்னும் மூன்றும் வேற்றுமைக் கருவிப் பொருள். சாவாமருந்து - உடலை நெடுநாளைக்கு அழியாது காக்கும் ஒருவகை மருந்து. பாற்று - பான்மையை உடையது. பான்மை - தன்மை. மழையே உலகம் நடைபெற்றுவருவதற்குக் காரணமாகும். (க)

12 துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

துப்பார்க்கு துப்பு ஆய துப்பு ஆக்கி - உண்பவர்களுக்கு நல்ல உணவை உண்டாக்கி, துப்பார்க்கு துப்பு ஆயதும் மழை - தண்ணீராய் உண்பவர்களுக்குத் தானும் உணவாவதும் மழையே யாகும்.

து - உண். துப்பு-நல்லது, உணவு. உணவுப்பொருள் விளையவும், தண்ணீராய் உண்ணவும் மழை பயன் படுகிறது. (உ)

13 விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
நுண்ணின் றுடற்றும் பசி.

விண் இன்று பொய்ப்பின் - மழை வேண்டுங் காலத்துப் பெய்யாதுபோனால், விரிநீர் வியன் உலகத்துள் - விரிந்த கடலால் சூழப்பட்ட பெரிய உலகத்தின் கண், பசி நின்று உடற்றும் - பசி நிலைபெற்று உயிர்களை வருத்தும்.

விண் - மழையை உணர்த்திற்று. இன்று பொய்ப்பின் - இல்லாமல்போனால். பசி நிலைபெற்று வருத்துதல்-மிக்க உணவுத் தட்டுதல் உண்டாதல். (௩)

14 ஏரின் உழாஅ ருழவர் ; புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால் - மழை என்னும் வருவாயின் வளப்பம் குறையுமானால், உழவர் ஏரின் உழார் - உழவர் ஏரினால் நிலத்தை உழமாட்டார்.

குன்றியக்கால் என்பது குறைந்து நின்றது. வளம்-வருவாய் பெருகுதல். மழையின்றேல் உழவின்று ; உழவின்றேல் விளைவின்று ; விளைவின்றேல் பசி வருத்தும் என்பதாம். (௪)

15 கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

கெடுப்பதும் - நிலத்தில் வாழ்பவரைப் பெய்யாது கெடுப்பதும், கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதும் - கெட்டவர்க்குத் துணையாய்ப் பெய்து முன் கெடுத்ததைப்போலவே வாழ்விப்பதும், எல்லாம் மழை - ஆகிய இவையெல்லாம் செய்யவல்லது மழை.

சார்வு - துணை. மற்று ஆங்கே - முன்போலவே. எடுத்தல் - பொருட் குறைவால் வறுமைப் படுகுழியில்

வீழ்ந்து தவிப்போரைப் பொருட் பெருக்கால் செல்வத் திடரில் தூக்கிவிடுதல். வாழ்வுக்கும் தாழ்வுக்கும் மழையே காரணம். (ரு)

16 விசும்பில் துளிவீழின் அல்லாால்மற் றுங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

விசும்பில் துளி வீழின் அல்லால் - முகிலில் இருந்து மழைத்துளி விழுந்தாலன்றி, ஆங்கே பசும்புல் தலை காண்பு அரிது - அவ்விடத்தே பசும்புல்லின் தலையைக் காண்பது அரிது.

விசும்பு - வானம்; முகிலை யுணர்த்திற்று. தலை - நுனி. காண்பு - காண்பது. மற்று - அசை. மழை பெய்யா விடின் புற்களும் தளிர்க்கா. (சு)

17 நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும்; தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

எழிலி தடிந்து நல்காதாகிவிடின் - முகில் மின்னி மழை பெய்யாவிட்டால், நெடுங்கடலும் தன் நீர்மை குன்றும் - பெரிய கடலும் தன் இயல்பு குறையும்.

தடித்து - மின்னல். தடிந்து - மின்னி; வினையெச்சம். கடல் தன் நீர்மை குன்றுதலாவது - மீன் முதலிய நீர் வாழுயிர்கள் பெருகாமையும், முத்து, பவளம் முதலியன உண்டாகாமையுமாம். தான் - அசை. மழைக்குக் காரணமான கடல்வளத்திற்கும் மழையே காரணமாகும். (எ)

18 சிறப்பொடு பூசனை செல்லாது; வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.

வானம் வறக்குமேல் - மழை பெய்யாதாயின், ஈண்டு வானோர்க்கும் சிறப்பொடு பூசனை செல்லாது - இங்கு வரும் தேவர்களுக்கும் சிறப்பாக வழிபாடு நடவாது.

வழிபாடு - முகமன் - அன்போடு வரவேற்றுப் போற்றுதல். ஈண்டு என்றது தமிழகத்தை. வானோர் இன்னார் என்பதை முகவுரையில் காண்க. மழை பெய்யா தாயின் அன்போடு அயலாரைப்போற்றும் தமிழர் பண்பாடாகிய அச்செயலும் நடைபெறாதென்பதாம். (அ)

19 தானந் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

வானம் வழங்காது எனின் - மழை பெய்யாது விட்டால், வியன் உலகம் - இப்பரந்த உலகத்தில், தானம் தவம் இரண்டும் தங்கா - தானமும் தவமும் ஆகிய இரண்டும் நடைபெறா.

தானம் - இல்லார்க்கு இயன்றதைக் கொடுத்தல். தவம் - மனவடக்கம் முதலியன. 27-ஆம் அதிகாரம் பார்க்க. தானம் இல்லறத்தார்க்கும், தவம் துறவறத்தார்க்கும் உரியன. நாட்டு மக்கள் உணவின்றித் தவிக்கும்போது துறவிகள் மனவமைதியுடன் இருக்க முடியாதாகையால் துறவறமும் நடைபெறாதென்றார். மழையின்றேல் இல்லறம், துறவறம் இரண்டும் இனிது நடைபெறா. (கூ)

20 நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு

யார் யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது எனின் - எத்தகையோர்க்கும் தண்ணீரில்லாமல் உலகியல் நடைபெறாதாயின், ஒழுக்கு வான் இன்று அமையாது - அத் தண்ணீரின் வருகையும் மழையில்லாமல் உண்டாகாது.

நீர் இன்றி மக்கள் வாழமுடியாது, மழையின்றி நீரில்லை என வான் சிறப்புக் கூறியவாறு. (ய)

## 3 நீத்தார் பெருமை

இல்லற இன்பத்தைத் துறந்து, பொதுநலம் புரியும் பெரியாரது பெருமை கூறுதல். 'தலைவனும் தலைவியும் இல்லறம் இனிது நடத்தி, காமம் தீர்ந்த காலை - முதுமைப் பருவம் அடைந்த பின் - மக்களிடம் குடும்பத்தை ஒப்படைத்துவிட்டுப் பொதுநலத் தொண்டு செய்தல் முன்னர் நடத்திய இல்லறத்தின் பயனாகும்,* என்பது இதற்கு இலக்கணம். இவர்கள் உலகியல் இனிது நடத்தற்குத் துணை செய்தலான், இது முப்பாற்கும் பொதுவாயிற்று. நீத்தார் பெருமையை அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்ளுதல் இதன்பயன்.

21 ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு.

பனுவல் துணிவு - நூல்களது துணிவு, ஒழுக்கத்து நீத்தார் பெருமை - நல்லொழுக்கத்தில் நின்று தீய ஒழுக்கங்களைத் துறந்தாரது பெருமையையே, விழுப்பத்து வேண்டும் - எல்லாப்பெருமைகளினும் மேலாக விரும்பும்.

பனுவல் என்றது - பனுவல் செய்த சான்றோர்களை. பனுவல் - நூல். துணிவு - உறுதியாகக் கொள்ளுதல், முடிவுகட்டுதல் ; எல்லாப் பெருமைகளினும் மேலான பெருமையென முடிவுகட்டுதல். அறிவுநூற் புலவர்கள் நீத்தார் பெருமையே எல்லாப் பெருமைகளினும் மேலான பெருமையெனக் கொள்வர். (க)

22 துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

துறந்தார் பெருமை துணைக்கூறின் - துறந்தவர்கள் பெருமைக்கு அளவு கூறின், வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டு அற்று - அது உலகத்தில் இறந்தவர்களை இத்தனைபேர் என்று எண்ணியறிவது போன்றது.

---

* தொல் : கற்பியல் - 51

இறந்தவர் எண்ணிக்கை அளவிலடங்காததுபோல், துறந்தவர் பெருமையும் அளவிலடங்காது என்பதாம். அதாவது அளவிட்டுக் கூற முடியாத பெருமையாகும் என்பது. (உ)

23 இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

இருமை வகை தெரிந்து - நன்மை தீமைகளின் பாகுபாடுகளை நன்கு அறிந்து, ஈண்டு அறம் பூண்டார் பெருமை - மிக்க அறத்தைக் கைக்கொண்டவர் பெருமையே, உலகு பிறங்கிற்று - உலகில் சிறந்தது.

ஈண்டுதல் - மிகுதல். ஈண்டறம் - வினைத்தொகை. நன்மை தீமைகளின் பாகுபாடுகளை ஆராய்ந்தறிந்து, நன்மைகளையே மிகுதியும் கைக்கொண்டவர் பெருமையே உலகில் சிறந்தது என்பதாம். (௩)

24 உரனென்னுந் தோட்டியால் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

உரன் என்னும் தோட்டியால் - அறிவு என்னும் குத்துக்கோலால், ஓர் ஐந்தும் காப்பான் - பொறிகளாகிய யானைகள் ஐந்தையும் புலன்கள்மேற் செல்லாமல் காப்பவன், வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து - துறவறம் என்னும் சிறந்த நிலத்திற்கு ஒப்பற்ற விதையாவான்.

உரம் - வலிமை, மனவுறுதி. அறிவே மனவுறுதியை உண்டாக்குவதால் அறிவு எனப்பட்டது. பொறி, புலன்களை 6-ஆம் குறளுரையில் காண்க. ஐம்பொறிகளையும் ஐம்புலன்கள் மேல் செல்லாமல் அடக்கியாள்வது அறிவேயாகும். வரம் - சிறந்தது. ஐம்பொறி அடக்கத்தின் வளர்ச்சியே துறைவறமாகும். ஐம்பொறி அடக்கம் துறவறத் தொடக்கம். (௪)

25 ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

ஐந்து அவித்தான் ஆற்றல் - ஐம்பொறிகளையும் அடக்கினவனது வல்லமைக்கு, அகல் விசும்பு உளார் கோமான் இந்திரனே - அகன்ற வானுலகத்தார்க்குத் தலைவனாகிய இந்திரன் வரலாறே, சாலும் கரி - தக்க சான்றாகும்.

சாலும் - பொருந்தும். சான்று - சாட்சி. தேவர் தலைவனாகிய இந்திரன், தமிழர்களின் பெருமை காண மனம் பொறாதவன்; வலிமையும் பெருமையும் தலைமையும் புகழும் உடைய தமிழ்ப் பெரியார்களை ஒழிப்பதையே தனது வாழ்க்கைப் பயனாகக் கொண்டவன்; வரையா ஈகையால் பெரும் புகழோடு வாழ்ந்த 'மாவலி' என்னும் தமிழரசனை வாமனன் என்பானைக் கொண்டு கொல்வித்தவன்; பாண்டியர் புகழ் கண்டு பொறாது, பாண்டி நாட்டின் மேல் மழையையும், கடலையும் ஏவினவன் எனப் பல கதை கூறப்படுகின்றன. அன்றும் இத்தகைய பல கதைகள் கூறப்பட்டிருக்கலாம். அப்பொய்க் கதைகளைத் தெரிந்திருந்தனர் பழந்தமிழ் மக்கள். சிலர் உண்மையென நம்பியும் வந்தனர். துறந்தாரின் பெருமையைப் பலரும் எளிதில் உணரும் பொருட்டு இந்திரன் வரலாற்றை எடுத்துக் காட்டாகக் காட்டினர் வள்ளுவர். தமிழ்மக்களின் கொடை, புகழ் போன்ற பெருமைக்கே பொறாமைப் படுகிற இந்திரன், ஒழுக்கத்து நீத்து ஐந்தவித்தார் பெருமைக்கு என்படான்? என நீத்தார் பெருமையை விளக்கியவாறு. அயல் நாடர் பொறாமை கொள்ளக்கூடிய அவ்வளவு பெருமை. (ரு)

26 செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

செயற்கு அரிய செய்வார் பெரியர் - செய்தற்கு அரியனவாகிய செயல்களைச் செய்பவர் பெரியார்,

செயற்கு அரிய செய்கலாதார் சிறியர் - செய்தற்கு அரியனவாகிய செயல்களைச் செய்யாதவர் சிறியார்.

செயற்கரிய - ஒழுக்கத்து நீத்தல், ஐந்தவித்தல் முதலியன. தன்மானத் தந்தை பெரியார் செய்யும் சமூகப் புரட்சிபோன்ற செயற்கரிய செயல்களுமாம். ஒருவர் செயலைக் கொண்டே அவரைப் பெரியார், சிறியார் என அறிய வேண்டும். (சு)

27 சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

உலகு - உலகியலானது, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின் - சுவை முதலிய ஐம்புலன்களின், வகை தெரிவான் கட்டே - வகையை ஆராய்பவனிடத்தே அமைந்துள்ளது.

வகை - ஒவ்வொன்றன் தன்மை. கட்டே - கண்ணதே. ஐம்புலன்களின் தன்மையை அறிந்தவனே உலகியலை அறிந்தவனாவான். உலகப் பெரியார்களெல்லாம் ஐம்புலன்களின் தன்மையை உணர்ந்து நடந்து பெருமை பெற்றவரேயாவர். (எ)

28 நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

நிறைமொழி மாந்தர் பெருமை - நீத்தார் பெருமையை, நிலத்து மறைமொழி காட்டிவிடும் - உலகில் அவர்கள் மறைமொழிகளே காட்டிவிடும்.

நிறைமொழி - உண்மை நிறைந்தமொழி. மறைமொழி - மந்திரம். அது மறைவாகச் சொல்லப்பட்டு வந்ததால் மறைமொழி எனப்பட்டது. மந்திரம் - எண்ணுதல். மெஃச்மெரிசம், இப்நாடிசம்போல, மனவொருமையால், மனநிறைவொடு வாய்க்குள்ளே சொல்லப்படும் அச்சொல் சொன்னபடியாதல். (அ)

29 குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

குணம் என்னுங் குன்று ஏறி நின்றார் வெகுளி - நிறைந்த குணமுடையார்க்கு உண்டாகும் சினம், கண மேயும் - நொடிப்பொழுதுதான் நிற்குமெனினும், காத் தல் அரிது - தடுத்தல் அரிதாகும்.

குணத்தைக் குன்றாக உருவகித்தார், நிறைந்த குணமுடையார் என்பதற்கு. நிறைந்த குணமுடை யார்க்குச் சினம் (கோபம்) உண்டாகாது. அப்படி உண்டானாலும் நொடிப்பொழுதில் தணிந்துவிடும். அந் நொடிப்பொழுதேனும் வெகுளப்பட்டாரால் தடுக்க முடியாதென்பதாம். குன்றன்ன குணமுடையாரிடும் தண்டனையைப் பொதுமக்களே நிறைவேற்றி விடுவாராத லால், 'தடுத்தல் அரிது' என்றார். பெரியார்க்குச் சினமுண்டாகும்படி நடந்துகொள்ளக் கூடாது. (௯)

30 அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் - எல்லா உயிர்களிடத்தும் அருளுடையவராய் நடந்து கொள்வதால், அந்தணர் என்போர் அறவோர் - அந்த ணர் என்போர் துறவிகளேயாவர்.

செந்தண்மை - அருள், இரக்கம். அருளுடைய வர்க்கு அந்தணர் என்று பெயர். அருளுடைய தமிழ்த் துறவிகளைக் குறிக்கும் தனித்தமிழ்ச் சொல்லான 'அந்த ணர்' என்னும் பெயர் பார்ப்பன இனப்பெயர் ஆவதற்கு எவ்வகையினும் பொருந்தாமை அறிக. துறவிகள் உயிர்க ளிடத்து அருளுடையராய் நடத்தலினால் அவர்க்கு அந்தணர் என்னும் பெயர் வழங்கலானது. (௰)

# 4 அறன் வலியுறுத்தல்

அறத்துப் பாலில் கூறப்படும் பல்வகையான அறங்களையும் பொதுவகையால் சிறப்பித்துக் கூறுதல். அறம்-ஒழுக்கம், நன்னடக்கை. வலியுறுத்தல் - வற்புறுத்தல், சிறப்பித்தல். பொருளும் இன்பமும் அறத்தின் வழிப்பட்டு நடக்கவேண்டுதலின், இது ஏனையிரண்டற்கும் ஒருவாறு பொதுவாகும்.

31 சிறப்பீனுஞ் செல்வமு மீனும் அறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு.

சிறப்பு ஈனும் - சிறப்பையும் கொடுக்கும், செல்வமும் ஈனும் - செல்வத்தையும் கொடுக்கும், அறத்தின் ஊங்கு - ஆதலால், அறத்தைவிட, உயிர்க்கு ஆக்கம் எவன் - மக்களுக்கு வேறு சிறப்பு ஒன்றுமில்லை.

சிறப்பு - மதிப்பு. அறத்தைவிடச் சிறந்தபேறு வேறில்லை. (க)

32 அறத்தினூஉங் காக்கமு மில்லை; அதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை - ஒருவர்க்கு அறத்தைவிடச் சிறந்ததும் இல்லை, அதனை மறத்தலின் ஊங்கு கேடு இல்லை - அவ்வறத்தை மறத்தலைக் காட்டிலும் கேடுதருவது வேறொன்றுமில்லை.

மறத்தல் - அறத்தைவிட்டு மறத்தைச் செய்தல். மறம் - தீமை. அறம் - நன்மை. (உ)

33 ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாஞ் செயல்.

அறவினை ஓவாது ஒல்லும் வகையான் - அறச்செயலை இடைவிடாது இயன்ற மட்டிலும், செல்லும் வாய்

எல்லாம் செயல் - செய்யத்தக்க வழிகளிலெல்லாம் செய்க.

இயன்ற மட்டிலும் - எவ்வளவு முடியுமோ அவ்வளவு. கூடுமானவரையிலும் நடக்க முடியும் இடங்களிலெல்லாம் நல்லவனுகவே நடக்கவேண்டும். செயல் - வியங்கோள் வினைமுற்று. (௩)

34 மனத்துக்கண் மாசில ஞதல் அனைத்தறன் ;
ஆகுல நீர பிற.

மனத்துக்கண் மாசு இலன் ஆதல் - மனத்திலே குற்றமில்லாதவனுகுக, அனைத்து அறன் - அவ்வளவே அறம் என்பது; பிற ஆகுல நீர - மற்றவையெல்லாம் பிறர் அறிவதற்காகச் செய்யும் ஆடம்பரத் தன்மைகளேயாகும்.

மாசு - குற்றம். ஆகுலம் - ஆடம்பரம். பிற - சொல்லாலும், கோலத்தாலும் (வேடம்) அறவோன் போல் நடித்தல். குற்றமற்ற மனத்துடன் இருப்பதே அறமாகும்; மனமாசற்ற நிலையே அறமாம். (௪)

35 அழுக்கா றவாவெகுளி இன்ஞச்சோல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்.

அழுக்காறு அவா வெகுளி இன்ஞச் சொல் நான்கும் - பொருமை, பேராசை, சினம், கடுஞ்சொல் ஆகிய நான்கும், இழுக்கா இயன்றது அறம் - இல்லாமல் நடப்பதே அறமாகும்.

இன்ஞ - துன்பம். இன்ஞச்சொல் - பிறர்க்குத் துன்பந்தரும் சொல். இந் நான்கும் உடைமை அறமாகாது.

36 அன்றறிவா மேன்ஞ தறஞ்செய்க ; மற்றது
பொன்றுங்கால் பொன்றுத் துணை.

அன்று அறிவாம் என்ஞது அறம் செய்க - பின்பு செய்வோம் என்றிராமல் வாழ்க்கைத் தொடக்கத்தி

விருந்தே அறத்தைச்செய்க, அது பொன்றுங்கால் பொன்றாத்துணை - அவ்வறம் இறக்கும்போதும் அழியாத் துணையாகும்.

அறம் - நல்லொழுக்கம். இளமையிலிருந்தே ஒருவன் நல்லொழுக்கமாக நடக்கின், அவன் இறந்தபிறகும் அவ்வொழுக்கம் அவன் பெயரை உலகில் நிலைபெறச் செய்யும். பெயர் - புகழ். மற்று - அசை. (சா)

37 அறத்தா றிதுவென வேண்டா ; சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை - பல்லக்கைச் சுமப்பானிடத்தும், அதில் ஏறிச் செல்வானிடத்தும், இது அறத்தாறு என வேண்டா - இது அறநெறி என வேண்டாம்.

பொறுத்தல் - சுமத்தல். மக்களில் ஒருவரை ஒருவர் சுமக்கும் முறை அறமாகாது. இது மக்கட் பண்பாட்டுக்குத் தகாத முறையாகும். செல்வத்திலும், தன்மையிலும் இவ்வளவு ஏற்றத்தாழ்வு அறமாகாது என்பதாம். (எ)

38 வீழ்நாட் படாமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

ஒருவன் வீழ்நாள் படாமை நன்று ஆற்றின் - ஒருவன் எப்போதும் நன்மையே செய்யின், அஃது வாழ்நாள் வழி அடைக்கும் கல் - அது அவன் வாழ்நாளில் தீமைவரும் வழியை அடைக்கும் கல்லாகும்.

வீழ்நாள்படுதல் - நன்மை செய்யாமல் நாட்கள் கழிதல். நன்று - நல்லது, அறம். நல்லதையே செய்து பழகினால் அப்பழக்கம் தீமைசெய்ய இடங்கொடாதென்பதாம். நற்பழக்கமே தீப்பழக்கத்திற்குத் தடைக்கல். (அ)

39 அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த ; புகழு மில.

*அறத்தான் வருவதே இன்பம் - நல்லொழுக்கத்தால் வருவதே இன்பமாகும்; மற்று எல்லாம் புறத்த - அற மல்லாத பிறஎல்லாம் துன்பந்தருவனவாம்; புகழும் இல - அவற்றால் புகழும் இல்லை.*

*மற்று - வேறு; அவை கெட்டசெயல்கள். நல் லொழுக்கம் இன்பத்தையும், புகழையும் தரும்.* (கூ)

40 செயற்பால தோரு மறனே ஒருவற்
குயற்பால தோரும் பழி.

*ஒருவற்கு செயற்பாலது அறனே - ஒருவனுக்குச் செய்யத்தக்கது அறமே, உயற்பாலது பழி - செய்யத் தகாதது பழியே.*

*ஒரும் இரண்டும் - அசை. உயல் - நீக்கல். பழி - பிறர் பழிக்கத்தக்க தீமை. நன்மை செய்யத்தக்கது; தீமை விலக்கத்தக்கது.* (ம)

முதலியல் முற்றிற்று

# 2 இல்லறவியல் - (20)

## 5 இல்வாழ்க்கை

*இல்லறத்தின் சிறப்புக் கூறுதல். இல்வாழ்க்கை— இல்லறம்.*

41 இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.

*இல்வாழ்வான் என்பான் - குடும்பவாழ்க்கை நடத்துபவன் என்று கூறப்படுவோன், இயல்புடைய*

மூவர்க்கும் - அறத்தின் தன்மையையுடைய மூவர்க்கும், நல்லாற்றின் நின்ற துணை - நல்லவழியில் நிலைபெற்ற துணையாவான்.

அறத்தின் தன்மையை உடையார் - அறவாழ்வு வாழ்பவர். மூவர் - அடுத்த குறளில் கூறப்படும் மூவர். இக்குறள் தொகுத்துச் சுட்டல். அம்மூவரையும் நல்லாற்றில் வாழச்செய்பவர். இல்வாழ்க்கையின் இன்றியமைமையாமை கூறப்பட்டது. (க)

42 துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை.

துறந்தார்க்கும் - துறவிகளுக்கும், துவ்வாதவர்க்கும் - வறுமையினால் உண்ண உணவின்றித் தவிக்கும் ஏழைகட்கும், இறந்தார்க்கும் - பாதுகாப்போர் இல்லாதவர்க்கும், இல்வாழ்வான் என்பான் துணை - இல்வாழ்க்கை நடத்துபவன் துணையாவான்.

து ஆதவர் - துவ்வாதவர். து - உண். இறத்தல் - கடத்தல். இறந்தார் - கடந்தார், நீங்கினார். இறந்தார் (159) - நன்னெறியைக் கடந்தவர். இறவா நின்றவளை (1157) - கழலும் வளைகள். என்பன காண்க. குடும்பத்தைவிட்டு நீங்கியவர்; யாருமற்றவர் (அனாதை); தாமாகவாழ முடியாத இளையரும், முதியரும். துறந்தார், எளியர், யாருமற்றார் என்னும் மூவர்க்கும் உதவுவது இல்வாழ்வான் கடமை. (உ)

43 தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை.

தென்புலத்தார் - தென்னாட்டினர், தெய்வம் - தன் முன்னோர், விருந்து - விருந்தினர், ஒக்கல் - சுற்றத்தார், தான் என்று ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை - தான் என்னும் ஐந்திடத்தும் அறவழியைத் தவறாது செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறந்தது.

புலம் - இடம். தென்புலத்தார் - தமிழர். வடபுலத்தாரும் இருந்ததால் 'தென்புலத்தார்' என்றார், 'தென்மொழி' என்பதுபோல. சேரநாட்டைக் குடபுலம் என்றும், சோழ நாட்டைக் குணபுலம் என்றும், வழங்குதல் காண்க. 'மன்பதை காக்கும் தென்புலங் காவல்' (சிலப்: 20. 76) தமிழினப்பற்றுக் கொள்ளுதல் வேண்டுமென்பது. தெய்வம் - மேன்மை; தன் முன்னோரின் பெருமை; தன் முன்னோர் பெயர் விளங்கச் செய்தல். விருந்தினர் - புதியவர். 10-ஆம் அதிகாரம் பார்க்க. தன் உடலையும், ஒழுக்கத்தையும் போற்றுதலும் இல்வாழ்வான் கடமையாயிற்று. தமிழினப்பற்றுக் கொள்ளுதலும், விருந்தினரையும், சுற்றத்தாரையும் போற்றுதலும், முன்னோர் பெயர் விளங்கச் செய்தலும் இல்வாழ்வான் கடமையாகும். ஆல் - அசை. (ங)

44 பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
பழியெஞ்சல் எஞ்ஞான்று மில்.

பழி அஞ்சி - பிசினன் என உலகம் பழிக்கும் பழியை அஞ்சி, பாத்து ஊண் உடைத்தாயின் - பிறர்க்குப் பங்கிட்டு உண்ணுவதை உடையதாயின், வாழ்க்கை வழி எஞ்ஞான்றும் எஞ்சல் இல் - இல்வாழ்க்கை நெறி எப்போதும் குறைதல் இல்லை.

பிசினன் - உலோபி. வாழ்க்கை வழி எஞ்சல் - வாழ்க்கை நடத்தற்கு வழியாகிய செல்வம் குறைதல். பிறர்க்குக் கொடுத்துவாழும் இல்வாழ்வான் செல்வம் குறையாது. குறையாமைக்குக் காரணம் பிறர் உதவுவது ஆகும். (ச)

45 அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின் - இல்வாழ்க்கையானது யாவரிடத்தும் அன்பு செய்தலை

யும், அறஞ்செய்தலையும் உடையதாயின், அது பண்பும் பயனும் - அதுவே இல்வாழ்க்கையின் தன்மையும் பயனுமாகும். அன்பும் அறனும் உடையதே சிறந்த இல்வாழ்க்கையாகும். (ரு)

46 அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்.

அறத்து ஆற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் - ஒருவன் நல்வழியில் குடும்பம் நடத்துவானாயின், புறத்து ஆற்றில் போய் பெறுவது எவன் - அவன் வேறுவழிகளில் போய் அடைவது ஒன்றுமில்லை.

நல்லவழியில் நடத்தும் குடும்ப வாழ்க்கையைவிடச் சிறந்தது வேறு இல்லை. (சா)

47 இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாரு ளெல்லாம் தலை.

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் - நல்லமுறையில் குடும்பம் நடத்திவருபவன், முயல்வாருள் எல்லாம் தலை - முயற்சியுடன் வாழ்வார் யாவரினும் மேம்பட்டவனாவான்.

முயற்சியுடன் வாழ்தல் - மேன்மேலும் பொருளீட்டி வாழ்தல். நல்லமுறையில் குடும்பம் நடத்துபவனே சிறந்தவனாவான். (எ)

48 ஆற்றி னொழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து.

ஆற்றின் ஒழுக்கி - பிறரையும் நல்ல வழியில் நடக்கச் செய்து, அறன் இழுக்கா இல்வாழ்க்கை - தானும் தன் ஒழுக்கத்தில் தவறாது வாழ்வான் இல்வாழக்கையானது, நோற்பாரில் நோன்மை உடைத்து - தவம் செய்வோர் நிலையைக்காட்டிலும் வலியுடையது.

நோன்மை - வலிமை. தவம் செய்வோர் தமக்கு மட்டும் பயனுடையார்; இவர் பிறர்க்கும் பயன்பட வாழ்த லால் இல்வாழ்க்கை தவத்தைவிட வலியுடையதாயிற்று. பிறர்க்குப் பயன்பட வாழும் இல்வாழ்க்கையே சிறந் தது. (அ)

49 அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

*அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே* - அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல்வாழ்க்கையே; *அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று* - அவ்வில் வாழ்க்கையும் வேறொருவனால் பழிக்கப்படுவ தில்லையா யின் நல்லதாகும்.

பிறரால் பழிக்கப்படாது நல்லவழியில் நடக்கும் இல்வாழ்க்கையே பெரியோரால் அறம் எனச் சிறப்பித் துக் கூறப்படும். ஒருவரும் பழிக்கக்கூடாதென்பார், 'பிறன்' என ஒருமையால் கூறினர். பிறர் பழிக்காதபடி குடும்பம் நடத்தவேண்டும். (கூ)

50 வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்*—உலகில் நல்ல முறையில் வாழ்க்கை நடத்துபவன், *வான் உறை யும் தெய்வத்துள் வைக்கப்படும்*—வானுலகில் வாழும் தேவர்களைப்போலச் சிறப்பாக மதிக்கப்படுவான்.

தேவர்கள் யாரென்பதை முகவுரையில் காண்க. நல்ல முறையில் குடும்பம் நடத்துபவன் நன்கு மதிக்கப் படுவான். (ய)

## 6 வாழ்க்கைத்துணை நலம்

வாழ்க்கைத்துணை—மனைவி. நலம்—தன்மை. மனைவியின் தன்மை கூறுதல்.

51 மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

மனைத்தக்க மாண்பு உடையள் ஆகி—மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கை உடையளாகி, தன் கொண்டான் வளத்தக்காள்—தன்னை மனைவியாகக் கொண்டவனது வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்பவளே, வாழ்க்கைத் துணை—நல்ல மனைவியாவாள்.

மனை—மனையறம்—இல்லறம். நற்குணம்—சுற்றத்தார், விருந்தினர் முதலியோரிடம் கொள்ளும் அன்பு முதலியன. நற்செய்கை—இல்லறம் நடத்தும் திறமை முதலியன. மாண்பும், வளத்தக்க நிலையும் ஆண்பாலுக்கும் பொருந்தும். இவ் வதிகாரத்தையே இருவர்க்கும் கொள்க. நற்குண நற்செய்கை யுடையளாய், வரவறிந்து செலவு செய்பவளே நல்ல மனைவியாவாள். (க)

52 மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

இல்லாள்கண் மனைமாட்சி இல்லாயின்—ஒருவன் மனைவியிடத்து இல்லறத்துக்கு வேண்டிய நல்லொழுக்கம் இல்லையாயின், வாழ்க்கை எனை மாட்சித்து ஆயினும் இல்—அவ்வில் வாழ்க்கை எவ்வளவு பெருமையுடையதாயினும் உடையதன்று.

பெருமை—செல்வப்பெருக்கு முதலியன. நல்ல மனைவியை இல்லாதான் குடும்பம் எவ்வளவு செல்வாக்குடையதாயினும் பிறர் மதிக்கமாட்டார். (உ)

53 இல்லதென் இல்லவள் மாண்பானல்; உள்ளதென்
இல்லவள் மாணுக்கடை.

இல்லவள் மாண்பு ஆனல் இல்லது என்—மனைவி நற்குண நற்செய்கை உடையவளானல் ஒருவனுக்கு இல்லாதது யாது? இல்லவள் மாணுக்கடை உள்ளது என்—மனைவி நற்குண நற்செய்கை இல்லாதவளானல் அவனுக்கு உள்ளது யாது? ஒன்றுமில்லை.

நல்ல மனைவி வாய்க்கப் பெருதவனுக்கு என்னிருந்தும் இல்லாமையே யாகும். நாளும் இருவரும் கையுழைத்துக் கஞ்சி குடித்து வந்தாலும் நல்ல மனைவியை உடையவன் இன்புற்று வாழ்வான். (௩)

54 பெண்ணிற் பெருந்தக்க யாவுள? கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்—கற்பு என்னும் மனவுறுதி உண்டானல், பெண்ணின் பெருந்தக்க யாவுள—மனைவியைவிட மேம்பட்ட பொருள் ஒருவனுக்கு எவை உள்ளன? ஒன்றுமில்லை.

கற்பு—புதிய கூட்டுறவான கணவனே இனி உயிர்த் துணைவன் எனவும், கணவனேடு கூடிவாழும் இல்வாழ்க்கையே சிறந்ததெனவும் கொள்ளும் மனவுறுதி. கற்பு - இல்லறம்; இல்லறத்தில் மனவுறுதி. இதனையே 'கற்பென்னும் திண்மை' என்ருர். இம் மனவுறுதி ஆண் பெண் இருவர்க்கும் உண்டானல்தான் அவர்கள் என்றும் இணை பிரியாமல் இன்ப வாழ்வு வாழ்வார்கள். புதிய உறவிலும், புதிய வாழ்விலும் ஏற்படும் உறுதியான ஒரு மனப்பாடே கற்பு எனப்படும். இத்திண்மை ஆணுக்குண்டாயின், ஆணைவிடச் சிறந்த பொருள் பெண்ணுக்கில்லை என்பதுங் கொள்க. (௪)

53 இல்லதென் இல்லவள் மாண்பானல்; உள்ளதென்
இல்லவள் மாணுக்கடை.

இல்லவள் மாண்பு ஆனல் இல்லது என்—மனைவி நற்குண நற்செய்கை உடையவளானல் ஒருவனுக்கு இல்லாதது யாது? இல்லவள் மாணுக்கடை உள்ளது என்—மனைவி நற்குண நற்செய்கை இல்லாதவளானல் அவனுக்கு உள்ளது யாது? ஒன்றுமில்லை.

நல்ல மனைவி வாய்க்கப் பெறுதவனுக்கு என்னிருந்தும் இல்லாமையே யாகும். நாளும் இருவரும் கையுழைத்துக் கஞ்சி குடித்து வந்தாலும் நல்ல மனைவியை உடையவன் இன்புற்று வாழ்வான். (௩)

54 பெண்ணிற் பெருந்தக்க யாவுள? கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.

கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்—கற்பு என்னும் மனவுறுதி உண்டானல், பெண்ணின் பெருந்தக்க யாவுள—மனைவியைவிட மேம்பட்ட பொருள் ஒருவனுக்கு எவை உள்ளன? ஒன்றுமில்லை.

கற்பு—புதிய கூட்டுறவான கணவனே இனி உயிர்த் துணைவன் எனவும், கணவனோடு கூடிவாழும் இல்வாழ்க்கையே சிறந்ததெனவும் கொள்ளும் மனவுறுதி. கற்பு - இல்லறம்; இல்லறத்தில் மனவுறுதி. இதனையே 'கற்பென்னும் திண்மை' என்ருர். இம் மனவுறுதி ஆண் பெண் இருவர்க்கும் உண்டானல்தான் அவர்கள் என்றும் இணை பிரியாமல் இன்ப வாழ்வு வாழ்வார்கள். புதிய உறவிலும், புதிய வாழ்விலும் ஏற்படும் உறுதியான ஒரு மனப்பாடே கற்பு எனப்படும். இத்திண்மை ஆணுக்குண்டாயின், ஆணைவிடச் சிறந்த பொருள் பெண்ணுக்கில்லை என்பதுங் கொள்க. (௪)

55 தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

தெய்வம் தொழாள் - தங் கணவனைவிட மேலான தென ஒன்றை எண்ணுள், கொழுநன் தொழுது எழுவாள். தன் கணவனையே எண்ணி அவ்வெண்ணம் மிகுவாள், பெய் என மழை பெய்யும் - பெய்யென்று கூறினுல் மழை பெய்யும்.

தொழுதல் - எப்போதும் கணவனையே நினைத்திருத்தல். எழுதல் - மிகுதல், வளர்தல். அந்நினைப்பு மேன் மேலும் வளர்ந்து, 'தான் அவன்' என்னும் இரண்டற்று, 'நாம்' என ஒன்றுதல். அவள் மனவுறுதியின் சிறப்புக் கூறுவார் வாழ்க்கைக்கு மிகமிக இன்றியமையாத தொன்ருன 'மழை பெய்யெனப் பெய்யும்' என்ருர். இது கணவனுக்கும் பொருந்தும். தெய்வம் - மேலானது, மேன்மையானது. கணவனைத்தாஞகவே எண்ணுபவளே சிறந்த மனைவியாவாள். அத்தகைய மனைவி தன் கணவனுக்கு, பெய் எனப் பெய்யும் மழை - மக்கள் பெய் என்னும் பருவ காலத்தே பெய்யும் மழைபோல்வாள் என்றுமாம். (ரு)

56 தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

தன்காத்து - மனவுறுதியால் தன்னைக் காத்து, தன் கொண்டான் பேணி - கணவனைப் போற்றி, தகைசான்ற சொல்காத்து - தகுதி மிக்க புகழையும் காத்து, சோர்வு இலாள் பெண் - மனச்சோர்வு இல்லாதவளே நல்ல மனைவியாவாள்.

கணவனைப் பேணல் - காலத்துக் கேற்ற உணவூட்டியும், அன்பூட்டியும், இன்பூட்டியும் பேணல். புகழ் - 'நல்ல குடும்பம்' என்னும் புகழ். சோர்வு இன்மை—வறுமை கண்டு மனந்தளராமை. மனவுறுதி யுடையவளும், கண

வனையும், புகழையும் காப்பவளும், மனச்சோர்விலாத வளுமே நல்ல மனைவியாவாள். (சு)

57 சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும்—பெண்களை வெளியில் செல்லாமல் வீட்டுக்குள்ளே வைத்துக் காப்பதால் பயனில்லை, மகளிர் நிறை காக்கும் காப்பே தலை—பெண்கள் மனவுறுதியால் தங்களைக் காத்துக்கொள்ளும் காவலே சிறந்தது. பெண்களுக்கு உறுதியான மனவொருமைப்பாடு வேண்டும். (எ)

58 பெற்ருர்ப் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

பெற்ருர்ப் பெறின்—கணவரை மனவுறுதி உடையராகப் பெற்ருல், புத்தேளிர் வாழும் உலகு—தேவருலகில், பெண்டிர் பெருஞ் சிறப்புப் பெறுவர்—பெண்கள் பெரும் சிறப்பை அடைவர்.

பெற்ருர்—பெண்களை மனைவியராகப் பெற்றவர், கணவர். கணவரும் மனவுறுதியுடையராகப் பெற்ருல், ஒருமனப்பட்டு உயரிய வாழ்க்கை நடத்தி அயல் நாடரும் புகழும் பெருஞ் சிறப்பினைப் பெறுவர் என்பதாம். புத்தேளிர் இன்னுர் என்பதை - முகவுரையில் காண்க. கணவர் மனமொத்து நடக்கும்படி நடந்துகொள்வது பெண்கள் கடமையாகும். (அ)

59 புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.

புகழ் புரிந்து இல் இலோர்க்கு - புகழை விரும்பிய மனைவியை அடையாதவர்க்கு, இகழ்வார்முன் ஏறுபோல் பீடு நடை இல்லை - தம்மைப் பழிப்பார்முன் அரியேறு போல நடக்கும் பெருமித நடை இல்லை.

அரியேறு - சிங்கம். பீடு - பெருமை. பீடுநடை - தலை நிமிர்ந்து நடக்கும் நடை. பிறர் பழிக்கும்போது எதிர்த்துப் பேச முடியாது தலை குனிவான் என்பதாம். நல்ல மனைவியை இல்லாதவன் நாலுபேர்க்கு நடுவில் மதிக்கப்படான். (௯)

60 மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.

மனைமாட்சி மங்கலம் என்ப - மனைவியின் நல்லொழுக்கத்தை மனையறத்திற்கு மங்கலம் என்பர், நல்மக்கள் பேறு அதன் நன்கலம் என்ப - நல்ல மக்களைப் பெறுதலை அம்மனையறத்தின் அணிகலம் என்பர் அறிவுடையோர்.

மங்கலம் - பொலிவு. அணிகலம் - அழகு. 'நன்மக்கட்பேறு' அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய். நல்ல மனைவியும், நன்மக்களும் இல்வாழ்க்கைக்குப் பொலிவும், அழகும் ஆவர். (ய)

## 7 மக்கட் பேறு

நன்மக்கட் பேற்றின் சிறப்புக் கூறுதல். இது இல்வாழ்க்கையின் பயனும் உலகியல் நடத்தற்குக் காரணமுமாகும். நன்மக்களாக வளர்த்துதல் இதன் பயன்.

61 பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

பெறும் அவற்றுள் - நாம் பெறும் பேறுகளுள், அறிவு அறிந்த மக்கள் பேறு அல்ல பிற - அறிவுடைய மக்கட்பேற்றைவிடச் சிறந்த பேறு வேறொன்றிருப்பதாக, யாம் அறிவதில்லை - நாம் கண்டதில்லை.

பேறு - அடையும் பயன். கல்வி, செல்வம் எல்லாம் பேறுகளே யாகும். நன்மக்கட் பேறே சிறந்த பேறாகும். (க)

62 எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

பழி பிறங்காப் பண்புடை மக்கள் பெறின் - குற்ற மற்ற நன்மக்களைப் பெற்றால், எழுபிறப்பும் தீயவை தீண்டா - ஏழு தலைமுறைகளிலும் தீமைகள் சேரா.

பழி பிறங்கா - பழி பொருந்தாத. பழி - பிறர் பழிக்கத்தக்க கெட்ட குணம் செயல். பண்பு - நற்குண நற்செயல். ஒருவன் தன்மை ஏழு தலைமுறை வரையிலும் இருக்கும் என்னும் அறிவியலறிஞர் ஆராய்ச்சி முடிவு இங்கு நோக்கற்பாலது. நல்லோர் பிறந்த குடி பல தலை முறை மதிக்கப்படுதலை அறிக. ஏழ் என்னும் எண்ணுப் பெயர் பல என்னும் பொருளது. நன்மக்கள் பிறந்த குடும்பம் பல தலைமுறை மதிப்புப் பெறும். (உ)

63 தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.

அவர் பொருள் - மக்கள் தேடும் பொருள், தம்தம் வினையான் வரும் - அவரவர் தொழிலுடனே பெற்றோர் பால் வரும் ஆதலால், தம் மக்கள் தம் பொருள் என்ப - தம் மக்களைத் தம்பொருள் என்பர் அறிவுடையோர்.

மக்கள் தேடும் பொருளும், அவர் செய்யும் தொழி லும் பெற்றோரையே சேர்தலால், மக்களைத் தம்பொருள் என்பர். மக்கள் எனும் பன்மைக்கேற்பத் 'தந்தம்' எனப் பன்மை கூறினார். தம்தம் வினை - தமது தமது தொழில்; அவரவரது தொழில். வினையான் - வினையொடு. ஒடு - உடனிகழ்ச்சி. வினையும் பொருளும் வரும். வருதல் - சேர்தல். பெற்றோர்க்கு மக்களே பெருஞ்செல்வம். (ங)

64 அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ் - தம் குழந்தை கள் சிறிய கைகளால் கலக்கிய கூழ், அமிழ்தினும் ஆற்ற

இனிதே - பாற்சோற்றைவிட மிக இனிமையாக இருக்கும்.

கூழ் - மாவால் காய்ச்சிய கூழ். அமிழ்து - பாற்சோறு (பாயசம்). (௪)

65 மக்கள்மெய் தீண்ட லுடற்கின்பம் ; மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு.

மக்கள் மெய் தீண்டல் உடற்கு இன்பம் - மக்கள் தமது உடம்பைத் தீண்டுதல் உடலுக்கு இன்பந் தரும்; அவர் சொல்கேட்டல் செவிக்கு இன்பம் - மக்கள் மழலைச் சொல்லைக்கேட்டல் காதுக்கு இன்பந் தரும். (௫)

66 குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் - தம் மக்களுடைய மழலைச் சொல்லைக் கேளாதவர், குழல் இனிது யாழ் இனிது என்ப - குழலின் இசை இனிது, யாழின் இசை இனிது என்பர்.

மக்களின் சொற்களே பெற்றோரை மகிழ்விக்கும் இன்னிசையாகும். குழந்தைகளின் குதலைச்சொல் பெற்றோர்க்கு அவ்வளவு இன்பந்தரும்! இனிது + யாழ் - இனிதி யாழ்; குற்றியலிகரம். (௬)

67 தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி - தந்தை மகனுக்குச் செய்யும் உதவியானது, அவையத்து முந்தி இருப்பச் செயல் - அவனைப் பெரியோர் அவையின்கண் யாவர்க்கும் முன்பு தலைவனாக வீற்றிருக்கச் செய்வதே.

ஒருமைபற்றி ஆண்பாலால் கூறினார்; பெண்பாற்கும் கொள்க. மக்களைக் கல்வியில் சிறந்தவராக்குவதே பெற்

றோர் மக்களுக்குச் செய்யும் உதவியாகும்; ஏனை இடம், பொருள், ஏவல் முதலியன மட்டும் அல்ல. (எ)

68 தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.

*தம்மில் தம் மக்கள் அறிவுடைமை* - பெற்றோராகிய தம்மைவிடத் தம் மக்கள் அறிவுடையவராய் இருத்தல், *மாநிலத்து மன்னுயிர்க்கு எல்லாம் இனிது* - இப்பெரிய உலகில் வாழும் மக்கள் யாவர்க்கும் இன்பந்தரும்.

மன்னுயிர் என்றது அப்பெற்றோரை. தம்மைவிடத் தம் மக்கள் அறிவுடையவராய் இருத்தல் பெற்றோர்க்கு இன்பந்தரும். படியாதவரும் தம் மக்களைப் படிப்பித்தல் காண்க. (அ)

69 ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்.

*தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டதாய்* - தன் மகனை அறிவில் நிறைந்தோனென்று அறிவுடையோரால் சொல்லக் கேட்ட தாய், *ஈன்ற பொழுதில் பெரிது உவக்கும்* - பெற்ற பொழுதைவிடப் பெரிதும் மகிழ்வாள்.

தந்தையைவிடத் தாயே மக்கள் பெருமை கண்டு மிகவும் மகிழ்வாளாதலால் 'தாய்' என்றார். தந்தை மகிழ்தலுங் கொள்க. ஒருமைபற்றி 'மகன்' என்றார். மகளுங் கொள்க. அறிவுடையோரால் உங்கள் மகன் சிறந்த அறிவுடையவன் என்று சொல்லக்கேட்ட பெற்றோர் மிக மகிழ்வர். (கூ)

70 மகன்றந்தைக் காற்றும் உதவி இவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

*மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி* - மகன் தந்தைக்குச் செய்யும் கைம்மாறாவது, *இவன் தந்தை என் நோற்*

றான்கொல் என்னும் சொல் - இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன நன்மை செய்தானோ? என்று அறிவுடையோர் புகழ்ந்து சொல்லும் சொல்லேயாகும்.

முன் 'தாய் பெரிதுவக்கும்' என்றார். இதில் 'தந்தை என் நோற்றான் கொல்' என்றார். நோற்றல் - செய்தல். சிறந்த அறிவொழுக்க முடையாரைக் கண்டால், 'இவரைப் பெறுவதற்கு இவர் பெற்றோர் என்ன நன்மை செய்தாரோ, என்னும் வழக்கு இன்றும் உளது. சிறந்த அறிவொழுக்கமுடையவராதலே தம்மைக் கல்வி அறிவுடையவராக்கிய பெற்றோர்க்கு மக்கள் செய்யும் எதிருதவியாகும். அவையத்து முந்தியிருப்பச் செய்தமைக்குச் (67) செய்த உதவி இது. (ம)

## 8 அன்புடைமை

நமக்குத் தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பற்று, அல்லது காதல் அன்பு எனப்படும். இவ்வன்பே ஒருவரோடொருவர் தொடர்பறாமல் பிணித்து வைத்திருக்கும் பிணிப்பாகும். பிணிப்பு - கட்டு. பின்னர்க் கூறும் (25) அருள் என்பது - வருந்தும் உயிர்கட்கெல்லாம் தொடர்பு பற்றாது இயல்பாகவே இரங்குவதாகும். 757-ஆம் குறளுரை பார்க்க.

71 அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ - அன்பை அடைத்து வைக்கும் தாழ்ப்பாளும் உண்டோ? ஆர்வலர் புன் கண் நீர் பூசல் தரும் - தம் அன்பரது துன்பங்கண்டவிடத்து, அன்புடையார் கண்களிலிருந்து ஒழுகுகின்ற புல்லிய கண்ணீரே அவரிடத்துள்ள அன்பைப் பலருமறியச் செய்யும்.

ஆர்வலர் - அன்பர். பூசல் - பலரறிதல். அன்பைப் பிறரறியாமல் அடைத்துவைக்க முடியாது. (க)

72 அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் ; அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

அன்பு இலார் எல்லாம் தமக்கு உரியர் - அன்பில்லாதவர் எல்லாப் பொருளையும் தமக்கே உரியராவர்; அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர் - அன்புடையவர் அப்பொருள்களே யன்றி உடம்பினையும் பிறர்க்கு உரியராக உடையர்.

எல்லாம் - இடம், பொருள் முதலிய செல்வம். என்பு - உடம்பு. உடம்பு உரியராவது - தம் அன்பருக்காக உயிர்விடுதல். வண்டார் குழலி, கோப்பெருந்தேவி முதலிய பழந்தமிழ் மகளிர் தம்மால் அன்புசெய்யப்பட்ட கணவன்மார் (இராவணன், நெடுஞ்செழியன்) இறந்ததும் தாமும் இறந்ததும், கணவருடன் மகளிர் உடன்கட்டை ஏறினதும், கோப்பெருஞ்சோழன் இறக்கப் பிசிராந்தையார் உயிர்விட்டதும் இதற்கு எடுத்துக் காட்டுகளாகும். (உ)

73 அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு - அருமையான நமது உயிர்க்கு உடம்போடு பொருந்திய நட்பை, 'அன்போடு இயைந்த வழக்கு' என்ப - அன்போடு பொருந்திய செயல் என்பர் அறிவுடையோர்.

உயிருக்கும் உடம்புக்கும் உண்டான அன்பே அவை ஒன்றுபட்டு வாழ்வதற்குக் காரணமாகும். (ங)

74 அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

அன்பு ஆர்வம் உடைமை ஈனும் - நாம் பிறரிடம் காட்டும் அன்பு அவர்க்கு நம்மீது விருப்பத்தை உண்டு

பண்ணும், அது நண்பு என்னும் நாடாச் சிறப்பு ஈனும் - அவ்விருப்பம் நட்பு என்னும் மிக்க சிறப்பினைத் தரும். அன்பே நட்புக்குக் காரணமாகும். (௪)

75 அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்துஞ் சிறப்பு.

வையகத்து இன்புற்றார் எய்தும் சிறப்பு - உலகத்தில் இன்பம் துய்ப்பவர்கள் பெறும் சிறப்பினை, அன்புற்று அமர்ந்த வழக்கு என்ப - பிறரிடம் அன்புடையராய்ப் பொருந்தியிருந்த செயல் என்பர்.

குடும்பத்தாரிடத்தும், பிறரிடத்தும் அன்புடையவர்களே வாழ்க்கையில் இன்புறுவதோடு, பெருஞ் சிறப்பினையும் பெறுவர். (௫)

76 அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

அறியார் அறத்திற்கே அன்பு சார்பு என்ப - உண்மை யுணராதவர் நன்மையைச் செய்வதற்கே அன்பு துணையாகும் என்பர், மறத்திற்கும் அஃதே துணை - தீமையைப் போக்குவதற்கும் அவ்வன்பே துணையாகும்.

பகைவரையும் அன்பினால் நண்பராக்கலா மாகையால், 'மறத்திற்கும் அஃதே துணை' என்றார். தீயரையும் அன்பினால் நல்லவராக்கலாம். அன்பினால் நன்மையை ஆக்கலாம், தீமையைப் போக்கலாம். (௬)

77 என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

என்பு இலதனை வெயில்போல - எலும்பில்லாத புழுப் பூச்சிகளை வெயில் சுடுவதுபோல, அன்பு இலதனை அறம் காயும் - அன்பில்லாதவர்களை அறநெறி சுடும்.

மக்கட் பண்பாகிய அன்பின் மேன்மையைக் குறிக்க மக்களை 'அன்பிலதனை' என அஃறிணையாற் கூறினர். அறம் காய்தலாவது - அன்பிலாரை உலகோர் தம்மோடு சேர்த்துக் கொள்ளாது புறம்பாக ஒதுக்குதல். அதாவது அன்பிலார்க்கு உதவாததோடு, அவரை வெறுத்தொதுக்குவர் என்பதாம். (எ)

78 அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று.

அகத்து அன்பு இலா உயிர் வாழ்க்கை - உள்ளன்பில்லாதவர் வாழும் வாழ்க்கையானது, வன்பால்கண் வற்றல் மரம் தளிர்த்து அற்று - வலிய நிலத்தின்கண் வறண்ட மரம் தளிர்த்தால் போன்றது.

அகம் - நெஞ்சு. வன்பால் - வன்னிலம் - நீர்வளமற்ற கெட்டியான மேட்டு நிலம். வறண்ட மரம் தளிர்க்காததுபோல, அன்பில்லாரின் வாழ்க்கையும் இனிது நடைபெறாது என்பதாம். அன்பே நல்வாழ்வுக்குக் காரணம். (அ)

79 புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

யாக்கை அகத்து உறுப்பு அன்பு இல் அவர்க்கு - உடம்பின் உள்ளுறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு, புறத்து உறுப்பெல்லாம் எவன் செய்யும் - வெளியுறுப்புக்களெல்லாம் பிறர்க்கு என்ன நன்மை செய்யும்? ஒன்றும் செய்யாது.

புறத்துறுப்பு - கை, கால் முதலியன. அகத்து அன்பில்லையேல் பிறர் துன்பங் கண்டவிடத்துப் புறத்துறுப்புக்கள் யாதொரு உதவியும் செய்ய முயலா. (கூ)

80 அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

அன்பின் வழியது உயிர் நிலை - அன்போடு பொருந்திய உடம்பே உயிர் நிலைபெற்ற உடம்பாகும், அஃது இலார்க்கு உடம்பு என்பு தோல்போர்த்த - அவ்வன்பு இல்லாதவர்க்கு உள்ள உடம்புகள் எலும்பைத் தோலால் மூடியவையே யாகும். உயிர் நிலை - உடம்பு. அன்பே உயிர். (0)

## 9 இன்சொல்

பிறரிடம் இனிமையாகப் பேசுதல்.

81 இன்சோலா லீரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்போருள் கண்டார்வாய்ச் சோல்.

ஈரம் அளைஇ - அன்புகலந்து, படிறு இலவாம் - வஞ்சனை இல்லாது,செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்- அறத்தினை யுணர்ந்தவர் வாயிலிருந்துவரும் சொல்லே, இன்சொல் - இன்சொல்லாகும்.

ஈரம் - அன்பு. அளைஇ - அளவி - கலந்து. இன்சொலால்; ஆல் - அசை. அன்போடு, வஞ்சனையில்லாமல் உண்மையாகப் பேசுவதே இன்சொல்லாகும். (க)

82 அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
தின்சோல னாகப் பெறின்.

முகன் அமர்ந்து இன்சொலன் ஆகப்பெறின் - முகம் இனியனாய் இன்சொல்லும் சொல்வானானால், அகன் அமர்ந்து ஈதலின் நன்றே - மனம் உவந்து ஒருவர்க்கு ஒன்றைக் கொடுப்பதைவிட நல்லது.

கொடையினும் மகிழ்விப்பது இன்சொல்லே யாகும். (உ)

83 முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சோ லினதே யறம்.

முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - ஒருவரைக் கண்டபொழுதே, முகமலர்ந்து இனிமையாகப் பார்த்து, அகத்தான் ஆம் இன்சொலினதே அறம் - மனத்தொடு பொருந்திய இனியசொற்களைச் சொல்வதே அறமாகும்.

இன்சொல்லே ஒருவர்க்குச் செய்யும் முதலறமாகும். (ங)

84 துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉ மின்சோ லவர்க்கு.

யார் மாட்டும் இன்புறும் இன்சொல் அவர்க்கு எவரிடத்தும் இன்பந்தரும் இன்சொல்லைச் சொல்லுபவருக்கு, துன்புறும் துவ்வாமை இல்லாகும் - துன்பத்தைத்தரும் வறுமை இல்லையாகும்.

துவ்வாமை - உண்ணாமை, உண்ணும் உணவின்மை-வறுமை. இன்சொல் சொல்வார்க்கு யாவரும் நண்பராவாராகையால், எண்ணியவை இனிது முடியும். ஆகவே, வறுமை இல்லாகும். (ச)

85 பணிவுடைய னின்சோல னாதல் ஒருவற்
கணியல்ல மற்றுப் பிற.

பணிவு உடையன் இன்சொல்லன் ஆதல் ஒருவற்கு அணி - தாழ்மையுடையவனாய், இன்சொல் சொல்லுவதே ஒருவனுக்கு அழகாகும்; பிற அல்ல - மணி பொன்னணி யெல்லாம் அழகல்ல. இன்சொல்லே ஒருவனுக்குச் சிறந்த அழகாகும். மற்று - அசை. (ரு)

86 அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

நல்லவை நாடி இனிய சொலின் - நன்மையை ஆராய்ந்து இன்சொல் சொல்லின், அல்லவை தேய அறம் பெருகும் - தீமை கெட அறம் வளரும்.

யாவரும் இன்சொல்லே சொல்லின் உலகில் தீமை கெட நன்மை பெருகும். (சு)

87 நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல் - கேட்போர்க்குப் பொருட்பயனைத் தந்து இனிய குணத்தினின்றும் நீங்காதசொல், நயன் ஈன்று நன்றி பயக்கும் - இன்பத்தைத் தந்து நன்மையையும் கொடுக்கும். இன்சொல், எல்லா நன்மைகளையும் தரும். (எ)

88 சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையு மின்பந் தரும்.

சிறுமையுள் நீங்கிய இன்சொல் - புன்மையினின்றும்நீங்கிய இன்சொற்கள், இம்மையும் மறுமையும் இன்பந்தரும் - இப்போதும் பின்பும் இன்பந்தரும்.

சிறுமை - கீழ்மை, இழிவு. நாம் உயிரோடு இருக்கும் நிலை - இம்மை, இம்மை வாழ்வு எனப்படும். நாம் இறந்த பிறகு நம்மைப்பற்றி இங்கு பேசப்படுவது - மறுமை, மறுமை வாழ்வு எனப்படும். வள்ளுவர் மறுமையில் உள்ளனர். இன்சொல் எப்போதும் இன்பந் தரும். (அ)

89 இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

இன்சொல் இனிது ஈன்றல் காண்பான் - பிறர் கூறும் இனிய சொற்கள் தனக்கு இன்பந்தருதலை அறிய

வன், வன்சொல் வழங்குவது எவன் கொல் - கடுஞ்சொல் சொல்வது என்கருதியோ ?

பிறர் கூறும் இன்சொல் நமக்கு இன்பந்தருதலைக் கொண்டு நாமும் பிறரிடம் இனிமையாகப் பேசவேண்டும். (கூ)

90 இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

இனிய உளவாக இன்னாத கூறல் - இன்சொற்கள் தன்னிடத்தே இருக்க அவற்றைக் கூறாமல் ஒருவன் கடுஞ்சொற்களைக் கூறுதல், கனி இருப்ப காய் கவர்ந்தற்று - சுவையுள்ள பழங்கள் இருக்க அவற்றைவிட்டுச் சுவையில்லாத காய்களைத்தின்ன விரும்புவதை ஒக்கும்.

இன்சொல் இருக்க வன்சொல் கூறுதல், கனி இருக்கக் காயை விரும்புதலோ டொக்கும். (ய)

## 10 விருந்தோம்பல்

விருந்து - புதுமை. அது ஆகு பெயராய் விருந்தினரை உணர்த்திற்று. விருந்தினர் - புதியவர். நட்பும் சுற்றமும் அல்லாது புதிதாக நம் வீட்டுக்கு வருபவர். ஓம்பல் - அன்புடன் வரவேற்று உணவிடுதல்.

91 இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் - வீட்டின்கண் இருந்து பொருள்களைப் போற்றி வாழ்வதெல்லாம், விருந்து ஓம்பி வேளாண்மை செய்தல் பொருட்டு - வந்த விருந்தினரைப் போற்றி அவர்க்கு உதவி செய்வதற்காகவே.

ஓம்புதல் - பாதுகாத்தல். வேளாண்மை - உதவி. விருந்தினரைப் போற்றுதலே இல்வாழ்வாரின் முதற் கடமை யாகும். (க)

92 விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

விருந்து புறத்ததா தான் உண்டல் - தன் வீடு தேடி வந்த விருந்தினர் திண்ணையில் இருக்கத் தான் மட்டும் உண்ணுவது, சாவா மருந்து எனினும் வேண்டல் பாற்று அன்று - சாவாமைக்கு உண்ணும் மருந்து எனினும் அது விரும்பத்தக்கதன்று.

வீடு தேடிவந்த விருந்தினரை விட்டு நாம் மட்டும் உண்ணக்கூடாது. உண்டிக் கழகு விருந்தோடுண்டல். (உ)

93 வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

வைகலும் வருவிருந்து ஓம்புவான் வாழ்க்கை - நாடோறும் வரும் விருந்தினர்களைப் போற்றுபவன் வாழ்க்கையானது, பருவந்து பாழ்படுதல் இன்று - வறுமையால் துன்புற்றுக் கெடுதல் இல்லை. பருவருதல் - துன்புறுதல். (ங)

94 அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்.

முகன் அமர்ந்து நல் விருந்து ஓம்புவான் இல் - முகம் இனியனாய் நன்றாக விருந்தினரைப் போற்றுபவன் வீட்டில், செய்யாள் அகன் அமர்ந்து உறையும் - செய்யவள் மனமகிழ்ந்து வாழ்வாள்.

செய்யாள் என்றது செல்வத்தை. முகவுரை பார்க்க. விருந்தினரை வரவேற்றுப் போற்றுவார்க்குப் பலரும் உதவுவதால் செல்வம் குறையாது. (ச)

95 வித்து மிடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

விருந்து ஓம்பி மிச்சில் மிசைவான்புலம் - வந்த விருந்தினரை உண்பித்து மிகுந்ததைத் (மிச்சம்) தான் உண்பவனது நிலத்தில், வித்தும் இடல் வேண்டும் கொல் - அவன்தானே சென்று விதைக்கவும் வேண்டுமோ? வேண்டியதில்லை, பலரும் உதவுவர். (ரு)

96 செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

செல்விருந்து ஓம்பி - வந்த விருந்தினரை உண்பித்து, வருவிருந்து பார்த்திருப்பான் - வரும் விருந்தினரை எதிர்நோக்கி இருப்பவன், வானத்தவர்க்கு நல் விருந்து - வானோர்க்கும் நல்ல விருந்தினன் ஆவான்.

செல்விருந்து - வீட்டுக்குச்சென்ற, அதாவது வந்த விருந்து. வானோர் - அயல்நாடர். முகவுரை பார்க்க. நல்ல விருந்தினன் ஆவான் - நன்கு போற்றப் படுபவன் ஆவான். எப்போதும் விருந்தோம்புவான் அயல்நாடராலும் போற்றப்படுவான். 'வானத்தவர்க்கும்' என்னும் இறந்தது தழுவிய எச்சவும்மை தொக்கது. (சு)

97 இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

வேள்விப் பயன் இனைத்துணைத்து என்பது ஒன்றில்லை - விருந்தோம்பலின் பயன் என்ன அளவினது என்று கூறும் ஓர் அளவினை உடையதன்று, விருந்தின் துணைத்துணை - அவ்விருந்தினரது தகுதியின் அளவே அதற்கு அளவாகும்.

வேள்வி - உதவி. விருந்தினர் உவக்கும் உவகையின் அளவே விருந்தின் பயனாகும். (எ)

98 பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார் - விருந்தினரைப் போற்றி விருந்தோம்புதலைச் செய்யாதவர், பரிந்து ஓம்பி பற்றற்றேம் என்பர் - தாம் ஈட்டிய பொருளை வருந்திக்காத்து அப்பொருள் அழிந்த போது பொருளாசை அற்றேம் என்பர்.

பயனின்றிச் செல்வத்தை யிழந்து வருந்துவதால் பயனில்லை என்பதாம். (அ)

99 உடைமையு ளின்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்க ணுண்டு.

உடமையுள் இன்மை - பொருள் உள்ளகாலத்து வறுமையாவது, விருந்தோம்பல் ஓம்பா மடமை - விருந்தோம்பலைச் செய்யாத அறிவின்மையாகும்; மடவார்கண் உண்டு - அது அறிவில்லாதாரிடம் உள்ளது.

மடமை - அறிவின்மை. மடவார் - அறிவில்லார். விருந்தோம்பாதான் செல்வனேயாயினும் வறியவன் போன்றவனே. (கூ)

100 மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

அனிச்சம் மோப்பக்குழையும் - எல்லாப்பூக்களினும் மெல்லியதாகிய அனிச்சப்பூ மோந்தால்தான் வாடும், விருந்து முகம்திரிந்து நோக்கக் குழையும் - ஆனால், விருந்தினரோ முகம்வேறுபட்டுப் பார்த்தவுடனேயே வாடிவிடுவர்.

அனிச்சம் - ஒருவகை நீர்ப்பூ. விருந்தினர் மிக மெல்லியர் என்பதாம். (ய)

## 11 செய்ந்நன்றி அறிதல்

*பிறர் செய்த நன்மையை மறவாமை.*

101 செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

*செய்யாமல் செய்த உதவிக்கு - தான் முன்பு ஓர் உதவி செய்யாதிருக்கத் தனக்கு ஒருவன் செய்த உதவிக்கு, வையகமும் வானகமும் ஆற்றல் அரிது - வையகத்தையும் வானகத்தையும் கைம்மாருகக் கொடுக்கினும் ஒப்பாகாது.*

*வானுலகம் இன்னதென்பதை முகவுரையில் காண்க. செய்யாமல் செய்த உதவிக்கு ஒப்பதில்லை.* (க)

102 காலத்தி ளுற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

*காலத்தினுல் செய்த நன்றி சிறிது எனினும் - தக்க காலத்தில் செய்த உதவி சிறிதாயிருப்பினும், ஞாலத்தின் மாணப்பெரிது - பயனை நோக்க உலகத்தைவிட மிகப் பெரியதாகும்.*

*உலகம் பெருமைக்கு எடுத்துக்காட்டு. அடிபட்டு மயங்கிக் கிடப்பவனுக்கு ஒருகை தண்ணீர் உயிர் கொடுத்தலை அறிக.* (உ)

103 பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை க்டலிற் பெரிது.

*பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின் - தனக்குப் பின்வரும் பயனை நோக்காராய்ப் பிறர்க்குச் செய்த உதவியின் மேன்மையை ஆராய்ந்து பார்க்கின், நன்மை கடலில் பெரிது - அதன் நன்மை கடலைவிடப் பெரிதாகும்.*

தூக்குதல் - ஆராய்தல். கடல் பெருமைக்கு எடுத்துக்காட்டு. பின்வரும் பயனை நோக்காமல் செய்த உதவியின் பயன் கடலைவிடப் பெரிதாகும். (௩)

104 தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கோள்வர் பயன்றெரி வார்.

தினைத் துணை நன்றி செயினும் - தினையளவு உதவி செய்யினும், பயன் தெரிவார் - அவ்வுதவியின் பயனை அறிபவர், பனைத்துணையாக் கொள்வர் - அதைப் பனையளவாகக் கொள்வர்.

தினை, பனை - சிறுமை, பெருமைகட்கு எடுத்துக்காட்டுகள். உதவியின் பயன் தெரிவார் சிறிய உதவியையும் பெரிதாகக் கொள்வர். (௪)

105 உதவி வரைத்தன் றுதவி ; உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

உதவி உதவி வரைத்தன்று - ஒருவர் செய்த உதவி அவ்வுதவியின் அளவினதன்று, உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து - அவ்வுதவியைப் பெற்றவரது தன்மையின் அளவினதாகும்.

உதவியைப் பெற்றவர் தன்மைக்குத் தக்கவாறே உதவி சிறிது, பெரிது என மதிக்கப்படும். உதவியில் சின்ன உதவி, பெரிய உதவி என்பதில்லை. (௫)

106 மறவற்க மாசற்றார் கேண்மை ; துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

மாசு அற்றார் கேண்மை மறவற்க - குற்றமற்றவரது நட்பை மறவற்க, துன்பத்துள் துப்பாயார் நட்பு துறவற்க - துன்பம்வந்தகாலத்து உதவினரது நட்பை விட்டுவிடற்க.

மறவற்க - மறவாதீர். துறவற்க - விட்டுவிடாதீர். எதிர்மறை வியங்கோள் வினைமுற்றுக்கள். மாசற்றார் காலத்தே உதவுவராகையால் அதையும் உடன் கூறினார். காலத்தே உதவினவரை எப்போதும் மறக்கக் கூடாது. துப்பு - உதவி. (சா)

107 எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

தம்கண் விழுமம் துடைத்தவர் நட்பு - தமக்குற்ற துன்பத்தை நீக்கினவரது நட்பை, எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் - அறிவாளிகள் எப்போதும் நினைப்பர்.

விழுமம் - துன்பம். எழுமை எழுபிறப்பு - பலதலை முறை. 62-ஆம் குறளுரை பார்க்க. கோவலன், பலதலை முறைக்கு முற்பட்ட தன் முன்னோனொருவனைக் கடலினின்று கரையேற்றிக் காத்த மணிபல்லவத்து அரசியான மணிமேகலையின் நன்றியை மறவாது, தன் மகளுக்கு 'மணிமேகலை' என அவள் பெயரை இட்டமை அறிக. (எ)

108 நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

நன்றி மறப்பது நன்றன்று - பிறர் செய்த உதவியை மறப்பது நல்லதன்று, நன்று அல்லது அன்றே மறப்பது நன்று - தீமையை அப்போதே மறந்து விடுவது நல்லது.

பிறர் செய்த நன்மையை எப்போதும் மறக்கக் கூடாது. பிறர்செய்த தீமையை அப்போதே மறந்துவிட வேண்டும். (அ)

109 கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

கொன்று அன்ன இன்னா செயினும் - முன்பு தமக்கு உதவிசெய்தவர் பின்பு கொன்றாலன்ன தீமை

கள் செய்தாலும், அவர் செய்த ஒன்று நன்று உள்ளக் கெடும் - அவர் முன்பு செய்த ஒருதவியை நினைக்க அத் தீமைகள் அனைத்தும் கெடும்.

கொன்று அன்ன இன்னா - உயிருக்குக் கேடுண்டாக்கத்தக்க துன்பம். முன் உதவி செய்தார், பின் தீமைகள் பலசெய்தாலும் அத்தீமைகளை அப்போதே மறந்து விடவேண்டும். தீமையை மறப்பதற்கு வழி கூறியது. (௯)

110 எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் - எவ்வகைப்பட்ட அறங்களைக் கெடுத்தவர்க்கும் பின்பேனும் பிழைப்பு உண்டாகும், செய்ந்நன்றி கொன்ற மகற்கு உய்வு இல்லை - ஒருவர் செய்த உதவியை மறந்தவனுக்கு எப்போதும் பிழைப்பு இல்லை.

பிழைப்பு - நல்வாழ்வு. உதவி கொன்றவனை எல்லோரும் வெறுப்பதால் நல்வாழ்வு இல்லை என்றார். (௰)

## 12 ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் - நல் நடக்கை. ஒழுக்கம் உடைமை - நன்னடக்கையுடையராய் நடந்துகொள்ளுதல். ஒழுகுதல் - ஒழுக்கம்.

111 ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் - ஒழுக்கம் சிறப்பைத் தருதலால், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் - அவ்வொழுக்கம் உயிரைக் காட்டிலும் பாதுகாக்கப்படும்.

ஒழுக்கமில்லாதவன் மதிக்கப்படாமையால், 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்றார். ஒழுக்கம் - நன்னடக்கை. (க)

112 பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

*பரிந்து ஓம்பி ஒழுக்கம் காக்க* - வருந்திப் போற்றி ஒழுக்கத்தைக் காக்கவேண்டும், *தெரிந்து ஓம்பித் தேரினும் அஃதே துணை* - அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து போற்றி முடிவுகாணினும் அவ்வொழுக்கமே ஒருவனுக்கு உற்ற துணையாகும்.

*பரிந்து ஓம்பிக் காத்தல்* - எப்படியேனும் காத்தல். ஒழுக்கமே நல்வாழ்வுக்கு ஏற்ற துணையாகும். (உ)

113 ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

*ஒழுக்கம் உடைமை குடிமை* - நல்லொழுக்கம் உடைமையே உயர்குடித் தன்மையாகும், *இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும்* - ஒழுக்கமின்மை தாழ்குடித்தன்மையாகிவிடும்.

*குடிமை* - உயர்குடித்தன்மை. *இழிந்த பிறப்பு* - தாழ்குடித்தன்மை. *இழுக்கம்* - தீய ஒழுக்கம். நல்லொழுக்கமின்மையே தீய ஒழுக்கமாகும். நடக்கையைக் கொண்டே ஒருவன் உயர்வு தாழ்வு மதிக்கப்படும். (ந)

114 மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

*பார்ப்பான் மறப்பினும் ஒத்து கொளலாகும்* - நூல்களை ஆராய்ந்து பார்ப்பவன் அவற்றை மறப்பினும் மறுபடியும் கற்றுத் தெரிந்துகொள்ளலாம், *பிறப்பு ஒழுக்கம் குன்ற கெடும்* - ஆனால், மக்கட் பிறப்புக்குரிய உயரிய ஒழுக்கம் குறையுமானல் அவன் கெடுவான்.

விலங்கு முதலிய மற்றைப் பிறப்புக்கு ஒழுக்கமின்மையால்தான் அவை அஃறிணை எனப்பட்டன.

கற்றதை மறந்தாலும் பின் கற்றுக்கொள்ளலாம், ஒழுக்கங்குன்றினால் மறுபடியும் தேடிக்கொள்ள முடியாது.(ச)

115 அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

*அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று* - பொறாமை உடையவனிடத்துச் செல்வம் இல்லாமை போல, *ஒழுக்கம் இலான் கண் உயர்வு இல்லை* - ஒழுக்கம் இல்லாதவனிடத்து உயர்ச்சி இல்லை. பொறாமைக்காரனுக்குச் செல்வம் பெருகாது. ஒழுக்கமில்லாதவன் மதிக்கப்படான். (ரு)

116 ஒழுக்கத்தி னொல்கா ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

*இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து* - ஒழுக்கந் தவறுதலால் குற்றம் உண்டாதலை அறிந்து, *உரவோர் ஒழுக்கத்தின் ஒல்கார்* - மனவலிமையுடையோர் நல்லொழுக்கத்தினின்றும் சுருங்கார்.

ஏதம் - குற்றம், இழிவு. படுபாக்கு - படுதல். ஒல்குதல் - சுருங்குதல், குறைதல். ஒழுக்கக்கேட்டால் இழிவுண்டாதலை அறிந்து அறிஞர்கள் ஒழுக்கந் தவறார். (சு)

117 ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி.

*ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர்* - நல்லொழுக்கத்தினால் மேன்மை அடைவர், *இழுக்கத்தின் எய்தாப் பழி எய்துவர்* - தீய ஒழுக்கத்தால் அடாத பழியை அடைவர். நல்லொழுக்கம் மேன்மையையும், தீய ஒழுக்கம் கீழ்மையையும் தரும். (எ)

118 நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

*நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும் - நல்லொழுக்கம் நன்மைக்குக் காரணமாகும், தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் - தீய ஒழுக்கம் எப்போதும் துன்பந் தரும்.*

*நல்லொழுக்கம் இன்பமும், தீய ஒழுக்கம் துன்பமும் தரும்.* (அ)

119 ஒழுக்க முடையவர்க் கொல்லாதே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

*வழுக்கியும் தீய வாயால் சொலல் - மறந்தும் தீய சொற்களைத் தம் வாயால் சொல்லுதல், ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாதே - நல்லொழுக்கமுடையவர்க்கு முடியாது.*

*நல்லொழுக்கமுடையவர் மறந்தும் தீயனபேசார்.* (கூ)

120 உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

*பலகற்றும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார் - பல நூல்களைக் கற்றிருந்தும் உலகத்தோடு பொருந்த ஒழுகுதலைக் கல்லாதவர், அறிவிலாதார் - அறிவில்லாதவர் ஆவர்.*

*உலகத்தோடு ஒட்ட ஒழுகல் - காலத்துக்கேற்றவாறு நடத்தல். காலத்துக்கேற்றவாறு நடக்க அறியாதவர் பல நூல்களைக் கற்றிருந்தபோதிலும் அறிவில்லாதவரே யாவர்.* (ய)

## 13 அடக்கமுடைமை

மனமொழி மெய்கள் தீநெறிக்கட் செல்லாது அடங்கி நடத்தல்.

121 அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்.

அடக்கம் அமர் அருள் உய்க்கும் - அடக்கம் மிக்க மேன்மையைக் கொடுக்கும், அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும் - அடக்கமின்மை மிக்க துன்பத்தைக் கொடுத்துவிடும்.

அடக்கம் - மன மொழி மெய் அடங்குதல். அருள் - மேன்மை. இருள் - துன்பம். அடக்கம் இன்பத்தையும், அடங்காமை துன்பத்தையும் தரும். (க)

122 காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு.

அடக்கத்தைப் பொருளாக் காக்க - ஒருவன் அடக்கத்தைச் சிறந்த பொருளாக எண்ணிக் காக்கக்கடவன், உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை - உயிர்கட்கு அவ் வடக்கத்தைவிட மேலான செல்வம் வேறில்லை.

உயிர் - மக்கள். அதனின் ஊங்கு - அதைவிட. அடக்கமே சிறந்த செல்வமாகும். (உ)

123 செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

அறிவு அறிந்து ஆற்றின் அடங்கப் பெறின் - அடக்கமாக வாழ்தலே அறிவு என்பதை அறிந்து நல் வழியினால் ஒருவன் அடங்கப்பெற்றால், செறிவு அறிந்து சீர்மை பயக்கும் - அவனுடைய அடக்கத்தை உலகம் அறிந்து அவனுக்கு மேன்மை யளிக்கும்.

செறிவு - அடக்கம். சீர்மை - மேன்மை. அடக்கமாக வாழ்தலே அறிவுடைமையாகும் என்பதை ஒருவன்

அறிந்து அடங்கி நடப்பானாயின், உலகத்தார் அவனை மேலாக மதிப்பர். (ங)

124 நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது.

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம் - ஒழுக்க நிலையில் நின்றும் மாறுபடாது அடங்கினவனுடைய உயர்ச்சி, மலையினும் மாணப்பெரிது - மலையைவிட மிகப் பெரிது.

உயர்ச்சி - மதிப்பு. மலை - மதிப்பின் உயர்வுக்கு எடுத்துக் காட்டு. அடக்கமுடையவன் மிகுந்த மதிப்புப் பெறுவான். (ச)

125 எல்லார்க்கு நன்றாம் பணிதல் அவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

பணிதல் எல்லார்க்கும் நன்றாம் - அடங்குதல் பொதுவாக உலகமக்கள் யாவர்க்கும் நல்லதாகும், அவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து - யாவரினும் செல்வமுடையவர்க்கே அவ்வடக்கம் பிறிதொரு செல்வமாகும் சிறப்பினையுடையது.

செல்வம் தகைத்து - செல்வமாகும் தகுதியை உடையது. பொதுவாக எல்லார்க்கும் அடக்கம் நல்லது. செல்வர்க்கோ பிறிதொரு செல்வம்போல நல்லதாகும். செல்வர்களுக்கு அடக்கம் மிக மிக இன்றியமையாதது. (ரு)

126 ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்து அடக்கல் ஆற்றின் - ஒரு கூட்டிற்குள் ஐந்துறுப்பினையும் அடக்கும் ஆமையைப் போல, ஐம்பொறிகளும் ஐம்புலன்கள் மேலும் விரும்பியவாறு செல்லாமல் அடக்க வல்லவனாகில்,

எழுமையும் ஏமாப்பு உடைத்து - அச்செயல், பல தீமை களும் அணுகாத பாதுகாப்பாக உடையது.

ஏழு என்னும் எண்ணுப் பெயர் - பல என்னும் பொருளது. 'எழுபதுகோடி உறும்' (639) 'பத்தடுத்த கோடி' (817) என்பனபோல. ஒருமை உள் - ஒன்றில். ஐம்பொறி யடக்கமே துன்பம் அணுகாமைக்குக் காரண மாகும். காணவேண்டும், கேட்கவேண்டும், சுவைக்க வேண்டும், துய்க்க வேண்டும் என்னும் விருப்பமே துன் பத்துக்குக் காரணமாதலை அறிக. (சு)

127 யாகாவா ராயினும் நாகாக்க ; காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

யாகாவார் ஆயினும் நாகாக்க - பிறபொறிகளைக் காவாராயினும் நாவைமட்டும் காக்கக்கடவர், காவாக் கால் சொல் இழுக்குப்பட்டு சோகாப்பர் - நாவைக் காவா ராயின் சொற்குற்றத்திலகப்பட்டுத் துன்பப்படுவர்.

இது மொழியடக்கம். யா - நாக்கொழிந்த நாற் பொறிகளையுங் குறித்தலால் அஃறிணைப் பலவின்பால் பெயர். இழுக்கு - குற்றம். சோகாத்தல் - துன்புறுதல். நாவடக்கமே சிறந்த அடக்கமாகும். (எ)

128 ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்
நன்றாகா தாகி விடும்.

ஒன்றானும் தீச்சொல் பொருள்பயன் உண்டாயின் - ஒருவன் சொல்லும் சொற்களில் ஒன்றாயினும் தீயசொல் லினது பொருளின் பயனைத் தருமாயின், நன்று ஆகாது ஆகிவிடும் - அது தீதாகிவிடும்.

தீயசொல்லின் பொருள் - தீமை. பொருள் பயன் - பிறர்க்குத் தீமை தருதல். நன்று ஆகாது - தீது. ஒரு வன் பேசும் பேச்சில் பிறர் மனத்தைச்சுடும் ஒரு கடுஞ் சொல் இருக்கினும் அப் பேச்சுத் தீயபேச்சாகிவிடும். தீச்

சொற்கள் சிறிதுகலந்தும் பேசலாகாது. இதுவும் மொழி யடக்கம். (அ)

129 தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

தீயினால் சுட்ட புண் உள் ஆறும் - தீயினால் சுட்ட புண் உடலின் கண் ஆறாதிருக்கினும் மனத்தின் கண் ஆறி விடும், நாவினால் சுட்டவடு உள் ஆறாது - நாவினால் சுட்ட தழும்பு எப்போதும் மனத்தின்கண் ஆறாது.

உள் ஆறுதல் - தீச்சுட்ட புண் கொஞ்சம் ஆறினதும் வலியடங்குதல். உடலில் ஆறாமை - தழும்பாதல். உள் ஆறாமை - கடுஞ்சொல்லால் உண்டான வருத்தம் என்றும் மனத்தை விட்டு நீங்காமை. (கூ)

130 கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றி னுழைந்து.

கதம் காத்து - சினத்தைக் காத்து, கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி - கற்கவேண்டியவற்றைக் கற்று அடக்கத்தைக் கைக்கொள்ள வல்லவனது காலத்தை, ஆற்றில் நுழைந்து அறம் பார்க்கும் - அவனை யடையும் வழியில் சென்று அறம் பார்க்கும்.

செவ்வி - மன மொழி முகங்கள் இனியனாகுங்காலம் அடையும் வழியில் சென்று செவ்வியை அறம்பார்க்கும் அறம் - நன்மை. அடக்கமுடையவருக்கு அறம் வளரும்.

## 14 நடுவுநிலைமை

ஒருவர் பக்கம் சேராமல் இருவர்க்கும் நடுவுநிலைமை உடையனாய் இருத்தல். இது பெரும்பாலும் வழக்குத் தீர்க்கும் நடுவர்கட்கு (ஜட்ஜ் முதலியோர்) உரிய அற மாகும். எனினும், இல்வாழ்வார் ஒவ்வொருவரும் நடுவு

நிலைமையுடையராக நடந்து கொள்ளுதல் வேண்டு மென்பது.

131 தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

பகுதியால் - நட்பு, பகை, நொதுமல் என்னும் பகுதிதோறும், பால்பட்டு ஒழுகப்பெறின் - ஒவ்வொரு வர் பக்கமும் சார்ந்து நடக்க நேரிட்டால், தகுதி என ஒன்று நன்றே - நடுவுநிலைமை என்று கூறப்படும் ஒன்று நல்லதே.

நண்பர், பகைவர், நொதுமலர் என்னும் மூவர் பக்க மும் பழக நேரிட்டால் நடுவு நிலைமை தவறாது நடந்து கொள்ளுதல் நல்லது. இது நடுவு நிலைமையின் சிறப்புக் கூறப்பட்டது. பகுதி - பிரிவு. பகுதியால் - பகுதி தோறும். தகுதி உடைய நடுவுநிலைமையைத் 'தகுதி' என்றார். நொதுமல் - பகையும் நட்புமல்லாத பொதுத் தன்மை. நொதுமலரிடம் நடந்து கொள்ளுதல் போலவே நண்பர், பகைவர் என்னும் இருவரிடமும் நடந்து கொள்ளுதல் வேண்டும். (க)

132 செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

செப்பம் உடையவன் ஆக்கம் - நடுவுநிலைமை யுடை யவன் செல்வம், சிதைவு இன்றி எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து - கெடுதலின்றி அவன் வழிவருவோர்க்கும் பாதுகாவலை உடையது.

செப்பம் - நடுவுநிலைமை. எச்சம் - வழிவழி மக்கள். ஏமாப்பு - பாதுகாப்பு. நடுவுநிலைமை உடையவன் செல் வம், அவன் வாழ்நாள் முழுதுமேயன்றி அவன் வழிவரு வோர்க்கும் பயன்படும் என்பதாம். (உ)

133 நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்.

நன்றே தரினும் - நன்மையே தரினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை - நடுவுநிலைமை தவறுவதால் உண்டாகும் செல்வத்தை, அன்றே ஒழிய விடல் - அச்செல்வம் வரத் தொடங்கும் அப்போதே விட்டுவிடுக.

விடல் - வியங்கோள் வினைமுற்று. நடுவுநிலைமை தவறிச் செல்வந்தேடக் கூடாது. (௩)

134 தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

தக்கார் தகவு இலர் என்பது - இவர் நடுவுநிலைமையுடையார் இவர் நடுவுநிலைமை இல்லார் என்பது, அவரவர் எச்சத்தால் காணப்படும் - அவரவருடைய மக்கள் ஒழுக்கத்தைக்கொண்டு அறியப்படும்.

எச்சம் - மக்கள்; மக்கள் ஒழுக்கத்தை உணர்த்திற்று. பெற்றோர் ஒழுக்கத்தையே மக்களும் பின்பற்றுவராகையால் பெற்றோர் தகுதியை அறிய மக்கள் தகுதி காரணமாயிற்று. நடுவுநிலைமை யுடையார் வீட்டுச் சிறுவர்களும் நடுவுநிலைமை உடையராகவே இருப்பர். (௪)

135 கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

கேடும் பெருக்கமும் இல் அல்ல - கேடு உண்டாதலும் ஆக்கம் உண்டாதலும் உலகத்தில் இல்லாதவை அல்ல, நெஞ்சத்து கோடாமை சான்றோர்க்கு அணி - கேடும் பெருக்கமும் உண்டாகும் காலங்களில், அவை காரணமாகத் தம்மனம் நடுவுநிலைமை திறம்பாதிருப்பது பேரறிஞர்களுக்கு அழகாகும்.

கேடு - செல்வக்கேடு, வறுமை. பெருக்கம் - செல்வப் பெருக்கம். ஆக்கம் - செல்வம். இன்ப

துன்பம் இரண்டிலும் நடுவு நிலைமையைக் கைவிடக் கூடாது. (ரு)

136 கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவோரீஇ அல்ல செயின்.

தன் நெஞ்சம் நடுவு ஓரீஇ அல்ல செயின் - தன் மனம் நடுவுநிலையினின்றும் நீங்கி நடுவல்லவற்றைச்செய்ய நினைக்குமாயின், யான் கெடுவல் என்பது அறிக - 'நான் கெடக்கடவேன்' என்பதை அவன் அறிவானாக.

நினைத்தலும் செய்தலோ டொத்தலின் 'அல்ல செயின்' என்றார். நடுவுநிலைமை தவறியவன் கெடுவது உறுதி. (சா)

137 கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிகட் டங்கியான் றாழ்வு.

நடுவாக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு - நடுவு நிலைமையுடன் அறநெறியில் நின்றவன் கெடுவானாயின் அவன் கேட்டை, உலகம் கெடுவாக வையாது - உலகத்தார் கேடாக எண்ணார்.

தாழ்வு - வறுமை. நடுவுநிலைமையுடையான் வறுமை யுறுவானானல் அதை உலகத்தார் வறுமையாகக் கொள்ளார். ஆகவே, நிடுவுநிலைமை தவறக்கூடாது. (எ)

138 சமன்செய்து சீர்தூக்குங் கோல்போலமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து-தான் சமனாக இருந்து, தன்மீது வைக்கும் பொருளைச் சமனாக நிறுத்துக் காட்டும் துலாக்கோல் போல நடுநிலை யுடையராயிருந்து, ஒரு பால் கோடாமை - ஒரு பக்க மாகச் சேராமையே, சான்றோர்க்கு அணி - அறிவுடை யோர்க்கு அழகாகும்.

சீர் தூக்கல் - நிறுத்தல். துலாக்கோல் - தராசு. இது வழக்குத் தீர்ப்போர்க்கு உரிய அறமாகும். 'இரண்டு கண்ணுக்கு மூக்குப் பிறந்தாற்போல்' நடுவு நிலைமை திறம்பாது வழக்குத் தீர்க்கவேண்டும் என்பதாம். (அ)

139 சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்ட மின்மை பெறின்.

உள் கோட்டம் இன்மை ஒருதலையாப் பெறின் மனத்தின்கண் கோணுதல் இல்லாமையைத் திண்மையாகப் பெறுவாராயின், சொல் கோட்டம் இல்லது செப்பம் - பின்னர்ச் சொல்லின்கண் கோணுதல் இல்லாததே நடுவு நிலைமையாகும்.

கோணுதல் - ஒரு பக்கம் சேர்தல். திண்மை - உறுதி. மனமும் சொல்லும் கோணுதலில்லாமையே நடுவு நிலைமை யாகும். (கூ)

140 வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

பிறவும் தமபோல்பேணிச் செயின் - பிறர்பொருளையும் தமது பொருள்போல் எண்ணி வாணிகம் செய்தால், வாணிகம் செய்வார்க்கு வாணிகம் - வாணிகம் செய்வார்க்கு நல்ல ஊதியமாகும்.

பிறவும் தமபோல் பேணலாவது - தம்பொருளை விற்கும்போது எப்படி விற்கவேண்டும் என எண்ணுகிறாரோ அப்படியே பிறர்பொருளைத் தாம் வாங்கும் போதும் எண்ணுதல். கொள்வது மிகையும் கொடுப்பது குறையு மாகாமல் ஒப்ப நாடிச்செய்தல். இது வணிகர்க்குரிய தகுதியாம். (ம)

## 15 பிறனில் விழையாமை

பிறனுடைய மனைவியை விரும்பாமை. வாழ்க்கையின் உரிமைகள் அனைத்தையும் தாங்களே வைத்துக் கொண்டு, பெண்மக்களை அடிமைகளாய் நடத்திவருவதால், ஆண் மக்களே இக்குற்றம் செய்தற்குரியராகையால், 'பிறன் இல்' என ஆண்பாலால் கூறினர். பெண்பாலுக்கும் கொள்க. முன் (6) பெண்மக்களின் மனத்திண்மை கூறினர். இங்கு ஆண் மக்களின் மனத்திண்மை கூறினர் எனினுமாம்.

141 பிறன்பொருளாட் பெட்டொழுகும்பேதைமை ஞாலத்
 தறம்பொருள் கண்டார்க ணில்.

பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை - பிறனுக்கு உரிமையானவளை விரும்பி நடக்கின்ற அறியாமை, ஞாலத்து அறம் பொருள் கண்டார்கண் இல் - உலகத்தில் அறத்தையும் பொருளையும் அறிந்தவரிடம் இல்லை.

பெட்பு - விருப்பம். பெட்டு - விரும்பி. அறம் பொருள் - அறநூலும், பொருள் நூலும். அறநூலையும் பொருணூலையும் அறிந்தவர்கள் இத் தகாச்செயலை இன்பமெனக் கருதார்கள் என்பதாம். பிறன் மனை விரும்புதல் அறிவுடைமையாகாது. (க)

142 அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
 நின்றாரிற் பேதையா ரில்.

அறன்கடை நின்றாருள் எல்லாம் - தீமையின்கண் நின்றவர் எல்லாருள்ளும், பிறன் கடை நின்றாரில் பேதையார் இல் - பிறனது மனையாளை விரும்பி அவன் வீட்டுவாயிலில் நின்றவர்போல அறிவிலிகள் இல்லை.

அறன்கடை - தீமை. பிறன்கடை - பிறன்மனை வாயில். பிறன்மனை விரும்புவோர் கொடியரினும் கொடியர். (உ)

143 விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.

தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார் - தம்மை நல்லவர் என்று நம்பினவர் வீட்டில் தீமை செய்தலை விரும்பி நடப்பவர், விளிந்தாரின் வேறு அல்லர் - இறந்தவரினும் வேறாகார்.

தெளிந்தார் இல் தீமை புரிதல் - நம்பினவர் மனைவியை விரும்புதல். விளிதல் - சாதல். நம்பினவர் வீட்டில் தீமை செய்பவர் பிணத்திற்கு ஒப்பாவர். உடையான் காணின் இறப்பார் என்றுமாம். (ங)

144 எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

தினைத்துணையும் தேரான் பிறன் இல் புகல் - தினையளவுகூடத் தம் பிழையை எண்ணிப்பாராது பிறனுடைய மனையின்கட் புகுதல், எனைத்துணையர் ஆயினும் என் ஆம் - எவ்வளவு பெருமை யுடையோராயினும் யாதாகும்?

பிறனில்புகல் - பிறன் மனையாளை விரும்புதல். 'எனைத் துணையர், தேரான்' - என உயர்த்தற்கண் பன்மை ஒருமை மயங்கிற்று. பிறனில் புகுவோன் எவ்வளவு மதிப்புடையோனாயினும் சிறிதும் மதிக்கப்படான். (ச)

145 எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

எளிது என இல் இறப்பான் - அடைதல் எளிதென எண்ணிப் பிறனில் விழைவான், எஞ்ஞான்றும் விளியாது

நிற்கும் பழி எய்தும் - எந்நாளும் அழியாது நிற்கும் பழியை அடைவான்.

விளிதல் - கெடுதல். பிறன்மனை விரும்புவோன் என்றும் உலகப் பழிக்காளாவான். (ரு)

146 பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

இல் இறப்பான் கண் - பிறனில் விழைவானிடத்து, பகை பாவம் அச்சம் பழி என நான்கும் இகவாவாம் - பகை, தீமை, அச்சம், பழி என்னும் நான்கும் எப்போதும் நீங்காவாம்.

பகை - அவ்வீட்டுக்குடையான் பகை. பாவம் - அத் தீத் தொழிலாகிய குற்றம். அச்சம் - அத்தீமை புரியுங்கால் உண்டாகும் அச்சம். பழி - உலகப்பழி.

"காணில் குடிப்பழியாம், கையுறிற் கால்குறையும்,
மாணின்மை செய்யுங்கால் அச்சமாம்" (நாலடி 84)
என்னும் நாலடியாரைக் காண்க. (சா)

147 அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

அறன் இயலான் இல்வாழ்வான் என்பான் - அறநெறிப்படி இல்வாழ்பவன் என்று சொல்லப்படுபவன், பிறன் இயலாள் பெண்மை நயவாதவன் - பிறனுக்குரியவளது பெண்மையை விரும்பாதவனாவான். பிறன்மனை நோக்காதவனே நற்குடி மகனாவான். (எ)

148 பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற வொழுக்கு.

பிறன்மனை நோக்காத பேராண்மை - பிறன் மனையாளை மனத்தாலும் எண்ணாத பெரிய ஆண்மை, சான்

ளோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு - அறிஞர்களுக்கு அறிவுமட்டுமா? சிறந்த ஒழுக்கமுமாகும்.

அறமும் ஒழுக்கமும் உடையார் பிறன் மனைவியை மனத்தாலும் நினையார். (அ)

149 நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

நாமநீர் வைப்பில் - அச்சந்தரும் கடலால் சூழப்பட்ட இவ்வுலகில், நலக்கு உரியார் யார் எனின் - நன்மை எய்துதற்குத் தகுதியானவர் யார் என்றால், பிறற்கு உரியாள் தோள் தோயாதார் - பிறனுக்கு உரியவளது தோளைத் தீண்டாதாராவர்.

நாமம் - அச்சம். நலத்துக்கு - அத்துச்சாரியை தொக்கு 'நலக்கு' என நின்றது. பிறன்மனை விரும்பாதவரே பல நன்மையும் பெறுவர். (கூ)

150 அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

அறன் வரையான் அல்ல செயினும் - அறத்தைச் செய்யாது அறமல்லாதவற்றைச் செய்யினும், பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று - பிறன் எல்லையில் நிற்பவளது பெண்மையை விரும்பாமை நல்லது .

அறன் வரையான் - அறத்திற்கு உட்பட்டு நடவான். வரையான் - வரையாது - வினையெச்சம். தீமையினும் தீமை பிறன்மனை நயத்தல். (ம)

## 16 பொறையுடைமை

ஒருவர் காரணம் பற்றியாதல், அறிவின்மையாலாதல் தமக்கு ஏதாவது துன்பஞ் செய்தால், தாமும் அதனை அவர்க்குச் செய்யாது பொறுத்துக்கொள்ளுதல்.

151 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல - தன்னைத் தோண்டுபவர்களை வீழாமல் தாங்கும் நிலம்போல, தம்மை இகழ்வார் பொறுத்தல் தலை - தம்மை இகழ்பவர்களைப் பொறுத்தல் தலைமையாகிய அறம்.

அகழ்தல் - தோண்டுதல். தன்மீது நின்றுகொண்டே தன்னைத் தோண்டி வருத்துவோர்களைக் கீழே விழாமல் தாங்கும் நிலம்போலத் தன்னை இகழ்வாரைப் பொறுத்தல் வேண்டும். பழிக்குப்பழி வாங்காதிருத்தலே சிறந்த குணமாகும். (க)

152 பொறுத்த லிறப்பினை என்றும் அதனை
மறத்த லதனினும் நன்று.

என்றும் இறப்பினை பொறுத்தல் - எப்போதும் பிறர் செய்த குற்றத்தைப் பொறுக்க; அதனை மறத்தல் அதனினும் நன்று - அக்குற்றத்தை அப்பொழுதே மறத்தல் அப் பொறுமையைவிட நல்லது.

இறப்பு - மிகைபடச் சொல்லுதலும் செய்தலும்; அளவுக்கு மிஞ்சியது, குற்றம். பொறுத்தல் - வியங்கோள் வினைமுற்று. பிறர் செய்த குற்றத்தைப் பொறுத்தலினும், மறத்தல் நல்லது. மறவாதிருப்பின் பின்னர்ப் பழிவாங்கவும் செய்யும். (உ)

153 இன்மையு ளின்மை விருந்தோரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

இன்மையுள் இன்மை விருந்து ஒரால் - ஒருவனுக்கு வறுமையுள் வறுமையாவது வீடுதேடிவந்த விருந்தினரை நீக்குதல், வன்மையுள் வன்மை மடவார்ப்பொறை - அது போல, வன்மையுள் வன்மையாவது அறியாதார் செய்த குற்றத்தைப் பொறுத்தல்.

ஒருவுதல் - நீக்குதல். அறிவிலிகள் செய்த குற்றத்தைப் பொறுப்பதே மிக்க வல்லமையாகும். (௩)

154 நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை
போற்றி யொழுகப் படும். [யுடைமை

நிறை உடைமை நீங்காமை வேண்டின் - ஒருவன் தன் பெருங்குணம் தன்னைவிட்டு நீங்காதிருக்க விரும்பினால், பொறையுடைமை போற்றி ஒழுகப்படும் - பொறுமையைப் பாதுகாத்து நடக்கவேண்டும்.

பெருங்குணம் - சால்பு. பொறையுடையார்க்கே சால்பு என்னும் பெருங்குணம் அமையும். 99-ஆம் அதிகாரம் பார்க்க. (௪)

155 ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

ஒறுத்தாரை ஒன்றாக வையார் - பிறன் தமக்குச் செய்த தீமையைப் பொறாது அவனைத் தண்டித்தவர்களை ஒரு பொருளாக உலகோர் மதியார், பொறுத்தாரைப் பொன் போல் பொதிந்து வைப்பர் - அவன் செய்த தீமையைப் பொறுத்தவர்களைப் பொன்னைப் பாங்காகப் போற்றுதல் போலப் போற்றுவர்.

பொதிந்து வைத்தல் - பெட்டியிலிட்டு மூடிவைத்தல். அதுபோல் பொறுத்தாரை இடைவிடாது நினைத்

தல். ஒறுத்தாரை மதியார், பொறுத்தாரை மதிப்பர் உலகோர். (ரு)

156 ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் - தமக்குத் தீமை செய்தவனை ஒறுத்தவர்க்கு அவ்வொரு நாள் இன்பமே, பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ் - பொறுத்தவர்க்கு இறக்குமளவும் புகழ் நிலைக்கும்.

ஒருநாளை இன்பம் - அவ்வொருநாளும் கருதியது முடித்தேமெனச் செருக்கியிருக்கும் பொய்யின்பம். பொன்றுந்துணையும் புகழ் - அவரைப் பார்த்தபோதெல்லாம், 'இவரே பொறையுடையார்' என உலகோர் புகழும் புகழ். (சா)

157 திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

திறன் அல்ல தன் பிறர் செய்யினும் - தகுதியல்லாதவற்றைத் தனக்குப் பிறர் செய்தாலும், நோநொந்து அறன் அல்ல செய்யாமை நன்று - அவற்றைத் திருப்பிச் செய்தால் அவர்க்கு உண்டாகும் துன்பத்திற்கு நொந்து அறமல்லாதவற்றை அவர்க்குச் செய்யாமலிருப்பது நல்லது.

நோநொந்து - நோவுக்கு நொந்து. நோ - துன்பம். அறனல்ல - தீமை. பழிக்குப்பழி செய்யாதிருப்பது பெரியோர் கடமை. (எ)

158 மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

மிகுதியான் மிக்கவை செய்தாரை - தம்மைவிடச் செல்வம், உடல்வலி முதலியன மிகுதியால் தமக்குத் தீங்கிழைத்தவரை, தாம் தம் தகுதியான் வென்றுவிடல்- தாம் தமது பொறையால் வெல்லக்கடவர்.

செருக்கினால் செய்த தீங்கையும் பொறுத்துக் கொள்ளுதலே பொறையாகும். (அ)

159 துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.

இறந்தார்வாய் இன்னாச்சொல் நோற்கிற்பவர் - நன்னெறியைக் கடந்தவரது வாயிலிருந்து வரும் தீச்சொற்களைப் பொறுப்பவர், துறந்தாரில் தூய்மையுடையர் - தீயவற்றைத் துறந்தோரினும் தூய்மையுடையவராவர்.

இறந்தார் - ஒழுக்க வரம்பைக் கடந்தார், ஒழுக்கமில்லார். நோற்கில்பவர் - நோற்பவர். கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. துறவினும் பொறை சிறந்தது. (கூ)

160 உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின்.

பிறர் சொல்லும் இன்னாச்சொல் நோற்பாரின்பின் - பிறர் கூறும் கடுஞ்சொற்களைப் பொறுப்பவருக்குப் பிறகே, உண்ணாது நோற்பார் பெரியர் - உணவை நீக்கியதால் உற்ற நோயைப் பொறுப்பவர் பெரியவராவர்.

உண்ணாது நோற்பவர் - பசியைப் பொறுத்துக் கொண்டு தவம் செய்பவர். பசி முதலியவற்றைப் பொறுப்பதை விடத் தீச்சொல்லைப் பொறுப்பதே சிறந்த பொறையாகும். (ய)

## 17 அழுக்காறாமை

அழுக்காறு - பொறாமை. அதாவது பிறர் பெருமை கண்டு மனம் பொறாமை. அழுக்காறாமை - பொறாமை யின்மை.

161 ஒழுக்காறாக் கொள்க ஒருவன்றன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.

ஒருவன் தன் நெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு - ஒருவன் தன் மனத்தின்கண் பொறாமை இல்லாத தன்மையை, ஒழுக்க ஆறாக் கொள்க - ஒழுக்க நெறியாகக் கொள்ளக்கடவன்.

பொறாமையின்மையே நல்லொழுக்கமாகும். (க)

162 விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.

யார் மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின் - யாரிடத்தும் பொறாமையின்மையை ஒருவன் பெறுவானால், விழுப்பேற்றின் அஃது ஒப்பது இல்லை - சிறந்த பேறுகளுள் அதற்கு நிகரானது இல்லை.

பேறு - அடையும பயன். கல்விப்பேறு, செல்வப் பேறு, மக்கட்பேறு எனக் காண்க. பொறாமை கொள்ளா மையைவிடச் சிறந்த பயன் வேறொன்றுமில்லை. (உ)

163 அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான் - அறமும் பொருளும் தனக்கு வேண்டாதவன் என்று சொல்லப்படுவான், பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான் - பிறன் செல்வங்கண்டு பொறாது பொறாமைப் படுவான்.

அறன் ஆக்கம் - உம்மைத் தொகை. ஆக்கம் . செல்வம். அழுக்கறுத்தல் - அழுக்காறு கொள்ளுதல்-

பொறாமைக்காரனை உலகோர் வெறுப்பதால் அவன் அறமும் பொருளும் உடையன் ஆகான் என்பதாம். அழுக்காறுடையவன் நன்மையடையான். (௩)

164 அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து.

இழுக்கு ஆற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து - தீயவை செய்யின் குற்றம் உண்டாதலை அறிந்து, அழுக்காற்றின் அல்லவை செய்யார் - பொறாமையினால் அறமல்லாதவற்றைச் செய்யார்.

இழுக்கு - அறமல்லாதவை - தீயவை. ஏதம் - குற்றம். படுபாக்கு - படுதல், உண்டாதல். அறிவுடையோர் பொறாமையினால் பிறர்க்குத் தீயவை செய்யார். (௪)

165 அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது - அழுக்காறு, பகைவரைவிடக் கேடுதருவ தொன்றாகலின், அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் - பொறாமை யுடையார்க்குக் கேடு தருவதற்குப் பகைவர் வேண்டியதில்லை, அப் பொறாமையே போதும்.

ஒன்னார் வழுக்கியும் - பகைவர் தவறினும் தவறாது. கேடு ஈன்பது - கேடு தருவது. பகைவரைவிடப் பொறாமை கேட்டை உண்டாக்கும். (௫)

166 கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும்.

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் - பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக் கண்டு பொறாமைப்படுபவனது சுற்றமும், உடுப்பதும் உண்பதும் இன்றிக்கெடும் - உடையும் உணவும் இன்றிக்கெடும்.

பொறாமைக்காரனே யன்றி அவன் சுற்றத்தாரும் கெடுவர் என்பதாம். சுற்றமும் - என்பதன் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொக்கது. "ஈவது விலக்கேல்." (சு)

167 அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.

அழுக்காறு உடையானை - பொறாமை யுடையவனை, செய்யவள் அவ்வித்து தவ்வையைக் காட்டிவிடும் - இளையவள் பொறாமைப்பட்டு மூத்தவளுக்குக் காட்டித் தான் நீங்குவாள்.

அவ்வித்து - பொறாமைகொண்டு. தவ்வை - மூத்தவள், மூதேவி (மூத்ததேவி), வறுமை. முகவுரை பார்க்க. பொறாமைக்காரன் செல்வமிழந்து வறுமை யுறுவான் என்பதை, பொறாமைக்காரனை மூத்தாளுக்குக் காட்டி விட்டு இளையவள் நீங்கிக் கொள்வாள் என நகைச்சுவை தோன்றக் கூறினார். தவ்வையை - தவ்வைக்கு - உருபு மயக்கம். செய்யவள் - செல்வம். (எ)

168 அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

அழுக்காறு என ஒரு பாவி - பொறாமை என்னும் ஒப்பற்ற தீயோன், திருச்செற்று தீஉழி உய்த்து விடும் - செல்வத்தையுங் கெடுத்துத் தீமையுள் செலுத்தி விடுவான்.

அழுக்காற்றைப் 'பாவி' என ஆண்பாலால் கூறியது. மேல் (167) செல்வத்தையும், வறுமையையும் பெண் பாலால் கூறியது போன்றது. அழுக்காறு செல்வத்தைப் போக்கித் தீமையையுந் தரும். (அ)

169 அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் - பொறாமைக் காரனது ஆக்கமும், செவ்வியான் கேடும் - பொறாமை யில்லாதவனது கேடும், நினைக்கப்படும் - ஆராயத்தக்கது.

ஆக்கக் கேடு - செல்வ வறுமை. பொறாமைக்காரன் செல்வ முறுதலும், பொறாமையில்லாதவன் வறுமை யுறுதலும் கூடுமாயின், அறிவுடையோரால் அதன் காரணம் ஆராயத் தக்கது என்றார். அழுக்காறுடையான் ஆக்க முறுதலும், அழுக்காறிலான் கேடுறுதலும் இல்லை. (கூ)

170 அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

அழுக்கற்று அகன்றாரும் இல்லை - பொறாமைப் பட்டுப் பெருக்க மடைந்தவரும் இல்லை, அஃதில்லார் பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல் - பொறாமை இல்லாதவருள் பெருகத்தினின்று நீங்கினவரும் இல்லை.

பெருக்கத்தில் தீர்தல் -சுருக்கமடைதல். பெருக்கம் சுருக்கம் - ஆக்கக் கேடுகளைக் குறித்தன. அகலுதல் - பெருகுதல். பொறாமைப்பட்டுச் செல்வரானவரும், பொறாமையின்றி வறியரானவரும் இல்லை. (ய)

## 18 வெஃகாமை

வெஃகுதல் - விரும்புதல். வெஃகாமை - பிறர் பொருளை விரும்பாமை. பின்னர் (32) கள்ளாமை என்பது - பிறர் பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கருதாமை.

171 நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

நடு இன்றி நன்பொருள் வெஃகின் -நடுவு நிலைமை இல்லாது பிறர்க்குரிய நல்லபொருளை ஒருவன் விரும்பினால், குடிபொன்றி குற்றமும் ஆங்கே தரும் - அவ்விருப்பம் அவன் குடியைக் கெடுத்துப் பல குற்றங்களையும் அப்போதே தரும்.

வெஃகாமை-பிறர் பொருளைக் கொள்ளக்கருதாமை. குடிபொன்றி - 'பொன்றுவித்து' எனப் பிறவினையாகக் கொள்க. பிறர் பொருளைக் கொள்ளவிரும்பின் குடிகெட்டுப் பல குற்றமும் உண்டாகும். (க)

172 படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

நடு அன்மை நாணுபவர் - நடுவு நிலைமை அல்லாமைக்கு அஞ்சுவோர், படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார் - தமக்கு உண்டாகும் பயனை விரும்பிப் பழியொடு படுவனவற்றைச் செய்யார்.

நடு அன்மை - முறையின்மை. படுபயன் - வினைத்தொகை. பழியொடுபடுவன - தீயவை. நல்லவர்கள் பிறர் பொருளைக்கொள்ளக் கருதார். (உ)

173 சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

மற்று இன்பம் வேண்டுபவர் - பேரின்பத்தை விரும்புவோர், சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யார் - பிறர் பொருளைக் கவர்தலால் உண்டாகும் சிற்றின்பத்தை விரும்பி அறம் அல்லாதவற்றைச் செய்யார்.

மற்று - சிற்றின்பத்தின் மறுதலையான பேரின்பத்தை யுணர்த்திற்று. சிற்றின்பம் - சிறிதுகாலம் நிலைக்கும் இன்பத்தையும், பேரின்பம் - நிலையான இன்பத்தையும் குறித்தன. நிலையான இன்பத்தை விரும்புவோர் நிலையற்ற இன்பத்தை விரும்பிப் பிறர் பொருள் கொள்ளக் கருதார். (௩)

174 இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

புலம் வென்ற புன்மையில் காட்சியவர் - ஐம்புலன்களையும் வென்ற குற்றமற்ற அறிவினையுடையவர், இலம்

என்று வெஃகுதல் செய்யார் - தாம் 'வறியேம்' என்று பிறர் பொருளை விரும்புதல் செய்யார்.

புலம் வெல்லுதல் - ஐம்புலன்களையும் பொறிமேற் செல்லாது அடக்குதல், மனவடக்கம். காட்சி - அறிவு. பெரியோர் பொருளில்லையென்று பிறர் பொருளை விரும்பார். (௪)

175 அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

வெஃகி யார்மாட்டும் வெறிய செயின் - பொருளை விரும்பி எல்லாரிடத்தும் அறிவோடு பொருந்தாத செயல்களை அறிவுடையோன் செய்வானாயின், அஃகி அகன்ற அறிவு என் ஆம் - அவனது கூரிய பரந்த அறிவால் யாது பயன்?

அஃகுதல் - சுருங்குதல். இங்கே நுண்ணியதாதல். நுண்மை - கூர்மை. 'நுண்மாண் நுழைபுலம்' (407). பிறர்பொருள் வவ்வின் பகுத்தறிவால் பயனில்லை. (௫)

176 அருள்வெஃகி ஆற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான் - அருளை விரும்பி அறநெறியில் நின்றவன், பொருள் வெஃகிப் பொல்லாத சூழக்கெடும் - பொருளை விரும்பி அதைக் கொள்ளும் தீயவழிகளை எண்ணக் கெடுவான்.

ஆறு - நல்லவழி. சூழ்தல் - எண்ணுதல். பிறர் பொருளை விரும்ப எண்ணுவோன் கெடுவான். (௬)

177 வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

வெஃகிஆம் ஆக்கம் வேண்டற்க - பிறர் பொருளைக் கவர்ந்து அதனால் உண்டாகும் செல்வத்தை விரும்பாதொழிக; விளைவயின் பயன் மாண்டற்கு அரிதுஆம். அதைத் துய்க்கும்போது அதன் பயன் நன்றாதல் இல்லை.

மாண்டற்கு, மாண் - பகுதி. மாண் - மாட்சிமை, நல்லது. துய்த்தல் - அனுபவித்தல். பிறர் பொருளால் உண்டான செல்வம் நல்ல பயன் தராது. (எ)

178 அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

செல்வத்திற்கு அஃகாமை யாதெனின் - ஒருவனது செல்வம் குறையாம லிருப்பதற்குக் காரணம் யாதெனில், பிறன் கைப்பொருள் வெஃகாமை வேண்டும் - பிறனுடைய கைப்பொருளை விரும்பாமையே யாகும்.

செல்வம் குறையுந்தன்மையை யுடையது. அது குறையாமல் இருக்க வேண்டுமானால் பிறன் பொருளை விரும்பாமல் இருக்கவேண்டும். வெஃகாதான் செல்வம் அஃகாது. கியாதெனின் - குற்றிய லிகரம். (அ)

179 அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு

அறன் அறிந்து வெஃகா அறிவுடையார் - வெஃகாமையே அறமென அறிந்து பிறர்பொருளை விரும்பாத அறிவுடையாரை, திரு திறன் அறிந்து ஆங்கே சேரும் - செல்வம் அவர் தகுதியறிந்து அப்போதே சேரும்.

பிறர் பொருளை விரும்பாதவர்க்குப் பலரும் நண்பராவராதலால் எடுத்த செயல் முடிந்து செல்வம் சேரும். (க)

180 இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு.

எண்ணாது வெஃகின் இறல் ஈனும் - எண்ணிப் பாராது பிறர் பொருளை ஒருவன் விரும்பின் அது அவனுக்கு அழிவைத்தரும், வேண்டாமை என்னும் செருக்கு விறல் ஈனும் - அப்பொருளை விரும்பாமை என்னும் பெருங் குணம் வெற்றியைத் தரும்.

இறல் - இறுதல், முடிதல், அழிதல். தொழிற்பெயர். பிறர் பொருளை விரும்பாமையாகிய பெருங்குணம் ஒருவனுக்குச் செருக்கைத் தருதலின் 'செருக்கு' என்றார். விறல் - வெற்றி - செல்வம். விறல் ஈனும் - செல்வம் பெருகும். (ய)

## 19 புறங்கூறாமை

பிறரைக் கண்டவிடத்துப் (நேரில்) புகழ்ந்து கூறி, காணாதவிடத்து இகழ்ந்து கூறாமை. புறங்கூறல் - கோட் சொல்லுதல். இது மொழிக்குற்றம்.

181 அறங்கூறா னல்ல செயினும் ஒருவன்
புறங்கூறா னென்ற லினிது.

ஒருவன் அறம் கூறான் அல்ல செயினும் - ஒருவன் அறம் என்று கூறுவதும் இல்லானாய் அறமல்லாதவற்றைச் செய்தாலும், புறங்கூறான் என்றல் இனிது - ஒருவனைக் காணாதவிடத்தில் இகழ்ந்து பேசான் என்று உலகோரால் சொல்லப்படுதல் நல்லது.

அறம் என்று வாயினாலும் கூறாது தீமையே செய்பவன். புறங்கூறுதல் - ஒருவனைக் கண்டவிடத்துப் புகழ்ந்து பேசிக் காணாதவிடத்து இகழ்ந்து பேசுதல். புறங் கூறுதல் எல்லாக் குற்றத்தினும் கொடியது. (க)

182 அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

புறன் அழீஇ பொய்த்து நகை - ஒருவனைக் காணாதவிடத்து இகழ்ந்துபேசிக் கண்டவிடத்துப் புகழ்ந்துபேசுதல், அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீதே - அறத்தைக் கெடுத்து அறமல்லாதவற்றைச் செய்தலினும் தீதாகும்.

நகை - நகைத்தல், பழித்தல். புறங்கூறுதல் கொடுமையினும் கொடுமை. (உ)

183 புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும்.

புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தலின் - ஒருவனைக் காணாதவிடத்து இகழ்ந்துகூறிக் கண்டவிடத்துப் புகழ்ந்து கூறி உயிர் வாழ்வதைவிட, சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும் - அவ்வாறு செய்யாமல் இறத்தல் அறநூற்கள் சொல்லுகின்ற எல்லாப் பெருமையும் தரும்.

பின் அத்தீமை புரியாமையின் சாதல் அறங்கூறும் ஆக்கம் தருவதாயிற்று. புறங்கூறுதலினும் சாதலே மேல்.

184 கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

கண் நின்று கண் அறச் சொல்லினும் - ஒருவனெதிரே நின்று கண்ணோட்டமில்லாமல் கடுஞ்சொற்களைச் சொன்னாலும், முன் இன்று பின் நோக்காச் சொல் சொல்லற்க - ஒருவனைக் காணாதவிடத்து பின்பு அவனைப் பார்க்க முடியாத பழிச்சொற்களைச் சொல்லற்க.

கண்ணோட்டம் - இரக்கம். பின் நோக்காச் சொல் - புறங்கூறியபின் வருந் தீங்கினை எண்ணிப்பாராத சொல் என்றுமாம். நேரில் திட்டினாலும் குற்றமில்லை, புறங்கூறல் கூடாது. (௪)

185 அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை - ஒருவன் அறத்தை நினைக்கின்ற மனத்தையுடையவன் அல்லாமை, புறஞ்சொல்லும் புன்மையால் காணப்படும் - அவன் புறங்கூறும் புல்லிய குணத்தினால் அறியப்படும்.

சொல்லும் - சொல்ல நினைக்கின்ற. புறங்கூறுதலிலிருந்து அறவோன் அல்லன் என்பதை அறியலாம். (௫)

186 பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

பிறன் பழி கூறுவான் தன் பழி உள்ளும் - பிற னுடைய பழிகளை அவனைக் காணாதவிடத்துக் கூறுபவ னுடைய பல பழிகளுள்ளும், திறன் தெரிந்து கூறப்படும்- அவன் வருந்துதற்குரிய கொடும்பழிகளை அராய்ந்தறிந்து அப்பிறனால் கூறப்படும்.

திறன் - வகை. சுமாரான பழி, கொடும்பழி என்னும் வகை. பிறர்மீது ஒருபழி சொன்னால், அவர் நம் மீது பல பெரும்பழிகளைச் சொல்வர். (சு)

187 பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.

நகச்சொல்லி நட்பு ஆடல் தேற்றாதவர் - கூடிமகிழு மாறு இன்சொல் சொல்லி அயலாரோடும் நட்புச் செய்தலை நன்மை என்று அறியாதவர், பகச்சொல்லி கேளிர் பிரிப்பர் - தம்மைவிட்டு நீங்கும்படி புறங்கூறி உறவினரையும் பிரிப்பர்.

பக - பிரிய. கேளிர் - நட்பும், சுற்றமும். உறவின் பயன் அறியாரே புறங்கூறுவர். (எ)

188 துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார் - உறவினர் குற்றத்தையும் காணாதவிடத்துத் தூற்றும் இயல்பினர், ஏதிலார் மாட்டு என்னை கொல் - பகைவரிடத்துச் செய்வது யாதோ ?

துன்னுதல் - செறிதல், நெருங்குதல். தூற்றுதல் - பலரறியச் சொல்லுதல். புறங்கூறுவானுக்கு இன்னாரென்றில்லை. (அ)

189 அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

புறன் நோக்கி புன்சொல் உரைப்பான் பொறை - பிறர் இல்லாதவிடம் பார்த்துப் புறங்கூறுவான் உடற்

சுமையை, வையம் அறன் நோக்கி ஆற்றுங்கொல் - இவ்வுலகம் 'இக் கொடுமையைச் சுமத்தலே எனக்கு அறம்' என்று நினைத்துச் சுமக்கிறதுபோலும்! புறங்கூறுவான் நிலத்துக்குச் சுமையாவான். (சு)

190 ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு.

ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின் - அயலாரது குற்றத்தைப் போலத் தம் குற்றத்தையும் காண வல்லராயின், மன்னும் உயிர்க்கு தீது உண்டோ - நிலை பெற்ற உயிர்க்குத் தீமை உண்டோ? இல்லை.

காண்கிற்பின் - காண்பின். கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. மன் - நிலைபெறு, நிலையான. மன்னும் உயிர் - மக்கள். பிறர் குற்றத்தைப்போல் தங்குற்றத்தையும் எண்ணிப்பார்த்தலே புறங்கூறு திருத்தற்கு ஏதுவாகும். (ய)

## 20 பயனில சொல்லாமை

தமக்கும் பிறர்க்கும் யாதொரு பயனும் பயவாத சொற்களைச் சொல்லாமை.

191 பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும்.

பல்லார் முனியப் பயன்இல சொல்லுவான் - பலர் வெறுக்கும்படி பயனில்லாதவற்றைச் சொல்லுபவன், எல்லாரும் எள்ளப்படும் - எல்லோராலும் இகழப்படுவான்.

பயன் இலசொல் - பேசுவோர்க்கும், கேட்போர்க்கும் யாதொரு பயனுமில்லாத வீண்பேச்சு. பயன் - அறம் பொருளின்பம். எல்லோரும் 'ஆல்' உருபு தொக்கது. பயனில சொல்வோன் பழிக்கப்படுவான். (க)

192 பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

பயன்இல பல்லார்முன் சொல்லல் - பயனில்லாதவற்றைப் பலர்முன்பு கூறுதல், நயன் இல நட்டார்கண் செய்தலின் தீது - விருப்பமில்லாதவற்றைத் தன் நண்பரிடத்துச் செய்தலினும் தீதாகும்.

விருப்பமில - வெறுப்பன. நண்பருக்கு வெறுக்கத் தக்கன செய்பவன் இகழப்படுதல்போல் பலர்முன் பயனில சொல்வோனும் இகழப்படுவான். (உ)

193 நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

பயன் இல பாரித்து உரைக்கும் உரை - பயன் இல்லாதவற்றை விரித்துப் பேசும் பேச்சே, நயன் இலன் என்பது சொல்லும் - இவன் நன்மை இல்லாதவன் என்பதை அறிவித்துவிடும்.

நன்மை இல்லாதவன் - சாரமற்றவன். பயனற்றவன் என்பதை அவன் பேசும் பேச்சாலே அறியலாம். (ந)

194 நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

பல்லார் அகத்து பயன் சாராப் பண்புஇல் சொல் - பலர்கூடிய கூட்டத்துள் கூறும் பயனுடன் கூடாத பண்பற்ற சொற்கள், நயன்சாரா நன்மையின் நீக்கும் - அறத்தோடு பொருந்தாதவையாகி அவனை நன்மையினின்று நீக்கும்.

பயன் சாரா - பொருளில்லாத. பண்பு இனிமை, உண்மை முதலிய சொல்லின் குணங்கள். அறத்தொடு பொருந்தாதவையாதல் - நல்லதல்ல வாதல். பயனற்ற, பண்பற்ற, நலமற்ற சொல்லைச் சொல்லக் கூடாது. (ச)

195 சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

பயனில நீர்மை உடையார் சொலின் - பயனற்ற சொற்களைப் பெருந்தன்மை யுடையார் சொன்னால், சீர்மை சிறப்பொடு நீங்கும் - சீர்மையும் சிறப்பும் நீங்கி விடும்.

சீர்மை - பெருமை. சிறப்பு - மதிப்பு. சீர்மை சிறப்பொடு - சீர்மையும் சிறப்பும். பெருந் தன்மையுடையார் பயனில சொல் சொன்னால் அவர் பெருந்தன்மை நீங்கும். (ரு)

196 பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

பயன்இல் சொல் பாராட்டுவானை - பயனற்ற சொற்களை மேன்மேலும் பேசுபவனை, மகன் எனல் - மகன் என்று சொல்லற்க; மக்கள் பதடி எனல் - மக்களில் பதர் என்று சொல்லுக.

முதல் எனல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. இரண்டாவது எனல் - உடன்பட்டு விளங்கோள் வினைமுற்று. நெல் முதலியவற்றின் பதரை நீக்கிவிடுதல்போல, பயனில்சொல் பாராட்டுவானும் மக்கட் கூட்டத்திலிருந்து நீக்கப்படுவான். எவரும் மதியார் என்பதாம். (சு)

197 நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

சான்றோர் நயன்இல சொல்லினும் சொல்லுக - சான்றோர் அறமல்லாதவற்றைச் சொல்லினும் சொல்லக்கடவர்; பயன்இல சொல்லாமை நன்று - பயனற்ற சொற்களைச் சொல்லாமலிருத்தல் நல்லது.

சான்றோர் - அறிவு நிறைந்தோர். கெட்டதைச் சொன்னாலும் பயனற்ற சொல்லைச் சொல்லக்கூடாது. (எ)

198 அரும்பய னாயும் அறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

*அரும்பயன் ஆயும் அறிவினார் - அரிய பயனை ஆராயும் அறிவினை யுடையார், பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார் - மிகுந்த பயனளிக்காத சொற்களைச் சொல்லார். அரும்பயன் - உண்மையும் நன்மையும்.* (அ)

199 பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

*மருள்தீர்ந்த மாசறு காட்சியவர் - மயக்கந் தீர்ந்த குற்றமற்ற அறிவினையுடையோர், பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் - பயனற்ற சொற்களை மறந்தும் சொல்லார்.*

*பொச்சாத்தல் - மறத்தல். மயக்கம் - ஒன்றுந் தோன்றாநிலை. அறிவாளிகள் மறந்தும் பயனற்ற சொல் சொல்லார்.* (கூ)

200 சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

*சொல்லில் பயனுடைய சொல்லுக - சொற்களில் பயனுடையவற்றைச் சொல்லுக; சொல்லில் பயன் இலாச் சொல் சொல்லற்க - சொற்களில் பயனில்லாத சொற்களைச் சொல்லாதொழிக*

*சொல் என்னும் சொல் பன்முறை வந்தது - சொற்பொருட் பின்வருநிலையணி.* (ய)

## 21 தீவினையச்சம்

தீச்செயல் புரிய அஞ்சுதல். தீவினை - தீயசெயல் தீமை. பிறர்க்குத் தீமைசெய்வதால்வரும் குற்றத்திற்கு அஞ்சி அது செய்யாமல் இருத்தல். நாணுடைமை (101) என்பது - இழிந்த செயல் செய்ய நாணுதல்.

201 தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

தீவினை என்னும் செருக்கு - தீச்செயல் என்னும் களிப்பை, தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர் - தீச்செயலுடையார் அஞ்சார், சீரியர் அஞ்சுவர்.

களிப்பு - தீச்செயல் புரிந்ததால் ஏற்படும் மிகு மகிழ்ச்சி. தீவினை - கெட்டகாரியம். தீவினையார் - தீச் செயல் புரிந்து பழகினவர். (க)

202 தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்

தீயவை தீய பயத்தலால் - தீச்செயல்கள் தீமை தருவதனால், தீயவை தீயினும் அஞ்சப்படும் - அத்தீச் செயல்களைத் தீயைவிட மிகுதியாக அஞ்சவேண்டும்.

தீச்செயல்கள் தீயினும் கொடியவை. சொற்பொருட் பின்வருநிலையணி. (உ)

203 அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

செறுவார்க்கும் தீய செய்யாவிடல் - தம்மை வருத்துவோர்க்கும் தீயவை செய்யாமல் விடுவதை, அறிவினுள் எல்லாம் தலை என்ப - தமக்கு நன்மையை நாடும் அறிவுகள் யாவற்றினும் முதன்மையான அறிவு என்று சொல்வர் பெரியோர்.

தமக்குத் துன்பஞ் செய்வார்க்கும் துன்பஞ் செய்யாமையே சிறந்த அறிவுடைமையாகும். (ங)

204 மறந்தும் பிறன்கேடு சூழற்க ; சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

மறந்தும் பிறன்கேடு சூழற்க - மறந்தும் பிறனுக்குத் தீமை செய்ய எண்ணுதிருக்கக்கடவன் ; சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் - எண்ணினால், அவ்வாறு எண்ணினவனுக்குத் தீமைசெய்ய அறம் எண்ணும்.

அறம் - ஒழுக்கச்சட்டம். தீமைசெய்ய எண்ணுபவன் தீமை எய்துவான். (ச)

205 இலனென்று தீயவை செய்யற்க ; செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.

இலன் என்று தீயவை செய்யற்க - ஒருவன் யான், 'எளியவன்' என்று எண்ணி அவ்வெளிமை தீர்தற் பொருட்டுப் பிறனுக்குத் தீமையைச் செய்யாதிருக்கக் கடவன் ; செய்யின் மற்றும் பெயர்த்து இலன் ஆகும் - செய்தால் மீட்டும் எளியவனாவான்.

மீட்டும் எளியவனாதல் - பொருளாலன்றி, நற்குண நற்செய்கைகளாலும் எளியவனாதல். எளிமை - வறுமை. வறுமையைப் போக்கிக்கொள்ளவும் பிறனுக்குத் தீமை செய்யக்கூடாது. (ரு)

206 தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

நோய்ப்பால தன்னை அடல் வேண்டாதான் - துன்பங்கள் தன்னை வருத்துதலை விரும்பாதவன், தான் பிறர்கண் தீப்பால செய்யற்க - தான் பிறருக்குத் தீமை செய்யாதிருக்கக் கடவன்.

நோய்ப்பால - துன்பத்தின் வகைகள் ; பலதுன்பங்கள். தீப்பால - தீமையின் வகைகள். துன்பத்தை விரும்பாதவன் பிறர்க்குத் தீங்கு செய்யக்கூடாது. (சு)

207 எனைப்பகை உற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சேன் றடும்.

எனைப்பகை உற்றாரும் உய்வர் - எவ்வளவு பெரிய பகை உற்றாரும் தப்புவர்; வினைப்பகை வீயாது பின் சென்று அடும் - ஆனால், தீவினையாகிய பகை நீங்காது பின்தொடர்ந்து கெடுக்கும். தீச்செயல் செய்தோர் தப்பாது கெடுவர். (எ)

208 தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

தீயவை செய்தார் கெடுதல் - பிறர்க்குத் தீயவை செய்தவர் கெடுதல், நிழல் தன்னை வீயாது அடி உறைந் தற்று - ஒருவனது நிழல் அவன் எவ்வளவு தொலைவு செல்லினும் விடாது வந்து அவன் அடியின்கீழ்த் தங்கிய தன்மையது.

நிழல் தன் அடியின் கீழே தங்கினாற்போல, அவன் கேடும் அத்தீயவைக்கண்ணே உளது என்பதாம். தீச் செயலாளர் தப்பாது கெடுவர். (அ)

209 தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

தன்னைத்தான் காதலன் ஆயின் - ஒருவன் தன்னைத் தான் விரும்புவானாயின், எனைத்தொன்றும் தீவினைப் பால் துன்னற்க - எத்தகைய சிறிய தொன்றாயினும் தீச் செயல்களைப் பிறர்க்குச் செய்யாதிருக்கக் கடவன்.

தன்னைத்தான் காதலித்தல் - தனக்கு அழிவு வாராதபடி காக்க விரும்புதல். அழிவு வேண்டாதவன் தீச் செயல் புரியாதிருக்கவேண்டும். (கூ)

210 அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

மருங்கு ஓடி தீவினை செய்யான் எனின் - ஒருவனிடம் சென்று அவனுக்குத் தீச்செயல்களைச் செய்யா

திருப்பானுல், அருங்கேடன் என்பது அறிக - அவன் கேடில்லாதவன் என்பதை அறியக்கடவன்.

மருங்கு - பக்கம். அருங்கேடன் - கேடரியன் - கேடில்லாதவன். பிறர்க்குத் தீங்கு செய்யாதவன் கெடான். (ய)

## 22 ஒப்புரவறிதல்

ஒப்புரவு - உலகநடை. ஒப்புரவு அறிதல் - உலகம் ஒழுங்காக நடைபெறும் வழியை அறிதல். உலகம் ஒழுங்காக நடைபெறல் - உலக மக்கள் எல்லோரும் உண்டுடுத்து ஒழுங்காக வாழ்தல். அவ்வாறு வாழும் படி செய்தலே ஒப்புரவு செய்தல் ஆகும். அதாவது உலக வாழ்வைச் சமன் செய்தல். ஒப்புரவு - சமன். ஒப்புரவு செய்தல் - சமன் செய்தல். விதைத்த நிலத்தில் பாத்தி கட்டுவோர், தண்ணீர் சமனுகப் பாயும்பொருட்டு மேட்டை வெட்டிப் பள்ளத்தில் போட்டுச் சமன் செய்வது - ஒப்புரவு செய்தல் எனப்படும். அவ்வாறே, உள்ளவர் இல்லார்க்கு உதவி உலக வாழ்வைச் சமன் செய்வது ஒப்புரவு செய்தலாகும். அவ்வாறு உலக நடையைச் சமன் செய்வது - ஒப்புரவு செய்தல் உடையோர் கடன் என்பதை அறிதல் - ஒப்புரவறிதல் ஆகும். இல்லார்க்குக் கொடுத்தல் உள்ளார் கடன் என்பதை உணர்ந்து கொடுத்தல். ஈகை (23) என்பது - தம்மிடம் வந்து இரப்போர்க்குக் கொடுத்தல்.

211 கைம்மாறு வேண்டா கடப்பாடு ; மாரிமாட்
டென்ஞற்றுங் கொல்லோ வுலகு.

மாரிமாட்டு உலகு என் ஆற்றும் - மழைக்கு உலகம் என்ன கைம்மாறு செய்கின்றது? ஒன்றும் இல்லை ; கடப்பாடு கைம்மாறு வேண்டா - அதுபோல, உதவிசெய்யும் போது எதிருதவிகளை எண்ணவேண்டாம்.

உலகம் - மக்களை உணர்த்திற்று. கடப்பாடு - ஒப்புரவு. எதிருதவியை நாடாமல் உதவுவதே மக்கள் கடமை. (க)

212 தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் - ஒருவன் முயன்று ஈட்டிய பொருளெல்லாம், தக்கார்க்கு வேளாண்மை செய்தல் பொருட்டு - தகுதியுடையார்க்கு உதவுவதற்காகவே.

தாள் - முயற்சி. தாள் ஆற்றி - முயன்று. தக்காராவார் - ஓயாது உழைத்தும் உண்ண உணவும், உடுக்க உடையும், உறையக் குடிசையும் இல்லாத ஏழைப் பாட்டாளி மக்கள். உலகவாழ்க்கையின் அச்சாணிபோன்ற ஏழைப் பாட்டாளிகளே ஏற்கத்தக்கவராவர். அன்னாரின் ஓயா உழைப்பால் வந்ததே செல்வரின் செல்வமாதலால் அப்பாட்டாளி மக்களுக்குக் கொடுத்தலே செல்வர் கடமையாகும். வேளாண்மை - உதவி. (உ)

213 புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற.

ஒப்புரவின் நல்ல பிற-ஒப்புரவைக்காட்டிலும் நல்ல வேறு செயல்களை, புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிது-வானுலகத்தும் மண்ணுலகத்தும் பெற முடியாது.

புத்தேள் உலகத்தை முகவுரையில் காண்க. எதிர் நாடா உதவியைவிட நல்லதொன்று எங்கும் இல்லை. (ங)

214 ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் - ஒப்புரவை அறிந்து செய்பவனே உயிருடன் கூடி வாழ்பவனாவான்; மற்றையான் செத்தாருள் வைக்கப்படும் - ஒப்புரவு செய்

யாதவன் உயிருடன் இருப்பினும் இறந்தவருள் ஒருவனாகவே கருதப்படுவான்.

ஒத்தது - ஒப்புரவு. உயிரின் அறிவும் செயலும் இன்மையின் 'செத்தாருள் வைக்கப்படும்' என்றார். கடமையைச் செய்யான் மதிக்கப்படான். (சு)

215 ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் றிரு.

உலகு அவாம் பேரறிவாளன் திரு - ஒப்புரவு செய்தலை விரும்பும் பெரிய அறிவாளனது செல்லம், ஊருணி நீர் நிறைந்தற்று - ஊரார் குடிக்கின்ற கிணறு நீர் நிறைந்தாற்போலும்.

உலகு - ஒப்புரவு. அவாவுதல் - விரும்புதல். ஊருணி - ஊர்க்கிணறு. பேரறிவாளன் செல்வம் பலருக்கும் பயன்படும். வேண்டியவர்கள் உரிமையுடன் பெற்றுக்கொள்ளலாமென்பதாம். (ரு)

216 பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

செல்வம் நயன் உடையான்கண் படின் - செல்வம் ஒப்புரவு செய்பவனிடத்து உண்டாகுமாயின், பயன் மரம் ஊர் உள் பழுத்தற்று - அது யாவர்க்கும் பயன்படும் ஓர் மரம் ஊர் நடுவே பழுத்தாற்போலும்.

நயன் - ஒப்புரவு. உள் ஊர் - ஊர் உள். ஊர் நடுவே பழுத்தமரம் எல்லார்க்கும் பயன்படுதல்போல ஒப்புரவறிவான் செல்வமும் எல்லார்க்கும் பயன்படும். (சா)

217 மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

செல்வம் பெருந்தகையான்கண் படின் - செல்வம் பெருங்குணம் உடையோனிடம் சேருமாயின், மருந்தா

கித் தப்பா மரத்தற்று - அது, பிணிக்கு மருந்தாகித் தப்பாத மரத்தை ஒக்கும்.

தப்புதல் - கொள்ளுதற்கரிய இடத்தில் இருத்தல், மறைவில் இருத்தல், பூ வேண்டும்போது பூக்காமை முதலியன. மருந்துமரம் - இலை, பூ, காய், பட்டை, வேர் முதலிய பறிக்கப்பட்டுப் பயன்பட நிற்பதுபோலப் பெரியோர் செல்வமும் பயன்பட்டு நிற்கும். (எ)

218 இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

கடன் அறி காட்சியவர் - செய்யத்தக்கவற்றை அறிந்த அறிவினர், இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் - செல்வம் சுருங்கியகாலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தயங்கார்.

கடன் - ஒப்பரவு. இடன் - செல்வம். இடன் இல் பருவம் - தம் வாழ்க்கைக்கு வேண்டிய அளவு செல்வம் இல்லாத வறுமைக்காலம். கடனறி காட்சியார் வறுமையுற்ற காலத்தும் ஒப்புரவு செய்யத்தவறார். (அ)

219 நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் - ஒப்புரவு செய்பவன் வறியவனாவது, செயும்நீர செய்யாது அமைகலா ஆறு - செய்யத்தக்கவற்றைச் செய்யாது முடியாத வழியாம்.

நயன் - ஒப்புரவு. நல்கூர்தல் - வறுமையுறுதல். செயும் நீர - செய்யுந்தன்மைய - ஒப்புரவு. செய்யாது முடியாதவழி - செய்தே தீரவேண்டியவழி. செய்யாது - எதிர்மறை வினையெச்சம். அமைகலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஒப்புரவு செய்பவன் வறியவனாவது - செய்யவேண்டியவற்றைச் செய்தே தீரவேண்டிய வழியேயாகும். ஒப்புரவு செய்யமுடியாத நிலையே வறுமை

யன்றி, வாழ்க்கைக்கு வேண்டுவன இல்லாமையல்ல என்பதாம். நயனுடையான் வறுமையினும் ஒப்புரவு செய்வான். (கூ)

220 ஒப்புரவி னல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

ஒப்புரவினால் கேடுவரும் எனின் - ஒப்புரவு செய்தலினால் பொருட்கேடுவரும் என்றால், அஃது ஒருவன் விற்றுக்கோள் தக்கது உடைத்து - அக்கேடு, ஒருவன் ஒன்றைவிற்று மற்றொன்றைக் கொள்ளுந் தகுதியையுடையது.

ஒன்றைவிற்று ஒன்றைக் கொள்ளுதல் - வாணிகம். வாணிகத்தில் ஒன்றைவிற்று மற்றொன்றைக் கொள்வது போல், ஒப்புரவைச்செய்து உயர்வை அடைகிறார்கள். ஆகவே, அக்கேட்டைக் கேடாகக்கொள்ளல் கூடாது. ஒப்புரவு செய்வோர் பொருளைக் கொடுத்து நன்மையை அடைகின்றனர். இவ்வதிகாரத்திற் கிலக்காக இக்காலச் செல்வர்கள் நடந்துகொள்ளப் பழகிக்கொண்டால், பணக்காரர், முதலாளி என்னும் சொற்கள் மக்கள் வாயிடத்தைப் பெறா. (ய)

## 23 ஈகை

இல்லையென்று இரப்போர் யாவர்க்கும் இல்லை என்னாது கொடுத்தல்.

221 வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை - இல்லாதவர்க்கு ஒன்றைக்கொடுப்பதே கொடை; மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து - மற்றவர்க்குக் கொடுப்பனவெல்லாம் குறியெதிர்ப்புத் தன்மையை யுடையது.

குறியெதிர்ப்பு - அளந்துவாங்கி அள்வளவே கொடுப்பது. இன்றும் அரிசி, பருப்பு, உப்பு, புளி, எண்ணெய் முதலிய உணவுப் பொருள்களைக் குறியெதிர்ப்புக் கொடுத்து வாங்கி வருகிறார்கள். இது உலக வழக்கில் 'குறியாப்பு' என மருவி வழங்குகிறது. மற்றவர்க்குக் கொடுப்பன - வறியரல்லாதார்க்கு ஒரு பயனைநோக்கிக் கொடுப்பன. (க)

222 நல்லா றெனினுங் கொளறீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

கொளல் நல் ஆறு எனினும் தீது - ஒருவனிடமிருந்து ஒரு பொருளைக் கொள்ளுதல் நல்லவழி என்றாலும் அது தீதாகும்; மேலுலகம் இல்லெனினும் ஈதல் நன்று - கொடுத்தால் மேலுலகில் மதிப்பு இல்லை என்றாலும் கொடுத்தல் நல்லது.

கொடுத்தாரை அயல்நாடர் மதியார் எனினும் கொடுத்தல் நல்லது, என ஈகையின் சிறப்புக்கூறியது. மேலுலகை முகவுரையில் காண்க. கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்று. (உ)

223 இலனென்னு மெவ்வ முரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள.

இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல் - இரப்பவரிடம் 'நான் இலன்' என்னும் துன்ப மொழியைக் கூறாது கொடுத்தல், குலன் உடையான் கண்ணே உள - குடிப்பிறந்தானிடமே உள்ளது.

இலன் - வறியன். எவ்வம் - துன்பம். குடிப்பிறத்தல் - வழிவழியாக வந்த நல்லொழுக்க முடைய குடியில் பிறத்தல். வழிவழி - பரம்பரை. நன்மக்கள் இரப்போர்க்கு இலன் என்று கூறார். (ங)

224 இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணு மளவு.

இரந்தவர் இன்முகம் காணும் அளவு - ஒருபொருளை இரந்தவர் அது பெற்றதனால் அவர்க்குண்டாகிய இனிய முகத்தைக் காணும் வரையில், இரக்கப்படுதல் இன்னாது - இரத்தலேயன்றி, இரக்கப்படுதலும் இனிதன்று.

இரக்கப்படுதல் - இரப்போர் நிலைகண்டு மனம் இரங்குதல். இரந்தவர் வேண்டுவனவற்றையெல்லாம் கொடுக்க எவராலும் முடியாது. எனவே, தம்மிடம் வந்து இரந்தவருடைய இனிய முகத்தைக் காணும் வரையில் கொடுப்போர் மனம் அமைதி பெறாதாகையால் 'இரக்கப்படுதலும் இன்னாது' என்றார். இரப்போர் விரும்பிய பொருளையெல்லாம் ஈயவேண்டும். (௪)

225 ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் - நோன்பு நோற்பார்க்கு வலியாவது பசியைப் பொறுத்தல்; அப்பசியை மாற்றுவார் ஆற்றலின்பின் - அவ்வலிதான், பொறுத்தற்கரிய பசியை ஈகையால் நீக்குவாரது வலிக்கு பின்பு.

தாமும் பசித்துப் பிறர் பசியையும் தீர்க்கமாட்டாரது ஆற்றலைவிட, தாமும் பசியாது பிறர் பசியையும் தீர்ப்பாரது ஆற்றல் சிறந்தது என்பதாம். பசியைப் பொறுப்பவரைவிடப் போக்குபவரே சிறந்தவராவர். (௫)

226 அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

அற்றார் அழிபசி தீர்த்தல் - பொருள் அற்றவரது மிக்க பசியைத் தீர்க்கக்கடவன்; அஃது பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி - அது பொருள் பெற்றவன் ஒருவன் அப்பொருளை வைக்கும் இடமாகும்.

தீர்த்தல் - வியங்கோள் வினைமுற்று. பிறர் பசி தீர்த்தல் ஒருவனுக்கு எய்ப்பினில் வைப்பாகும். எய்ப்பினில் வைப்பு - சேமநிதி. (சு)

227 பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

பாத்து ஊண் மரீஇயவனை - பங்கிட்டு உண்ணுதலைப் பழகியவனை, பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது - பசி என்னும் தீயநோய் தீண்டுதல் இல்லை.

பாத்தல் - பகுத்தல். தீண்டுதல் - பற்றுதல். பகுத்துண்பவனுக்குப் பலரும் உதவுவ ராகையால் பசிநோய் வருத்துதல் இல்லை. (எ)

228 ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர் - தமது பொருளைக் கொடாதுவைத்துப் பின் இழக்கின்ற அருளிலாதார் - ஈத்து உவக்கும் இன்பம் அறியார் கொல் - பிறர்க்குக் கொடுத்து அதனால் அவர்க்குண்டாகும் முகமலர்ச்சியினால் தாம் அடையும் இன்பத்தைக் கண்டறியாரோ?

வன்கண் - அருளின்மை. ஈத்துவக்கும் இன்பத்தை அறிந்தால் ஈவர் என்பதாம். (அ)

229 இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

நிரப்பிய தாமே தமியர் உணல் - தேடிய பொருளைத் தாமே தமியராக உண்ணல், மன்ற இரத்தலின் இன்னாது - உறுதியாக இரத்தலைக் காட்டிலும் கொடியது.

நிரப்பிய - தேடிக் குவித்த. தாமே உண்ணல் இரத்தலைவிடக் கொடியது. (கூ)

230 சாதலி னின்னாத தில்லை; இனிததூஉம்
ஈத லியையாக் கடை.

சாதலின் இன்னாதது இல்லை - இரப்பதைக் காட்டிலும் துன்பந் தருவதொன்றில்லை; ஈதல் இயையாக் கடை அதும் இனிது - பிறர்க்குக் கொடுக்க முடியாதவிடத்து அச்சாதலும் இன்பந்தருவதாகும்.

ஈயாமையினும் இழிந்தது வேறொன்றுமில்லை. (௰)

## 24 புகழ்

புகழ்பட வாழ்தல்.

231 ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

இசைபட வாழ்தல் ஈதல் - புகழுண்டாக வாழ்தலாவது கொடுத்தல், உயிர்க்கு ஊதியம் அதுவல்லது இல்லை - உயிர்கட்கு ஊதியம் அப்புகழல்லது இல்லை.

இசை - புகழ். ஈதல் - வறியார்க்கு ஈதல். ஊதியம் - இலாபம். இசைபட வாழக் கல்வி, ஆண்மை முதலிய பிற காரணங்கள் உண்டெனினும், இவ்வுடல் உணவை முதலாக உடையதால் கொடையே புகழுக்குச் சிறந்த காரணமாயிற்று. புகழ்படவாழ். (க)

232 உரைப்பா ருரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

உரைப்பார் உரைப்பவை எல்லாம் - சொல்லுவார் சிறப்பித்துச் சொல்லுவனவெல்லாம், இரப்பார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழ் - இரப்பார்க்கு ஒரு பொருளைக் கொடுப்பவர்மீது நிற்கும் புகழாம்.

கொடையாளர் புகழே யாவராலும் சிறப்பித்துப் பேசப்படும். (உ)

233 ஒன்ரு வுலகத் துயர்ந்த புகழல்லாற்
　　பொன்ருது நிற்பதொன் றில்.

உயர்ந்த புகழ் அல்லால் - பெரும்புகழ் அல்லாது, உலகத்து ஒன்ரு பொன்ருது நிற்பது ஒன்று இல்லை - உலகத்தில் இணையின்றி அழியாது நிலைத்து நிற்பது வேறொன்றில்லை.

ஒன்றுதல் - ஒத்தல். உலகில் பெறுதற்கரிய பெரும் பொருள் புகழேயாகும். (௩)

234 நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
　　போற்ருது புத்தே ளுலகு.

நிலவரை நீள்புகழ் ஆற்றின் - நிலமுழுவதும் ஒருவன் நெடிய புகழைச் செய்வானுயின், புத்தேள் உலகு புலவரைப் போற்ருது - வானுலகம் தேவர்களைப் போற்ருது.

வரை - எல்லை. நிலவரை - நிலத்தின் எல்லையளவும் - நிலமுழுவதும். தேவருலகம் அங்கு வாழும் தேவர்களைப் போற்ருது மிகுபுகழுடைய இவனையே போற்றும் என்பதாம். புலவர் - தேவர். முகவுரை பார்க்க. புகழுண்டயோரை வெளியுலகம் புகழும். 25 உரை பார்க்க. மாவலியின் புகழை வானவர் போற்றியதால் இந்திரன் பொருமை கொண்டானென்னும் கதையை நினைவுகூர்க. (௪)

235 நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
　　வித்தகர்க் கல்லா லரிது.

நத்தம் ஆகும் கேடும் - புகழுடம்பிற்கு ஆக்கம் ஆகும் கேடும், உளது ஆகும் சாக்காடும் - புகழுடம்பு உளது ஆகும் சாவும், வித்தகர்க்கு அல்லால் அரிது - அறிவாளிகட் கல்லது பிறர்க்கு இல்லை.

போல் - அசை. 'உளதாகும்' - என்பதில் உள்ள 'ஆகும்' என்பது முன்னுங் கூட்டப்பட்டது. வருந்து அம் - வருத்தம், பொருந்து அம் - பொருத்தம் என்றாயி னற்போல, நந்து அம் - நத்தம் என்றாயது. நத்தம் - தொழிற்பெயர். நத்தம் - நந்துதல், உண்டாதல். ஆக்கம் ஆகும் கேடு - புகழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு வறுமை எய்துதல். உளதாகும் சாவு - புகழுடம்பு நிற் கப் பூதவுடம்பு அழிதல். அதாவது புகழ்வளர வறுமை யுறுதலும், புகழை நிலைநிறுத்தி இறத்தலும் அறிவாளி கட்கே முடியும். கொடுத்து வறுமையுற்றோர் பொருளிழந் தாராயினும் புகழ்வளரப் பெறுவர்; புகழுடையார் இறந் தாலும் புகழ் இறவாது நிற்கும். புகழுடம்பு - புகழ். பூத வுடம்பு - நிலம் நீர் தீ காற்று வெளி என்னும் ஐம்பெரும் பூதத்தால் ஆகிய மக்கள் உடம்பு. புகழை - புகழுடம் பென்பது நூன் மரபு. வறுமையுறினும் கொடுத்துப் புகழை வளர்த்தலும், உலகில் புகழை நிலைநாட்டி இறத்த லும் அறிஞர் கடமை. (ரு)

236 தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

தோன்றின் புகழொடு தோன்றுக - மக்களாய்ப் பிறந்தால் புகழத்தக்க குணத்தோடு பிறக்கவேண்டும்; அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று-அக்குணம் இல்லாதவர் பிறத்தலினும் பிறவாமை நல்லது.

புகழ் - புகழ் எய்துதற்குரிய குணம். புகழொடு தோன்றுதலும், புகழில்லார் தோன்றாமல் இருத்தலும் முடியக்கூடியனவோ? இல்லை. மக்களாய்ப் பிறந்தார் புக ழொடு வாழவேண்டும். புகழொடு வாழாதார் பிறந்தும் பிறவாதவரே. அதாவது மக்கட் பிறப்பின் பெரும் பய னாகிய புகழ் தேடாதாரது பிறப்பினால் பயனில்லை என் பதை இவ்வாறு பிறப்பின்மேல் ஏற்றிக்கூறினார். புக ழொடு வாழ்வதே மக்கட்பிறப்பின் பயன். (சா)

237 புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்.

புகழ்பட வாழாதார் - தமக்குப் புகழுண்டாகும்படி வாழமாட்டாதார், தம் நோவார் - அதுபற்றிப் பிறர் இகழ்ந்தவிடத்து இவ்விகழ்ச்சி நம்மால் வந்ததென்று தம்மை நொந்து கொள்ளாமல், தம்மை இகழ்வாரை நோவது எவன் - தம்மை இகழ்வாரை நொந்துகொள்வது எதற்காக? புகழ்பட வாழாதார் பழிக்கப்படுவார். பிசினன் எனப் பிறர் பழியாமல் ஈந்து புகழுடன் வாழ வேண்டுமென்பதாம். (எ)

238 வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

இசையென்னும் எச்சம் பெறாவிடின் - புகழ் என்னும் எச்சத்தைப் பெறாவிட்டால், வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப - உலகத்தார்க்கெல்லாம் அதுவே பழிப்பாகும் என்பர் அறிவோர்.

வசை - பழிப்பு. எச்சம் - மிச்சம். நாம் இறக்கினும் நாம் தேடிய புகழ் அழியாது நிற்றலால் புகழை 'எச்சம்' என்றார். (அ)

239 வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

இசை இலா யாக்கை பொறுத்த நிலம் - புகழுடையாத உடம்பைச் சுமந்த நிலம், வசை இலா வண்பயன் குன்றும் - பழிப்பில்லாத வளப்பத்தையுடைய விளைவு குறையும்.

இசையிலா யாக்கை - புகழ்படவாழாதவன். புகழ்பட வாழ்தலாகிய உயிர்க்குணமின்மையால் 'யாக்கை' என்றார். வசை இலா வண்பயன் - பழுதில்லாத நல்ல விளைவு. புகழ்பட வாழாதவன் தன் கடமையைச் செய்

யாதவனுகையால், தன் நிலத்தையும் நன்கு பேணமாட்டான். அதனால், விளைவு குன்றும். உழுதொழிலுக்கு வேண்டிய பிறர் உதவி பெறுமையும் குறைவுக்குக் காரணமாகும். (கூ)

240 வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் - பழிப்பு நீங்க வாழ்பவரே உயிருடன் கூடி வாழ்பவர் ஆவர்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர் - புகழ் நீங்க வாழ்பவர் உயிருடன் இருப்பினும் வாழாதவராவர்.

வாழாதவர் - வாழ்வின் பயனடையாதவர். பழிப்பின்றிப் புகழுடன் வாழ்வதே வாழ்வாகும். (ய)

இல்லறவியல் முற்றிற்று

## 2 துறவறவியல் - (13)

இல்லறம் இனிது நடத்தி ஒழுக்கத்து நீத்தார் ஒழுகும் ஒழுக்கம். இல்லற இன்பத்தைத் துறந்து, தம் இல்லிருந்தே பொதுநலம் செய்வதும் துறவறமே யாகும்.

### 25 அருளுடைமை

உயிர்கள் மாட்டு அருளுடையராதல். அருள் - இரக்கம். அன்பு (8) தொடர்பு பற்றி நிகழ்வது. அருள் தொடர்பு பற்றுது நிகழ்வது. அன்பின் முதிர்ச்சியே அருள். 758ஆம் குறளுரை பார்க்க. இல்லறத்திற்கு அன்புடைமை போல, அருளுடைமை துறவறத்திற்குச் சிறந்தது.

241 அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்
பூரியார் கண்ணு முள. [வம்

*செல்வத்துள் செல்வம் அருள்செல்வம் - செல்வங்களுள் சிறந்த செல்வமாவது அருளாகிய செல்வம்; பொருள் செல்வம் பூரியார் கண்ணும் உள - பொருட் செல்வம் கீழோரிடத்தும் உள்ளது.*

*அருள் - இரக்கம், பிற உயிரின் துன்பங்கண்டு உள்ளம் உருகுதல். கீழோர் - நற்குணமும் நல்லொழுக்கமும் இல்லாதவர். அருளுடைமையே துறவிக்குச் சிறந்த செல்வம்.* (க)

242 நல்லாற்ரு ஞடி அருளாள்க ; பல்லாற்ருல்
தேரினு மஃதே துணே.

*நல் ஆற்ருன் நாடி அருள் ஆள்க - நல்ல வழிகளால் ஆராய்ந்து அருளைக் கைக்கொள்க; பல்லாற்ருல் தேரினும் அஃதே துணே - பலவழிகளால் ஆராயினும் அவ்வருளே துணையாகும்.*

*நல்லவழிகளால் ஆராய்தல் - எந்தெந்த வழியில் பிறவுயிர்க்கு நன்மை செய்யலாமென ஆராய்தல். அருளுடைமையே துறவறத்திற்குத் துணேயாகும்.* (உ)

243 அருள்சேர்ந்த நெஞ்சினர்க் கில்லே இருள்சேர்ந்த
இன்ஞ வுலகம் புகல்.

*இருள்சேர்ந்த இன்ஞ உலகம் புகல் - அறியாமை பொருந்திய துன்ப வுலகத்தில் புகுதல், அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கு இல்லே - அருள் பொருந்திய மனத்தை யுடையார்க்கு இல்லே.*

*துன்பவுலகத்தில் புகுதல் - துறவறத்திற்கு இன்றியமையாததான அருளின்மையால், துன்புறுவோர் கூட்டத்தில் சேர்தல். அதாவது மிக்க துன்புறுதல். அருளுடையாரைத் துன்பங்கள் அணுகா.* (ங)

244 மன்னுயி ரோம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு - பிற உயிர்களைக் காத்து அவற்றினிடம் அருள் கொள்வானுக்கு, தன் உயிர் அஞ்சும் வினை இல் என்ப - தனது உயிரைப் பற்றி அஞ்சும் தொழில் இல்லை என்பர் பெரியோர்.

அஞ்சும் தொழில் - அஞ்சவேண்டிய வேலை, அஞ்ச வேண்டியது. பிற உயிர்க்குத் தீமை செய்யாதவர்க்கு எவரும் தீமை செய்யாராகையால், அருளாளர் தம் உயிரைப்பற்றி அஞ்சவேண்டியதில்லை. அருளாளர்க்கு அச்சம் இல்லை. (௪)

245 அல்ல லருளாள்வார்க் கில்லை; வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி.

அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை - அருளுடையார்க்குத் துன்பம் இல்லை; வளிவழங்கும் மல்லல் மா ஞாலம் கரி - காற்று உலாவுகின்ற வளம்பொருந்திய பெரிய உலகத்தினர் இதற்குச் சான்று.

அருளுடையார் துன்புறுதலை எக்காலத்தும், எவ்விடத்தும் எவருங் கண்டறியாராதலின், இன்மை முகத்தான் 'உலகத்தார் சான்று' என்றார். அருளுடையார்க்குத் துன்பமில்லை. (௫)

246 பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்பர் அருணீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

அருள் நீங்கி அல்லவை செய்தொழுகுவார் - தம் மனத்திருந்த அருள் நீங்கி தகுதியல்லாதவற்றைச் செய்தொழுகுவாரை, பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் - அறத்தையும் இழந்து தம் கடமையையும் மறந்தவர் என்பர் உலகோர்.

'அல்லவை - கொடுமைகள். பொச்சாத்தல் - மறத்தல். அருளின்றிக் கொடுமை செய்வோர், துறவறத்தையும் கடமையையும் இழந்தவராவர். அருளுடையராய் உயிர்கட்கு நன்மை செய்வதே நீத்தார் கடமையாகும்.(சு)

247 அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு - பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலக இன்பம் இல்லையானாற்போல, அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை - உயிர்களிடத்தில் அருள் இல்லாதவர்க்கு மறுமையின்பம் இல்லை.

பொருள் - இடம் பொருள் ஏவல் முதலிய செல்வப் பொருள். 'இவ்வுலகம்' என்பது உயிர்வாழும் இன்றைய உலகத்தையும், 'அவ்வுலகம்' என்பது இறந்தபின்னுள்ள மறுமையான அன்றைய உலகத்தையும் குறிக்கும். மறுமை இன்னதென்பதை 98-ஆம் குறளுரையில் காண்க. அருளிலார்க்கு இறந்தபின் இவ்வுலகத்தே நிகழும் மறுமையின்பம் இல்லை. (எ)

248 பொருளற்றார் பூப்ப ரொருகால்; அருளற்றார்
அற்றார்மற் றாத லரிது.

பொருள் அற்றார் ஒருகால் பூப்பர் - பொருளை இழந்தவர் எப்போதேனும் பொருளுண்டாகப் பெறுவர்; அருள் அற்றார் மற்று ஆதல் அரிது - அருளை இழந்தவர் இழந்தவரே; ஒருபோதும் அதனைப் பெறமுடியாது.

அருளையிழந்தவர் துறவறத்தையே இழந்தவராகையால் மறுபடிப் பெறமுடியாது என்றார். துறவறத்திற்கு அருளே அடிப்படை என்பதாம். (அ)

249 தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யு மறம்.

தேரின் - ஆராயுங்கால், அருளாதான் செய்யும் அறம் - உயிர்களிடத்து அருளில்லாதவன் செய்யும் துறவறமானது, தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்று - தெளிந்த அறிவில்லாதவன் உண்மைப் பொருளைக் கண்டதுபோலும்.

தெருளாதான் உண்மைப்பொருளைக் காண முடியாமைபோல, அருளில்லாதான் செய்யும் துறவறமும் உண்மையறமாகாது. (௯)

250 வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

தான் தன்னின் மெலியார்மேல் செல்லும் இடத்து - தான் தன்னிலும் வலியில்லார்மேல் வெகுண்டு செல்லும் பொழுது, வலியார் முன் தன்னை நினைக்க - தன்னிலும் வலியார் முன்பு தான் அஞ்சிநிற்கும் நிலையை எண்ணிப் பார்க்கக் கடவன்.

அருளின்றித் தன்னைவிட மெலியோரை வருத்தும் போது, தன்னை ஒரு வலியன் வருத்தினால் தனக்கு எப்படியிருக்குமோ அந்நிலையை எண்ணிப்பார்த்து அருளுடையனாக வேண்டும். 'தனக்குள்ளது பிறர்க்கும் உண்டு' என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். (ய)

## 26 புலால் மறுத்தல்

புலாலுண்ணல் கொலைக்குக் காரணமாகையால், அதை உண்ணாமையே அருளுடைமையாகும், எனத் துறவறத்தார்க்குப் புலாலுண்ணல் விலக்கப்பட்டது.

251 தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளு மருள்.

*தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்பான் - தனது உடம்பை வளர்த்தற்குத் தான் வேறோர் உயிரின் உடம்பை உண்பவன், அருள் எங்ஙனம் ஆளும் - அருளை எவ்வாறு ஆள்வான்?*

*அருளிலி என் இகழ்ந்தவாறு. தன் உடம்பை வளர்க்கப் பிறிதோருடம்பை யுண்பது அருளாகாது.* (க)

252 பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்றின் பவர்க்கு.

*பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை - பொருளை ஆளுதல் அதனைக் காவாதாருக்கு இல்லை; ஆங்கு ஊன் தின்பவர்க்கு அருள் ஆட்சி இல்லை - அவ்வாறே ஊன் தின்பவர்க்கு அருளை ஆளுதல் இல்லை.*

*ஆளுதல் - குறையாது வைத்திருத்தல். காவாரின் பொருள் குறைதல்போல, ஊன் தின்பாரின் அருள் குறையும்.* (உ)

253 படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

*படைகொண்டார் நெஞ்சம்போல் - கொலைக்கருவியைக் கையில் கொண்டவர் மனம் அதனால் செய்யுங் கொலையையே நோக்குவதல்லது, அருளை நோக்காதவாறுபோல, ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம் நன்று ஊக்காது - வேறோருயிரின் உடலைச் சுவைபட உண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவதல்லது அருளை நோக்காது.*

*நன்று - அருள். ஊக்குதல் - அருள்கொள்ள முயலுதல். ஊனுண்பார் அருளுடையாராதல் முடியாது.* (ங)

254 அருளல்ல தியாதெனிற் கோல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

அருள் யாதெனின் கொல்லாமை - அருள் யாதெனின் கொல்லாமை; அல்லது யாதெனின் கோறல் - அருள் அல்லது யாதெனின் கொல்லுதல்; அவ்வூன் தினல் பொருள் அல்லது - ஆதலால், கொல்லுதலால் வரும் அவ்வூனைத் தின்பது அறமன்று.

'யாதெனின்' என்பது அருளுடனும் கூட்டப்பட்டது. அருளல்லது - கொடுமை. கொல்லாமை அருள்; கொல்லுதல் கொடுமை; ஆதலால், ஊன் தின்னல் கெட்டது. தியாதெனின் - குற்றியலிகரம். (௪)

255 உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது - சில உயிர் இன்னும் உடம்பின்கண் நிலைபெற்றிருத்தல் ஊனுண்ணாமை என்னும் அறத்தினால் உள்ளது; ஊன் உண்ண அளறு அண்ணாத்தல் செய்யாது - அவ்வறத்தைக் கெடுத்து ஒருவன் ஊனுண்பானாயின் அவனை விழுங்கிய அளறு பின் உமிழ்தற்கு வாயைத் திறவாது.

நிலை - நிலைத்திருத்தல். உண்ணப்பட்ட உயிர் பலவாகலின் நிற்பன சிலவாயின. 'ஊனுண்ணாமை' என்னும் அறத்தினால் தான் அச்சில உயிரும் உடம்பில் நிலைத்திருக்கின்றன; அவ்வறமின்றேல் அச்சிலவும் இரா என ஊனுண்டலின் கொடுமை கூறினார். அண்ணாத்தல் - வாயைத் திறத்தல். அளறு - தீராற்ற முடைய குழைந்த சேறு. தீராத பெருந்துன்பத்தைச் சேற்றில் அழுந்துதல் என்னும் வழக்கை, இழிகாமத்தைக் 'காமச்சேறு' என்பதால் அறிக. தான் மேற்கொண்டுள்ள துறவறத்தையும், அவ்வறத்திற்குரிய அருளையும் எண்ணிப்பாராது ஒருவன் ஊனுண்பானாயின் அவன் மீளாத் துயரத்தில்

ஆழ்வான் என்பதாம். ஊன் என்பது முன்னுங் கூட்டப் பட்டது. (௫)

256 தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

தினற்பொருட்டு உலகு கொள்ளாது எனின் - தின்னுவதற்காக உலகத்தார் வாங்காராயின், விலைப்பொருட்டு ஊன் தருவார் யாரும் இல் - விலைக்காக ஊன் விற்பார் யாரும் இல்லை.

வாங்குவா ரில்லையேல் கொன்று விற்பாரும் இல்லை. ஆல் இரண்டும் அசை. 'யாம் கொல்லுவதில்லை; விலைக்கு வாங்கியுண்கிறோம்' என்றார்க்கு, 'நீங்கள் வாங்காவிட்டால் அவர் கொல்லமாட்டார். ஆகையால், கொலைக் குற்றம் புலாலுண்ணும் உங்களையே சாரும்' எனப் புலாலுண்பதன் குற்றங் கூறப்பட்டது. (௬)

257 உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

புலால் பிறிது ஒன்றன் புண் - ஊன் வேறோர் உடம்பின் புண்ணாகும்; அது உணர்வார் பெறின் உண்ணாமை வேண்டும் - இந்த உண்மையை உணர்வாராயின் அவ்வூனை உண்ணாதிருக்க வேண்டும்.

புலாலை, நம் உடலில் தோன்றிப் பெருத்துப் பழுத்துக் கிழித்துச் சீயொழுகிக் கொண்டிருக்கும் பெரிய புண் என உணர்வோர் உண்ணாமை வேண்டும். இது அருவருப்புத் தோன்றக் கூறி விலக்கப்பட்டது. (௭)

258 செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த வூன்.

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - குற்றத்தினின்று நீங்கிய அறிவினை யுடையார், உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார் - உயிரினின்று நீங்கிய உடம்பை உண்ணார்.

செயிர் - குற்றம். காட்சி - அறிவு. தலைப்பிரிதல் - ஒரு சொல். குற்றமற்ற அறிவினையுடையோர் உயிரை விட்டு நீங்கிய உடம்பை உண்ணார். (அ)

259 அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் - நெய் முதலான அவியைச் சொரிந்து ஆயிரம் வேள்வி செய்தலினும், ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று - ஒன்றன் உயிரைப் போக்கி அதன் ஊனை யுண்ணாமை நல்லது.

அவி - வேள்வித்தீயில் ஊற்றும் பொருள். சொரிதல் - ஊற்றுதல். ஆயிரம் - பல. இது கொலை வேள்வியை மறுத்தது. வேள்வி மூலம் கொன்றுண்பது குற்றமன்று; நல்லது என்பார்க்கு, கொலை வேள்விகள் பல செய்தலைவிட ஒருயிரைக் கொன்று ஊனுண்ணமல் இருப்பது நல்லது எனக் கூறியது. 368-ஆம் குறளுரை பார்க்க. கொன்றானுண்டு அடையும் பயன் இல்லை; ஊனுண்ணாமையே நல்லது. (கூ)

260 கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்.

கொல்லான் புலாலை மறுத்தானை - ஒருயிரையும் கொல்லாதவனாகிப் புலாலையும் உண்ணாதவனை, எல்லா உயிரும் கைகூப்பித் தொழும் - எல்லா உயிர்களும் கைகுவித்துத் தொழும்.

அருட் பெருக்கினால் உயிர்களிடத்து மிக்க அன்புடன் நடந்து கொள்ளும் அறவோனிடம் உயிர்கள் அச்சம் அன்றி அருகணைந்து அன்புடன் அளவளாவி வாழும். இதையே நயம்படக் 'கைகூப்பித் தொழும்' என்றார். (ய)

## 27 கொல்லாமை

இது துறவறத்திற்குச் சிறந்தது. கொலை அருளுடைமை யன்மையின் இது துறவறத்திற்கு விலக்கப் பட்டது.

261 அறவினை யாதெனிற் கொல்லாமை; கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

அறவினை யாதெனில் கொல்லாமை - அறச்செயல் யாதென்றால் ஒருயிரையும் கொல்லாமையாகும்; கோறல் பிறவினை எல்லாம் தரும் - கொல்லுதல் அறமல்லாத கெட்ட செயல்களின் பயனை யெல்லாம் தரும்.

கொல்லாமை அறச்செயலாகும். கொல்லுதல் அறமல்லாத செயல்; அச்செயலின் பயன் துன்பம். எனவே, கொல்லுதல் எல்லாத் துன்பங்களையும் தரும். (க)

262 பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

பகுத்து உண்டு பல் உயிர் ஓம்புதல் - உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்துக் கொடுத்துப் பிறகு தானுண்டு பல உயிர்களையும் காத்தல், நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை - அறநூலோர் தொகுத்த அறங்கள் எல்லாவற்றினும் தலையாய அறம்.

உயிர்கள் பசித்தலறப் பார்த்துக்கொண்டே உண்பதும் கொலையோடொக்கும். உயிரோம்பல் - உயிர்களைக் கொல்லாமை. (உ)

263 ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

ஒன்றாக நல்லது கொல்லாமை - ஒப்பின்றித் தனியாக நல்லது கொல்லாமை; அதன் பின்சாரப் பொய்யாமை நன்று - அதற்கு அடுத்தபடியாகப் பொய் பேசாமை நல்லது.

அறங்கள் பலவற்றுள் முதலாவது அறம் கொல்லாமை; இரண்டாவது அறம் பொய்யாமை. பொய்யும் கொலைபோல் கொடியதாகலின் உடன் கூறினர். (௩)

264 நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழும் நெறி.

நல் ஆறு எனப்படுவது யாதெனின் - நல்லவழி என்று சொல்லப்படுவது எது என்றால், யாதொன்றும் கொல்லாமை சூழும் நெறி - எவ்வகை உயிரையும் கொல்லாமையைக் கருதும் நெறி. ஓருயிரையும் கொல்லக் கருதாமையே நல்வழி. தியாதெனின் - குற்றியலிகரம். (௪)

265 நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம் - தீமை நிலைக்கு அஞ்சி அத்தீமையை விட்டவர்கள் எல்லோரிலும், கொலை அஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை - கொலைப் பழிக்கு அஞ்சிக் கொல்லாமையாகிய அறத்தைக் கருதுபவன் முதன்மையானவன்.

தீமை புரிந்து வாழும் நிலை - தீமை நிலை. தீமைகளுக்கு அஞ்சி அவற்றை விட்டவர் பலரிலும், கொலைக்கஞ்சிக் கொலையை விட்டவரே சிறந்தவராவார். (௫)

266 கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள் மேல் - கொல்லாமையாகிய நோன்பை மேற்கொண்டு நடப்பவன் வாழ்நாளின்மேல், உயிர் உண்ணும் கூற்றுச் செல்லாது - உயிரை உண்ணும் கூற்றுச் செல்லாது.

299-ஆம் குறளுரை பார்க்க. கூற்று உயிருண்ணச் செல்லாமை - தகுந்த காலத்தன்றிச் சாவாமை. எனவே, நீடுவாழ்ந்து புகழை நிலை நாட்டுவான் என்பது. கொல்லா அற முடையோனை உலகம் மறவாது. (௬)

267 தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

தன் உயிர் நீப்பினும் - பிறிதோர் உயிரைக் கொல்லாவிடின் தனது உயிர் உடம்பைவிட்டுப் போய் விடுமாயினும், தான் பிறிது இன் உயிர் நீக்கும் வினை செய்யற்க - தான் வேறொன்றன் உயிரை அதன் உடம்பி னின்றும் நீக்கும் செயலைச் செய்யாதிருக்கக் கடவன்.

நோய்க்கு மருந்தாகவும், உடல் வலிக்காகவும் ஊனுண்ணக் கொல்லுதல். கடுநோயுடையோன் ஒருவன் ஒன்றன் ஊனை (கறி) யுண்டால்தான் அந்நோய் தீரும்; இல்லையேல் இறந்துவிடுவான் எனினும், அவ்வூனுண்டு உயிர்வாழ அவ்வுயிரைக் கொல்லாதிருத்தல். ஒவ்வோர் உயிரும் தன்னுயிரை அருமையாகப் பாதுகாக்க விரும்பு மாகையால் 'இன் உயிர்' எனப்பட்டது. தன்னுயிர் காக்கப் பிறவுயிர் கொல்லேல். (எ)

268 நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

நன்று ஆகும் ஆக்கம் பெரிது எனினும் - வேள்விக் கண் கொன்றால், நன்மையைத் தரும் செல்வம் பெரிது ஆகும் என்று பிறர் கூறினும், கொன்று ஆகும் ஆக்கம் சான்றோர்க்குக் கடை - ஓர் உயிரைக் கொல்வதால் வரும் செல்வம் பேரறிவினர்க்கு இழிந்ததாகும்.

நன்று ஆகும் ஆக்கம் - நன்மையைத் தரும் வேள் விப் பயன். கொலைவேள்வியால் வரும் பயன் பெரிது என்று பிறர் கூறினும், துறவிகளுக்கு அப்பயன் கடைப் பட்டதாகும். முன் (259) கொலை வேள்வியின் மூலம் புலாலுண்பதைக் கண்டித்தார். இதில் வேள்விக் கொலை யைக் கண்டிக்கிறார். இது அயற் கொள்கை மறுப்பு. (அ)

269 கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

கொலைவினையர் ஆகிய மாக்கள் - கொலைத் தொழிலை யுடையோராகிய மக்கள், புன்மை தெரிவாரகத்துப் புலைவினையர் - அக் கொலைத் தொழிலின் கீழ்மையை அறிவாரது உள்ளத்தில் புலைத்தொழிலையுடையோராகத் தோன்றுவர்.

மாக்கள் - ஆறுவதறிவாகிய பகுத்தறிவில்லாத ஐயறிவினர். புலை - தாழ்வு, இழிவு. புலைவினை - இழிதொழில். (௯)

270 உயிருடம்பி னீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

செயிர் உடம்பின் செல்லாத் தீவாழ்க்கையவர் - குற்றமான உடம்புடன் வறுமை மிகுந்த இழிந்த வாழ்க்கை உடையவரை, உயிர் உடம்பின் நீக்கியார் என்பர் - உயிரை உடம்பினின்று நீக்கினவர் என்று கூறுவர் பெரியோர்.

செயிர் - குற்றம். செயிர் உடம்பு - உறுப்புக் குறையும், கண்ணால் பார்க்க முடியாத கொடிய நோயும் உடைய உடம்பு. செல்லா - செல்லாத. தீ வாழ்க்கை - மிக இழிந்த வாழ்க்கை. உயிரைக் கொன்றவரே கொடிய நோய்க்காளாய் இழிந்த வாழ்க்கை வாழ்பவர் என்றது, கொலைக்குற்றம் கொடிதென்பதை விளக்கக் கூறியது. (௰)

## 28 வெகுளாமை

வெகுளி - சினம். வெகுளாமை - சினங்கொள்ளாமை. வெகுளும்படி பிறர் நடந்துகொள்ளினும் வெகுளாமையே அருளுடைமையாகும்.

271 செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கிலென் காவாக்கா லென்.

சினம் செல் இடத்துக் காப்பான் காப்பான் - வெகுளி செல்லுமிடத்தில் அதைத் தடுப்பவனே தடுப்பவனுவான்; அல் இடத்து காக்கில்-என் காவாக்கால் என் - சினம் செல்லாத இடத்தில் தடுத்தால் என்ன? தடுக்காவிட்டால் என்ன?

செல்லிடம் - தன்னினும் மெலியார். செல்லாவிடம் - தன்னினும் வலியார். தன்னினும் மெலியார்மேல் வெகுளியைவிடாமல் தடுப்பவனே வெகுளியைத் தடுப்பவனுவான், வலியார்மேல் சினந்து செய்வதொன்றுமில்லை. (க)

272 செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.

செல்லா இடத்து சினம் தீது - தன்னுல் யாதொன்றும் செய்யமுடியாத வலியார்மேல் எழும் வெகுளி தனக்கே தீதாம்; செல் இடத்தும் அதனில் தீய பிறஇல் - மெலியார் மேலெழினும் அதைவிடத் தீயவை பிற இல்லை.

தனக்கே தீது - அவ் வலியாரால்தான் துன்புறுத்தப்படுதல். செத்த பாம்பை அடிப்பதுபோல் மெலியார்மீது சினப்பது உலகப்பழிப்புக்கு ஆளாக்கும். சினம் எவ்வகையினும் கொடியது. (உ)

273 மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனுல் வரும்.

வெகுளியை யார்மாட்டும் மறத்தல் - வெகுளியை யாரிடத்தும் ஒழிக; அதனுல் தீய பிறத்தல் வரும் - அவ் வெகுளியால் தீயவை உண்டாகும்.

வலியார், மெலியார், ஒப்பார் என்னும் எவரிடத்தும் வெகுளிகூடாதென்பார் 'யார் மாட்டும்' என்ருர். பிறத்

தல் வரும் - பிறக்கும். சினத்தால் பல தீங்குகள் உண்டாகும். (௩)

274 நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின் - சிரிப்பையும் மகிழ்ச்சியையும் போக்கும் சினத்தைப்போல, பிற பகையும் உளவோ - ஒருவனுக்கு வேறு பகையும் உண்டோ? இல்லை.

சிரிப்பையும் மகிழ்ச்சியையும் உண்டாக்கும் நட்பைப் போக்கிப் பகையை யுண்டாக்கும் சினம். (௪)

275. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்.

தன்னைத்தான் காக்கின் சினம்காக்க - ஒருவன் தன்னைத்தானே காக்க நினைக்கின் சினமெழாதபடி தடுக்கக் கடவன்; காவாக்கால் சினம் தன்னையே கொல்லும் - தடுக்காவிடின் அவ்வெகுளி அவனையே மிகவும் துன்புறுத்தும்.

பெருந்துன்பத்துக் குள்ளாக்கும் சினமெழாமல் காப்பவனே தன்னைத் துன்பமே அணுகாமல் காப்பவனாவான். (௫)

276 சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.

சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி - சினம் என்னும் நெருப்பு, இனம் என்னும் ஏமப்புணையைச் சுடும் - துன்பக்கடலில் அழுந்தாமல் தன்னைக் கரையேற்றவல்ல இனமாகிய பாதுகாப்புப் புணையையும் சுடும்.

சேர்ந்தாரைக் கொல்லி - தன்னைச் சேர்ந்தாரைக் கொல்லுந் தொழிலை யுடையது. இனம் - துணைவர். புணை - தெப்பம். சினத்தைத் தீயென்று உருவகித்ததற்கேற்பச் 'சுடும்' என்றார். சுடுதல் - அகற்றுதல். சினம் தன்னைத்

துன்புறுத்துதலேயன்றித் தனக்கு இனமாயினரையும் தன்னைவிட்டுப் பிரிக்கும் என்பதாம். (சு)

277 சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு - வெகுளியைத் தனக்குரிய குணமென்று கொண்டவன் கெடுதல், நிலத்து அறைந்தான் கை பிழையாதற்று - நிலத்தில் அடிப்பவன் கை அந்நிலத்தில் படுதல் தப்பாதது போல் தப்பாது.

சினங்கொண்டவன் கெடுதல் கைபடுதல் தப்பாதது போல் தப்பாது. கை கட்டாயம் நிலத்தில் பட்டுக் கெடுவது போல், அவனுங் கட்டாயம் கெடுவான் என்பதாம். (எ)

278 இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

இணர் எரி தோய்வு அன்ன இன்னா செயினும் - கொழுந்துவிட் டெரியும் தீப்பந்தத்தால் சுடுவதுபோன்ற துன்பங்களை ஒருவன் மேன்மேலும் செய்தாலும், புணரின் வெகுளாமை நன்று - பின்னர் வருவானாயின் வெகுளா திருப்பது நல்லது.

இணர் - பூங்கொத்து. இணர் எரி - தீப்பந்தத்திலிருந்து கொத்துக்கொத்தாக எண்ணெய்ச்சுடர் சிதற எரியுந்தீ. விறகுத் தீயைவிட இது மிகவும் சுடும். திருடர் முதலிய கொடியர்களைப் பந்தத்தால் சுட்டொறுப்பது வழக்கம். புணர்தல் - தான் செய்த குற்றத்திற்கு வருந்திப் பின்னர் உறவு கொள்ளவருதல். அவ்வாறு வருவானை அவன் செய்த இன்னாமையை மறந்து அவனைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளுதல். "இன்னாசெய்தாரை ஒறுத்தல்" என்னும் 314ஆம் குறளைப்பார்க்க. துன்பஞ்

செய்தாரும் பின்வந்தால் வெகுளாமல் சேர்த்துக்கொள் வதே பெருங் குணம். (அ)

279 உள்ளிய தெல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்.

உள்ளத்தால் வெகுளி உள்ளான் எனின் - ஒருவன் தன் நெஞ்சில் வெகுளியை நினையான் என்றால், உள்ளியது எல்லாம் உடன் எய்தும் - அவன் எண்ணியயாவும் ஒருங்கே பெறுவான்.

வெகுளியற்றவன் யாவர்க்கும் நண்பனாவதால் எண்ணியவெல்லாம் ஒருங்கெய்தப் பெறுவான். (கூ)

280 இறந்தா ரிறந்தா ரனையர் ; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

இறந்தார் இறந்தார் அனையர்-மிக்க சினத்தையுடையவர் உயிருடன் இருப்பினும் செத்தாரை ஒப்பர்; சினத்தைத்துறந்தார் துறந்தார் துணை - வெகுளியைத் துறந்தார் சாகுந்தன்மையராயினும் அச்சாவை ஒழிந்தாரை ஒப்பர்.

இறந்தார் - வெகுளியில் அளவுகடந்தவர். இறத்தல் - மிகுதல், அளவுகடத்தல். செத்தாரை ஒத்தல்-சினத்தால் கேடுறுதல். சாவை ஒழிதல் - புகழுடம் பெய்தல். சின மிக்கவர் கெடுவர் ; சினமற்றவர் புகழெய்துவர். (ய)

## 29 இன்னாசெய்யாமை

இன்னா - துன்பம். பிறர்க்கு எக்காரணம் பற்றியும் இன்னாசெய்யாமையே அருளுடைமையாகும்.

281 சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் - சிறப்பைத் தரும் செல்வத்தைப் பெற்றாலும், பிறர்க்கு இன்னா செய்யாமை மாசு அற்றார் கோள் - பிறர்க்குத் துன்பஞ் செய்யாதிருத்தல் குற்றமற்றவரது கொள்கை.

சிறப்பீனும் செல்வம் - மிக்க செல்வம். செல்வச் செருக்கால் பிறர்க்குத் துன்பம் செய்யக்கூடாது. இன்னா - துன்பம். (க)

282 கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

கறுத்து இன்னா செய்தவன் கண்ணும் - வெகுண்டு தமக்குத் துன்பஞ் செய்தவனிடத்தும், மறுத்து இன்னா செய்யாமை - திருப்பி அவனுக்குத் துன்பஞ் செய்யாமல் இருப்பதே, மாசு அற்றார் கோள் - குற்றமற்றவர் கொள்கை.

தீமைக்குத் தீமை செய்யாம லிருப்பதே பெரியார் கொள்கை. (உ)

283 செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின் - தானொரு குற்றமும் செய்யாதிருக்கத் தனக்குத் துன்பஞ் செய்தவர்க்கும் தாம் துன்பஞ் செய்வாராயின், உய்யா விழுமம் தரும் - அச்செயல் அவர்க்குக் கடக்க முடியாத துன்பத்தைத் தரும்.

உய்யா - உய்ய முடியாத, தப்ப முடியாத. தனக்குக் கெடுதி செய்தவர்க்கும் கெடுதி செய்யலாகாது. (ங)

284 இன்னுசெய் தாரை யோறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

இன்னு செய்தாரை ஒறுத்தல் - தமக்குத் துன்பஞ் செய்தவரைத் தண்டித்தலாவது, அவர் நாண நல்நயம் செய்து விடல் - அவர் வெட்கப்படும்படி நல்ல நன்மைகளைச் செய்து அவர் செய்த தீமையையும், தாம் செய்த நன்மையையும் மறந்து விடுவதே.

மறவாவிடின் - அவர் செய்த தீமை மனத்தை யுறுத்திக்கொண்டே யிருக்கும்; தாஞ் செய்த நன்மையால 'இன்ன செய்தோம்' என்னும் செருக்குணர்ச்சி தோன்றும். இன்னு செய்தவர், தமக்குச் செய்யும் நன்மையைக் கண்டு இவர்க்கு இன்னு செய்தோமே என்று நாணுதல். தீமை செய்தவர்க்கும் நன்மை செய்து அவரை நல்லவராக்குவதே பெரியோர் கடமை. (௪)

285 அறிவினு னுகுவ துண்டோ பிறதினேய்
தந்நோய்போற் போற்ருக் கடை.

பிறிதின் நோய் தம் நோய்போல் போற்ருக் கடை - பிறிதோர் உயிர்க்குண்டாகும் நோயைத் தமக்குற்ற நோய்போல எண்ணிக் காவாத இடத்து, அறிவினுன் ஆகுவது உண்டோ - அறிவினுல் ஆவதொரு பயனுண்டோ? இல்லை.

பிறவுயிர்க்கு உண்டான துன்பத்தைத் தமக்கு உண்டானதுபோல எண்ணி, அத்துன்பந் தீர்த்துக் காப்பதே அறிவின் பயனுகும். (௫)

286 இன்னு வேனத்தா னுணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கட் செயல்.

இன்னு எனத் தான் உணர்ந்தவை - இவை துன்பந் தருவன வென்று தான் அறிந்தவற்றை, பிறன்கண்செயல்

துன்னாமை வேண்டும் - பிறனிடத்துச் செய்தலைப் பொருந்தாமை வேண்டும்.

தான் தீயவை என்று அறிந்தவற்றைப் பிறர்க்குச் செய்யக்கூடாது. (சு)

287 எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணாசெய் யாமை தலை.

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் - எவ்வகையாலும் எப்போதும் எவர்க்கும், மனத்தான் ஆம் மாணா செய்யாமை தலை - மனமறியத் துன்பந்தரும் செயல்களைச் செய்யாமை முதன்மையானது.

மாணா - மாட்சிமையல்லாத - துன்பச் செயல். மனமறியச் செய்தல் - வேண்டுமென்றே செய்தல். (எ)

288 தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் - தனக்குப் பிறர் செய்யும் துன்பத்தை அறிகின்ற ஒருவன், மன் உயிர்க்கு இன்னா செயல் என்கொல் - பிற உயிர்களுக்குத் துன்பஞ் செய்தல் என் நினைந்தோ?

மன் உயிர் - நிலைபெற்ற உயிர். தனக்குள்ளது போலவே பிறர்க்கும் உண்டு என உணர்ந்து பிறர்க்கு இன்னா செய்யா திருக்கவேண்டும். (அ)

289 பிறர்கின்னா முற்பகல் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

பிறர்க்கு முற்பகல் இன்னா செய்யின் - பிறர்க்கு முற்பொழுது துன்பஞ் செய்தால், தமக்கு பிற்பகல் இன்னா தாமே வரும் - தமக்குப் பிற்பொழுது துன்பம் தாமே வரும்.

பிறர்க்குத் தான் வருத்தப்பட்டுச் செய்தது போலன்றி வரும்பொழுது சிறிதும் வருத்த மில்லாமல் வருமென்பார், 'தாமே வரும்' என்றார். முற்பகல் பிற்பகல் - முன், பின். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.

290 நோயெல்லா நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம் - இப்போதுள்ள துன்பமெல்லாம் முன்பு பிறர்க்குத் துன்பஞ் செய்தார் மீதே உள்ளன ; நோய் இன்மை வேண்டுபவர் நோய் செய்யார் - ஆதலால், பின்பு துன்பப்படாமையை விரும்புகின்றவர்கள் இப்போது பிறர்க்குத் துன்பஞ் செய்யமாட்டார்.

289-ஆம் குறளுக்கு விளக்கங் கூறியது இது. முன்பு பிறர்க்குத் துன்பம் செய்தவர் இப்போது துன்புறுகின்றனர். ஆதலால், பின்பு துன்புறாமல் இருக்க விரும்புவோர் இப்போது பிறர்க்குத் துன்பஞ் செய்யார். (ம)

## 30 தவம்

தவமாவது - மனவடக்கத்தின் பொருட்டு ஊணும் உறக்கமும் குறைத்தல், உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தல், பிற உயிர்களைப் போற்றுதல் முதலிய நோன்பு நோற்றல்.

291 உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

உற்றநோய் நோன்றல் - தமக்கு உற்ற நோயைப் பொறுத்தலும், உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே - பிற உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமையும் ஆகிய அவ்வளவே, தவத்திற்கு உரு - தவத்தின் வடிவம்.

நோய் - பசி, பிறர் புரியும் இன்னல் முதலியன. தந் நோயைப் பொறுத்தலும், பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யாமையுமே தவமாகும். (க)

292 தவமுந் தவமுடையார்க் காகும் ; அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது

தவமும் தவமுடையார்க்கு ஆகும் - துறவு பூண்டு நோன்பு நோற்றலும் இல்லறவொழுக்கங்களை நன்கு கடைப்பிடித்து ஒழுகியவர்க்கே முடியும்; அஃதிலார் அதனை மேற்கொள்வது அவம் - அம்முற்றவம் இல்லாதவர் அதை மேற்கொள்வது வீணாகும்.

இல்லறவொழுக்கங்களை நன்கு கடைப்பிடித்து ஒழுகாதவர் மேற்கொண்டு செய்யும் தவங்கள் தப்புமாகையால், 'தவமும் தவமுடையார்க்கு' என்றார். இல்லறம் நன்கியற்றித் துறவு பயிலவேண்டும். (உ)

293 துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி - துறந்தவர்களுக்கு வேண்டுவன உதவுதலை விரும்பி, மற்றையவர்கள் தவம் மறந்தார் கொல் - இல்வாழ்வார் தவம் செய்தலை மறந்தனர் போலும்.

துப்புரவு - நுகர்ச்சி. அவை - ஊண், உடை, மருந்து, உறையுள் என்பன. துறவிகளுக் குதவுதலை 42ஆம் குறளில் காண்க. "வேண்டிய வேண்டியாங் கெய்தலால்" (295) யாவராலும் செய்யப்படுவதாய தவத்தைத் தாஞ் செய்யும் தானத்தின்மேலுள்ள விருப்ப மிகுதியால் மறந்தார்போலும். எனவே, தானத்தில் தவம் சிறந்ததென்பது. (௩)

294 ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்.

எண்ணின் - தவஞ்செய்வோர் நினைப்பாராயின், ஒன்னார் தெறலும் உவந்தாரை ஆக்கலும் - பகைவரைக் கெடுத்தலும் நண்பரை ஆக்கலும், தவத்தான் வரும் - தவத்தால் நடக்கும்.

எண்ணின் என்றது, அவர்க்கு அவ்வாறு எண்ணுமை இயல்பென்பது. துறவிகளுக்கு ஒன்னாரும் உவந்தாரும் இன்மையால் தவத்தின் மேலேற்றி அதன் சிறப்புக் கூறப்பட்டது. துறவிகளுக்கு இல்லறத்தார் வேண்டிய உதவி செய்யப் பெறுதலால் அவர் எண்ணியதைச் செய்ய வல்லவராகின்றனர். குறள் 42 பார்க்க. (ச)

295 வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் - விரும்பியவற்றை விரும்பியபடியே அடைதலால், செய்தவம் ஈண்டும் முயலப்படும் - செய்கின்ற தவம் மேன்மேலும் முயற்சிக்கப்படும்.

வேண்டிய வேண்டியாங் கெய்தல் - 42, 294-ஆம் குறளுரை பார்க்க. (ரு)

296 தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு.

தவம் செய்வார் தங்கருமம் செய்வார் - தவம் செய்பவரே தம் தொழிலைச் செய்பவராவர், மற்று அல்லார் ஆசையுள்பட்டு அவம் செய்வார். அவரை யொழிந்தார் ஆசையில் சிக்குண்டு பயனில்லாதவற்றைச் செய்பவராவர்.

ஆசையுள்பட்டு அவம் செய்வார் - துறந்தும் மனத்தையடக்கி நோன்பு நோற்காமல் பழைய ஆசையால்

துறவு நிலைக்கு எலாதவற்றைச் செய்து காலத்தை வீணு கக் கழிப்பவர். தவமே துறவறத்தின் சிறந்த உறுப்பு.(சு)

297 சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

சுட் சுடரும் பொன்போல் - தீயிலிட்டுச் சுடச்சுட மாசற்று ஒளிமிகும் பொன்னைப்போல, நோக்கிற்பவர்க்கு துன்பம் சுடச்சுட ஒளிவிடும் - தவம் செய்வார்க்குத் துன் பம் வருத்த வருத்தத் தீமை நீங்கி அறிவுமிகும்.

சுடருதல் - ஒளிவிடுதல். துன்பங்களைப் பொறுத் துப் பழகி அவை இன்பமாகத் தோன்றும் நிலைபெறு வதே அறிவொளி பெறுவதாகும். (எ)

298 தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

தன் உயிர் தான் அறப்பெற்றானை-தனது உயிரைத் 'தான்' என்று கருதுங் கருத்து நீங்கப்பெற்றவனை, ஏனைய மன்னுயிர் எல்லாம் தொழும் - பிற உயிர்களெல்லாம் போற்றும்.

தான் அறுதல் - தான் என்னும் செருக்கறுதல். தான் என்னும் செருக்கற்றவனை உலக மக்களெல்லாம் போற்றுவர். (அ)

299 கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு-தவவலிமை கைகூடியவர்க்கு, கூற்றம் குதித்தலும் கை கூடும் - கூற் றத்தைத் தப்புதலும் உண்டாகும்.

நோற்றலின் ஆற்றல் கைகூடல் - தவப்பயிற்சி நிறை வுறுதல். கூற்றத்தைத் தப்புதல் - தவத்தால் உடல் வலுப் பெற்று நீண்ட நாள் உயிரோடிருத்தல். உடலும்

உயிரும் கூறுபடும் இறப்பினைக் கூற்றம் என்றார். கூற்றம் உடலும் உயிரும் கூறுபடும் நேரம். கூறுபடுதல் - வேறுதல், பிரிதல். முகவுரை பார்க்க. (கூ)

300 இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

இலர் பலர் ஆகிய காரணம் - உலகத்தில் செல்வர்கள் சிலராக வறியவர் பலராதற்குக் காரணம் யாதெனில், நோற்பார் சிலர் நோலாதவர் பலர் - தவஞ்செய்வார் சிலரும் தவஞ் செய்யார் பலருமாயிருத்தலேயாகும்.

உண்மையறிவும், ஊக்கமும் இன்றித் தவஞ்செய்யாது பலர் இருப்பதுபோலவே, பொருளீட்டுதற்குரிய அறிவும், முயற்சியும் இல்லாததால் இலர் பலராக உள்ளனர். முயன்று தவம்செய்து பயன்பெற வேண்டும் என்பதாம். (ம)

## 31 கூடாவொழுக்கம்

கூடாவொழுக்கமாவது-மனவலியின்மையால், முன் விட்ட காம வின்பத்தைப் பின்னும் விரும்பி மறைந்தொழுகும் தீயவொழுக்கம். கூடாத, தகாத ஒழுக்கம்.

301 வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும்.

வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் - கள்ளமனத்தினனது தீயவொழுக்கத்தை, பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்-உடம்பாக அமைந்துள்ள பூதங்கள் ஐந்தும் கண்டு தமக்குள்ளே சிரிக்கும்.

படிற்றொழுக்கம் - பொய்யொழுக்கம். நல்லவன் போல நடித்துத் தீயன செய்தொழுகுதல். ஐம்பூதம் -

நில நீர் தீ காற்று வெளி. இவ்வைம்பெரும் பூதங்களாலானதே உடம்பு. மனவலியின்மையால் தீயவொழுக்கம் ஒழுகினவன் பின் தானே வருந்துவானென்பதற்குப் 'பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்' என்றார். (க)

302 வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

தன் நெஞ்சம் தான் அறி குற்றப்படின் - ஒருவன் மனம் அவனறிந்த குற்றத்தின் கண்படின், வான் உயர் தோற்றம் எவன்செய்யும் - மிகவுயர்ந்த துறவுக்கோலம் யாது பயனைத்தரும்?

நெஞ்சம் தான்அறி குற்றப்படுதல் - குற்றமென்று தெரிந்தே செய்தல். கூடாவொழுக்கமின்றி யிருப்பதே துறவிக்கு மேன்மை. (உ)

303 வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

வலியில் நிலைமையான் வல்லுருவம்-மனத்தைத் தன் வழிப்படுத்தும் வலியில்லாத நிலைமையையுடையவனது வலியுடையார் போன்ற தவக்கோலம், பெற்றம் புலியின் தோல்போர்த்து மேய்ந்தற்று - மாடு புலித்தோலைப் போர்த்துப் பயிரை மேய்வது போலாகும்.

அச்சத்தாலும், புலி புல் தின்னுதென்பதனாலும் நிலத்துக்குரியவன் ஓட்டாதவாறுபோல, உலகத்தார் ஐயுறுதபடி வல்லுருவங் கொண்டான். மாடு தனக்குரிய புல்லைவிட்டுப் பசிபொறுக்கும் வலியுமின்றி நிலத்துக்குரியவன் ஐயுறுதபடி புலித்தோல் போர்த்துப் பிறர்க்குரிய பயிரை மேய்வதுபோல, தனக்குரிய மனையாளையுந் துறந்து, மனத்தை யடக்கும் வலியுமின்றிப் பிறர் ஐயப்படாத வல்லுருவமுங் கொண்டு தவமறைந்து பிறர்க்குரிய மகளிரை விரும்புவர் என்பதாம். (ங)

304 தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

*தவம் மறைந்து அல்லவை செய்தல் - ஒருவன் தவக் கோலத்தில் மறைந்து நின்று கூடா வொழுக்கம் ஒழுகுதல், வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்தற்று - வேடன் புதரில் மறைந்து பறவைகளைப் பிடிப்பது போன்றது.*

*புள்-பறவை. சிமிழ்த்தல் - வலை அல்லது பொறியினுல் பிடித்தல்.* (ச)

305 பற்றற்றே மேன்பார் படிற்ருெழுக்கம் எற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

*பற்று அற்றேம் என்பார் படிற்ருெழுக்கம் - யாம் ஆசையற்றேம் என்பவரது பொய்யொழுக்கம், எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும் - பிறர் கண்டு பழித்து வருத்தினுல் 'என் செய்தோம், என் செய்தோம்' என்று இரங்குமாறு துன்பம் பலவும் தரும்.*

*பற்றருமல் பற்றற்றேம் என்று சொல்லி ஏமாற்றுதல். கூடா வொழுக்க முடையோர் அது வெளிப்படின் துன்புறுவர்.* (ரு)

306 நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

*நெஞ்சில் துறவார் - மனத்தில் பற்றருது, துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வாரின் - துறந்தவரைப் போலப் பிறரை ஏமாற்றி வாழ்வாரைப்போல, வன்கணூர் இல் - கொடியவர் எவரும் இல்லை.*

*இவ்வஞ்சகர் இல்லறத்தாரை ஏமாற்றியதாலும், உழையாது இருந்து உண்டதாலும், குற்றவாளிகளாயிருந்து பெரியாரைப் போற்றுவது போன்ற போற்று*

தனுக்குரியராக நின்றதாலும் 'வன் கணார் இல்' என்றார். பொய்த் துறவிகளைப் போலக் கொடியர் யாரும்இல்லை.(சு)

307 புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

புறம் குன்றி கண்டனையரேனும் - புறத்தே குன்றி மணியின் நிறம்போன்ற தூய தவக்கோல முடையரா யிருப்பினும், அகம் குன்றி மூக்கில் கரியார் உடைத்து - அகத்தே குன்றி மூக்குப்போலக் கரியராய் இருப்பாரை இவ்வுலகம் உடையது.

குன்றி - குன்றி மணி. குன்றி மணியின் செம்மையும் கருமையும் நிறத்தைவிட்டுத் தூய துறவுக்கோலத்தையும், வஞ்சனையையும் குறித்தன. உலகில் போலிக் கோலத் துறவிகளும் உண்டு. அக்கோலங் கண்டு ஏமாறுதீர் என்பதாம். (எ)

308 மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

மாசு மனத்தது ஆக - குற்றம் மனத்தின்கண் இருக்க, மாண்டார் நீர் ஆடி - பெரியார்களின் தன்மையைப் பூண்டு, மறைந்து ஒழுகும் மாந்தர் பலர் - தீய வழிகளில் மறைந்தொழுகும் மாந்தர் பலர் உலகத்தில் உள்ளனர்.

நீர் - தன்மை. ஆடி - ஆண்டு, மேற்கொண்டு. உலகில் வஞ்சகத் துறவிகள் பலர் உண்டு. எச்சரிக்கையாய் இருங்கள் என்பதாம். (அ)

309 கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்னார்
வினைபடு பாலாற் கொளல்.

கணை கொடிது - அம்பு நேராக இருப்பினும் செயலால் கொடியது; யாழ்கோடு செவ்விது - யாழின் தண்டு

வினைந் திருப்பினும் செயலால் செவ்விது; ஆங்கு அன்னர் வினைபடுபாலால் கொளல் - அவ்வாறே தவஞ்செய்வோரை யும் கொடியர் செவ்வியர் என்பது அவர்களது வடிவால் கொள்ளாது அவர்கள் செய்யும் செயலின் பகுதியால் அறிந்து கொள்க.

வினைபடுபால் - செயற்பாகுபாடு. கணைக்குச் செயல் கொலை; யாழுக்குச் செயல் இசையாலின்பந் தருதல். அவ் வாறே செயல் கொடியதாயின் கொடியரெனவும், நல்ல தாயின் செவ்வியரெனவும் கொள்ளவேண்டுமென்பதாம். செவ்விது - இசையா லின்பந் தருவது. (௯)

310 மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்.

உலகம் பழித்தது ஒழித்துவிடின் - உயர்ந்தோர் துற வறத்திற்காகாதெனக் குற்றங்கூறிய ஒழுக்கத்தை நீக்கி விட்டால், மழித்தலும் நீட்டலும் வேண்டா - தலைமயிரைச் சிரைத்தலும் வளர்த்தலும் வேண்டியதில்லை.

உயர்ந்தோரால் உண்மைத் துறவிகளென மதிக்கப் படின் பொய்த்தவக்கோலம் செலவில்லை. 'மழித்தலும் நீட்டலும்' என்பது - பௌத்த சமண சைவ வைணவ சமய வேறுபாட்டுக் கோலத்தைச் சுட்டியது. (௰)

## 32 கள்ளாமை

பிறர்பொருளை வஞ்சனையாகக்கொள்ளக் கருதாமை.

311 எள்ளாமை வேண்டுவா னென்பான்எனைத்தொன் றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

எள்ளாமை வேண்டுவான் என்பான் - பிறரால் இக ழாமையை விரும்புவோனென்பான், எனைத்தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க - யாதொரு பொருளையும்

திருட நினையாதபடி தன் நெஞ்சைக் காக்கக்கடவன். திருடுவோனை உலகத்தார் இகழ்வர். (க)

312 உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்ளவே மெனல்.

பிறன்பொருளை உள்ளத்தால் உள்ளலும் தீதே - பிறனுடைய பொருளைத் திருடுவதற்குத் தன் நெஞ்சினால் நினைப்பதும் தீதாம்; கள்ளத்தால் கள்வேம் எனல் - ஆதலால், அதை அவன் அறியாதபடி வஞ்சித்துக் கொள்ள முயலாதிருக்க.

எனல் - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. பிறர் பொருளைக் கொள்ள நினைப்பதும் முயல்வதும் குற்றமாம். (உ)

313 களவினா லாகிய வாக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும்.

களவினால் ஆகிய ஆக்கம் - களவினால் உண்டாகிய செல்வம், அளவு இறந்து ஆவதுபோலக் கெடும் - மேன்மேலும் வளர்வதுபோலத் தோன்றிப் பின் கெடும். திருட்டுப்பொருள் நிலையாது. (ங)

314 களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

களவின்கண் கன்றிய காதல் - களவினிடத்து உண்டாகும் மிகுந்த விருப்பமானது, விளைவின் கண் வீயா விழுமம் தரும் - பயனளிக்கும்போது தொலையாத துன்பந் தரும்.

கன்றுதல் - மிகுதல். விளைவு - கையுங் களவுமாய்ப் பிடிபட்டுத் தண்டிக்கப்படுதல். களவு பெருந்துன்பத்துக்குள்ளாக்கும். (ச)

315 அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

பொருள் கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார் கண் - பிறர் பொருளைத் திருட நினைத்து அவரது மறதியை எதிர் பார்த்துக்கொண்டிருப்பவர்க்கு, அருள் கருதி அன்புடையர் ஆதல் இல்லை. அருளை எண்ணி உயிர்களிடம் அன்புடையராகும் குணம் உண்டாகாது. களவு செய்வார்க்குப் பிறரிடம் அன்பில்லை. (௫)

316 அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

களவின் கண் கன்றிய காதலவர் - களவினிடத்து மிகுந்த ஆசையுடையவர், அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார் - நேர்மையாய் நடந்துகொள்ளமாட்டார்.

அளவு - வரையறை செய்யப்பட்ட ஒழுக்கம், நேர்மை. பிறர் பொருளின்மேல் ஆசையுள்ளவர் நேர்மையாய் நடந்துகொள்ள மாட்டார். (௬)

317 களவென்னுங் காரறி வாண்மை யளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில்.

அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் - நேர்மை என்னும் பெருமையை விரும்பினவரிடம், களவு என்னும் கார் அறிவாண்மை இல் - களவு என்னும் இருண்ட அறிவுடைமை இல்லை.

ஆற்றல் - பெருமை. புரிதல் - விரும்புதல். கார் அறிவு - வஞ்சக அறிவு. நேர்மையை விரும்புவாரிடம் திருட்டுக்குணம் உண்டாகாது. (௭)

318 அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம்போல - நேர்மையை அறிந்தாரது நெஞ்சத்தில் அறம் நிற்பதுபோல,

களவு அறிந்தார் நெஞ்சில் கரவு நிற்கும் - களவுசெய்ய அறிந்தவர் நெஞ்சில் வஞ்சனை நிற்கும்.

அறம் - அறவுணர்ச்சி. கரவு - வஞ்சனை. கள்ளர் மனத்தில் கரவு குடிகொள்ளும். (அ)

319 அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்று தவர்.

களவு அல்ல மற்றைய தேற்றாதவர் - களவல்லாத வேறொன்றையும் அறியாதவர், அளவு அல்ல செய்து ஆங்கே வீவர் - நேர்மை அல்லாதவற்றைச் செய்து அப்போதே கெடுவர்.

மற்றைய - நல்லறங்கள். களவல்ல மற்றைய தேற்றாதவர் - களவையே கடமையாகச் செய்பவர். கள்வர்கள் தகாதன செய்து துன்புறுவர். (கூ)

320 கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

கள்வார்க்கு உயிர்நிலை தள்ளும் - திருடுவோர்க்கு உடம்பும் தவறிப்போகும்; கள்ளார்க்கு புத்தேள் உலகு தள்ளாது - திருடாதார்க்குத் தேவருலகமும் தவறாது.

திருடுவோர்க்குத் தண்டனை முதலியவற்றால் உடம்பு தவற நேரும். 'கள்ளார்க்குப் புத்தேளுலகு தள்ளாது' என்றது, திருடாதாரை அயலாரும் போற்றுவர் என்பது. புத்தேளுலகு - முகவுரை பார்க்க. (ய)

## 33 நிலையாமை

செல்வமும், இளமையும், உடம்பும் நிலையுடையன வல்ல என்பதை உணர்ந்தால்தான் 'யான் எனது' என்னும் பற்று நீங்கவும், பொது நலம் புரியவும் கூடுமாகையால், துறவறத்தார்க்கு இவ்வுணர்வு இன்றியமையாதது.

321 நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

*நில்லாதவற்றை நிலையின என்று உணரும் - நிலையில்லாதவற்றை நிலையுள்ளவை என்று நினைக்கும், புல்லறிவாண்மை கடை - புல்லறிவுடைமை இழிவானது.*

*புல்லறிவு - சிற்றறிவு. இம் மயக்க அறிவை யொழித்து உண்மை யறிவைப் பெறவேண்டும்.* (க)

322 கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

*பெரும் செல்வம் கூத்தாட்டு அவைக் குழாத்து அற்று - பெரிய செல்வம் வருதல் கூத்தாடும் அவையில் உள்ள கூட்டம் போன்றது; போக்கும் அது விளிந்து அற்று - அச் செல்வத்தினது போக்கும் அக்கூட்டம் கூத்து முடிந்தவுடன் கலைந்து போவது போன்றது.*

*கூத்தாட்டவைக் குழாம் போல, வருங்காலத்து வலிதில் வந்து போங்காலத்துத் திடீரென மறையுந் தன்மை கொண்டது செல்வம்.* (உ)

323 அற்கா வியல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால்
அற்குப வாங்கே செயல்.

*செல்வம் அல்கா இயல்பிற்று - செல்வம் நிலையில்லாத இயல்பினையுடையது; அது பெற்றால் அல்குப ஆங்கே செயல் - அச் செல்வத்தைப் பெற்றால் நிலையுள்ளனவாகிய அறங்களை அப்பொழுதே செய்க.*

*அல்குதல் - நிலைத்து நிற்றல். செல்வம் நிலையில்லாத தாகையால் முயற்சியால் செல்வம் பெற்றவுடன் நிலையான அறங்களைச் செய்யவேண்டும். இவை இரண்டு பாட்டும் செல்வ நிலையாமை கூறின.* (ங)

324 நாளென வொன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

நாள் என ஒன்றுபோல் காட்டி ஈரும் வாளது உயிர்- நாள் என்று காலத்தைப் பிரிக்கும் காலவரையறை போலத் தன்னைக் காட்டி அறுக்கும் வாளினது வாயினிடத்தது உடம்பு; உணர்வார்ப்பெறின் - அதை உணர்வாரைப் பெற்றால்.

காலத்தைப் பல கூறாகப் பிரிக்கும் காலவரையறை போலத் தன்னைக் காட்டி உடம்பை அறுக்கும் வாளே நாள். அந்நாளின் வாயின்கண் ணுள்ளது உடம்பு. ஒவ்வொரு நாளும் உயிரோடு கூடிவாழும் வாழ்நாளைக் குறைப்பதால் அந்நாளை உடம்பை யறுக்கும் வாள் என்றார். நாள் என்னும் அவ்வாளின் வாயின்கண் உள்ளது உடம்பு. நாள் என்னும் வாள் உடம்பை அறுத்துக் குறைத்துக் கொண்டே வருகிறது. வாள் ஆகுபெயராய் அதன் வாயை உணர்த்திற்று. உயிர் - உடம்பை உணர்த்திற்று. உடம்பின் இளமை குறைந்துகொண்டே வருகிறது. இது இளமை நிலையாமை கூறிற்று. அறிவாளிகள் நாளை உடம்பின் வாழ்வை யறுக்கும் வாள் என்று கொள்வார்கள். (௪)

325 நாச்செற்று விக்குண்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

நாசெற்று விக்குள்மேல் வாராமுன் - பேச முடியாதவாறு நாவை அடக்கி விக்கல் மேலே எழுவதற்கு முன்னே, நல்வினை மேல் சென்று செய்யப்படும் - நல்ல செயல்களை விரைந்து செய்ய வேண்டும்.

நாச்செற்று விக்குள் மேல்வருதல் - சாத்துன்பம். உயிர் போகும் நிலையிலுள்ள அப்போது நற்செயல்களைச் செய்ய முடியாததோடு சொல்லவு முடியாதாகையால்,

அச்சாத்துன்பம் வருவதற்கு முன் விரைந்து நல்வினை செய்ய வேண்டுமென்றார். (ரு)

326 நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

ஒருவன் நெருநல் உளன் - ஒருவன் நேற்று இருந்தான்; இன்று இல்லை - அவனே இன்று இல்லை; என்னும் பெருமை இவ்வுலகு உடைத்து - என்னும் பெருமையை இவ்வுலகம் உடையது. பெருமை என நிலையாமையைப் பழித்தவாறு. உலக வாழ்வு நிலையற்றது. (சா)

327 ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

ஒருபொழுதும் வாழ்வது அறியார் - ஒருபொழுதேனும் உயிருடன் கூடியிருத்தலை அறியமாட்டார்; கோடியும் அல்ல பல கருப - அப்படியிருந்தும், கோடியளவின்றி அதற்குமேலும் பல எண்ணங்களை எண்ணுவர் அறிவில்லாதார்.

பொழுதும் என்ற உம்மை நொடிப்பொழுதை யுணர்த்திற்று. "உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம் எண்பது கோடி நினைந்தெண்ணுவன" என்பது காண்க. உயிர் எந்த நேரத்தில் பிரியுமென்பதை அறியாது பலபல கருதுவர் அறியார். அறிவுடையோர் நிலையாமையுணர்ந்து உள்ளபோதே நல்லன செய்வர். (எ)

328 குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.

உடம்போடு உயிர் இடை நட்பு - உடம்புடன் உயிருக்குள்ள நட்பானது, குடம்பை தனித்து ஒழிய புள் பறந்து அற்று - முட்டை தனித்துக்கிடக்க அதனுள்

ளிருந்த பறவைக் குஞ்சு தக்க பருவம் வந்ததும் பறந்து போவதைப் போன்றது.

மக்களுடம்புபோலத் தாய்வயிற்றிலிருந்தே வந்தது முட்டையே யாதலால் முட்டை உடம்புக்கு உவமையாயிற்று. முட்டைக்குள்ளிருந்து போனபின் திரும்பிவந்து புகாமையால் புள் உயிர்க்கு உவமையாயிற்று. உயிர் செல்லுங் காலத்துச் சொல்லாது சென்றுவிடும். (அ)

329 உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

சாக்காடு உறங்குவது போலும் - சாவு தூங்குவது போலும்; பிறப்பு உறங்கி விழிப்பது போலும் - பிறப்பு தூங்கி விழிப்பதுபோலும்.

உலகில் தூக்கமும் விழிப்பும் நடத்தல் போலவே இறப்பும் பிறப்பும் நடக்கின்றன என்பதாம். உலகில் சாவும் பிறப்பும் நடத்தல் இயற்கை என்னும் நிலையாமையை உணரவேண்டும். (கூ)

330 புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு.

உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு - உடம்பினுள்ளே ஒதுக்குக் குடியாக இருந்த உயிர்க்கு, புக்கில் அமைந்தின்று கொல் - எப்போதும் இருப்பதோர் இல் அமையவில்லைப் போலும்.

துச்சில்-சிறிதுபோது தங்கும் இடம். குடிக்கூலி வீடு எனினுமாம். நோய்களுக்குச் சொந்தமானது உடம்பு அந்நோய்கள் இருக்கவென்ற அளவும் இருந்துவெகுண்ட வுடன் உடம்பைவிட்டு உயிர்போக வேண்டியதாகையால் ‘துச்சில் இருந்த உயிர்’ என்றார். உடம்பு, உயிரின் ஒதுக்கிடம். (ய)

## 34 துறவு

தன்னை 'யான்' என்னும் அகப்பற்றையும், செல்வ முதலியவற்றை 'எனது' என்னும் புறப்பற்றையும் விடுதல். துறவு - துறத்தல்.

331 யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்.

யாதனின் யாதனின் நீங்கியான் - ஒருவன் எந்தெந்தப் பொருளின்மீதுள்ள பற்றினை நீங்குகிறானோ, அதனின் அதனின் நோதல் இலன் - அவன் அந்த அந்தப் பொருளினால் துன்புறுதல் இல்லை.

யாதனின் யாதனின், அதனின் அதனின் - அடுக்குகள் பன்மை குறித்தன. பொருளை ஈட்டல், காத்தல், குறைதல், பிறர்கவர்தல் முதலியவற்றால் வருந் துன்பங்கள் பொருட்பற்றற்றவர்க்கு இல்லை. (க)

332 வேண்டினுண் டாகத் துறக்க; துறந்தபின்
ஈண்டியற் பால பல.

துறந்தபின் ஈண்டு இயற்பால பல - துறந்த பிறகு இங்கு நுகரக்கூடிய இன்பங்கள் பலவாம்; உண்டாக வேண்டின் துறக்க - அவற்றை யெல்லாம் நுகர விரும்பின் துறக்கவேண்டும்.

இன்பங்களாவன-மனவடக்கத்தானும், நன்னெறிக்கண் நிற்றலானும் உண்டாகும் இன்பங்களும், வேண்டிய வேண்டியாங் கெய்தலான் (295) வரும் இன்பமும். (உ)

333 அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

ஐந்தன் புலத்தை அடல் வேண்டும் - ஒருவன் ஐம்புலன்களையும் வெல்லவேண்டும்; வேண்டிய எல்லாம்

ஒருங்கு விடல்வேண்டும் - தான் விரும்பிய பொருள்கள் யாவற்றையும் ஒருங்கே விட்டுவிடவேண்டும்.

புலன்களை வெல்லுதல் - அவை பொறிவழிச் செல்லாமல் அடக்குதல். ஐம்புல நுகர்ச்சிகளையும், பிற பொருள்களின் பற்றையும் துறப்பதே துறவாகும். (ங)

334 இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பு ஆகும் - யாதொரு பொருட்பற்றும் இல்லாமை துறவின் இலக்கணமாகும்; உடைமை மற்றும் பெயர்த்து மயலாகும் - ஏதேனும் ஒரு பற்றுடைமை மீண்டும் மீண்டும் பொருளாசையை உண்டு பண்ணும்.

துறவி ஒருவர் துணிவைத்திருந்த கதை இதற்குச் சான்றாகும். துணியை எலி கடித்தது, எலிக்குப் பூனை-பூனைக்குப் பால், பாலுக்கு மாடு, மாடு மேய்க்க ஆள், இப்படியே போகும் ஆசைப் பெருக்கு. (ச)

335 மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு உடம்பு மிகை - தீமையின் தோற்றங்களை நீக்கலுற்றார்க்கு உடம்பு மிகையாயிருக்க, மற்றும் தொடர்ப்பாடு எவன் - பின்னும் பற்றுதற்குரிய பொருள் யாது? ஒன்றுமில்லை.

பிறப்பு - தோற்றம்; தொழிற் பெயர். தீமையின் தோற்றம் - பற்று. துறவிக்குப் பொருட் பற்றுத் தீமையை உண்டாக்குவதால் தீமையின் தோற்றம் எனப்பட்டது. பற்றறுக்கலுற்றார்க்கு உடம்பொன்றே மிச்சமாக இருப்பதன்றி, வேறு பற்றெதுவும் இல்லை என்பதாம். உடம்பின் மீதும் பற்றில்லா திருப்பவனே உண்மைத் துறவியாவான். (ரு)

336 யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் - யான் என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும் நீக்குபவன், வானோர்க்கும் உயர்ந்த உலகம் புகும் - வானோர்க்கும் அடையமுடியாத மேலான உலகத்தை அடைவான்.

தன்னை யான் என்பது அகப்பற்று; தனக்குரிய பொருளை எனதென்பது புறப்பற்று. இவ்விருவகைப் பற்றினையும் விட்டவனே சிறந்த துறவியாவான். அவனை உலகத்தார் வானோரினும் மேலானவனாக மதிப்பர். வானோர்க்கும் உயர்ந்த உலகம் புகல் - வானோரினும் மேலான மதிப்பைப் பெறுதல். வானோர்க்கும் - உம்மை தொக்கது. வானோர் மேலானவர் என்பதைக் கொண்டு கூறியது. முகவுரை பார்க்க. (சு)

337 பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

பற்றினைப் பற்றி விடாதவர்க்கு - பொருளின் மீதுள்ள ஆசையை விடாதவரை, இடும்பைகள் பற்றி விடா - துன்பங்களும் அவரைப் பற்றிக்கொண்டு விடா.

யானெனதென்னும் செருக்குடையவர் துன்புறுவர். பற்று - பற்றுதற்குரிய பொருள். (எ)

338 தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

தீரத்துறந்தார் தலைப்பட்டார் - முற்றத்துறந்தவர்களே பெருமையுடையவர்கள்; மற்றையவர் மயங்கி வலைப்பட்டார் - முற்றத்துறவாதவர் மயக்கமெய்தித் துன்ப வலையில் அகப்பட்டவராவர்.

தலைப்படுதல் - முதன்மையான மதிப்பைப் பெறுதல். முற்றத்துறந்தவர் இன்புறுவர்; அவ்வாறு துறவாதவர் துன்புறுவர். (அ)

339 பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்.

மற்று நிலையாமை காணப்படும் - துறவிக்குப் பொருளாசை நீங்காதபோது அப்பொருள்களின் நிலையாமை காணப்படும்; பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும் அந்நிலையாமை யுணர்ந்து பொருள்மீதுள்ள ஆசையை விட்ட உடனே அவ்வாசையின்மை, அவ்வாசையால் உண்டாகும் துன்பங்களின் தோற்றத்தை அறுக்கும். தோன்றாமல் செய்யும்.

மற்று - வினைமாற்று. பிறப்பு - தோற்றம். நிலையாமை யுணர்ந்து பற்றற்றவனுக்குத் துன்பம் இல்லை. (கூ)

340 பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

பற்றற்றான் பற்றினைப் பற்றுக - பற்றற்றவனது அன்பை மனத்துட் கொள்க; பற்றுவிடற்கு அப்பற்றைப் பற்றுக - ஆசையை ஒழித்தற்கு அவ்வன்பையே உறுதியாகக் கொள்க.

முற்றத்துறந்தவனது அன்பே பற்றறுதலுக்குக் காரணமாகும். அவனது நிலையை எண்ண எண்ணப் பற்று நீங்குமென்பதாம். (ம)

## 35 மெய்யுணர்தல்

உண்மையை ஆராய்ந்து கண்டறிதல், உள்ளதை உள்ளபடி அறிதல்.

341 பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு.

பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளான் - மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப் பொருள் என்று எண்ணும் மயக்க அறிவினை யுடையவன், மாணாப் பிறப்பு ஆம் - மாண்பில்லாத பிறப்பினன் ஆவான்.

மருள் - மயக்கவுணர்வு. மருளான் - மருளையுடையவன். மாணா - மாணாத. மாண்பில்லாத பிறப்பினன் - சிறப்பில்லாதவன், இழிந்தவன். பொய்ப் பொருளை மெய்ப்பொருளென்று உணர்பவன் இழிந்தவனாவான். (க)

342 இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

மருள் நீங்கி மாசு அறு காட்சி யவர்க்கு-மயக்கத்தினின்று நீங்கிக் குற்றமற்ற அறிவுடையார்க்கு, இருள் நீங்கி இன்பம் பயக்கும் - அவ்வறிவு, அறியாமையை நீக்கி இன்பத்தைக் கொடுக்கும்.

இருள் - அறியாமை. இருள்நீங்கி - 'நீக்கி' எனப் பிறவினை. மயக்கமும் குற்றமும் அற்ற அறிவு. மயக்க மற்ற நல்லறிவினர் அறியாமை நீங்கி இன்புறுவர் (உ)

343 ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து.

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு-ஐயத்தினின்றும் நீங்கி உண்மைப் பொருளை உணர்ந்தவர்க்கு, வையத்தின்

வானம் நணியது உடைத்து - வையத்தைவிட வானம் பக்கத்தில் உள்ளது.

ஐயம் - இதுவோ அதுவோ என்று ஐயப்படுதல். வானம் பக்கத்தில் உள்ளதாவது - உண்மையறிவாளர்க்குப் பக்கத்திலுள்ள காணும் பொருளேயே யன்றித் தொலைவிலுள்ள பொருளையும் கண்டறிய முடியும் என்பதாம். அறிவியலாரைக் (விஞ்ஞானிகள்) காண்க. (௩)

344 ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

மெய் உணர்வு இல்லாதவர்க்கு - உண்மை அறிவு இல்லாதவர்க்கு, ஐ உணர்வு எய்தியக் கண்ணும் பயன் இன்று - ஐந்தாகிய அறிவை அடைந்த விடத்தும் ஒரு பயனுமில்லை.

ஐந்தாகிய அறிவு-"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும்" (1101) ஐந்தறிவு. உண்மை அறிவு - பகுத்தறிவு. (௪)

345 எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் - ஒரு பொருள் எவ்வாறு காணப்பட்டாலும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு - அப்பொருளின் உண்மைத் தன்மையைக் காண்பதே அறிவாகும்.

பொடியுப்பும், சர்க்கரையும் (அஃச்கா) ஒரே நிறம், வடிவம்; ஆனல் சுவை உவர்ப்பும், இனிப்பும். இவ்வாறு பொருளின் உண்மைத் தன்மையை அறிதலாம்; அறிவியலார்பொருள்களின்உண்மைத்தன்மையை ஆராய்ந்து காண்பதுபோல். (௫)

346 கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

ஈண்டு கற்று மெய்ப்பொருள் கண்டார்-இங்கு கற்று உண்மைப் பொருளை அறிந்தவர்; மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர்-திரும்பி இங்கு வராத துறவற நெறியை அடைவர்.

இங்கு என்றது இல்லறத்தை. இல்வாழ்க்கையிலிருந்த போதே அறநூல்களைக் கற்று உண்மையையுணர்ந்து துறந்தவர்கள் மறுபடியும் பொருட்பற்றுடையராகார் என்பதாம். (சு)

347 ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

உள்ளம் உள்ளது ஓர்த்து ஒருதலையா உணரின்-ஒருவன் உள்ளமானது உண்மைப்பொருளை ஆராய்ந்து உறுதியாக உணருமாயின், பேர்த்து பிறப்பு உள்ள வேண்டா - பின்னர் இப்பிறப்பைப்பற்றி எண்ணவேண்டியதில்லை.

உண்மைப்பொருளை ஆராய்ந்து உண்மை அறிவு பெறுவதே மக்கட்பிறப்பின் பயன் ஆதலால், 'பேர்த்து பிறப்பு உள்ள வேண்டா' என்றார். உண்மையுணர்வே மக்கட் பிறப்பின் பயன். (எ)

348 பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

பிறப்பு என்னும் பேதைமை நீங்க - பிறவி என்னும் அறியாமை நீங்க, சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு - சிறப்பு என்னும் உண்மைப் பொருளைக் காண்பதே அறிவாகும்.

பிறப்பு என்னும் பேதைமை - பிறவியுடன் பிறந்த அறியாமை. ஒருவன் பிறக்கும்போதே உடன் பிறந்த அறியாமை நீங்கச் சிறந்த உண்மைப் பொருளைக் காண்பதே அறிவு. (அ)

349 சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின்-ஒருவன் தன்னைச் சாரக்கூடிய பொருள்களை அறிந்து அவற்றின்மேல் பற்றில்லாமல் நடப்பானாயின், சார்தரும் நோய் அழித்து மற்றுச் சார்தரா - அவனைச் சாரக்கூடிய துன்பங்கள் அவ்வறிவையும் ஒழுக்கத்தையும் கெடுத்துப் பின் சார மாட்டா.

தான் பற்றுக்கொள்ளும் பொருள்களையுணர்ந்து, அவற்றின் மீதுள்ள பற்றை நீக்கினார்க்குத் துன்பங்கள் இல்லை. சார்பு - சாரும் பொருள். (கூ)

350 காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்.

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட - ஆசை சினம் மயக்கவறிவு என்னும் இவை மூன்றினது பெயர் கெட்ட உடனே, நோய் கெடும் - துன்பங்கள் நீங்கும்.

நாமங்கெடல் - இம்மூன்றையும் அடியுடன் மறந்துவிடுதல். இவையே துன்பங்களுக்குக் காரணமாகையால் இவற்றை மறந்தால் துன்பம் நீங்கும் என்பதாம். (ய)

## 36 அவாவறுத்தல்

அவா - பேராசை. அதாவது உள்ளம் புலன்கள் மாட்டுச் செல்வதால், 'பொறிவாயில் ஐந்தவிக்க மாட்டாமை' (6). அறுத்தல் - அடக்குதல்.

351 அவாவென்ப எல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவா பிறப்பு ஈனும் வித்து - எல்லா உயிர்கட்கும் எப்போதும் கெடாத துன்பத்தை விளைவிக்கும் விதையை, அவா என்ப அவா என்று சொல்லுவர் பெரியோர்.

அவா - பேராசை. தவாத - கெடாத. பிறப்பு - அவாவினால் உண்டாகும் துன்பம். அவாவே துன்பங்களுக்குக் காரணமாகும். வித்து - காரணம். (க)

352 வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை ; மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் - ஒருவன் வேண்டும்போது துன்பமில்லாமையே வேண்டுவான்; மற்றது வேண்டாமை வேண்ட வரும் - அத்துன்பமில்லாமை அவாவின்மையை விரும்ப வரும்.

இங்கும் பிறப்பு, அவாவினால் பிறக்கும் துன்பத்தையுணர்த்திற்று. எவரும் துன்பமின்மையையே - இன்பத்தையே விரும்புவர். அவ்வின்பம் அவாவின்மையால் வரும். (உ)

353 வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

வேண்டாமை அன்ன விழுச் செல்வம் - அவாவின்மையைப் போன்ற சிறந்த செல்வம் - ஈண்டு இல்லை -

இவ்வுலகத்தில் இல்லை, யாண்டும் அஃது ஒப்பது இல் - வேறெங்கும் அதைப் போல்வது இல்லை.

வேறெங்கும் இல்லை என்பது எங்குமே இல்லை என்பதாம். அவாவின்மையே துறவிக்குச்சிறந்த செல்வமாகும்.

354 தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

தூய்மை என்பது அவா இன்மை - தூய்மை என்று சொல்வது அவாவில்லாமை, மற்றது வாய்மை வேண்ட வரும் - அவ்வாவின்மையானது உண்மையை விரும்ப வரும்.

தூய்மை - மனத்தூய்மை. உண்மையை விரும்பினுல் அவா அறும்; அவா அற்ருல் மனத்தூய்மை உண்டாகும். (ச)

355 அற்றவ ரென்பா ரவாவற்ருர் மற்றையார்
அற்ருக வற்ற திலர்.

அற்றவர் என்பார் அவா அற்ருர் - பற்றற்றவர் என்பார் ஆசையை நீக்கினவர்களே; மற்றையார் அற்று ஆக அற்றது இலர் - ஆசையை நீக்காதவர் அவ்வாருகப் பற்றற்றவர் இல்லை.

சிலர் பொருளை வெறுத்துப் பேசலாம், அல்லது நீக்கலாம். ஆயினும் மனத்தில் அவா இருக்கலாம். மனமாரத் துறவாதவர்கள் துறவிகளாகார். அற்ருக - முழுமையுமாக. ஆசை அற்றவர்களே உண்மைத் துறவிகள்.

356 அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

ஒருவனை வஞ்சிப்பது அவா - ஒருவனை வஞ்சிப்பது அவா; அஞ்சுவது அறனே - ஆதலால், அவ்வவாவை அஞ்சிக் காப்பதே அறமாகும்.

360 ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா வியற்கை தரும்.

ஆரா இயற்கை அவா நீப்பின் - நிரம்பாத இயல்புடைய அவாவை ஒருவன் நீக்குவானாயின், அந்நிலையே பேரா இயற்கை தரும் - அப்போதே அவனுக்கு அது அசையாத தன்மையைக் கொடுக்கும்.

நிரம்பாமை - போதுமென்னும் முடிவில்லாமை. பேரா - பேராத, உறுதியான. அசையாத தன்மை - மீண்டும் பொருளின்மேல் பற்றுண்டாகாத தன்மை. ஆசை முழுதும் நீங்குவதே உண்மைத் துறவாகும். (ய)

## 37 வாய்மை

உண்மையின் தன்மை. இது இல்வாழ்வார்க்கும் உரியதேனும், பெரும்பான்மையும் பொருள்பற்றி நிகழும் பொய்யை விலக்கலின் துறவறத்திற்குச் சிறந்ததாயிற்று.

361 வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

வாய்மை எனப்படுவது யாதெனின் - உண்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்றால், தீமையாதொன்றும் இலாத சொலல் - பிறருக்குத் தீங்கு சிறிதும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதல்.

வாய்மை யாதென்றார்க்கு இது கூறப்பட்டது. நடந்ததைக் கூறினால் அதுவும் பிறர்க்குத் தீமைதரின் பொய்ம்மையாம்; நன்மைதரின் வாய்மையாம். நடந்தது, நடவாதது எதுவானாலும் பிறர்க்குத் தீமைதராதாயின் கூறலாம்; தீமை தருவதாயின் கூறக்கூடாது. தியாதெனின் - குற்றியலிகரம். (க)

360 ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே
　　பேரா வியற்கை தரும்.

ஆரா இயற்கை அவா நீப்பின் - நிரம்பாத இயல்புடைய அவாவை ஒருவன் நீக்குவானாயின், அந்நிலையே பேரா இயற்கை தரும் - அப்போதே அவனுக்கு அது அசையாத தன்மையைக் கொடுக்கும்.

நிரம்பாமை - போதுமென்னும் முடிவில்லாமை. பேரா - பேராத, உறுதியான. அசையாத தன்மை - மீண்டும் பொருளின்மேல் பற்றுண்டாகாத தன்மை. ஆசை முழுதும் நீங்குவதே உண்மைத் துறவாகும். (ώ)

## 37 வாய்மை

உண்மையின் தன்மை. இது இல்வாழ்வார்க்கும் உரியதேனும், பெரும்பான்மையும் பொருள்பற்றி நிகழும் பொய்யை விலக்கலின் துறவறத்திற்குச் சிறந்ததாயிற்று.

361 வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
　　தீமை யிலாத சொலல்.

வாய்மை எனப்படுவது யாதெனின் - உண்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாதென்றால், தீமையாதொன்றும் இலாத சொலல் - பிறருக்குத் தீங்கு சிறிதும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதல்.

வாய்மை யாதென்றார்க்கு இது கூறப்பட்டது. நடந்ததைக் கூறினால் அதுவும் பிறர்க்குத் தீமைதரின் பொய்ம்மையாம்; நன்மைதரின் வாய்மையாம். நடந்தது, நடவாதது எதுவானாலும் பிறர்க்குத் தீமைதராதாயின் கூறலாம்; தீமை தருவதாயின் கூறக்கூடாது. தியாதெனின் - குற்றியலிகரம். (க)

362 பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

*புரை தீர்ந்த நன்மை பயக்கும் எனின் - குற்றம் நீங்கிய நன்மையைத் தருமாயின், பொய்ம்மையும் வாய்மை இடத்த - பொய்ம்மைச் சொற்களும் உண்மைச் சொற்களாகும்.*

*புரைதீர்ந்த - குற்றமற்ற. வேலனை நீலன் உதைக்க முயற்சிக்கிறான். வேலன் நம்மிடம் அடைக்கலம் புகுகிறான். நாம் அவனை அறைக்குள் மறைத்து வைத்திருக்கிறோம். வேலனைத் தேடிவந்த நீலன் நம்மைப்பார்த்து, 'வேலன் இங்கு வந்தானா? கண்டீர்களா?' என்கிறான். நாம் அவன் இங்கு வரவில்லை. நாங்கள் காணவில்லை என்று பொய் பேசுகிறோம். நீலன் திரும்பிப்போய்விடுகிறான். வேலன் உதையில்லாமல் தப்புகிறான். இப்பொய் வேலனுக்கு நன்மை பயந்ததல்லவா? உண்மையைச் சொல்லியிருந்தால் வேலன் உதைபட்டிருப்பானல்லவா?* (௨)

363 தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

*தன்நெஞ்சு அறிவது பொய்யற்க - ஒருவன் தன் நெஞ்சு அறிந்தவொன்றை மறைத்துப் பொய்சொல்லாதிருக்க; பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச்சுடும் - பொய் சொன்னபின் அதை அறிந்த தனது நெஞ்சமே தன்னை வருத்தும்.*

*நெஞ்சு வருத்துதல் - மனமறிந்த பொய்சொன்னோமென்று பின்பு அவனே வருந்துதல். குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும். இது பிறர்க்குத் தீமைபயக்கும்பொய்.*(௩)

364 உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்.

*உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் - மனமறிய ஒருவன் பொய்பேசாது இருப்பானானல், உலகத்தார் உள்ளத்*

துள் எல்லாம் உளன் - அவன் உலகத்தார் எல்லாருடைய மனத்திலும் இருப்பான்.

உலகினர் எல்லாரும் மனமார அவனைப் போற்றுவார்கள். உண்மையுடையோனை உலகம் போற்றும். காந்தியடிகள் இதற்குச் சான்றாவர். (ச)

365 மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

மனத்தொடு வாய்மை மொழியின் - ஒருவன் தன் மனமார உண்மையைச் சொல்வானாயின், தவத்தொடு தானம் செய்வாரின் தலை - அவன் தவமும் தானமும் ஒருங்கு செய்வாரினும் சிறப்புடையவன் ஆவான்.

தவம் - துறவொழுக்கம். தானம் - கொடை. உண்மை பேசுவோனே உலகில் உயர்ந்தவன். (ரு)

366 பொய்யாமை யன்ன புகழில்லை; எய்யாமை
எல்லா அறமுந் தரும்.

பொய்யாமை அன்ன புகழ் இல்லை - பொய்சொல்லாமையைப் போன்ற புகழ் வேறு இல்லை; எல்லா அறமும் எய்யாமை தரும் - பொய் பேசாமை அவனுக்கு, எல்லா அறங்களையும் ஒழியாமல் தரும்.

எய்யாமை - ஒழியாமை, தவறாமை. உண்மை எல்லா நலங்களையுந் தரும். (சா)

367 பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் - ஒருவன் எப்போதும் பொய் சொல்லாதிருப்பின், பிற அறம் செய்யாமை செய்யாமை நன்று - அவன் வேறு அறங்கள் செய்யாமை நல்லது.

பொய்பேசின் பிற அறங்களின் பயன் கெடும். பொய் பேசாமை என்னும் அறம், மற்ற எல்லா அறங்களின் பயனையும் தருதலால் 'அறம்பிற செய்யாமை நன்று' என்றார். பொய்யாமை பொய்யாமை என்னும் அடுக்கு இடைவிடாமையையும், செய்யாமை செய்யாமை என்னும் அடுக்குத் துணிவையும் குறிக்கும். உண்மையே அறங்களின் ஆணிவேர்; அறமண்டபத்தின் அடிப்படை. (எ)

368 புறந்தூய்மை நீரா னமையும் ; அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

புறம் தூய்மை நீரான் அமையும் - உடம்பு தூய்தாதல் தண்ணீரால் உண்டாகும்; அகம் தூய்மை வாய்மையால் காணப்படும் - அதுபோல, மனம் தூய்தாதல் ஒருவன் சொல்லும் உண்மையால் காணப்படும்.

தூய்தாதல் - சுத்தமாதல். ஒருவன் பேசும் உண்மையிலிருந்து அவன் மனத்தூய்மை யுடையவன் என்பதை யறியலாம். (அ)

369 எல்லா விளக்கும் விளக்கல்ல ; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

எல்லா விளக்கும் விளக்கு அல்ல - புறத்திருளைப் போக்கும் ஞாயிறு, திங்கள், தீ முதலிய விளக்குகளெல்லாம் விளக்கல்ல; சான்றோர்க்கு பொய்யா விளக்கே விளக்கு - பெரியோர்களுக்கு அகத்திருளைப் போக்கும் பொய்யாமையாகிய விளக்கே விளக்காகும். அகத்திருள் - அறியாமை. உண்மையே மனவொளியாகும். (கூ)

370 யாமெய்யாக் கண்டவற்று ளில்லை எனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

யாம் மெய்யாக் கண்டவற்றுள் - நாம் உண்மையாகக் கண்ட அறங்களுள், வாய்மையின் நல்ல பிற எனைத்து

ஒன்றும் இல்லை - உண்மை சொல்லுதலினும் நல்ல பிற அறங்கள் வேறு எவையும் இல்லை. உண்மை எல்லா அறங்களிலும் சிறந்த அறமாகும். (ம)

துறவறவியல் முற்றிற்று

## 4 ஊழியல் (1)

ஊழ் முப்பாலுக்கும் பொதுவாகையால் தனியியலாயிற்று. பொதுவாயினும், அறத்தோ டியைபுடைமையான் அறத்துப்பாலின் இறுதியில் வைக்கப்பட்டது.

### 38 ஊழ்

ஊழ்-முறைமை; உலகியல் நிகழும் முறைமை; உலகியலின் இயற்கை நிகழ்ச்சி. அதாவது - பொருளும் காலமும் செயற்படும் தகுதியும், சுற்றுச் சார்பின் தகுதியும், நமது எண்ணத்தின், முயற்சியின், செயலின் தகுதிக்கு ஒத்து வருதலும் ஒவ்வாது வருதலுமாம். ஒத்து வருதல்- ஆகூழ் எனவும், ஒவ்வாது வருதல் - போகூழ் எனவும் படும். செயற்படுதல் - நிகழுதல். மக்களின் எண்ணம் முதலியவற்றினுள் அடங்காமல் அப்பாற்பட்டு இயற்கையாக நிகழும் நிகழ்ச்சி ஊழ் எனப்படும். அந்நிகழ்ச்சியின் போக்கில் நாம் செய்வன ஆகும். அதற் கெதிரிடையாகச் செய்வன ஆகா.

ஒருவன் பனந்தோப்பிற்குப் பனம்பழத்திற்குச் செல்கிறான். பழம் விழுந்து கிடந்தால் எடுத்துவருவான்; விழாமலிருந்தாலோ, அல்லது முன்னமே ஒருவன் வந்து எடுத்துச் சென்றிருந்தாலோ வெறுங்கையோடு திரும்புவான். திரும்பி வரும் வழியில் தொப்பென்று ஒரு பழம்

விழுந்தால் ஆவலோடு எடுத்துச்செல்வான். பழமெடுத்து வரும்போது பனைக்குடையவன் கண்டு பிடுங்கிக் கொண்டாலும் கொள்வான். 'வந்துவிட்டுச் சும்மா போகிறாய், பாவம்! இந்தா!' என அவன் தான் எடுத்துவந்ததில் ஒன்று கொடுத்தாலும் கொடுப்பான். பனம்பழம் கிடைக்காமல் வரும் வழியில் மாம்பழங் கிடைத்தாலுங் கிடைக்கும். திருடனென்று பிடிபட்டாலும் படுவான். அடியுதை தின்றாலும் தின்பான். நாயோ, பாம்போ கடித்தாலும் கடிக்கலாம். வழியிலே இறந்தாலும் இறக்கலாம்.

ஒருவன் மாடு வாங்கச் சந்தைக்குப் போகிறான். அவன் குறித்துச் சென்ற தகுதியுள்ள மாடு சந்தைக்கு வந்திருக்காது. வந்திருந்தாலும் விலை இசையாது. விலை முடியும்போது மற்றொருவன் வாங்கிக் கொள்ளலாம். குறித்துச் சென்ற மாடு குறித்த விலையில் கிடைத்தாலும் கிடைக்கலாம். மாடு வாங்கப்போய் ஆடோ, அல்லது எருமையோ வாங்கிவந்தாலும் வரலாம். மாடும் கிடைக்காமல் மாடுவாங்கக் கொண்டுபோன பணத்தையும் இழந்து வெறுங்கையோடு வீட்டுக்கு வந்தாலும் வரலாம். திருட்டு மாட்டை வாங்கித் திருடனென்று பிடிபட்டாலும் படலாம். மாடு முட்டி இறந்தாலும் இறக்கலாம். இவையெல்லாம் பொருளும் காலமும் செயற்படும் தகுதியும், ஒருவன் எண்ணம், முயற்சி, செயல் இவற்றின் தகுதியும் ஒத்துவருதலும், ஒத்துவாராமையும் ஆகிய ஆகூழும், போகூழுமாகும்.

ஒருவனிடம் ஏதாவதொன்றை வேண்டி ஒருவன் செல்கிறான். அவன் அமைதியாக இருந்தால் அன்போடு வரவேற்பான். அன்பிருந்தால் வேண்டுவன செய்வான். அவன் ஏதோ மனக்கவலையுடன் இருந்தால் பார்க்க உடன்படான். உடன்படினும் கடுகடுத்துப்பேசுவான். வேண்டுவனவும் செய்யான். செய்ய முன்வரும்போது ஒருவன் குறுக்கே வந்து தடுத்தாலும் தடுக்கலாம்.

அவனை உதவும்படி தூண்டினாலும் தூண்டலாம். விரும்பிச் சென்ற பொருள் அவனிடம் இல்லாதிருந்தாலும் இருக்கலாம். அவன் எண்ணிச் சென்றதிருக்க வேறொரு காரியம் ஆனாலும் ஆகலாம். இன்ன பலவெல்லாம் சுற்றுச் சார்பின் தகுதி, நமது எண்ணம், முயற்சி, செயலின் தகுதிக்கு ஒத்து வருதலும், வராமையுமாகும்.

உலகியலின் இயற்கை நிகழ்ச்சியாகிய இவ்வுண்மையை அறியாது, எண்ணியது முடிந்தால் மகிழ்வதும், முடியாவிட்டால் வருந்துவதும் அறிவுடைமை ஆகாது என அவ்வூழின் தன்மை கூறுகிறார் இவ்வதிகாரத்தில்.

இனி, ஒருவன் நல்லனவே செய்கிறான். ஒருவன் தியனவே செய்கிறான். ஒருவன் நல்லனவும் தீயனவும் கலந்து செய்கிறான். ஒருவன் எப்போதும் சோம்பலுடையவனாகவே இருக்கிறான். விடாப்பிடி, விட்டுக்கொடுத்தல், முரட்டுத்தனம், எளிமைத்தனம், விருப்பு, வெறுப்பு, ஒழுக்கம், ஒழுக்கமின்மை, வாய்மை, பொய்ம்மை, தன்னலம், பொதுநலம், பொறுமை, பொறாமை, ஆசை, அமைதி, நட்பு, பகை ஆகிய இன்ன பலவெல்லாம் மக்களின் உடலமைப்புக் கேற்றவாறு அமையும் தனிப்பட்ட குணங்களாகும். இவை பிறவிக்குணம், இயற்கைக்குணம் எனப்படும். இக் குணமும் உலகியலின் இயற்கை நிகழ்ச்சியாகிய ஊழுக்குத் துணை செய்யும். இவ்வூழ் மக்களின் இயற்கைக்கு மேற்பட்டதாகலின் தெய்வம் (619) எனவும் பெயர் பெறும். தெய்வம் - மேலானது. ஊழின் இயல்பறிந்து அதற்குத்தக நடந்து கொள்ளுதலும், போகூழ்க்கு வருந்தாமையும் இதன் பயன்

371 ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்றும் மடி.

கைப் பொருள் ஆகு ஊழால் அசைவின்மை தோன்றும் - கைப்பொருள் உண்டாகும் ஊழினால் முயற்சி

தோன்றும்; போகு ஊழால் மடி தோன்றும் - கைப் பொருள் குறையும் ஊழினால் சோம்பல் தோன்றும்.

முயற்சியும் சோம்பலுமே கைப்பொருள் ஆகுதல் போகுதலின் ஊழ் என்பதாம். முயன்றால் "ஊழையும் உப்பக்கம் காணலாம்" (620). முயன்றும் ஆகாவிடின் தகுதி ஒவ்வாமையாம். முயலாமலே ஆகின் தகுதி ஒத்த தாம். முயற்சி, சோம்பல் என்னும் இயற்கைக் குணங் களும் துணையாதல் கொள்க. (க)

372 பேதைப் படுக்கு மிழவூழ் அறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை.

இழவு ஊழ் பேதைப் படுக்கும் - கைப் பொருளைக் கெடுக்கும் ஊழ் அறியாமையை உண்டாக்கும்; ஆகல் ஊழ் உற்றக் கடை அறிவு அகற்றும் - கைப்பொருளை ஆக்கும் ஊழ் பொருந்திய விடத்து அறிவை அகலப் படுத்தும்.

இழவு - இழத்தல். அகலுதல் - விரிதல். அறிவின் விரிவும், அறியாமையுமே ஆக்கக் கேட்டுக்குக் காரணங்க ளாகும். (உ)

373 நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

நுண்ணிய பல நூல் கற்பினும் - ஒருவன் நுட்ப மான பல நூல்களைக் கற்றாலும், மற்றும் தன் உண்மை அறிவே மிகும் - பின்பும் தனது இயற்கை அறிவே மேற் படும்.

இது, இளமையிலிருந்து தன் குடும்பத்துடனும், பக்கத்தாருடனும் பழகும் பழக்கமாகிய சுற்றுச் சார்பும், பிறவிக் குணமும் ஒத்தல். கல்லூரிப்பட்டம் பெற்ற ஓர் அறிவியலாசிரியன், நிலமும் திங்களும் ஞாயிற்றைச் சுற்றுவதால் நிழற்பாடு (கிரகணம்) உண்டாகிறது என

மாணக்கர்க்குக் கற்பித்துவிட்டு, அஃதுண்டானதும் 'ஞாயிற்றையும் திங்களையும் பாம்பு கடிக்கிறது' என்னும் உலக வழக்கைப் புராணக் கூற்றின் பால் வைத்து, நீரில் மூழ்கல், உண்ணுதிருத்தல் முதலியன செய்தல் இதன் பாற்படும். (௩)

374 இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

உலகத்து இயற்கை இரு வேறு - உலகத்தின் இயல்பு இரு கூருக உள்ளது; திரு ஆதலும் வேறு தெள்ளியர் ஆதலும் வேறு - செல்வமுடையவர் ஆதலும் வேறு, அறிவுடையவர் ஆதலும் வேறு.

உலகியல்பு - ஊழ். செல்வந்தேடுவோர் எண்ணம், முயற்சி, செயலெல்லாம் அறிவின்பால் செல்வதில்லை. அறிவு தேடுவோர் எண்ண முதலியன வெல்லாம் செல்வத்தின்பால் செல்வதில்லை. இவ்விரண்டும் வெவ்வேறு தகுதியை உடையன. இவற்றை உலகியலில் வெளிப்படையாகக் காணலாம். இது, பிறவிக்குணம் ஒத்தது. (௪)

375 நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

செல்வம் செயற்கு - செல்வந் தேடுங்கால், நல்லவை எல்லாம் தீயவாம் - போகூழானல், ஒருவனுக்கு முன்பு நல்லனவாய் இருந்தன வெல்லாம் தீயனவாகும்; தீயவும் நல்லவாம் - ஆகூழானல், முன்பு தீயனவாய் இருந்தன வெல்லாம் நல்லனவாம்.

நல்லவை, தீயவை - பொருளும், காலமும், செயலும், சுற்றுச் சார்பும். நல்லவை தீயவையாதல் போகூழ், தீயவை நல்லவையாதல் ஆகூழ் எனக் கொள்க. ஒத்து வருதல், ஒத்து வராமையை அறிந்து, ஏற்றவாறு நடந்து கொள்ளலே முறைமையாகும். (௫)

376 பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சோரியினும் போகா தம.

பால் அல்ல பரியினும் ஆகாவாம் - தமக்கு உரிமை யல்லாதவை வருந்தித் தேடினும் ஆகாவாம்; தம உய்த்துச் சொரியினும் போகா - தமக்கு உரிமை உடையவை வெளியில் கொண்டுபோய்க் கொட்டினும் போகாவாம்.

பால்-பக்கம். பால் அல்ல- தம்பக்கம் அல்லாதவை, தமக்குரிமை யல்லாதவை - ஆகுந் தகுதியில்லாதவை. உய்த்துச் சொரிதல்- கொண்டுபோய் எறிதல், வேண்டாமெனல். ஆகுந்தகுதி யில்லாதவை வருந்தினும் ஆகா; ஆகுந்தகுதி யுள்ளவை சும்மா இருந்தாலும் ஆகும். (சு)

377 வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

கோடி தொகுத்தார்க்கும்-கோடியளவு நுகரப்படும் பொருள்களைச் சேர்த்து வைத்தவர்களுக்கும், வகுத்தான் வகுத்த வகையல்லால் துய்த்தல் அரிது-அப்பொருள்களை உண்டாக்கியவர்களது வகைப்படியல்லாமல் வேறுவகையினல் நுகர்தல் முடியாது.

நுகர்பொருள்கள் பலவாகலின், ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வகையினர், ஒவ்வொருவகையாகச் செய்தனர் என்பது தோன்ற 'வகுத்தான்' என ஒருமையால் கூறினர். குளிருக்குரிய கம்பளி வெயிலுக்காகாது. பனிநீரும், தேம்பாகும் சளிப்பிடித்தவனுக்காகா என நுகர் பொருள்களின் தகுதியும், நுகர்வோன் தகுதியும் ஒவ்வாமை கூறினர். பொருள்களின் தகுதிக்குமாருக நுகரப் படாதென்பது கருத்து. அல்லதூஉம், 'வகுத்தான்' என்பதை ஊழ் எனக்கொண்டு, வகுத்தான் வகுத்த வகையல்லால் - ஊழின்படி யல்லாமல் எனினுமாம்.

செல்வமிருந்தும் நோயாளர் அதை நுகர முடியாமை காண்க. (எ)

378 துறப்பார்மற் றும்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின்.

உறல் பால ஊட்டா கழியும் எனின் - தமக்கு வருந் துன்பங்கள் வராமல் போகுமானால், துப்புரவு இல்லார் துறப்பார் - வறுமையால் நுகரப்படும் பொருளில்லாதவர் துறப்பார்.

துன்பங்கள் - காமம் வெகுளி மயக்க முதலியன (360). ஒருவன் துறக்க எண்ணினும் காமமுதலியன அவனைத் துறக்க விடாமல் செய்யும். அவை தோன்றாவாயின் எளிதில் துறப்பான். ஊட்டா - ஊட்டாது. ஆசையற்றவர் வறுமையுற்றால் துறப்பர் என்பது கருத்து. பற்றறினும் இயற்கை நிகழ்ச்சி பின்னும் துன்புறுத்துகிறது என்பது ஒழிந்து நிற்றலின் மன் ஒழியிசை. (அ)

379 நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

நன்று ஆங்கால் நல்லவாக் காண்பவர்-நல்லவை உண்டாகும்போது அவற்றை நல்லவை என்று துய்த்து இன்புறுகின்றவர்கள், அன்று ஆங்கால் அல்லல் படுவது எவன் - தீயவை உண்டாகும்போது துன்பப்படுவது எதற்காக?

உலகியல்புப்படி இன்பத்தை நுகர்ந்தவர் அவ்வாறே துன்பத்தையும் நுகரவேண்டும். (கூ)

380 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

மற்றொன்று சூழினும் தான் முந்துறும் - ஊழை நீக்க வேறொன்றை ஆராய்ந்தாலும் அவ்வூழ் முன்னே

வந்து நிற்கும்; ஊழிற் பெருவலி யாஉள - ஆதலால், ஊழைவிட மிக்க வலிவுடையவை எவையுள்ளன? ஒன்று மில்லை.

உலகியல்பு வேறாக இருக்க நாமொன்றைச் செய்தால் அவ்வுலகியல்புப்படியே நடக்குமாகையால், அவ்வுலகியல்பைவிட வலியுடைய பொருள் இல்லை என்றார். (ய)

அறத்துப்பால் முற்றிற்று

# 2 பொருட்பால்

பொருளாவது-அறமும் இன்பமும் துய்த்து இனிது வாழ்தற்கேதுவாகிய இடமும் பொருளும் நுகர்பொருளும். இம் மூவகைப்பட்ட பொருளைக் கொண்டு அறமும் இன்பமும் துய்த்து, தத்தம் உரிமையுடன் வாழ்வதற்குத் துணைசெய்வது அரசுமுறை ஆகலின், அதனையே பொருளெனப் படைத்துக் கூறுகிறார் ஆசிரியர். அரசு - காவல். அரசு முறை - காவலை நடத்தும் முறைமை. அது, 1 அரசியல், 2 அமைச்சியல், 3 சூழியல், 4 அரணியல், 5 படையியல், 6 நட்பியல், 7 குடியியல் என எழுவகைப்படும்.

## 1 அரசியல் (25)

அரசியல்-அரசனது இயல்பு. நல்லரசின் இலக்கணம். இவ்வியலிற் கூறப்படும் இலக்கணங்கள் எல்லா அரசியல் தலைவர்க்கும் பொருந்தும்.

### 39 இறைமாட்சி

அரசனது நற்குண நற்செய்கைகள். இறை - அரசன், தலைவன். மாட்சி - நன்மை.

381 படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு.

படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் - இவ்வாறு உறுப்புக்களையும் உடையவன், அரச

ருள் ஏறு-அரசர்களுள் அரியேறு (சிங்கம்) போல்வான்.

குடி - குடிமக்கள். கூழ் - உணவுப் பொருள். அது 'தள்ளா விளைவு' (731) உள்ள நாட்டையுணர்த்திற்று. படை குடிகூழ் அமைச்சு நட்பு அரண் என்னும் ஆறும், அமைச்சு கூழ் அரண் படை நட்பு குடி என முறைப்படும். இவை இப்பாலின் இயல்களின் தோற்றுவாயாகும். 'ஆறும்' என்ற உம்மையால், இவ்வாறும் குறைவின்றி நன்கு அமைந்திருக்க வேண்டும் என்பதாம். அமைச்சு முதலிய உறுப்புக்கள் ஆறும் நன்கு அமையப்பெற்றவனே சிறந்த அரசனவான். (க)

382 அஞ்சாமை யீகை யறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.

அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை-மனவுறுதி கொடை அறிவு முயற்சி என்னும் இந்நான்கு குணமும் குறையாமல் அமைந்திருத்தல், வேந்தற்கு இயல்பு - அரசனுக்கு இயல்பாகும். எஞ்சாமை - எப்போதும் குறையாமை. (உ)

383 தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.

நிலன் ஆள்பவற்கு - நிலத்தை ஆளும் அரசனுக்கு, தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் நீங்கா - சோம்பலின்மை, கல்வி, ஆண்மை ஆகிய இம் மூன்றும் எப்பொழுதும் நீங்காமலிருக்கவேண்டும்.

அரசனுக்குச் சோம்பலின்மை முதலிய மூன்று குணங்களும் எப்போதும் அமைந்திருக்கவேண்டும். (ங)

384 அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

அறன் இழுக்காது - அறநெறி தவறாது, அல்லவை நீக்கி - அறமல்லாத குற்றங்களை நீக்கி, மறன் இழுக்கா மானம் உடையது அரசு - வீரத்தினின்று தவறாத மானத்தையுடையவனே அரசனாவான்.

அறநெறி தவறாது, குற்றங்களின்றி, குற்றமற்ற மானமுடையவனே அரசன். (௪)

385 இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

இயற்றலும் - பொருள் வரும் வழிகளை மேன்மேல் உண்டாக்கலும், ஈட்டலும்-அவ்வழிகளில் பொருள்களை ஈட்டிச் சேர்த்து வைத்தலும், காத்தலும் - அவற்றைக் காப்பாற்றுதலும், காத்த வகுத்தலும் - அப்படிக் காப்பாற்றியவற்றை நாட்டு மக்கள் நலத்தில் செலவிடுதலும், வல்லது அரசு - வல்லவனே அரசனாவான்.

காத்த-காக்கப்பட்ட பொருள். பொருள்வரும் வழிகளை ஆராய்ந்து பொருளீட்டிக் காத்து நாட்டு நலம்புரிய வல்லவனே அரசனாவான். (௫)

386 காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறும் மன்ன னிலம்.

காட்சிக்கு எளியன்-காண்பதற்கு எளியனாய், கடுஞ்சொல்லன் அல்லனேல் - எவரிடத்தும் கடுஞ்சொல் சொல்லாதவனாகில், மன்னன் நிலம் மீக்கூறும் - அம்மன்னனை உலகத்தார் உயர்த்திக்கூறுவர்.

காண்பதற்கு எளியனாதல் - குடிமக்கள் எவரும் தாமே நேரில் சென்று பார்த்துத் தம் குறையையும்

முறையையும் கூறிக்கொள்ளும் நிலையில் உள்ளவனுதல். குறை - வேண்டுவன. முறை - வழக்கு. பிறர் மூலம் கூறின் உள்ளபடி கூறுர். நேரில் கூறுவதுபோல் இராது. காட்சிக் கெளியனுயினும், கடுஞ்சொல்லுடையனுயின் குடிமக்கள் தங்கள் குறையை உள்ளபடி கூறிக்கொள்ள முடியாது. நிலம் - நிலம் வாழ்மக்கள். மீக்கூறுதல் - உயர்த்துக் கூறுதல். மீ - மேல், உயர்வு. (சு)

387 இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றன்கண் டனைத்திவ் வுலகு.

இன் சொலால் ஈத்து அளிக்க வல்லாற்கு - இனிய சொல்லுடனே வேண்டியதைக் கொடுத்துக் காக்கக்கூடிய அரசனுக்கு, இவ்வுலகு தன்சொலால் தான் கண்டு அனைத்து - இவ்வுலகம் தன் ஏவலினுலே தான் எண்ணிய படி நடக்கும்.

இன்சொல்லோடு கொடுத்துக் காப்பாற்ற வல்ல அரசன் சொற்படி நாட்டு மக்கள் நடப்பர்.. தான் கண்டு அனைத்து - தான் எண்ணியபடியாகும். (எ)

388 முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் - குற்றஞ் செய்தாரைத் தண்டித்து முறை செய்து, நாட்டுமக்களைக் காக்கும் அரசன், மக்கட்கு இறை என்று வைக்கப்படும் - மக்களுக்குத் தலைவன் என்று கருதப்படுவான்.

குற்றங்கடிந்து குறைதீர்ப்பது முறைசெய்தலாகும். தலைவன் என்று மக்களால் மதிக்கப்படுவோனே நல்லரசனுவான். (அ)

389 செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

*செவி கைப்பச் சொல் பொறுக்கும் பண்புடை வேந்தன் - காது வெறுக்கும்படி பிறர்சொல்லும் கடுஞ்சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் குணமுடைய அரசனது, கவிகைக்கீழ் உலகு தங்கும் - குடையின்கீழ் உலகம் தங்கும்.*

*பிறர்சொல்—பெரியார் கூறும் உறுதிச் சொல்லும்* (447, 448), *குடிகள் முறையீடும். கவிகைக் கீழ் தங்கல் - அவன் ஆணைப்படி நடத்தல். அவன் ஆட்சியை விரும்பி நடத்தல்.* (௯)

390 கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி.

*கொடை அளி செங்கோல் குடி ஓம்பல் நான்கும் உடையான்-வேண்டுவோர்க்கு வேண்டுவன கொடுத்தல், முகமலர்ந்து இனியகூறல், செங்கோன்மை, குடிகளைப் பாதுகாத்தல் என்னும் நான்கையும் உடையவன், வேந்தர்க்கு ஒளி ஆம் - அரசர்களுக்கெல்லாம் விளக்காவான்.*

*கொடுத்தல் - தளர்ந்த குடிகட்கு வேண்டுவன கொடுத்தல். செங்கோன்மை-முறைமை. குடியோம்பல்- தளர்ந்த குடிகட்கு இறைகழித்தல்* (வரிநீக்கம்). *விளக்காதல் - முதல்வனாதல்.* (ய)

## 40 கல்வி

கற்க வேண்டிய கலைகளைக் கற்றுணர்தல். அரசர்க்குக் கூறினும் ஏனையோர்க்கும் உரியதாகும்.

391 கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

கற்பவை கசடுஅற கற்க - ஒருவன் கற்கவேண்டியவற்றைக் குற்றமறக் கற்க வேண்டும்; கற்றபின் அதற்குத் தக நிற்க - அவ்வாறு கற்றபின் அக்கல்விக்குத் தகுதியாக நடக்க வேண்டும்.

கல்விக்குத் தகுதியாக - கற்றபடி. இக்குறட்பாவொன்றிலே ஒருவனுக்கு வேண்டிய வெல்லாம் அடங்கின. இதையே தமிழ் விடு தூதுடையார், "கற்க...தகவென்ற - சொற்குள்ளே - எல்லார்க்கும் புத்தி இயம்பிக் கரையேற்ற வல்லாய்! உனக்குரைக்க வல்லனோ?" என்றார். கசடு அறக்கற்றல்-ஐயந்திரிபு அறக் கற்றல். ஐயம்-இதுவோ அதுவோ என்றையுறுதல். திரிபு- உண்மைப் பொருளை விட்டு வேறுபொருள் கொள்ளுதல். கற்றபடி நடப்பதே கல்வியின் பயன். (க)

392 எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் - எண்ணென்று சொல்வனவும், மற்றை எழுத்து என்று சொல்வனவும் ஆகிய இவ்விரண்டும், வாழும் உயிர்க்குக் கண் என்ப - மக்களுக்கு கண்ணென்று சொல்லுவர் அறிவுடையோர்.

எண் - பொருள்களைப். பலவகை அளவைகளால் எண்ணி அறிதல். எண்-எணுதல். எழுத்து பொருள்களை எழுதியறிதல். எண்-கணக்கு. எழுத்து-இலக்கிய

மும் இலக்கணமும். எழுதுதல், படித்தல் இரண்டும் 'எழுத்து' என்பதில் அடங்கும். எண்ணும் எழுத்தும் பலவாகலின் 'என்ப' எனப் பன்மையாற் கூறினர். இவ் விரண்டும் கல்வியின் கருவிகளாகும். (உ)

393 கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

கண்ணுடையர் என்பவர் கற்றோர் - கண்ணுடையர் என்று உயர்த்துச் சொல்லப்படுபவர் கற்றவரே; கல்லாதவர் முகத்து இரண்டு புண் உடையர்-கல்லாதவர் முகத்தில் இரண்டு புண்களை உடையவராவர்.

அயல் நாட்டைப் பற்றியும், பழங்காலத்தைப் பற்றியும் அறியும் அறிவுக்கண்ணுடைமையான் கற்றாரைக் கண்ணுடையர் என்றும், நோய் வருதல், பீளை தோன்றுதல் முதலிய துன்பஞ் செய்யும் ஊனக்கண்ணை உடைமையின் கல்லாரை முகத்திரண்டு புண்ணுடையர் என்றும் கூறினர். கற்று அறிவுக்கண் பெற வேண்டும். (ங)

394 உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

உவப்பத் தலைக்கூடி - யாவரும் மகிழும்படி கூடி, உள்ளப் பிரிதல் அனைத்தே-இனி என்று இவரைக் கூடுவோம் என்று அவர்கள் நினைக்கும்படி நீங்குதலாகிய அத் தன்மையதே, புலவர் தொழில்- கற்றோரது கொள்கை.

பொதுமக்கள், கற்றார் கூட்டுறவுக்கு மகிழ்ந்து, அவர் பிரியும்போது இனி என்று வருவார் என்று எண்ணுவதால், கல்வி சிறப்புடையதொன்றாகும். கற்றாரிடம் எல்லாரும் அன்பு கொள்வர். (ச)

395 உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார் செல்வர்முன் வறியர் விரும்பி நிற்பதுபோல ஆசிரியரிடம் விரும்பி நின்றும் கற்றவரே உயர்ந்தவராவர்; கல்லாதவர் கடையரே – அவ்வாறு கல்லாதவர் தாழ்ந்தவராவர்.

ஏக்கறுதல் – விரும்பி நிற்றல். செல்வர்முன் வறியர் தமக்கு வேண்டியதை விரும்பிநிற்பதுபோல, ஆசிரியரிடம் கல்வியை விரும்பி நின்று கற்கவேண்டும். உயர்வு தாழ்வு – மதிப்பு மதிப்பின்மை. (ரு)

396 தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

மணல் கேணி தொட்டனைத்து ஊறும் – ஊற்று தோண்டிய அளவு நீர் சுரக்கும்; மாந்தர்க்குக் கற்றனைத்து அறிவு ஊறும் – அதுபோல, மக்கட்குக் கற்ற அளவு அறிவு உண்டாகும்.

ஊற்று – ஆறு, நீரோடைகளில் தோண்டும் ஊற்று. ஊற்றுத் தோண்டத்தோண்ட நீர் ஊறுவதுபோல, கற்கக்கற்க அறிவு வளரும். (சா)

397 யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

யாதானும் நாடாம் ஊராம் – கற்றவனுக்கு எந்த நாடும் தன்னுடாகும்; எந்த ஊரும் தன்னூராகும்; ஒருவன் சாம் துணையும் கல்லாத ஆறு என் – ஆகையால், ஒருவன் சாகும்வரையில் கல்லாமல் இருப்பது என் கருதி? கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு. ஆல் – இரண்டும் அசை. (எ)

398 ஒருமைக்கட் டான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

ஒருவற்கு ஒருமைக்கண் தான் கற்ற கல்வி - ஒருவனுக்கு ஓரிடத்தில் தான் கற்ற கல்வியானது, எழுமையும் ஏமாப்பு உடைத்து - பலவிடங்களிலும் சென்று உதவுதலையுடைத்து.

எழுமை என்னும் பெயர் பல என்னும் பொருளது; 62-ம் குறளுரை பார்க்க. ஒருவன் ஓரிடத்திலிருந்து கற்கிறான். அவனால் செய்யப்பட்ட நூற்கள் பல இடங்களிலும் (உலகெல்லாம்) பரவி அவனைச் சிறப்பிக்கிறது. (அ)

399 தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு - தாம் இன்புறும் கல்வியால் உலகத்தார் இன்புறுதலைக் கண்டு, கற்றறிந்தார் காமுறுவர் - கற்றறிந்தவர்கள் மேலும் மேலும் கற்க விரும்புவர்.

தாம் இன்புறுதல் - சொற்பொருளின் சுவை நுகர்ந்து இன்புறுதலும், தம் அறிவையும், ஆராய்ச்சியையும், இயற்றிய நூல்களையும் எண்ணி இன்புறுதலுமாம். உலகு இன்புறுதல் - அறிவு ஆராய்ச்சித் திறனையும், இயற்றிய நூலின் நுட்பத்தையும் கண்டும், சொல்லைக் கேட்டும் இன்புறுதல். (கூ)

400 கேடில் விழுச்செல்வங் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

ஒருவற்கு கேடு இல் விழுச்செல்வம் கல்வி - ஒருவனுக்கு அழிவற்ற சிறந்த செல்வமாவது கல்வி, மற்றையவை மாடு அல்ல - மற்றவையெல்லாம் பொருளல்ல. கல்வியே சிறந்த பொருளாகும். மாடு - பொருள். (ய)

## 41 கல்லாமை

கல்லாமை என்றது - கல்லாமையால் வரும் இழிவினை. கல்வியின் சிறப்பு முன் நேர்முகமாகக் கூறிய அளவில் முற்றுப் பெறுமையால் எதிர்மறை முகத்தால் கூறுகின்றார்.

401 அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

*நிரம்பிய நூல் இன்றிக் கோட்டி கொளல் - நிறைந்த நூல்களைக் கல்லாமல் அவையின்கண் ஒன்றைச் சொல்லுதல், அரங்கு இன்றி வட்டு ஆடி அற்றே - சூதாடுதற்குரிய இடத்தை அமைக்காமல் சூதாடு கருவியை உருட்டினால் போன்றது.*

*நிரம்புதல் - அறியவேண்டுவன வெல்லாம் அறிதல். கோட்டி - அவை. அரங்கு - சூதாடுமிடம். அதாவது தாயக்கரம்போன்றது. வட்டு - சூதாடு கருவி. கல்லாதார் ஒன்றைச் சொல்லுதல் தப்பு.* (க)

402 கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லதாள் பெண்காமுற் றற்று.

*கல்லாதான் சொல்காமுறுதல் - கல்வி யில்லாதவன் அவையில் பேசுதலை விரும்புதல், முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்று அற்று - இரண்டு முலையும் இல்லாதவள் பெண்மையை விரும்புவது போலும்.*

*இல்லாதாள் பெண்மையை இளைஞர் விரும்பாதது போல, கல்லாதான் சொல்லை அறிஞர் விரும்பார். இல்லாதாள் தன் பெண்மையை விரும்புவது போன்றது, கல்லாதான் தன் சொல்லைக் காமுறுதல். அவையோர் அவன் பேச்சைச் சிறிதும் விரும்பார் என்பதாம்.* (உ)

403 கல்லா தவரும் நனிநல்லர் கற்ருர்முற்
சோல்லா திருக்கப் பேறின்.

கற்ருர் முன் சொல்லாது இருக்கப் பெறின் - கற்றவர் முன்பு பேசாதிருப்பாராயின், கல்லாதவரும் நனி நல்லர்- கல்லாதவரும் மிகவும் நல்லவராவர். சொல்லாதிருந்தால் இவர் அறியாமை வெளிப்படாதென்பதாம். (௩)

404 கல்லாதா னொட்பங் கழியநன் ருயினுங்
கோள்ளா ரறிவுடை யார்.

கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும் - கல்லாதவனுடைய அறிவு மிகவும் நன்ருயிருப்பினும், அறிவுடையார் கொள்ளார் - அறிவுடையார் அதனை அறிவாகக் கொள்ள மாட்டார்.

ஒட்பம் - ஒண்மை, அறிவுடைமை. அவ்வறிவு நல்லறிவாகாது. ஆயினும், சேற்றின் மீது உள்ள நண்டின் தாரையை எழுத்தென்பது போன்றதேயாகும். (௪)

405 கல்லா வோருவன் றகைமை தலைப்பேய்து
சோல்லாடச் சோர்வு படும்.

கல்லா ஒருவன் தகைமை - கல்லா ஒருவனது பெருமை, தலைப்பெய்து சொல்லாடச் சோர்வு படும் - கற்ருெருவன் வந்து உரையாட மறைந்து விடும்.

தலைப்பெய்தல் - ஒன்று கூடுதல். "பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால் கீச்சுக்கீச் சென்னும் கிளி" என்பது காண்க. (௫)

406 உளரேன்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

கல்லாதவர் உளர் என்னும் மாத்திரையர் அல்லால்- கல்லாதவர் இருக்கின்றனர் என்னும் அளவினை உடைய

வர் அல்லாது, பயவாக் களர் அனையர் - விளையாத களர் நிலத்தை ஒப்பர்.

உளர் என்னும் மாத்திரையர் - பேருக்கு இருப்பவர், அல்லது எண்ணிக்கைக்கு இருப்பவர். களர் - உவர்நிலம். புல்லும் முளையாது. களர் நிலம் போலப் பேருக்கு இருப்பவரே கல்லாதவர்; பயன் சிறிதும் இல்லை. (சு)

407 நுண்மா ணுழைபுல மில்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

நுண்மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்-நுட்பமான நல்ல பல நூல்களிலும் நுழைந்து பார்க்கும் அறிவு இல்லாதவனுடைய தோற்றமும் அழகும், மண் மாண் புனை பாவை அற்று-மண்ணால் நன்றாகச் செய்த பொம்மையின் தோற்றமும் அழகும் போலும்.

அறிவில்லாதவர் பொம்மை போன்றவரே. நுழை புலம்-நுட்பமான பொருளிலும் நுழையும் அறிவு. (எ)

408 நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

கல்லார்கண்பட்ட திரு - கல்லாதவரிடத்து நின்ற செல்வம், நல்லார்கண்பட்ட வறுமையின் இன்னாது-கற்றவரிடத்து நின்ற வறுமையைவிடத் துன்பந் தருவதாகும்.

உடையானை வருத்துதலும், உலகை வருத்துதலும் திரு, வறுமை இரண்டிற்கும் ஒக்குமாயினும், திரு கல்லாரைக் கெடுக்கும்; வறுமை கற்றாரைக் கெடுக்காது நிற்றலான் வறுமையினும் திரு இன்னாது என்றார். (அ)

409 மேற்பிறந்தா ராயினுங் கல்லதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

கல்லாதார் மேல் பிறந்தார் ஆயினும் - கல்லாதவர் உயர் குடியில் பிறந்தாராயினும், கீழ்ப்பிறந்தும் கற்றார்

அனைத்து பாடு இலர்-தாழ் குடியில் பிறந்தும் கற்றாரைப் போலப் பெருமை இல்லாதவராவர்.

உயர்குடி-வழிவழியாக நல்லொழுக்கமுள்ள குடி. தாழ்குடி-நல்லொழுக்கமில்லாத குடி. கல்வியே ஒருவன் பெருமைக்குக் காரணம். (கூ)

410 விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

இலங்கு நூல் கற்றாரோடு ஏனையவர்-விளங்கிய நூல்களைக் கற்றவரோடு கல்லாதவரை ஒப்பிட்டுப் பார்க்கின், விலங்கொடு மக்கள் அனையர்-விலங்குகளுடன் மக்களை ஒப்பிட்டுப் பார்க்கின் உள்ள வேறுபாடுடையவராவர்.

விலங்குக்கும் மக்களுக்கும் உள்ள வேறுபாடே நூலைக் கற்றவருக்கும் கல்லாதவருக்கும் உள்ள வேறுபாடு. கல்லாதவர் விலங்கினை ஒப்பர். (ய)

## 42 கேள்வி

ஒருவன் தான் கற்றதோடு நில்லாது, கற்றறிந்த பெரியோர் கூறுவதைக் கேட்க வேண்டும் என்பது.

411 செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்-செல்வங்களுள் சிறந்த செல்வமாவது கேள்வி; அச் செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை-அக் கேள்விச் செல்வமானது மற்றைச் செல்வங்கள் எல்லாவற்றினும் முதன்மையானது.

நிலையில்லாத பொருட் செல்வங்களினும் நிலையான கேள்விச் செல்வம் சிறந்தது. (க)

412 செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

செவிக்கு உணவு இல்லாத போழ்து-செவிக்கு உணவாகிய கேள்வி இல்லாத போது, வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும்-வயிற்றுக்கும் சிறிது கொடுக்கப்படும்.

மிகுதியாக உண்டால் கேள்வியை விரும்பாது, தீமையை விரும்புமாதலான் சிறிது என்றார். ஈயப்படும் என்பது வயிற்றின் இழிவு தோன்ற நின்றது. உணவினும் கேள்வி இன்றியமையாதது. (௨)

413 செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.

செவி உணவின் கேள்வி உடையார்-செவியுணவாகிய கேள்வியினை உடையவர், நிலத்து அவி உணவின் ஆன்றாரோடு ஒப்பர்-நிலத்தில் குறைந்த உணவினையுடைய நிறைந்த அறிவினையுடையவரை ஒப்பர்.

அவிதல்-குறைதல். அவி உணவு-வினைத்தொகை. ஆன்றோர்கள், நிறையுணவினை விரும்பாது குறையுணவுண்டு புலனடக்கிப் புத்தொளிபெறுவராகையால் 'அவியுணவின் ஆன்றோர்' என்றார். கேள்விச் செல்வமுடையோர் ஆன்றோர்போல மதிக்கப் பெறுவர். (௩)

414 கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

கற்றிலன் ஆயினும் கேட்க-கற்க வேண்டிய நூல்களைக் கற்றிலனாயினும் அவற்றைக் கற்றறிந்தார் சொல்லக் கேட்கவேண்டும்; அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்று ஆம் துணை-அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி வந்தபோது ஊன்று கோல் போன்ற துணையாகும்.

ஒற்கம் - தளர்ச்சி. தளர்ச்சி - வறுமையாலோ, அறியாமையாலோ துன்பம் வந்தவிடத்து மனந்தளர்தல்.

ஊற்று-ஊன்று-ஊன்றுகோல். கேள்விச்செல்வம் இடையூறுவந்தபோது உதவும். (சு)

415 இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்.

ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல்-நல்லொழுக்கம் உடையவரது வாயிலிருந்து வரும் சொல், இழுக்கல் உடை உழி ஊற்றுக் கோல் அற்று-வழுக்குதலையுடைய இடத்தில் நடப்பார்க்கு ஊன்று கோல் போன்றது.

கல்வியுடையரேனும் ஒழுக்க மில்லாதார் அறிவிலராகலின் அவர் வாய்ச்சொற் கேட்கப்படாது. ஒழுக்கமுடையார் சொல்லே கேட்கத்தக்கது. (ரு)

416 எனைத்தானு நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

எனைத்தானும் நல்லவை கேட்க-எவ்வளவு சிறிதாயினும் நல்ல கேள்விகளைக் கேட்க; அனைத்தானும் ஆன்ற பெருமைதரும் - அவ்வளவே ஆயினும் அக்கேள்விகள் மிகுந்த பெருமையைக் கொடுக்கும். கொஞ்சமாயினும் நல்ல கேள்விகளையே கேட்கவேண்டும். (சா)

417 பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்
தீண்டிய கேள்வி யவர். [துணர்ந்

இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வியவர்-நுண்ணிதாக ஆராய்ந்தறிந்ததோடு மிகுந்த கேள்வியறிவினையும் உடையவர்; பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார்-தப்பாக உணர்ந்தாலும் அறிவுக்குப் பொருந்தாத சொற்களைச் சொல்லார்.

பிழைத்து உணர்ந்தும் என்னும் உம்மை, அவ்வாறு உணரமாட்டார்; தவறி உணரினும் தப்பாகப் பிறர்க்குச் சொல்லமாட்டார் என்பது குறித்தது. கல்வி கேள்வி

யுடையார் அறிவுக்குப் பொருந்தாத சொற்களைச் சொல்ல மாட்டார். (எ)

418 கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

கேள்வியால் தோட்கப் படாத செவி-பெரியோர் கூறுஞ் சொற்களால் துளைக்கப்படாத செவிகள், கேட்பினும் கேளாத்தகையவே-கேட்பினும் செவிடாந் தன்மையேயாகும்.

செவிடாந்தன்மை-செவிட்டுக்காது. ஆன்றோர் அறிவுரைகளைக்கேட்கும் செவியே கேட்கும் செவியாகும். (அ)

419 நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

நுணங்கிய கேள்வியர் அல்லார்-நுட்பமாகிய கேள்வியைக் கேளாதவர், வணங்கிய வாயினர் ஆதல் அரிது-பணிந்த மொழியை உடையர் ஆவது இல்லை.

பணிந்த மொழி-அடக்கமாகப் பேசுதல். கேள்விச் செல்வ முடையவரே பணிவாகப் பேசுவார். (கூ)

420 செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென்.

செவியில் சுவை உணரா வாய் உணர்வின் மாக்கள் - காதுகளால் நுகரும் இன்பத்தை உணராது வாயால் நுகரும் இன்பத்தை மட்டும் உணர்வார், அவியினும் வாழினும் என்-இறந்தாலும் வாழ்ந்தாலும் உலகத்தாருக்கு வருவது என்ன ?

வாயுணர்வு-இனிப்பு, புளிப்பு முதலிய சுவைகளை உணரும் உணர்வு. கேள்வியறிவில்லார் இறப்பதும் இருப்பதும் ஒன்றே. (ம)

## 43 அறிவுடைமை

*அறிவின் தன்மையும் சிறப்பும்.*

421 அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண்.

அறிவு அற்றம் காக்கும் கருவி-அறிவே அழிவு வராமல் காவல் செய்யும் கருவியாகும்; செறுவார்க்கும் உள் அழிக்கல் ஆகா அரண்-பகைவர்க்கும் உட்புகுந்துஅழிக்க முடியாத அரணுமாகும்.

அற்றம்-அழிவு. அரண்-கோட்டை. அறிவு வராமல் காக்கும் கருவியும், பகைவரால் அழிக்க முடியாத கோட்டையும் அறிவேயாகும். (க)

422 சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

சென்ற இடத்தால் செலவிடா-மனம் சென்ற விடத்தில் அதைச் செல்லவிடாது, தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு-தீமையைவிட்டு நீக்கி நன்மையின்பால் செலுத்துவது அறிவாகும்.

விடாது-ஈறு கெட்டது. ஒரீஇ-ஒருவி-நீக்கி. மனம் போன போக்கில் விடாது, தீமையின்பால் செல்ல விடாது நன்மையின்பால் செலுத்துவது அறிவாகும். மனம்போனபடி நடக்காமல் தீமை செய்யாது நன்மை செய்வதே அறிவாகும். (உ)

423 எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்-யாதொரு பொருளை யார் யார் சொல்லக் கேட்பினும், அப்பொருள்

மெய்ப் பொருள் காண்பது அறிவு-அப்பொருளின் உண்மைப் பொருளைக் காண்பதே அறிவாகும்.

ஒருவர் பேசும் பேச்சிலுள்ள உண்மையைக் காண்பதே அறிவாகும். யார் யார் என்னும் அடுக்குப் பன்மை குறித்தது. (௩)

424 எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

தான் எண் பொருள ஆகச் செலச் சொல்லி-தான் சொல்வன அரிய பொருளுடையன வாயினும் எளிய பொருளுடையனவாகக் கேட்போர் மனங் கொள்ளும்படி சொல்லி, தான் பிறர்வாய் நுண் பொருள் காண்பது அறிவு-பிறர் பேசும் பேச்சின் நுண்ணிய பொருள்களைக் காண்பதே அறிவாகும்.

தான் பிறர்க்கு எளிதில் விளங்கும்படி பேசிப் பிறர் பேச்சின் நுண்ணிய பொருளைக் காண்பதே அறிவாகும். எண்மை-எளிமை. (௪)

425 உலகந் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலு மில்ல தறிவு.

உலகம் தழீஇயது ஒட்பம்-உயர்ந்தோரை நட்பாக்குவது அறிவுடைமை; மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு-அந் நட்பினிடம் விரிதலும் குவிதலும் இல்லாது ஒரு தன்மையனாவது அறிவுடைமையாகும்.

ஒட்பம் - அறிவு. முன் பெருகிப் பின் சுருங்காமல் இருக்கவேண்டும். எப்போதும் ஒரே தன்மையாகப் பெரியாரிடம் நட்புக்கொள்வதே அறிவுடைமையாகும். (௫)

426 எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

உலகம் எவ்வது உறைவது - உலகம் எவ்வாறு நடக்கிறது - உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு - அவ்வுலகத்துடன் அவ்வாறு நடப்பது அறிவாகும்.

உலகம் - உயர்ந்தோர். உலகத்தோடு ஒத்து நடப்பதே அறிவுடைமையாகும். (சு)

427 அறிவுடையா ராவ தறிவார்; அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

ஆவது அறிவார் அறிவுடையார் - பின் வருவதனை முன்னதாக அறியவல்லவரே அறிவுடையராவர்; அஃது அறிகல்லாதவர் அறிவிலார் - அவ்வாறு அறியமாட்டாதவர் அறிவில்லாதவர் ஆவர்.

பின் வருவதனை முன்னமே எண்ணி யறியவல்லாரே அறிவுடையராவர். அவ்வாறு எண்ணியறிய மாட்டாதார் அறிவிலாராவர். (எ)

428 அஞ்சுவ தஞ்சாமை பேதைமை; அஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை - அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமை அறிவின்மையாகும்; அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் - அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுதல் அறிவுடையார் செயலாகும்.

அஞ்ச வேண்டியது - தீமை. அஞ்ச வேண்டியதற்கு அஞ்சுவதே அறிவுடைமையாகும். (அ)

429 எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு - பின் வருவனவற்றை முன் அறிந்து காக்கும் அறிவுடையோர்க்கு,

அதிர வருவதோர் நோய் இல்லை - நடுங்கும்படி வருவதொரு துன்பம் இல்லை.

பின்வருவதை முன்னறிந்து காக்கும் அறிவுடையோர்க்குத் துன்பம் இல்லை. (கூ)

430 அறிவுடையா ரெல்லா முடையார் ; அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.

அறிவுடையார் எல்லாம் உடையார் - அறிவுடையோர் எல்லாம் உடையவராவர் ; அறிவிலார் என் உடையரேனும் இலர் - அறிவில்லாதவர் எல்லா முடையராயினும் ஒன்றுமில்லாதவராவர்.

எல்லாம் - செல்வம் அறிவால் படைத்துக் காக்கப்படுதலின் அறிவுடையார் எல்லாச் செல்வமும் உடையர் என்றும், அறிவிலார் ஒன்றும் இலர் என்றும் கூறினர்.(ய)

## 44 குற்றங்கடிதல்

அறிவுடையோரால் குற்றமெனக் கடியப்பட்டவற்றைத் தன்கண் நிகழாமல் கடிதல். கடிதல் - நீக்குதல். தன்பால் குற்றம் அணுகாமல் காத்தல்.

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம் - செல்வச் செருக்கும், சினமும், சிறுமைக் குணமும் இல்லாதவருடைய செல்வம், பெருமித நீர்த்து-மேம்பாடான தன்மையது.

மேம்பாடான தன்மையது - மேம்பாடுடையது. மேம்பாடு - நிலையும் மதிப்பும் உடைமை. கடிதல் - நீக்கல். (க)

432 இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையு மேத மிறைக்கு.

இவறலும்-ஈயாத் தன்மையும், மாண்பு இறந்த மானமும்-நன்மையின் நீங்கிய மானமும், மாணா உவகையும்-அளவுகடந்த மகிழ்ச்சியும், இறைக்கு ஏதம்-அரசனுக்குக் குற்றமாகும்.

மாண்பிறந்த மானம்-முறைகேடான மானம்; செய்யத்தகாததைச் செய்து முடிக்கவேண்டு மென்னும் மானம். மாணா-மாணாத-நல்லதல்லாத. ஈயாத்தன்மை, முறை கெட்ட மானம், மிகுமகிழ்ச்சி ஆகிய மூன்றும் அரசனுக்குக் குற்றமாகும். அரசனுக்குக் கூறினாராயினும் மக்கட்கும் கொள்க. (உ)

433 தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

பழி நாணுவார்-பழிக்கு அஞ்சுபவர், தினைத்துணையாம் குற்றம் வரினும்-தினையளவு குற்றம் வந்தாலும், பனைத்துணையாக் கொள்வர் - அதைப் பனையளவாகக் கொள்வர்.

சிறு குற்றத்தையும் பெரிதாக எண்ணுவது பெரியாரியல்பு. (ங)

434 குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை.

அற்றம் தரூஉம் பகை குற்றமே-தனக்கு முடிவைத் தரும் பகை குற்றமேயாகும், குற்றம் பொருளாகக் காக்க - ஆதலால், அக்குற்றத்தை ஒரு பொருளாகக் கொண்டு காக்க வேண்டும்.

முடிவு - அழிவு. குற்றம் அழிவைத் தருவதால் குற்றம் வராமல் காக்க வேண்டும். (ச)

435 வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

*வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை*-குற்றம் வரு முன்னே அதைக் காவாதவனது வாழ்க்கையானது, *எரி முன்னர் வைத்தூறு போலக் கெடும்*-நெருப்பின் முன் னுள்ள வைக்கோற் போரைப்போல அழியும்.

*தூறு* - குவியல், போர். உவமையால் தப்பாது எளிதில் கெடும் என்பதாம். (ரு)

436 தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு.

*தன் குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்*- முதலில் தன் குற்றத்தை நீக்கிப் பிறகு பிறருடைய குற்றத்தைக் காண்பானாயின், *இறைக்கு என் குற்றம் ஆகும்*-அரசனுக்கு என்ன குற்றம் உண்டாகும்? ஒன்று மில்லை.

*காண்கிற்பின்*-காண்பின். இறைக்குக் கூறினும் பொதுவாகக் கொள்க. தன் குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் பார்ப்பவன் குற்றமற்றவனாவான். (சா)

437 செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.

*செயற்பால செய்யாது இவறியான் செல்வம்*-பொருளால் செய்யவேண்டியவற்றைச் செய்யாமல் அதன் மீது பற்றுள்ளம் வைத்தவனது செல்வம், *உயற்பாலது அன்றிக் கெடும்*-பின் நிலைக்குந் தன்மையின்றிக் கெடும்.

*பற்றுள்ளம்*-பிசினத்தன்மை (உலோபம்), *உயல்* - நிலைத்தல். செய்யவேண்டியவற்றைச் செய்யாது காக்கும் பொருள் அழியும். *செய்யவேண்டியவை*-அறமும் இன்பமும். (எ)

438 பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.

பற்றுள்ளம் என்னும் இவறன்மை-பொருளைச் செல விடவேண்டிய இடத்துச் செலவு செய்யாத பற்றுள்ளம் என்னும் ஈயாத்தன்மை, எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்றன்று - எதனோடும் சேர்த்து எண்ணப்படுவதொன் றன்று.

ஈயாமை ஒரு பொருளாக எண்ணப்படமாட்டாது. ஈயாமை கொடிய குற்றமாகும். (அ)

439 வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை ; நயவற்க
நன்றி பயவா வினை.

தன்னை எஞ்ஞான்றும் வியவற்க-ஒருவன் தன்னைத் தானே எப்போதும் பாராட்டாதிருக்கக்கடவன் ; நன்றி பயவா வினை நயவற்க - நன்மையைத் தராத செயலை விரும்பாதிருக்கக் கடவன்.

தன்னைத்தானே புகழ்தலும், நன்மைதராத செயலை விரும்புதலும் குற்றமாகும். (கூ)

440 காதல காத லறியாமை உய்க்கிற்பின்
ஏதில வேதிலார் நூல்.

காதல காதல் அறியாமை உய்க்கிற்பின் - தான் விரும்புவனவற்றின் மீதுள்ள தனது விருப்பத்தைப் பிறர் அறியாதபடி நடந்துகொள்வானாயின், ஏதிலார் நூல் ஏதில-பகைவரது கெடுக்க நினைக்கும் நினைப்புப் பழுதாகும்.

காதல-விரும்புவன. பலவின்பால் வினையாலணையும் பெயர். நூல் என்றது அவர் கற்ற கல்வியை. அறிந்தால் அதன் மூலம் கெடுக்க நினைப்பர். ஒருவன் தான் விரும்புவதைப் பிறர் அறியாமல் நடந்துகொள்வானானால் பகைவரால் அவனை ஒன்றுஞ்செய்ய முடியாது. பிற ரறிய நடத்தல் குற்றமாம். (ய)

## 45 பெரியாரைத் துணைக்கோடல்

இது அரசனுக்குச் சொல்லினும் பொதுவாக எல்லார்க்கும் கொள்க. கோடல் - கொள்ளுதல்.

441 அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கோளல்.

அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை - அறத்தின் கூறுபாட்டை அறிந்து முதிர்ந்த அறிவுடையாரது நட்பை, திறன் தேர்ந்து அறிந்து கொளல்-கொள்ளும் வகையை ஆராய்ந்து அறிந்து கொள்ளுக.

அறத்தின் கூறுபாடு-பலவகை அறங்கள். பெரியார் நட்பைக்கொள்ளும்வகையறிந்து கொள்ளவேண்டும். (க)

442 உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கோளல்.

உற்ற நோய் நீக்கி-தனக்கு உற்ற துன்பத்தை நீக்கி, உறுமை முன் காக்கும் பெற்றியார்-அது பின்னும் உறுமல் முன்னறிந்து காக்கும் தன்மையரை, பேணிக் கொளல் - விரும்பித் துணையாகக்கொள்க.

வந்த துன்பத்தை நீக்கி, அது பின்னர் வாராமல் காக்கும் பெரியாரைத் துணைக்கொள்ள வேண்டும். (உ)

443 அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கோளல்.

பெரியாரைப் பேணித் தமராக் கொளல்-பெரியோர்களை விரும்பித் தமக்குத் துணையாகக்கொள்ளுதல், அரியவற்றுள் எல்லாம் அரிதே-எல்லாவற்றிலும் அரியதாகும். பெரியாரைத் துணைக்கோடல் முதன்மையானதாகும். (ங)

444 தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல் -தம்மைக் காட்டிலும் அறிவிற் பெரியவர்களைத் தமக்குத் துணையாகக் கொள்ளுதல், வன்மையுள் எல்லாம் தலை-எல்லா வலியினும் முதன்மையானது.

எல்லா வலி - பொருள்வலி, படைவலி, அரண்வலி, மனவலி முதலியன. இவ்வலிகளினும் பெரியார் துணை வலி சிறந்ததாகும். (௪)

445 சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

மன்னவன் சூழ்வார் கண்ணாக ஒழுகலான் - அரசன் அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு ஆட்சி புரிவதால், சூழ்வாரைச் சூழ்ந்துகொளல்-அமைச்சர்களை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்ளக்கடவன்.

சூழ்தல் - ஆராய்தல். சூழ்வார் - அரசனுக்கு ஆய்வுரை கூறும் அமைச்சர். ஆய்வுரை - யோசனை. கண்ணாக-கண்போல-முதன்மையாக. அரசன் கண்போன்ற அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணைக்கொள்ள வேண்டும். (௫)

446 தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானை - பெரியாரைத் தனக்குத் துணையாகக்கொண்டு நடக்க வல்ல அரசனுக்கு, செற்றார் செயக்கிடந்தது இல் - பகைவரால் செய்யப்படும் தீங்கு ஒன்றுமில்லை.

பெரியாரைத் துணைக்கொண்ட அரசனைப் பகைவர் ஒன்றுஞ் செய்ய முடியாது. (௬)

447 இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

இடிக்குந் துணையாரை ஆள்வாரை-குற்றங்கண்டால் கண்டித்துரைக்கும் பெரியாரைத் துணையாகக்கொண்டவரை, கெடுக்கும் தகைமையவர் யார் - கெடுக்கும் பெருமையுடைய பகைவர் யார்? ஒருவருமில்லை.

இடிக்கும் துணையார் - இடித்துரைக்குந் தன்மையர். ஆளுதல் - துணைக்கொள்ளுதல். தீய செயல் புரியத் தொடங்கும்போது கண்டித்துக் கூறி அதைச்செய்யாமல் தடுக்குந்தன்மையுடைய பெரியாரைத் துணைக்கொண்ட அரசர்களை வெல்லக்கூடியவர் ஒருவருமில்லை. (எ)

448 இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்-இடித்துரைப்போரை இல்லாத காவலற்ற அரசன், கெடுப்பார் இலானும் கெடும்-தனக்குப் பகைவர் இல்லையாயினும் தானே கெடுவான்.

ஏமருதல்-காக்கப்படுதல். ஏமரா-ஏமராத - காக்கப்படாத. தானே கெடுதல்-தீய வழியில் சென்று கெடுதல். இடித்துரைப்பாரை இல்லா இறைவன் தானே கெடுவான். பொதுவாகவும் கொள்க. (அ)

449 முதலிலார்க் கூதிய மில்லை; மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

முதல் இலார்க்கு ஊதியம் இல்லை - முதற்பொருள் இல்லாத வணிகருக்கு ஊதியம் இல்லை; மதலையாம் சார்பு இலார்க்கு நிலை இல்லை - அதுபோல, தன்னைத் தாங்கும் துணையிலார்க்கு நிலைத்து நிற்கும் நிலை இல்லை.

மதலை-தூண். மதலையாம் சார்பு-மதலையாகிய சார்பு. சார்பு-துணை. முதற்பொருளில்லாத வணிகர்க்கு ஊதியம் (லாபம்) இல்லாதது போல, தன்னைத்தாங்கும் பெரியாராகிய துணைஇல்லார்க்கு நிலை இல்லை. கெடுவார் என்பதாம் (௯)

450 பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

நல்லார் தொடர்கைவிடல் - நல்லாரது நட்பைவிட்டு விடுவது, பல்லார்பகை கொளலின் பத்தடுத்த தீமைத்தே- பலருடன் பகைகொள்வதை விடப் பதின்மடங்கு தீமையையுடையதாகும்.

அரசன் பெரியாரது நட்பைக் கைவிடுதல் பலருடன் பகை கொள்ளுதலை விட மிக்க தீமையுடையதாகும். (௰)

## 46 சிற்றினஞ்சேராமை

451 சிற்றின மஞ்சும் பெருமை ; சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

பெருமை சிற்றினம் அஞ்சும் - பெரியார் சிற்றினத்தைச் சேர அஞ்சுவார்கள் ; சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்து விடும்-சிறியோர் அதைச் சுற்றமாகக் கொள்வர்

பெருமை - பெரியார். சிற்றினம் - கீழ்மையாகிய குணஞ் செயலுள்ளவர். கீழ்மக்கள் எனப்படுவர். சிற்றினத்தைப் பெரியார் சேரார் ; சிறியார் சேர்வர். (க)

452 நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

மாந்தர்க்கு இனத்து இயல்பது ஆகும் அறிவு - மக்களுக்குத் தாஞ்சேர்ந்த இனத்தின் தன்மையதாகும்

அறிவானது, நிலத்து இயல்பால் நீர் திரிந்து அற்றாகும் - நிலத்தின் தன்மையால் நீரின் தன்மை மாறுபடுவதை ஒக்கும்.

வானிலிருந்து வரும் தூய்மையான நீர் நிலத்திற் கேற்றவாறு நிறம், சுவை மாறுபடுவது போல், தாஞ் சேர்ந்த இனத்திற் கேற்றவாறு மக்களின் தன்மை மாறு படும். (உ)

453 மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி ; இனத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல்.

மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம்-மக்களுக்குப் பொது அறிவு மனத்தினால் உண்டாகும்; இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம் - உலகத்தாரால் இத்தகையன் என்று சொல்லப்படும் சொல்லானது இனத்தினால் உண்டாகும்.

இத்தகையன் - இப்பேர்ப்பட்டவன். நல்லினம் சேர்ந் தால் 'நல்லவன்' எனவும், சிற்றினம் சேர்ந்தால் கெட்ட வன் எனவும் சொல்லப்படுவான். தான் சேர்ந்த இனத் தினாலே ஒருவன் நல்லவன், கெட்டவன் என்னும் பெய ரெடுப்பதால் அச்சிறப்புக்கு இனம் காரணமாயிற்று. (௩)

454 மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

அறிவு - அச்சிறப்பறிவு, ஒருவற்கு மனத்து உளது போலக் காட்டி - ஒருவனுக்கு மனத்தில் உள்ளதுபோலத் தன்னைக் காட்டி, இனத்து உளதாகும் - அவன் சேர்ந்த இனத்தினால் உண்டாகும்.

'இன்னான்' எனப்படும் சிறப்பறிவு மனத்தில் உள் ளது போலக் காணப்படினும், அவன் சேர்ந்த இனத்தி னால்தான் உண்டாகிறது. இது செயற்கை யறிவு; அவ் வினப் பழக்கத்தால் உண்டாவது. (௪)

455 மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் - மனம் தூய்மை செய்யும் வினை தூய்மை ஆகிய இரண்டும், இனம் தூய்மை தூவா வரும் - தான் சேர்ந்த இனத்தின் தூய்மையைத் துணையாகக் கொண்டுவரும்.

தூய்மை - நல்லதாதல் (சுத்தம்). தூ ஆ; ஆ - ஆக. தூ - பற்றுக் கோடு - ஊன்றுகோல், துணை. வினை - தொழில். மன நன்மையும் வினை நன்மையும் தான் சேர்ந்த இனத்தின் நன்மையைத் துணையாகக் கொண்டு வரும். மன நன்மைக்கும் வினை நன்மைக்கும் இன நன்மையே காரணம். (ரு)

456 மனந்தூயார்க் கெச்சநன் றாகும்; இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும் - மனம் தூய்மையானவர்களுக்குப் பின்பு எஞ்சி நிற்பது நல்லதாகும்; இனம் தூயார்க்கு நன்றாக வினை இல்லை - இனம் தூய்மையானவர்க்கு நன்றாகாத செயல் எதுவு மில்லை.

எஞ்சி நிற்பது - அவர் இறந்த பிறகு மிச்சமாகும் புகழ். நன்மன முடையார்க்கு நற்புகழ் உண்டாகுமென் பதாம். நல்லினம் சேர்ந்தார் செயலெல்லாம் நல்லன வாகும். (சா)

457 மனநலம் மன்னுயிர்க் காக்கம்; இனநலம்
எல்லாப் புகழுந் தரும்.

மன் உயிர்க்கு மனநலம் ஆக்கம் -மக்களுக்கு மனத்தின்கண் உள்ள நலம் செல்வமாகும்; இனநலம் எல்லாப் புகழும் தரும் - இனத்தினது நலம் அம் மனநலத்தோடு எல்லாப் புகழையும் தரும்.

நலம் - மனம் நன்றாக இருத்தல். இனநலம் மனநலத்தோடு புகழையும் தரும். (எ)

458 மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

மனம் நலம் நன்கு உடையர் ஆயினும் - மனநலம் மிகவுடையராயினும், சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து- அறிவாளிகட்கு இனநலம் அதற்குக் காவலாதல் உடையது. காவலாகும். மனநிலத்திலும் இனநலம் சிறந்தது. (அ)

459 மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து.

மனநலத்தின் மறுமை ஆகும் - மனநலத்தினால் மறுமையின்பம் உண்டாகும்; மற்று அஃதும் இனநலத்தின் ஏமாப்பு உடைத்து - அதற்கு அச்சிறப்பும் இனநலத்தினால் வலிபெறுதலையுடையது.

ஒருவன் இறந்த பிறகு அவன் பெயர் இங்கு நிலவுதல் மறுமை எனப்படும். 98-ஆம் குறளுரை பார்க்க. மனநலத்தினால் உண்டாகும் மறுமை யின்பமும் இனநலத்தினால் வலிபெறும். (கூ)

460 நல்லினத்தி னூங்குந் துணையில்லை; தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்.

நல் இனத்தின் ஊங்கும் துணை இல்லை - ஒருவனுக்கு நல்ல இனத்தைப் பார்க்கினும் மிக்க துணையும் இல்லை; தீ இனத்தின் அல்லல் படுப்பதும் இல்-தீய இனத்தைப் பார்க்கினும் துன்பப் படுத்துவதும் வேறொன்றும் இல்லை. இனம் - இனச் சேர்க்கை. (ய)

## 47 சுற்றந்தழால்

சுற்றத்தாரைத் தழுவிக்கொள்ளுதல். தழுவல் - தன்னை நீங்காமல் இருக்கச்செய்தல். தழால் - தழுவுதல். அரசர்க்கேயன்றி ஏனையோர்க்கும் இது பொருந்தும்.

461 பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

*பற்று அற்ற கண்ணும் பழமை பாராட்டுதல் - ஒருவன் செல்வமிழந்து வறியவனானபோதும் அவனுடைய பழைய நிலைமையைப் பாராட்டி உடன் வாழுந்தன்மை, சுற்றத்தார் கண்ணே உள - சுற்றத்தாரிடமே உண்டு.*

வறுமையினும் கைவிடாத்தன்மை சுற்றத்தார்க்கே உண்டு. (க)

462 விருப்பறாச் சுற்ற மியையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

*விருப்பு அறாச் சுற்றம் இயையின் - அன்பு நீங்காத சுற்றம் ஒருவனுக்குக் கிடைக்குமாயின், அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் - அது கிளைத்தல் நீங்காத பல செல்வங்களையும் கொடுக்கும்.*

அரும்பு - அருப்பு என வலிந்தது. அரும்புதல் - கிளைத்தல், ஒன்று பலவாதல். விருப்பு அறாச் சுற்றம் - உட்பகை சிறிதுமில்லாத சுற்றம். அறா - அறாத. அன்புடைய சுற்றத்தையுடையவர்க்குப் பல நன்மையும் உண்டாகும். (உ)

463 அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

*அளவளாவு இல்லாதான் வாழ்க்கை - சுற்றத்தாரோடு மனங்கலந்து வாழாதவனது வாழ்க்கையானது,*

குளவளா கோடு இன்றி நீர் நிறைந்தற்று - குளத்தினது பரப்பு கரையில்லாமல் நீர் நிறைந்தாற்போன்றது.

கரையில்லாத குளப்பரப்பு நீர் நிறைந்தால் அக் குளம் கெட்டுவிடும். அதுபோல, அவன் வாழ்க்கையும் கெடுமென்பதாம். வளா - பரப்பு. (௩)

464 சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

செல்வம் பெற்றத்தால் பெற்ற பயன் - செல்வம் பெற்றதால் அடைந்த பயனாவது, சுற்றத்தால் தான் சுற்றப்பட்ட ஒழுகல்-ஒருவன் தனது சுற்றத்தினால்தான் சூழப்படும்படி நடத்தலாம்.

சுற்றத்திற்கு அழகு சூழவிருத்தல். நன்மை தீமை களில் சூழப்பட்டு - சுற்றப்பட்டு - இருப்பதனாலேயே சுற்றம் எனப்பெயர் ஆனது. சுற்றுஅம் - சுற்றம். பெற்ற அதனால் என்பது - பெற்றத்தால் என்றாயது. (௪)

465 கொடுத்தலு மின்சொலு மாற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் - ஒருவன் வேண்டுவன கொடுத்தலும் இன்சொல் சொல்லுதலும் செய்வானாயின், அடுக்கிய சுற்றத்தால் சுற்றப்படும் - அவன் தொடர்ந்த சுற்றத்தால் சூழப்படுவான்.

தொடர்ந்த சுற்றம்-சுற்றத்தினது சுற்றம். கொடை யும் இன்சொலும் உடையான் பல சுற்றஞ்சூழ வாழ்வான்.

466 பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

பெருங்கொடையான் வெகுளி பேணான் - மிகுந்த கொடையையுடையவனாய் வெகுளியை விரும்பாதவனா

யின், அவனின் மருங்கு உடையார் மாநிலத்தில் இல் - அவனைப் போலச் சுற்றமுடையார் இவ்வுலகத்தில் இல்லை.

மருங்கு - பக்கம். பக்கத்தாரான சுற்றத்தாரை யுணர்த்திற்று. பெருங்கொடையாலும், சினமின்மையாலும் சுற்றஞ்சூழ வாழ்வான். (சு)

467 காக்கை கரவாக் கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

காக்கை கரவா கரைந்து உண்ணும்-காக்கையானது இரையைக் கண்டதும் மறைக்காது தன் இனத்தை அழைத்து உண்ணும்; ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள- செல்வங்களும் அத்தகைய இயல்பினர்க்கே உள்ளனவாகும்.

ஆக்கமும் என்னும் எச்சவும்மையால், அறமும் இன்பமுமே யன்றிப் பொருளும் எய்தும் என்பதாம். அத்தகைய இயல்பினர் - தாம் துய்ப்பனவெல்லாம் தம் சுற்றமும் துய்க்குமாறு செய்பவர். கரவா - கரவாது. கரத்தல் - மறைத்தல், ஒளித்தல். (எ)

468 பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

வேந்தன் பொது நோக்கான் வரிசையா நோக்கின்- அரசன் எல்லோரையும் ஒரு தன்மையாக நோக்காது அவரவர் தகுதிக்கேற்ப நோக்குவானாயின், அது நோக்கி பலர் வாழ்வார் - அச்சிறப்பை நோக்கிப் பல சுற்றத்தார் அவனைச் சூழ்ந்து வாழ்வர்.

தக்கோர் விலகாதிருக்கப் பொது நோக்கை விலக்கி, எல்லாரும் விடாது சூழ்ந்து வாழ்தலை நோக்கி வரிசை நோக்கை விதித்தார். தகுதிக்கேற்ப நடந்துகொள்வானைப் பலரும் சூழ்ந்து வாழ்வார். (அ)

469 தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

*தமராகி - முன்னே சுற்றத்தாராக இருந்து, தன் துறந்தார் சுற்றம் - யாதானுமொரு காரணத்தால் தன்னொடு பொருந்தாது தன்னைவிட்டுப் பிரிந்துபோனவர் பின்னும் வந்து சுற்றமாதல், அமராமைக் காரணம் இன்றிவரும் - அப்பொருந்தாமைக் காரணம் இப்போது தன்னிடம் இல்லையாக உண்டாகும்.*

*முன் தன்னைவிட்டு அவர் பிரிந்து போனதன் காரணம் இப்போது இல்லாதவனானால் பிரிந்துபோன சுற்றத்தார் தாமாகவே மறுபடியும் வந்து சுற்றமாவர்.* (௯)

470 உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல்.

*உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை - தன்னிடமிருந்து பிரிந்துபோய்ப் பிறகு ஒரு நோக்கங் கொண்டு தன்னிடம் வந்தவனை, வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக் கொளல் - அரசன் அந்நோக்கத்தை நிறைவேற்றிவைத்து ஆராய்ந்து தழுவிக்கொள்ளவேண்டும்.*

*ஒரு காரணமுமின்றிப் பிரிந்துபோனவர் ஏதேனும் ஒன்றை எண்ணி மறுபடியும் வரின், அவ்வெண்ணத்தை நிறைவேற்றிச் சுற்றமாக்கிக்கொள்ள வேண்டும். இல்லையேல் மறுபடியும் பகைவரோடு சேர்ந்துகொள்வர். அன்பின்றிப் போய் மறுபடியும் வருவோரை ஆராய்ந்து பார்த்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும். பிரிந்துபோன சுற்றத்தாருள் தனக்குத் தீமைசெய்யப் போய் அதைச் செய்யாது வருவாரும், சும்மா பிரிந்துபோய்ப் பின் நன்மை செய்ய வருவாரும் ஆகிய இருதிறத்தாரையுமே தழுவிக்கொள்ள வேண்டும்.* (ய)

# 48 தெரிந்து செயல்வகை

செய்யும் செயல்களை ஆராய்ந்து செய்யும் வகை.

471 அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்.

அழிவதும் - ஒருவினை செய்து முடித்தற்கு அப்போது செலவாகும் பொருளும், ஆவதும் ஆகி, அவ்வினை செய்து முடித்தால் உண்டாகும் பொருளுமாகி, வழி பயக்கும் ஊதியமும் சூழ்ந்து செயல் - அவ்வினையால் பிறகு உண்டாகும் ஊதியமும் ஆகிய இம் மூன்றனையும் ஆராய்ந்து செய்ய வேண்டும்.

ஆராய்து செய்வதாவது - அழிவினும் ஆவது மிக்கு ஊதியமும் மிகுதல். அழிவதும் ஆவதும் சரிநிகரானு லும் ஊதியம் உண்டாவதால் அவ்வினையைக் கைவிடக் கூடாதென்பதாம். அழிவது - செலவு. ஆவது - வரவு. (க)

472 தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு - தாம் ஆராய்ந்து கொண்ட இனத்தாடனே செய்யும் வினையை ஆராய்ந்து, பின் தாமும் எண்ணிச் செய்பவர்களுக்கு, அரும்பொருள் யாதொன்றும் இல் - பெறமுடியாத பொருள் யாதொன்றும் இல்லை.

ஆராய்ந்து கொண்ட இனம் - முன் ஆராய்ந்து பார்த்துத் தமக்குத் துணையாகக் கொண்டவர்கள். துணைவரோடு ஆராய்ந்து, பின் தாமும் ஆராய்ந்து செய்தால் ஆகாத செயல் ஒன்றுமில்லை. (உ)

473 ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார்.

ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை - இனி உண்டாகக்கூடிய ஊதியத்தை எண்ணி, முன்புள்ள முதலையும் இழக்கும் செயலை, அறிவுடையார் ஊக்கார் - அறிவுடையோர் செய்ய முயலமாட்டார்.

ஆக்கமேயன்றி முதலையும் இழக்கும் வினையைச் செய்ய அறிவுடையோர் எண்ணார். எண்ணுதல் - வலியுங் காலமும் இடமும் அறியாது பிறர் நாடுபிடிக்கச் சென்று தன்னாட்டையும் இழக்கும் செயலோடொக்கும். (௩)

474 தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர் - தமக்கு இகழ்ச்சி என்னும் குற்றத்திற்கு அஞ்சுபவர், தெளிவு இல் அதனைத் தொடங்கார் - ஆராய்தலில்லாத செயலைத் தொடங்கமாட்டார்.

ஏதப்பாடு - குற்றம். இளிவு என்னும் ஏதப்பாடு - இளிவாகிய குற்றம். பிறரால் இகழப்படும் குற்றத்திற்கு அஞ்சுபவர் ஆராயாமல் ஒரு செயலைச் செய்யத் தொடங்க மாட்டார். (௪)

475 வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

வகை அறச் சூழாது எழுதல் - சென்றால் உண்டாகும் வகையை நன்கு எண்ணிப்பாராது அரசன் போர்க்கு எழுதல், பகைவரைப் பாத்திப் படுப்பதோர் ஆறு - பகைவராகிய பயிரை வளரும் நிலத்தில் நிலைபெறச் செய்வதாகிய ஒரு வழியாம்.

வகை - வலி, காலம், இடம் இவற்றால் தனக்கும் பகைவர்க்கும் உள்ள நிலைமைகளுக்கும், செயல் தொடங்

கும் வழியும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்கும் வழியும், வெல்லும் வழியும், அதனால் பெறும் பயனும் முதலாயின. அவற்றுள் சில குறையினும் பகைவர்க்கு எளிதாகையால் 'அறச்சூழ்ந்து' என்றார். வெல்லும் வகையை நன்கு ஆராய்ந்து முடிவுகட்டாது போர்க்கெழும் அரசன் பகைவரை வலியுடைய ராக்கியவனாவான். (ரு)

476 செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

செய்தக்க அல்ல செயக் கெடும் - ஒருவன் செய்யத்தகாதவற்றைச் செய்தாலும் கெடுவான்; செய்தக்க செய்யாமையானும் கெடும் - செய்யத்தக்கவற்றைச் செய்யாமையாலும் கெடுவான்.

செய்யத்தகாதவை - பெருமுயற்சியும், செய்தாற் பயனில்லாதனவும், ஐயமுடையனவும், பின் துயர் விளைப்பனவும் ஆகியவை. செய்யத்தக்கவை-இவற்றின் மறுதலையானவை. செய்வன செய்து, ஒழிவன ஒழிய வேண்டும். இல்லையேல் அறிவு, ஆண்மை, பெருமை என்னும் மூவகையாற்றலுள், பொருள் படை என்னும் பெருமை சுருங்கிப் பகைவரால் வெல்லுதற்கு எளியனாவன். (சா)

477 எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

கருமம் எண்ணித் துணிக-செய்யத்தக்க செயலையும் எண்ணித் தொடங்குக, துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு - தொடங்கியபின் எண்ணுவம் என்பது குற்றமாகும்.

முடிக்கும் வழி, பயன் முதலியவற்றை ஆராய்ந்து பார்த்து ஒரு வினையைத் தொடங்கவேண்டும். தொடங்கிய பின் ஆராய்வோம் என்றெண்ணுவது தப்பு. (எ)

478 ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

*ஆற்றின் வருந்தா வருத்தம்*-வினை முடியும் வழியில் முயலாத முயற்சியானது, *பலர் நின்று போற்றினும் பொத்துப்படும்*-பலர் நின்று குற்றம் வராது காப்பினும் குற்றப்படும்.

*வருத்தம்*-முயற்சி முடிக்கும் வழியை எண்ணி ஒரு வினையைச் செய்ய முயலாவிட்டால் அது குற்ற முடைய தாகும். (அ)

479 நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

*அவரவர் பண்பு அறிந்து ஆற்றாக் கடை*-அவரவருடைய இயல்பை அறிந்து அதற்குப் பொருந்தச் செய்யாத விடத்து, *நன்று ஆற்றல் உள்ளும் தவறு உண்டு*-நன்கு செய்த விடத்தும் குற்ற முண்டாகும்.

அவரவர் என்றது பகைவரை. *நன்று ஆற்றல்*-வினை முடிக்கும் வழியறிந்து செய்தல். முடிக்கும் வழியறிந்து செய்யினும் பகையரசரின் இயல்பை யறிந்து செய்ய வேண்டும. (கூ)

480 எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மோடு
கொள்ளாத கொள்ளா துலகு.

*தம்மொடு கொள்ளாத உலகு கொள்ளாது* - அரசர் தம் நிலைக்குப் பொருந்தாதவற்றைச் செய்வாராயின் உலகம் இகழும் ; *எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும்* - ஆகையால், உலகம் இகழாதவற்றை ஆராய்ந்து செய்ய வேண்டும்.

*கொள்ளாது* - ஏற்றுக் கொள்ளாது ; இகழும். தந் தகுதிக் கேற்ற செயலையே செய்யவேண்டும். (ம)

# 49 வலியறிதல்

பகையை வெல்லுதற் கேற்ற வலியினை அறிதல். வலி-திறமை.

481 வினைவலியுந் தன்வலியும் மாற்ருன் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

வினைவலியும் - தான் செய்யக் கருதிய வினையின் வலியையும், தன் வலியும் - தனது வலியையும், மாற்ருன் வலியும் - தனது பகைவனது வலியையும், துணை வலியும் - தனக்கும் தன் பகைவனுக்கும் துணை வருவோர்களது வலியையும், தூக்கிச் செயல் - ஆராய்ந்து பார்த்துத் தன் வலி மிகுமாயின் அச் செயலைச் செய்க.

வினைவலி - மதில் முற்றல் முதலிய தொழில்வலி. தன் வலி - பொருள்வலி, படைவலி, அரண்வலி, மனவலி என்பன. இவற்றுள் வினைவலி, தன்வலி, துணைவலி என்னும் மூவகைவலியும் தனக்கு மிகுமாயின் செய்க வென்பதாம். (க)

482 ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

ஒல்வது அறிவது அறிந்து - ஒரு தொழிலை முடிக்குந் தன் திறத்தையும் அதற் கறியவேண்டிய வலியையும் அறிந்து, அதன்கண் தங்கிச் செல்வார்க்கு - எப்பொழுதும் தம் கருத்தை அவ்வினையிடத்தே வைத்துப் பகைவர்மேல் செல்லும் அரசர்க்கு, செல்லாதது இல் - முடியாதது ஒன்றும் இல்லை. எளிதில் வெல்வர். (உ)

483 உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

தம் உடை வலியறியார் - தம்முடைய வலியினளவை அறியாது, ஊக்கத்தின் ஊக்கி - மனவெழுச்சியால் ஒரு

வினையைத் தொடங்கி, இடைக்கண் முரிந்தார் பலர்-வினை முடிவதன் முன்னே கெட்டவர் பலராவர்.

தம் வலியறியாது தொடங்குவார் இடையில் தோற்பர். தம் வலியறிந்தே வினை தொடங்கவேண்டும். (௩)

484 அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

ஆங்கு அமைந்து ஒழுகான்-அயலாரோடு பொருந்தி ஒழுகாதவனாகி, அளவு அறியான்-தன் வலியின் அளவை அறியாது, தன்னை வியந்தான் விரைந்துகெடும்-தன்னைப் பெரிதாக எண்ணிப் பிறரைப் பகைத்தவன் விரைவில் கெடுவான்.

பொருந்தி யொழுகுதல் - தன்வலி குறைவாயுள்ள போது அயலார்களுடன் நட்பாக இருத்தல், தன்வலி மிகின் பகை கொள்ளல் என்னும் இரண்டில் நட்பாக இருத்தல். தன்வலி யறியாது அயலாரோடு பகைத்தவன் விரைந்து கெடுவான். (௪)

485 பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

பீலிபெய் சாகாடும் அச்சு இறும் - மிகவும் மெலிய தான மயிலிறகை ஏற்றிய வண்டியும் அச்சு முறியப் பெறும், அப் பண்டம் சால மிகுத்துப் பெயின் - அம் மயிலிறகை மிகவும் மிகுதியாக ஏற்றினால்.

அச்சு-சக்கரங்களைத் தாங்கும் இரும்பு. எவ்வளவு வலியுடையோரும் பலருடன் எதிர்த்தால் தோற்பர் என்பதாம். உவமானத்தைக் கூறி உவமேயத்தைப் பெறவைத்ததால் இது பிறிதுமொழிதல் என்னும் அணி. அடுத்த பாட்டும் இவ்வணியே. மாற்றான் வலியும், அவன் துணைவலியும் அறியாமை குற்றமாகும். (௫)

486 நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.

*கொம்பர் நுனி ஏறினார் அஃது இறந்து ஊக்கின் - மரக்கிளையின் நுனியில் ஏறி நின்றவர் அவ்வளவைக் கடந்து மேலும் ஏற முயல்வாராயின், உயிர்க்கு இறுதி ஆகிவிடும் - அம் முயற்சி அவர்களது உயிர்க்கு முடிவாகி விடும்.*

*நுனிக் கொம்பர் - கொம்பர் நுனி - கொம்பரினது நுனி. பின் முன்னாகத் தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை. கொம்பு-கொம்பர்-போலி. மேலும் ஏறினால், கிளை முறிந்து விழுந்து இறந்து விடுவர். பகைமேல் செல்லு மளவும் சென்று நின்றானொருவன், அவ்வளவில் நில்லாது மனவெழுச்சியால் மேலும் செல்வானாயின் தோல்வி யுறுவான்.* (சு)

487 ஆற்றி னளவறிந் தீக ; வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

*அளவு அறிந்து ஆற்றின் ஈக-தமக்குள்ள பொருளின் அளவை யறிந்து அதற்கேற்பக் கொடுக்க வேண்டிய வழிகளில் கொடுக்க ; அது பொருள் போற்றி வழங்கும் நெறி-அச் செய்கை பொருளை ஈட்டி வழங்கும் வழியாகும்.*

*பொருளைச் செலவிட வேண்டிய வழிகளில் தம் தம் அளவுக்கேற்பச் செலவிடுவதே பொருளைத்தேடிவழங்கும் முறையாகும். பொருளினது வலியறிந்து அதற்குத்தகச் செலவு செய்ய வேண்டும்.* (எ)

488 ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

*ஆகு ஆறு அளவு இட்டிது ஆயினும் கேடு இல்லை - பொருள் வரும் வழி சிறிதாயிருப்பினும் கெடுதியில்லை ;*

போகு ஆறு அகலாக் கடை—அப் பொருள் போகும் வழியின் அளவு அதனினும் விரியாதாயின்.

இட்டிது-சிறிது. ஒரு குளத்திற்குத் தண்ணீர் வரும் வழி சிறிதாக இருப்பினும், தண்ணீர் வெளியே போகும் வழி (மதகு) அதைவிடச் சிறிதாக இருந்தால் தண்ணீர் குறையாது இருக்கும். வரும் வழியைவிட போகும் வழி பெரிதாக இருப்பின் குளத்தில் தண்ணீரே தேங்காதது போல, வரவைவிடச் செலவு குறைவாக இருக்க வேண்டும். இதுவும் பொருள் வலிமை அறிந்து செய்ய வேண்டுமென்பது. (அ)

489 அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும்.

அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை-தனக்குள்ள பொருளின் அளவைத் தெரிந்து அதற் கேற்ப வாழாதவன் வாழ்க்கையானது, உள போல இல்லாகித் தோன்ருக் கெடும் - உள்ளது போலத் தோன்றி, உண்மையாக இல்லையாய், பின்பு அத் தோற்றமும் இல்லாமல் கெட்டு விடும்.

தோன்ரு-தோன்ருது. அளவறிந்து வாழ்தலாவது-வரவிற் செலவு சுருங்கி வாழ்தல்; இல்லையேல் ஒப்பவாகினும் செலவு செய்து வாழ்தல். வரவறிந்து செலவு செய்யாதவன் வாழ்க்கை, முதலில் உள்ளது போலத் தோன்றும்; ஆனல், உண்மையாக இல்லையாய்ப் பின்பு அப் பொய்த் தோற்றமும் இல்லாமல் கெட்டு விடும். (க)

490 உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை-தனக்குள்ள பொருளின் அளவை எண்ணிப்பாராத கொடையால், வள வரை வல்லைக்கெடும்-ஒருவனது பொருளின் அளவு விரைவாகக் கெட்டுவிடும்.

வரை - அளவு. தூக்குதல் - ஆராய்ந்து பார்த்தல். ஒப்புரவு ஆண்மை-கொடைக் குணம். வளம்-செல்வம். தனக்குள்ள பொருளின் அளவறியாது செய்யப்படும் கொடையால் செல்வம் விரைவில் அழிந்து விடும். (ய)

## 50 காலமறிதல்

வினை செய்தற்கு ஏற்ற காலத்தை அறிதல்.

491 பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

காக்கை கூகையைப் பகல் வெல்லும்-காக்கை தன்னினும் வலிய கோட்டானைப் பகலில் வெல்லும்; இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுது வேண்டும்-அதுபோல, பகைவரை வெல்லக்கருதும் அரசர்கட்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாததாகும்.

கூகை காக்கையை இரவில் வெல்லும். அதற்கேற்ற காலம் அது. ஏற்ற காலமில்லாத வழி வலியால் பயனில்லை. காலமாவது-தட்பவெப்ப நிலை தம்முள் ஒத்து நோய் செய்யாது, தண்ணீர் உணவு முதலியன உடைத்தாய்ப் படை வருந்தாது செல்லும் இயல்புடைய காலம். (க)

492 பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

பருவத்தோடு ஒட்ட ஒழுகல் - காலத்தோடு பொருந்தத் தொழில் செய்தல், திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு - செல்வத்தை நீங்காமல் கட்டும் கயிறாகும்.

தொழில் வெற்றி பெறுவதால் செல்வம் தீராதென்பது. (உ)

493 அருவினை யென்ப வுளவோ கருவியாற்
காலம் அறிந்து செயின்.

கருவியால் காலம் அறிந்து செயின் - வினைசெய்வதற்குரிய கருவிகளுடன் ஏற்ற காலத்தை அறிந்து செய்தால், அருவினை என்ப உளவோ - செய்தற்கரிய வினைகள் என்பன உண்டோ? இல்லை.

கருவி - வினை செய்யும் முறைகள். செய்யும் முறையோடு ஏற்றகாலத்தை யறிந்து செய்தால் ஆகாதது ஒன்றும் இல்லை. (௩)

494 ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

காலம் கருதி இடத்தால் செயின் - ஒருவன் செய்யும் வினையை ஏற்ற காலமறிந்து ஏற்ற இடத்துடன் பொருந்தச்செய்வானாயின், ஞாலம் கருதினும் கைகூடும் - இவ்வுலக முழுவதையும் பெற நினைத்தாலும் அவன் பெறக்கூடும்.

காலமும் இடமும் அறிந்து முயன்றால் உலகை முழுவதுங்கூட ஒருவன் பெறக்கூடும். முடியாததொன்றில்லை என்பதாம். (௪)

495 காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

ஞாலம் கருதுபவர் - உலகை முழுவதையும் கைப்பற்றக் கருதும் அரசர், காலம் கருதிக் கலங்காது இருப்பர் - ஏற்ற காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு அது வருமளவும் மனந் தளராமல் இருப்பர்.

இருத்தலாவது - பகைமேற் செல்லாமல் இருத்தல். ஏற்ற காலம் வருமளவும் காத்திருப்பதே வெற்றிக்குரியதாகும். (௫)

496 ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

ஊக்கம் உடையான் ஒடுக்கம் - ஊக்கமுடையான் பகைமேல் செல்லாது ஒடுங்கியிருப்பது, பொருதகர் தாக்கற்குப் பேரும் தகைத்து-போர் செய்யும் செம்மறிக்கடா நன்றாகத் தாக்குதற்காகப் பின்னே கால்வாங்கும் தன்மையை ஒத்தது.

கால் வாங்குதல் - விரைவாக ஓடிவந்து வலிகொண்டு தாக்குவதற்காகப் பின்னாலே போதல். ஒரு கடாவையோ அல்லது நம்மையோ முட்டவரும் செம்மறிக்கடாப் பின்னால் சென்று விரைந்து வந்து முட்டும். ஏற்ற காலம் வருமளவும் இருப்பது கடா பின்செல்வது போன்றது, அச்சத்தினாலல்ல. (௬)

497 பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

ஒள்ளியவர் ஆங்கே பொள்ளென புறம் வேரார் - அறிவுடையோர் பகைவர் தீமைசெய்த அப்போதே திடீரென வெளிப்படையாக வெகுளியைக் காட்டமாட்டார், காலம் பார்த்து உள்வேர்ப்பர் - ஏற்ற காலத்தை எதிர்பார்த்து மனத்தில் சினங்கொண்டிருப்பர்.

வேர்த்தல் - வெகுளல். காலம் பாராது பகைவர் தீமை செய்த உடனே சினந்து பகைமேற் செல்லுதல் முழு வெற்றி தராது. (௭)

498 செறுநரைக் காணிற் சுமக்க; இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

செறுநரைக் காணின் சுமக்க - தாம் வெல்லுதற்கேற்ற காலம் வரும்வரை, தாம் வெல்லக் கருதிய பகையரசரைக் கண்டால் பணிதல் வேண்டும்; இறுவரை

காணின் தலை கிழக்கு ஆம் - அப் பகைவருக்கு முடிவு காலம் வந்தால் அவர்கள் தலை கீழே விழும்.

தலை கீழே விழும் - அழிவர். காலம் வரும்வரை மிகவும் தாழ்க வென்பார், 'சுமக்க' என்றார். காலம் வரும்வரைத் தம் பகை வெளிப்படாமல் இருக்க வேண்டும். (அ)

499 எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

எய்தற்கு அரியது இயைந்தக்கால் - ஏற்ற காலம் வந்தால், அந்நிலையே செய்தற்கு அரிய செயல் - அப்போதே தாம்செய்யக் கருதிய செயலைச் செய்து முடித்தல் வேண்டும்.

செய்தற்கு அரிய - அரிய செயல்கள். காலமின்றித் தம் ஆற்றலினால் செய்ய முடியாமையின் எய்தற் கரிய வென்றும், காலம் இன்றிச் செய்ய முடியாமையின் செய்தற்கரியவென்றும் கூறினார். காலம் வந்ததும் விரைந்து செய்ய வேண்டும் என்பதாம். (கூ)

500 கோக்கோக்க கூம்பும் பருவத்து ; மற்றதன்
குத்தோக்க சீர்த்த விடத்து.

கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க - வினைமேற் செல்லாது அடங்கியிருக்கும் காலத்தில் கொக்கைப்போல இருக்க வேண்டும் ; மற்று சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க - பின் வினைமேற் செல்லுங்காலத்தில் அக்கொக்குக் குத்துவதுபோலத் தப்பாமல் செய்து முடிக்க வேண்டும்.

வினை - போர்த் தொழில். கூம்புதல் - அடங்கியிருத்தல். குளக்கரையில் மீன் பிடிக்க இருக்கும்கொக்கு அது வருமளவும் உயிரில்லாததுபோல இருக்கும், மீன் வந்ததும் அது ஓடுவதற்கு முன்னே விரைந்து பிடித்துக் கொள்ளும். அதுபோல, இருந்து வெல்ல வேண்டும் என்

பதாம். 1938-42ல் நடந்த இரண்டாவது உலகப் பெரும் போரில் உரசையர் (ரஷ்யர்) அவ்வாறு இருந்து, செர்மனியரை வென்றது எடுத்துக்காட்டாகும். (ய)

## 51 இடனறிதல்

வலியும் காலமு மறிந்து பகைமேற் செல்வான், தான் செல்லுதற்கேற்ற இடத்தினை அறிதல்.

501 தொடங்கற்க எவ்வினையு மெள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது.

முற்றும் இடம் கண்டபின் அல்லது - பகைவரை வளைத்துக் கொள்ளுதற் கேற்ற இடத்தைக் கண்டபின் அல்லாமல், எவ்வினையும் தொடங்கற்க - யாதொரு செயலையும் தொடங்காதிருக்க வேண்டும்; எள்ளற்க - பகைவரைச் சிறியரென்று இகழாதிருக்க வேண்டும்.

வளைத்தற் கேற்ற இடமாவது - வாயில்களிலும், துளைகளிலும் பகைவர் போக்கு வரவின்றி மதிலைச் சூழ்ந்து, நலிவின்றிப் பலபடை இருத்தற்கும், அரசிருக்கைக்கும் ஏற்ற இடம். இடம்பெற்ற பிறகு செயல் தொடங்கிப் பகை வெல்ல வேண்டும். (க)

502 முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும்.

முரண் சேர்ந்த மொய்ம்பினவர்க்கும் - மிக்க வலியுடையவர்க்கும், அரண் சேர்ந்து ஆம் ஆக்கம் பலவும் தரும் - அரணைச் சேர்ந்து ஆகின்ற ஆக்கம் பல பயன்களையும் கொடுக்கும்.

ஆக்கம் - ஆக்கத்தைத் தரும் முற்றுகை. பயன்கள் - பகைவரால் தமக்கு நலிவின்மையும், தாம் நிலை பெற்று நின்று அவரை நலிதலும் முதலாயின. அரண்-மதில். (உ)

503 ஆற்றரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

*போற்றார்கண் இடன் அறிந்து போற்றிச் செயின் - பகைவரிடம் வினை செய்யும் இடத்தை அறிந்து தம்மைக் காத்து வினை செய்வாராயின், ஆற்றாரும் ஆற்றி அடுப - வலியில்லாதாரும் வலிமை பெற்று வெல்வர்.*

*இடம் அறிந்து செய்யின் வலியில்லாதாரும் வெல்வர். காத்தல் - பகைவரால் நலிவு வராமல் அரணாலும் படையாலும் காத்தல்.* (௩)

504 எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

*இடன் அறிந்து துன்னியார் - தாம் வினைசெய்தற் கேற்ற இடத்தை யறிந்து மேற்சென்றவர்கள், துன்னிச் செயின் - அவ்விடத்தைப் பொருந்தி வினை செய்வாராயின், எண்ணியார் எண்ணம் இழப்பர் - வெல்வதாக எண்ணி யிருந்த பகைவர் அவ்வெண்ணத்தை இழப்பர்.*

*இடமறிந்து, அறிந்த இடத்திற் பொருந்தி நின்று வினை செய்யின் பகைவர் கட்டாயம் தோற்பர்.* (௪)

505 நெடும்புனலுள் வெல்லும் முதலை யடும்புனலின்
நீங்கி னதனைப் பிற.

*முதலை நெடும் புனலுள் வெல்லும் - முதலை ஆழமுள்ள நீரில் பிற உயிர்களை வெல்லும்; புனலின் நீங்கின் பிற அதனை அடும் - நீரினின்றும் வெளியேறினால் பிற அம் முதலையை வெல்லும்.*

*வெளியேறல் - நீரைவிட்டு நிலத்தின் கண் வருதல். பகைமேற் செல்வோர், பகைவர் எதிர்நிற்க முடியாத இடத்தை யறிந்து செல்வாராயின் அவரை வெல்வர்; தாம் எதிர்த்து நிற்க முடியாத இடத்துச் செல்லின்*

அவர் வெல்வர் என்பதாம். இது பிறிதுமொழிதல் அணி. (௫)

506 கட்லோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயு மோடா நிலத்து.

வல்கால் நெடுந்தேர் கடல் ஓடா - வலிய உருளை யுடைய பெரிய தேர்கள் கடலில் ஓட மாட்டா, கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா - கடலில் ஓடும் கப்பல் களும் நிலத்தில் ஓட மாட்டா.

உருள் - சக்கரம். மேற்சென்றூர் இடமறிந்து வினை செய்ய வேண்டும் என்பது. இதுவும் பிறிதுமொழிதல் அணி. (௬)

507 அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா எஞ்சாமை
எண்ணி யிடத்தாற் செயின்.

எஞ்சாமை எண்ணி இடத்தால் செயின் - வினை செய்யும் வழிகளை யெல்லாம் குறையாமல் எண்ணி இடத்தோடு பொருந்த வினை செய்தால், அஞ்சாமை அல்லால் துணை வேண்டா - அச்செயலுக்குத் தம் மன வுறுதியல்லாமல் வேறு துணை வேண்டுவதில்லை.

நன்கு ஆராய்ந்து இடத்தோடு, மனவுறுதியோடு வினை செய்யின் வெல்வது உறுதி. (௭)

508 சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையான்
ஊக்க மழிந்து விடும்.

உறுபடையான் சிறுபடையான் செல்இடம் சேரின் - பெரிய சேனையையுடையவன் சிறிய சேனையையுடை யவனை வெல்லக் கருதி அவனுக்குத் தகுதியான இடத் தைச் சேர்ந்தால், ஊக்கம் அழிந்துவிடும் - அச்சிறு படையோனால் தன் பெருமையை இழப்பான்.

தன்படைப் பெருமைநோக்கி இடம்நோக்காது செல்வானாயின், அவ்விடம் அப்படை ஒருங்குதங்கி வினை செய்ய முடியாமையால் அழியும். இடம் நோக்காது படைப் பெருமைமட்டும் நோக்கிச் செல்பவன் அழிவான். (அ)

509 சிறைநலனுஞ் சீரு மிலரேனினும் மாந்தர்
உறைநிலத்தோ டோட்ட லரிது.

சிறைநலனும் சீரும் இலர் எனினும் - அழித்தற் கரிய அரணும் பெருமையும் இல்லாதவராயினும், மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது - பகையரசரை அவர் உறைகின்ற இடத்தில்சென்று வெல்லுதல் அரிது.

பெருமை - பொருள்வலி, படைவலி முதலிய பெருமை. உறைநிலத்தோடு ஒட்டல் - பகைவர் இருப்பிடத்தில் சென்று தாக்குதல். இருப்பிடத்தில் சென்று தாக்கினால் அவர் அதைவிட்டுப் போகத் துணியாமல் சாகத்துணிவராதலால் அவருக்குப் பெரும்படை உடையும். இடம் - உரிய இடம். சிறந்த அரணும் பெருமையும் இல்லாரையும் அவர் இடத்தில் சென்று வெல்லுதல் அரிது. (௯)

510 காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாழ் முகத்த களிறு.

கண் அஞ்சா வேல்ஆழ் முகத்த களிறு - பாகர்க்கு அடங்காதவையும், வேல்தைத்த முகத்தையுடையவையு மாகிய ஆண்யானைகளை, கால்ஆழ் களரின் நரி அடும் - கால்கள் புதையும் சேற்றுநிலத்தில் பட்டபோது நரிகள் கொல்லும்.

கண் - பாகர்; யானையினிடத்தேயுள்ளவர். அஞ்சா - அஞ்சாத. வேல் தைத்த முகத்தையுடையவை - போர்

யானைகள். ஆண்மையும் பெருமையும் உடையோரும் தமக்கேலா நிலத்துச் செல்லின், அவ்வாண்மையாலும் பெருமையாலும் பயனின்றி மிகவும் சிறியரால் அழிவர். பிறிது மொழிதல் அணி. (ய)

## 52 பொச்சாவாமை

பொச்சாவாமை - மறவாமை; செய்பவேண்டியவற்றைச் செய்தலில் மறதியின்மை.

511 இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

சிறந்த உவகை மகிழ்ச்சியின் சோர்வு - மிகுந்த உவகைக்களிப்பால் வரும் மறதியானது, இறந்த வெகுளியில் தீது - அளவிறந்த வெகுளியைக் காட்டினும் தீதாகும்.

மிக்க உவகை - பெருஞ் செல்வம், பேரின்பம் முதலியவற்றால் வருவது. அளவிறந்த வெகுளி ஒரு வேளை பகைவரைக் கொல்லப் பயன்படும்; இம்மறதி தன்னையே கொல்லுதலின் அதனினும் தீதாயிற்று. (க

512 பொச்சாப்புக் கோல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கோன் றாங்கு.

நிச்ச நிரப்பு அறிவினைக் கொன்று ஆங்கு - நாள்தோறும் உள்ள வறுமை அறிவைக்கெடுத்தல் போல, பொச்சாப்பு புகழைக் கெடுக்கும்-மறதியானது புகழைக் கெடுக்கும்.

நிச்ச நிரப்பு - ஒவ்வொரு நாளும் இரந்து தன் வயிறு வளர்க்கும் கொடிய வறுமை. நிச்ச நிரப்பு அறிவுடையான் மதிப்பைக் கெடுப்பதுபோல, மறதி ஒருவன்

புகழைக் கெடுக்கும். மறதி தற்காவாமையாலும், செயற் கேட்டாலும் இகழ்வை யுண்டாக்கி நன்மதிப்பைக் கெடுக்கும். (உ)

513 பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

பொச்சாப்பார்க்குப் புகழ்மை இல்லை - மறதி உடையார்க்குப் புகழ் இல்லை; அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு - அது உலகத்திலுள்ள எத்தகைய நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது.

மறதி யுடையோர் புகழுடன் வாழமாட்டர் என்பது எல்லா அறிஞர்களும் கண்ட முடிவு. அரசர்க்கேயன்றி யாவர்க்கும் பொருந்த 'எப்பால் நூலோர்க்கும்' என்றார். (௩)

514 அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

அச்சம் உடையார்க்கு அரண் இல்லை - அச்சம் உடையவர்க்குக் காவல் இருந்தும் பயனில்லை; ஆங்கு பொச்சாப்பு உடையார்க்கு நன்கு இல்லை - அதுபோல, மறதியுடையோர்க்குச் செல்வங்கள் இருந்தும் பயனில்லை.

அரண் - மதில். நன்மையைத் தருதலின் செல்வம் நன்கு எனப்பட்டது. அச்சமுடையார் இருந்த அரணழிவதுபோல, மறதியுடையார் செல்வம் அழியும். (௪)

515 முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

முன் உறக் காவாது இழுக்கியான் - தன்னால் காக்கப் படும் துன்பங்களை அவை வருவதற்கு முன்னே அறிந்து காவாது மறந்திருந்தவன், பின் ஊறு தன் பிழை

இரங்கிவிடும் - பின்பு துன்பங்களுற்றபோது காக்கலா காமையின் தன்னுடைய தவறுதலை நினைந்து இரங்குவான்.

காக்கப்படுந் துன்பங்கள் - மறதி பார்த்துப் பகைவர் செய்வன. ஊறு - உறுதல். பின்னிரங்குவதாற் பயனில்லை. (ரு)

516 இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

இழுக்காமை யார் மாட்டும் என்றும் வழுக்காமை வாயின் - மறவாமலிருக்கும் குணம் யாரிடத்தும் எப்போதும் தப்பாமல் வாய்க்குமாயின், அது ஒப்பதுஇல்- அதை ஒப்பது வேறொன்றுமில்லை.

பகைவரேயன்றிச் சுற்றமுதலிய தம்மவரிடத்தும் மறதி கூடாது என்பார் 'யார்மாட்டும்' என்றார். வழுக்குதல் - இடையே மறத்தல். யாரிடத்தும் எப்போதும் தப்பாமல் மறதியின்றி இருக்க வேண்டும். (சு)

517 அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

பொச்சாவாக் கருவியால் போற்றிச் செயின் - மறவாமையாகிய கருவியால் பாதுகாத்துச் செய்தால், அரிய என்று ஆகாத இல்லை - இவை செய்தற்கு அரியனவென்று ஒருவனால் முடியாத செயல்கள் இல்லை.

மறவாமல் செய்யின் எச்செயலும் ஆகும். மறதியினால் செயல் முடியாமல் போவதால், செயல் முடித்தற்கு மறவாமையைக் கருவியாகக் கூறினார். போற்றுதல் - இடையே தவறாமல் காத்தல். (எ)

518 புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

*புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும் - பெரியோரால் புகழ்ந்து கூறப்பட்டவைகளைக் கடைப்பிடித்துச் செய்தல் வேண்டும், செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல் - அவ்வாறு செய்யாது மறந்தவருக்கு எப்போதும் நன்மை இல்லை.*

*புகழ்ந்தவை - செய்யத் தக்கவையென்று பெரியோரால் சிறப்பித்துக் கூறப்பட்டவை. எழுமை - பல. 63-ம் குறளுரை பார்க்க. பலநாளும் என்பது. எழுமையும் என்ற உம்மையால் எப்போதும் எனப் பொருள்பட்டது. பெரியோரால் செய்யத்தக்கவை யென்று புகழ்ந்து கூறப் பட்டவைகளை மறந்தார்க்கு எப்போதும் நன்மை இல்லை.*

519 இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

*தம் மகிழ்ச்சியின் தாம் மைந்துறும் போழ்து - தமது மகிழ்ச்சியால் தாம் செருக்குறும்போது, இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக - முன்பு அம்மிகு மகிழ்ச்சியாலுண்டாகிய மறதியால் கெட்டவர்களை நினைத்துப் பார்க்க வேண்டும்.*

*மைந்து - வலிமை. மகிழ்ச்சியின் வலிமை - மிகு மகிழ்ச்சி - செருக்கு. தாம் மகிழ்ச்சியுற்றுச் செய்ய வேண்டியவற்றை மறந்திருக்கும்போது, அம்மறதியால் முன்பு கெட்டவரை எண்ணிப் பார்க்கவேண்டும். பார்த்தால் மறதி நீங்கும்.* (௯)

520 உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின்.

*உள்ளியது மற்றும் உள்ளப் பெறின் - நினைத்த பொருளையே பின்னும் நினைக்கப் பெற்றால், தான் உள்ளி*

யது எய்தல் எளிது - தான் அடைய நினைத்த பொருளை அவ்வாறே அடைதல் எளிதாகும்.

நினைத்த பொருளையே நினைத்தல் - மறதியின்றி அதனை முயலுதல். அதுதான் முடியாது என்பது ஒழிந்து நின்றமையின் மன் ஒழியிசை. (ம)

## 53 தெரிந்து தெளிதல்

அமைச்சர் முதலாயினாரை அறிவு குணஞ் செய லென்பனவற்றை ஆராய்ந்து தெளிதல். தெளிதல் - அறிதல். ஆராய்ந்தறிந்து தேர்ந்தெடுத்தல். இன்று அரசியல் அதிகாரிகளையும், பண்ணையம், கடை முதலியவற்றிற்கு ஆட்களையும் தேர்ந்தெடுத்தலுக்கும் ஒக்கும்.

521 அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

அறம் பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின் திறம் தெரிந்து - அறமும் பொருளும் இன்பமும் உயிரச்சமும் என்னும் நான்கின் கூறுபாட்டையும் ஆராய்ந்தறிந்து, தேறப்படும் - பின்பு ஒருவனைத் தெளியவேண்டும்.

உயிரச்சம் - தன் உயிருக்காக அஞ்சும் அச்சம். தன் உயிருக்குண்டாகும் கேட்டுக்கு அஞ்சுதல். தன் உயிர்க்கு அஞ்சிக்கடமையில் தவறுதல். அதாவது அறம் பிறழாமலும், பொருளுக்காக கடமை தவறாமலும், இன்பத்தின் பொருட்டு ஒழுக்கந் தவறாமலும், உயிர்க்கு உண்டாகும் கேட்டுக்கு அஞ்சிக் கடமைதவறாமலும் உள்ளவனையே தேர்ந்தெடுக்க வேண்டும். தமது கடமைக்கு மாறாக ஒன்றைச் செய்யாவிட்டால் உன்னைக்கொல்வேனென்றாலோ, வருத்தினாலோ அதற்கு அஞ்சிக் கடமையில் தவறுதல். இந்நான்கு வகையினும் ஆராய்ந்து பார்த்து, இந்நான்கினும் தவறாதவனையே வேலைக்கு

அமர்த்திக்கொள்ள வேண்டும். தேறுதல் - தெளிதல் - தகுதியுடையவனென்று முடிவு செய்தல். (க)

522 குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

குடிப்பிறந்து-நற்குடியில் பிறந்து, குற்றத்தின் நீங்கி-குற்றங்களினின்று நீங்கி, வடுப்பரியும் நாணுடையான் கட்டே தெளிவு-பழிக்கு அஞ்சும் நாணுடையவனிடத்தே அரசன் தெளிவு வேண்டும். நாணுடையவனையே தேர்ந்தெடுக்கவேண்டும்.

நற்குடி - வழிவழி ஒழுக்கமுடைய குடி, அந்நாட்டுப் பழங்குடி குற்றத்தினீங்கி-குற்றமற்றவனாய். பழி-பழிப்பு. பரிதல்-அஞ்சுதல். நற்குடிப் பிறப்பு, குற்ற மின்மை, பழிக்கஞ்சுதல், நாணுடைமை என்னும் குணங்களை உடையவனையே அரசன் தேர்ந்தெடுக்கவேண்டும். (உ)

523 அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு.

அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் - அருமையான நூல்களைக் கற்றுக் குற்றமற்றவர்களாய் உள்ளவரிடத்தும், தெரியுங்கால் வெளிறு இன்மை அரிதே - நன்கு ஆராயுமிடத்துக் குற்றமின்மை அரிதாகும்.

வெளிறு-அறியாமை. அவர்களுக்கு இது ஒவ்வொரு கால் உண்டாகுமாகையால் தெரியுங்கால் என்றார். கற்பவை கற்றுக் குற்றமற்றவரிடத்தும் ஏதேனும் குறை காணப்படுமாகையால் நன்கு ஆராய்தல் வேண்டும். (ங)

524 குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

குணம்நாடி குற்றமும்நாடி - ஒருவனுடைய குணங் குற்றங்களை ஆராய்ந்து, அவற்றுள் மிகைநாடி-அக்குணங்

குற்றங்களில் மிகுந்தவற்றை ஆராய்ந்து, மிக்ககொளல்-அம் மிகுந்தவற்றைக் கொண்டு ஒருவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

குணம் மிகுந்தால் நல்லவன் எனவும், குற்றம் மிகுந்தால் கெட்டவன் எனவும் அறியவேண்டும். மிகுந்த குணமுடையோனையே கொள்ளவேண்டும். குணங்குற்றங்களுள் ஒன்றேயுடையோர் உலகத்தின்மையின் மிகுந்ததைக் கொண்டு தெளியவேண்டும் என்பதாம். (ச)

525 பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும்-மக்களுடையும் பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும், தம்தம் கருமமே கட்டளைக்கல் - தாம்தாம் செய்யும் செயல்களே உரை கல்லாகும்.

செயலை உரைகல்லாக உருவகித்து, பெருமை சிறுமையைப் பொன்னாக உருவகியாதலால் இது ஒரு கூற்றுருவகம். உரைகல்-பொன்னின் மாற்றை அறிவிக்குங்கல்; பொற்கொல்லரிடம் இருக்கும். ஒருவன் செயலைக் கொண்டே உயர்வு தாழ்வை அறியலாம். (ரு)

526 அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

அற்றாரைத் தேறுதல் ஓம்புக-சுற்றம் இல்லாதவரைத் தெளிதலை ஒழிக; அவர் மற்று பற்று இலர்-அவர் உலகத்தோடு தொடர்பில்லாதவராவர்; பழிநாணார் - ஆகையால் பழிக்கஞ்சார்.

நெருங்கிய சுற்றமில்லாதவர் ஓரிடத்திருக்கவும், பொறுப்போடு தனது கடமையைச் செய்யவும், பழிப்பன ஒழித்துப் புகழ்வன செய்யவும் உறுதி கொள்ளார். மக்கள் நம்பிக்கைக் குரியவராகவும் நடந்து கொள்ளார்.

ஆகையால், சுற்றமில்லாரைத் தெளியக் கூடாது. சுற்றம் மனைவி மக்கள் முதலியோர். இன்றும் மணமாகாதவரை நம்பி யாரும் தம் வீட்டில் குடிவைக்க முன்வருவதில்லை. (சு)

527 காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல்-அன்புடைமையைத் துணையாகக் கொண்டு அறிய வேண்டியவற்றை அறியாதாரைத் தெளிதல், பேதைமை எல்லாம் தரும்-ஒருவனுக்கு எல்லா அறியாமையையும் தரும்.

காதன்மை-அன்புடைமை. கந்து-பற்றுக்கோடு - துணை. அன்பு பற்றி அறிவில்லாதவனைத் தேர்ந்தெடுப்பது அறியாமையாகும். அறிவின்மையால் அவர் செய்யும் செயல்கள் நல்லதாகா. (எ)

528 தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

பிறனைத் தேரான் வழிமுறை தெளிந்தான் - பிறனை ஆராயாது தன் குலத்தினன் என்று தெளிந்தவனுக்கு, தீரா இடும்பை தரும்-அத்தெளிவு முடிவில்லாத துன்பத்தைக் கொடுக்கும்.

வழிமுறை-தன் குலத்தினன். குலம்-ஒரே குடும்பத்திலிருந்து பெருகிய கூட்டம். தன் குலத்தானென்றும் ஆராயாது ஒருவனைத் தெளியக் கூடாது. (அ)

529 தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

யாரையும் தேராது தேறற்க-யாரையும் ஆராயாது தெளியாதொழிக; தேர்ந்தபின் தேறும் பொருள்

தேறுக - ஆராய்ந்த பின்பு அவரால் தெளியப்படும் பொருள்களை ஐயுறுதொழிக.

தேர்தல் - ஆராய்தல் - தேறுதல் - தெளிதல், நம்புதல். ஆராயாது யாரையும் வேலைக்கமர்த்தக் கூடாது; ஆராய்ந்து வேலைக்கமர்த்தின பின்பு அவர்மேல் நம்பிக்கை வைக்கவேண்டும். தேறும் பொருள் தேறுக - அவர்கள் கூறுவதை நம்புக. (கூ)

530 தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

தேரான் தெளிவும்-ஆராயாது தெளிதலும், தெளிந்தான்கண் ஐயுறவும்-ஆராய்ந்து தெளிந்தவனிடத்துஐயப்பாடு கொள்ளுதலும், தீரா இடும்பை தரும் - நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

ஆராய்ந்து தெளிந்தவனிடத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டும். (ல)

## 54 தெரிந்துவினையாடல்

ஆராய்ந்து தெளியப்பட்டவரை, அவர் செய்யவல்ல வினைகளையறிந்து, அவற்றை அவரிடம் ஒப்படைத்தல். அவரை அவ்வினைக்கண் அமர்த்தல். ஆடல் - ஆள்தல், ஆளுதல், வினையைச் செய்யும்படி ஏற்படுத்தல்.

531 நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

நன்மையும் தீமையும் நாடி-நன்மை பயக்கும் வினையையும் தீமை பயக்கும் வினையையும் ஆராய்ந்து, நலம்புரிந்த தன்மையான் ஆளப்படும்-நன்மையை விரும்பிய

இயல்புடையான் சிறந்த வினைகளுக்கு அமர்த்தப் படுவான்.

புரிதல் - விரும்புதல். ஆளப்படும் - அவ்வேலையில் அமர்த்தப்படுதல், அவ்வேலையைச் செய்யும்படி செய்தல். தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட வேலையில், நல்லன தீயனவற்றை ஆராய்ந்து, தீயன விலக்கி நல்லன செய்வோனையே சிறந்த வேலையில் அமர்த்த வேண்டும். (க)

532 வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை.

வாரி பெருக்கி-பொருள் வரும் வழிகளைப் பெருக்கி, வளம்படுத்து-அதனால் பொருள் வளத்தை உண்டாக்கி, உற்றவை ஆராய்வான் வினை செய்க - அப்பொருள் வரும் வழிகட்கும் பொருட்குமுற்ற இடையூறுகளை ஆராய்ந்து நீக்கவல்லவன் தொழில் செய்க.

பொருள் வரும் வழி - நிலவரி முதலியன (385). வாரி - வருவாய் வரும்வழி. வருவாயைப் பெருக்கிப் பொருள் வளத்தை உண்டாக்கி அவ்விரண்டற்கும் உற்ற இடையூறுகளை நீக்கவல்லவனை அரசன் தொழிலில் அமர்த்த வேண்டும். (உ)

533 அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

அன்பு அறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்- அன்பு அறிவு ஆராய்ந்து துணிதல் பேராசையின்மை ஆகிய இந்நான்கையும், நன்கு உடையான் கட்டே தெளிவு- நிலையாக உடையவனிடமே தெளிவு வேண்டும்.

534 எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
வேறுகு மாந்தர் பலர்.

எனை வகையால் தேறியக் கண்ணும் - எல்லா வகையாலும் ஆராய்ந்து தெளிந்தவிடத்தும், வினைவகையால்

வேறுகும் மாந்தர் பலர் - செய்யும் செயலின் வகையினால் மனம் வேறுபடும் மக்கள் உலகில் பலராவார்.

தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட வினைக்குத் தகுந்தபடி ஆசைக்காளாவோரும் உண்டாகையால் 'வேறுகுமாந்தர் பலர்' என்றார். ஆராய்ந்து தெளிந்தவர் என்று இராமல் அவர் வினை செய்யும்போது இடையிடையே ஆராய்ந்து கொண்டே வரவேண்டும். (௪)

535 அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

வினைதான் அறிந்து ஆற்றிச் செய்கிற்பார்க்கு அல்லால் - தொழிலானது செய்யும் வழிகளை அறிந்து வருந் துன்பங்களைப் பொறுத்துச் செய்பவனை அல்லாமல், சிறந்தான் என்று ஏவல்பாற்று அன்று - இவன் சிறந்தவன் என்று ஒருவனை ஏவும் தன்மையது அன்று.

செய்யும் வழிகளை அறிந்து, துன்பங்களைப் பொறுத்துச் செய்பவனையல்லாமல், சிறந்தவனென்று ஒருவனை வினைசெய்ய அமர்த்தக்கூடாது. (௫)

536 செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

செய்வானை நாடி - தொழில் செய்பவனது தன்மையை ஆராய்ந்து, வினை நாடி - அத்தொழிலின் இயல்பையும் ஆராய்ந்து, காலத்தோடு எய்த உணர்ந்து செயல் - அத்தொழில் முடிவுபெறுங் காலத்தோடு பொருந்த அறிந்து அத்தொழிலைச் செய்யக்கடவன்.

வினை செய்வான், வினை, காலம் மூன்றையும் ஆராய்ந்து வினைசெய்ய அவனை அமர்த்த வேண்டும். (௬)

537 இதனை இதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து - இச்செயலை இக்கருவியால் இத்தகையவன் முடிப்பான் என்று ஆராய்ந்து, அதனை அவன்கண் விடல் - அச் செயலை அவனிடம் விடுக.

கருவி - பொருளும் துணைவரும் முதலியன. ஒன்றைச் செய்யத் தகுதியுடையவனை அதற்கு ஏற்படுத்த வேண்டும். (எ)

538 வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
அதற்குரிய னாகச் செயல்.

வினைக்கு உரிமை நாடிய பின்றை - ஒருவனை ஒரு தொழில் செய்வதற்கு உரியவனாக ஆராய்ந்து தெளிந்த பிறகு, அவனை அதற்கு உரியன் ஆகச் செயல் - அவனை அத்தொழிற்கு உரிமையுடையவனாகச் செய்ய வேண்டும்.

உரிமையுடையவன் - அத்தொழில் செய்பவன். தெளிந்தபின் அவனை அச்செயலாளனாக்க வேண்டும். (அ)

539 வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

வினைக்கண் வினையுடையான் கேண்மை - எப்பொழுதும் தன் தொழிலின்கண் முயற்சியுடையவனது நட்பை, வேறாக நினைப்பானைத் திரு நீங்கும்-வேறுபாடாக நினைப்பவனை விட்டுச் செல்வம் நீங்கிவிடும்.

பிறர் பேச்சைக் கேட்டு வேறுபட எண்ணக்கூடாது. தொழில்முயற்சி யுடையவனைப் பிறர் பேச்சைக்கேட்டு வேறாக எண்ணினால் பின் யாரும் முயலமாட்டார். அதனால், அரசனது செல்வம் குறையும். (கூ)

540 நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

*வினை செய்வான் கோடாமை உலகு கோடாது - தொழில் செய்பவன் கோணாதிருக்க உலகமும் கோணாது; மன்னன் நாள்தோறும் நாடுக - ஆதலால் மன்னவன் தன்தொழிலை நாடோறும் ஆராயக்கடவன்.*

*கோணுதல்-நெறி தவறுதல். தொழில் செய்வார் நெறி தவறாமல் நடக்கும்படி அரசன் நாடோறும் ஆராய்வானால் அத்தொழிலால் நடைபெறும் உலகமும் நெறி தவறாது என்பதாம். அதிகாரிகள் முதலியோரை அடிக்கடி மேற்பார்த்து வரவேண்டுமென்பதாம்.* (ய)

## 55 ஒற்றாடல்

*தன்னாட்டினும் பகைவர் நாட்டினும் நிகழ்வனவற்றை மறைந்து நின்று அறியும் ஒற்றரை ஆளும் திறம். ஒற்றர்-கரந்துறை காப்பாளர் (சி. ஐ. டி.).*

541 ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

*ஒற்றும் உரைசான்ற நூலும் இவை இரண்டும்-ஒற்றரும் புகழ்மிக்க அறநூலும் ஆகிய இவை இரண்டையும், மன்னவன் கண் தெற்றென்க-மன்னவன் தன்னுடைய இரண்டு கண்களாகத் தெளியக் கடவன். தெற்றெனல்-தெளிதல்.* (க)

542 எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

*எல்லார்க்கும் நிகழ்பவை எல்லாம் எஞ்ஞான்றும் வல் அறிதல்-எல்லாரிடத்தும் நிகழ்பவை அனைத்தையும்*

நாடோறும் ஒற்றரால் விரைவில் அறிதல், வேந்தன் தொழில்-அரசனுக்குரிய தொழிலாகும்.

நிகழ்பவை எல்லாம்-நல்லவும் தீயவுமாகிய சொற்களும் செயல்களும். ஒற்றரால் என்பது அதிகாரத்தால் வந்தது. நாட்டில் நிகழ்வனவற்றை யெல்லாம் நாடோறும் ஒற்றரைக் கொண்டு அறிதல் அரசன் கடமையாகும். (உ)

543 ஒற்றினு னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

ஒற்றினன் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன் - ஒற்றர்களைக் கொண்டு எல்லோரிடத்தும் நிகழ்வனவற்றை அறிந்துவரச் செய்து அதன் பயனை ஆராயாத அரசன், கொற்றம் கொளக்கிடந்தது இல்-வெற்றி கொள்ளுதல் இல்லை.

கொளக்கிடந்தது-கொள்வது. ஒற்றுதல்-ஒற்றரால் நாட்டில் நிகழ்வனவற்றை அறிதல். பயன் - நன்மை தீமை. (ந)

544 வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

தம் வினைசெய்வார் சுற்றம் வேண்டாதார் என்று அனைவரையும் ஆராய்வது-தமது காரியம் செய்வார், சுற்றத்தார், பகைவர் என்று சொல்லப்பட்ட அனைவரையும் ஆராய்வானே, ஒற்று - ஒற்றனவான்.

தம் என்றது அரசனையும் உளப்படுத்தி. இம் மூவகையினர் சொற் செயல்களை ஆராய்தல். இம் மூவரும் செய்வன அறிந்து அவற்றிற்கேற்றன செய்ய வேண்டுதலின், இம்மூவகையாரையும் விடாமல் ஆராயவேண்டுமென்பார் அனைவரையும் ஆராய்வது' என்றார். (ச)

545 கடாஅ வுருவோடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று.

கடா உருவொடு-பிறர் ஐயப்படாத உருவத்துடன், கண் அஞ்சாது-ஐயப்பட்டு வெகுண்டு நோக்கினால் அந் நோக்குக்கு அஞ்சாது நின்று, யாண்டும் உகாமை வல்லதே ஒற்று-எவ்வளவு வருத்தினாலும் எப்போதும் நெஞ்சில் உள்ளவற்றை வெளிப்படுத்தாமையில் வல்லவனே ஒற்றனாவான்.

கடுத்தல் - ஐயுறதல். கடா - கடாத. ஐயப்படாத உருவமும், அஞ்சாமையும், எவ்வளவு வருத்தினாலும் உண்மையை வெளியிடாதவனுமே ஒற்றனாவான். (ரு)

546 துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

துறந்தார் படித்தவர் ஆகி-துறவுக்கோல முடையராகி, இறந்து ஆராய்ந்து-செல்லுதற்கரிய உள்ளிடங்களிலெல்லாம் புகுந்து ஆராய்ந்து, என்செயினும் சோர்வு இலது ஒற்று-ஐயுற்றுப் பிடித்து எவ்வளவு துன்பஞ்செய்தாலும் தன்னை இன்னானென்று வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான்.

படிவம் - வடிவம். தவக்கோலத்தினரை ஒன்றும் செய்யாராகையால் "செயினும்" என்றார். (சு)

547 மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

மறைந்தவை கேட்க வற்று ஆகி-பிறர் மறைவாகச் செய்த செயல்களை அவர்க்கு வேண்டியவர்களால் கேட்டறிய வல்லனாய், அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று-அவ்வாறு அறிந்தவைகளை ஐயமின்றித் தீர அறிய வல்லவனே ஒற்றனாவான்.

மறைவாகப் பேசும் பேச்சுங்கொள்க. மறைந்தவை சொல்லுவாரை யறிந்து, ஐயப்படாமல் சென்று கேட்க வேண்டும். விளக்கமாக அறிந்துவரவேண்டும். (எ)

548 ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல்.

ஒற்று ஒற்றித் தந்த பொருளையும் - ஓரொற்றன் ஒற்றிவந்து சொன்ன பொருளையும், மற்றும் ஓர் ஒற்றினால் ஒற்றிக் கொளல்-வேறோர் ஒற்றனாலும் அறிந்துவரச் செய்து ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

ஒற்றி வந்து - அறிந்துவந்து. ஒற்றப்பட்டார்க்கு உடந்தையாகி மாறுபடக் கூறவுங் கூடுமாகையால், ஒருவன் சொல்லை நம்பக்கூடாது என்பதாம். (அ)

549 ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

ஒற்று ஒற்று உணராமை ஆள்க - ஓர் ஒற்றன் வேறொற்றனை அறியாமல் ஆளவேண்டும்; உடன்மூவர் சொல்தொக்க தேறப்படும் - அத்தகைய ஒற்றர் மூவரை ஒன்றை அறிந்துவர வேறு வேறு விட்டால் அம்மூவர் சொல்லும் ஒத்தனவாயின் அது உண்மையென்று நம்ப வேண்டும்.

ஆளுதல்-நடத்துதல். தொக்க-ஒத்தன. ஒருவனை ஒருவனறியின் தம்முள் ஒத்து ஒரேமாதிரி கூறுவாராகையால் உணராமை யாளவேண்டியதாயிற்று. உண்மையல்லாததை மூவரும் ஒன்றுபோல் சொல்லுதல் இயலாதாகையால் தனித்தனியே ஆளவேண்டியதாயிற்று. (கூ)

550 சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க-ஒற்றனுக்குச் செய்யப்படும் சிறப்பைப் பிறர் அறியச் செய்யக் கூடாது; செய்யின் மறை புறப்படுத்தான் ஆகும். செய்தால் அவன் ஒற்றனாயதும், அவன் கூறியதுமான மறையைத் தானே வெளிப்படுத்தினவனாவான்.

சிறப்பு-பட்டமும், பரிசும், பதமும் தருதல். சிறப்புப்பெற்ற இவன் யாவன்? இது பெறுதற்குக் காரணமென்ன? என்று கேட்பாரும், விடை கூறுவாரும் அயலாராகையால் புறப்படுத்தல் ஆகும். (ய)

## 56 செங்கோன்மை

செங்கோல்-முறை செய்தல். செங்கோன்மை-முறை செய்தலின் தன்மை. குற்றமும் குணமும் நோக்கி ஆராய்தலால் கோல் ஆயிற்று. கோடுதல்-கொடுங்கோல்.

551 ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

ஓர்ந்து-ஒருவன் செய்த குற்றத்தை ஆராய்ந்து, யார் மாட்டும் கண்ணோடாது-யாவரிடத்தும் இரக்கங் காட்டாமல், இறை புரிந்து-தலைமை பொருந்தி, தேர்ந்து செய்வஃதே முறை - குற்றத்திற்குத்தக்க தண்டனையை ஆராய்ந்து செய்தலே முறையாகும்.

நெருங்கிய சுற்றத்தாரிடமும் கண்ணோடக் கூடாதென்பார் 'யார் மாட்டும்' என்றார். தலைமைக் குணமுள்ளவர்க்கே நடுவு நிலையாக நின்று குற்றத்தை ஆராய முடியுமாகையால் 'இறை புரிந்து' என்றார். இறை - இறைமை-தலைமைக் குணம். (க)

552 வானோக்கி வாழு முலகேல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

உலகு எல்லாம் வான்நோக்கி வாழும்-உலகத்து உயிரெல்லாம் மழையை எதிர்பார்த்து வாழும்; குடி மன்னவன் கோல் நோக்கி வாழும் - குடிமக்கள் மன்னவனது செங்கோலை எதிர்பார்த்து வாழ்வார்.

மழையின்றேல் உயிர்வாழ முடியாதாகையால் அம்மழை தவறாது பெய்யவேண்டுமென மக்கள் எப்போதும் எதிர் நோக்கிக் கொண்டே இருப்பர். அரசன் கொடுங்கோலனால் தாம் துன்புற நேருமாகையால் குடிமக்கள் அரசன் செங்கோலனாக இருக்கவேண்டுமென்பதையே எப்போதும் எண்ணிக் கொண்டு வாழ்வர். நோக்குதல் - இன்றுபோல் என்றும் இருக்க வேண்டுமென எதிர் நோக்குதல். மழை வேண்டும்போது பெய்யினும் அரசன் முறைதவறின் குடிமக்கள் துன்புறுவராதலால் மழையினும் செங்கோல் சிறந்ததெனப் பட்டது. (உ)

553 அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது- அறவோர் செய்த நூலுக்கும் அந்நூலில் கூறப்படும் அறத்திற்கும் அடிப்படையாய் நின்றது, மன்னவன் கோல் - அரசனது செங்கோல்.

அரசன் முறை செய்யாவிட்டால் அறவோரின் நூல்களைப் போற்றுவாரும் அறத்தைக் கடைப்பிடித்து நடப்பாரும் நாட்டில் குறைவாராதலால் அவ்விரண்டிற்கும் அடிப்படையாய் நிற்பது மன்னவன் கோல் என்றார். அறவோர் செய்த பலதுறை நூல்களில் அற நூல்களில் கூறப்படும் அறங்கள்; திருக்குறள் அறத்துப்பாலில் கூறப்படும் அறங்கள். வள்ளுவர் அறவோராவர். அரசன் முறை செய்யாவிடின் அறவோர் நூல் போற்றாமையோடு;

அறவோர் நூல் செய்யவும் முடியாது என்றுமாம். ஆதி-முதல், அடிப்படை. (௩)

554 குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு.

குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநில மன்னன் அடி - குடிமக்களைத் தழுவிச் செங்கோல்செலுத்தும் பெருநில மன்னவனது அடியை, தழீஇ நிற்கும் உலகு - தழுவி நிற்பர் உலகத்தார்.

தழீஇ - தழுவி. குடிகளைத் தழுவுதல் - குடிகட்கு வேண்டுவன கொடுத்தல், வரிநீக்கம், இன்சொல் சொல்லுதல் முதலியன. மன்னவன் அடியைத் தழுவுதல் - அவனிடம் நீங்காத அன்புடையராதல். உலகத்தார் - குடிமக்கள். குடிகளைத் தழுவி முறை செய்யும் மன்னனை மக்கள் விரும்புவர். (௪)

555 இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

பெயலும் விளையுளும் தொக்கு - பருவமழையும் குறையாத விளைவும் ஒன்று சேர்ந்து, இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட - அறநூல்களில் சொல்லிய முறைப்படி செங்கோல் செலுத்தும் மன்னவனது நாட்டில் உளவாகும்.

நாட்ட - நாட்டின்கண் உள. பெயலும் விளைவும் ஒன்றுசேர்ந்து அந்நாட்டின் கண் உள என்பதாம். பருவமழையும் குறையாத விளைவும் மிகவும் இன்றியமையாதனவாகையால், மிகவும் இன்றியமையாத செங்கோலை அவைமேல் வைத்துச் செங்கோல் மன்னன் நாட்டில் அவை இரண்டும் சேர்ந்து நாட்டு மக்களை வாழ்விக்கும் எனக் கூறினார். இயல்பு உளி - இயல்பால். (௫)

556 வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

மன்னவன் வென்றி தருவது வேல் அன்று கோல் - அரசனுக்கு வெற்றியைத் தருவது அவன் வேல் அன்று, செங்கோலாகும்; அதூஉம் கோடாது எனின் - அச் செங்கோலும் வெற்றியைத் தருவது தான் கோணு திருக்குமாயின்.

மன்னவனுக்கு-நான்கன் உருபு தொக்கது. கோணுதல் - முறை தவறுதல். என்றும் முறை தவருத அரசனிடம் நாட்டு மக்கள் நீங்கா அன்புடையராய் இருத்தலால் அது அவன் வெற்றிக்குக் காரணமாயிற்று. (சு)

557 இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

இறை வையகம் எல்லாம் காக்கும் - அரசன் உலகத்தை யெல்லாம் காப்பான்; முட்டாச் செயின் அவனை முறை காக்கும் - முறை தவருமல் செங்கோல் செலுத்தினல் அவனை அச்செங்கோலே பாதுகாக்கும்.

முட்டா - முட்டாது. முட்டாது செய்ததைக் கோவலனை ஆராயாது கொன்றதற்காக அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன் வரலாற்றில் காண்க. அது அவன் புகழைக் காத்தது. அரசனது செங்கோன்மையினல் நாட்டு மக்கள் அவனிடம் நீங்கா அன்புடையாரவராதலால் அது அவனைக்காக்கும் என்ருர். (எ)

558 எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றனே கெடும்.

எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன் - முறை வேண்டி வந்தாரின் காட்சிக்கு எளியனுய் அவர் கூறியவற்றை நன்கு ஆராய்ந்து முறை செய்யாத அரசன்,

தண் பதத்தால் தானே கெடும் - காலந்தாழ்த்தும் நிலையால் தானே கெடுவான்.

எண்பதம் - முறை வேண்டி வந்தவர் தங்கள் குறையைச் சொல்வதற்கு ஏற்ற காலம். எண்பதம்-எளியநிலை. எண்பதத்தான் - முற்றெச்சம். ஓரா - ஓர்ந்து. எண்பதத்தானைய் ஓர்ந்து செய்யாத மன்னவன். தண்பதம் - குறையைச் சொல்லுவதற்குத் தாழ்க்குங் காலம். தண் பதம் - தாழ் நிலை, தாழ்க்கும் நிலை. குறை கேட்டு முறை செய்தற்குக் காலந் தாழ்க்கும் அரசனிடம் மக்கள் அன்பு நீங்குவராதலின் 'தானே கெடும்' என்றார். (அ)

559 குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

குடிபுறங்காத்து - குடிகளைப் பிறர் வருத்தாமல் காத்து, ஓம்பி - தானும் வருத்தாமல் காத்து, குற்றம் கடிதல் - குடிகள் குற்றம் செய்தால் ஒறுத்து அக் குற்றத்தை நீக்குதல், வடு அன்று - அரசனுக்குக் குற்றமாகாது, வேந்தன் தொழில் - அரசனது தொழிலாகும்.

புறங்காத்தல். பாதுகாத்தல். ஒறுத்தல் - தண்டித்தல். பின்னும் அத்தகைய குற்றம் செய்யாமலும், பிறரும் அவ்வாறு செய்யாமலும் ஒறுத்தல். தொழில் - கடமை. குடிகளைப் பாதுகாத்துக் குற்றம் செய்யாமல் காப்பது அரசன் கடமை. (கூ)

560 கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

வேந்து கொலையில் கொடியாரை ஒறுத்தல்-அரசன் கொலையினால் கொடியவர்களைத் தண்டித்தல், பைங்கூழ் களை கட்டதனொடு நேர் - உழவன் பயிர் நிலத்தில் முளைக்கும் களையைக் களைந்து பயிரை வளர்த்தற்கு ஒப்பாகும்.

கொலையில் ஒறுத்தல் - தூக்குத் தண்டனை கொடுத்தல். களை - புற்கள். கொடியாரைத் தூக்கிக்கொன்று மக்களைக் காத்தல் களைகளைந்து பயிரைக் காத்தலோடொக்கும். இதுவும் வேந்தன் தொழில். (ய)

## 57 கொடுங்கோன்மை

561 கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

அலை மேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து - பொருளை விரும்பிக் குடிகளை வருத்தும் தொழிலை மேற்கொண்டு அறமல்லாதவற்றைச் செய்து நாடாளும் அரசன், கொலை மேற்கொண்டாரின் கொடிது - பகைமைபற்றிக் கொல்லுங் தொழிலை மேற்கொண்டொழுகுவாரினும் கொடியனாவான்.

அலை - அலைத்தல். அல்லவை - கொடுமை. பொருளை விரும்பிக் குடிகளை வருத்துதல் - பல வரி போட்டுக் குடிகளை வருத்துதல், தளர்ந்த காலத்தில் வரி நீக்காமை முதலியன. கொலை மேற்கொண்டோர் செய்வது ஒரு பொழுது துன்பம்; இவன் செய்வது எப்பொழுதும் துன்பமாகும் என்பது பற்றி, அவரினும் கொடியன் என்றார். கொடிது - பால் மயக்கம் - அலை, கொலையினுங் கொடிது. கொடுங்கோன்மை - செங்கோன்மையின் மறுதலை ; முறையின்மை. (க)

562 வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

கோலொடு நின்றான் இரவு - கொடுங்கோலரசன் குடிகளிடம் இரத்தல், வேலொடு நின்றான் இடு என்றது போலும் - வழியில் வேலொடு நின்ற கள்வன், வழிச்

செல்வோனைப் பார்த்துக் கையிலுள்ள பொருளைக் கொடு என்று கேட்பது போலும்.

'இரவு' என்றதனால், இறைப்பொருள் (வரி) அல்லவாயிற்று, வருத்தி வாங்குதலால் இரத்தலும் கொடுங்கோலாயிற்று. அரசிறைக்குமேல் குடிகளை வருத்திப் பொருள் பறித்தல் வழிபறிப்பதனோடொக்கும். (உ)

563 நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும்.

நாள்தொறும் நாடி முறை செய்யா மன்னவன் - நாள்தோறும் தன் நாட்டில் உண்டாகும் தீமைகளை ஆராய்ந்து முறை செய்யாத மன்னவன்; நாள்தொறும் நாடு கெடும் - நாளுக்கு நாள் தன் நாட்டை இழப்பான்.

இழத்தல் - பயனை இழத்தல். முறை செய்யா மன்னவன் நாடு நாள்தோறும் சீர்கெடும் என்றுமாம். (௩)

564 கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

சூழாது கோல்கோடிச் செய்யும் அரசு - பின் விளைவதை எண்ணாமல் முறை தவற ஆட்சி செய்யும் அரசன், கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் - பொருளையும் குடிகளையும் ஒருங்கு இழப்பான்.

கோட என்பது கோடி எனத்திரிந்தது. குடிகளை இழத்தல் - குடிகள் அவனிடம் அன்பின்றி வெறுப்புக் கொள்ளல்; பகைவனைச் சேர்தலுங் கூடும். கூழ்-நாடெனக் கொண்டு நாட்டையும் இழப்பான் என்றுமாம். ஆராயாது முறை தவற ஆட்சி செய்யும் அரசன் கெடுவான். (௪)

565 அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

அல்லல் பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே - குடிகள் துன்பமுற்று அதனைப் பொறுக்க மாட்டாமல் அழுத கண்ணீர் அன்றோ, செல்வத்தைத் தேய்க்கும் படை-அரசனது செல்வத்தைக் குறைக்கும் கருவியாகும்

கண்ணீரைக் கருவியாக்கிச் செல்வத்தை மரமாக உருவகியாதது ஒருகூற் றுருவகம். கண்ணீர் விட்டழு வோர் விரும்புவன கொடாராகையால் செல்வங் குறைவ தாயிற்று. (ரு)

566 மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை - அரசர்க்கு நிலைத்திருப்பது செங்கோன்மையாகும்; அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னுவாம்-அச் செங்கோன்மைஇல்லா விட்டால் அவர்களுக்குப் புகழ் நிலையாவாம். ஒளி - புகழ். கொடுங்கோலரசர்க்குப் புகழ் இல்லை. (சு)

567 துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு.

வாழும் உயிர்க்கு வேந்தன் அளி இன்மை-தன்னுட் டில் வாழும் மக்களுக்கு அந்நாடாள் வேந்தனது அருள் இல்லாமையானது, ஞாலத்திற்குத் துளி இன்மை எற்று அற்றே - உலகத்திற்கு மழையின்மை எத்தகையதோ அத்தகையதாகும்.

மழையில்லாத நாட்டில் வாழ்வது போன்றது அரு ளில்லாத அரசன் நாட்டில் வாழ்வது. அளியின்மை - கொடுங்கோன்மை. (எ)

568 இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

முறை செய்யா மன்னவன் கோல்கீழ்ப் படின் - முறை செய்யாத அரசனது கொடுங்கோலின் கீழ் வாழ்வது, உடைமை இன்மையின் இன்னாது - செல்வமுடைமை வறுமையைக் காட்டினும் துன்பந் தருவதாகும்.

கோலின் கீழ் வாழ்தல்-அவன் ஆட்சிக் கீழ் வாழ்தல். வருத்திப் பொருள் பறித்தலால் செல்வம் வறுமையினும் துன்பந் தருவதாயிற்று. (அ)

569 முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

மன்னவன் முறை கோடிச் செய்யின் - மன்னவன் முறை தவறச் செய்வானாயின், உறை கோடி வானம் பெயல் ஒல்லாது - பருவ மழை இல்லையாகும்படி மேகம் மழை பெய்யாது.

கோட என்பது இரண்டிடத்தும் கோடி எனத் திரிந்தது. உறை-மழைத்துளி. 555-ஆம் குறளுரையைப் பார்க்க. அதற்கு எதிரிடை இது. (௯)

570 ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

காவலன் காவான் எனின்-அரசன் முறை செய்யானாயின், ஆ பயன் குன்றும்-அவன் நாட்டின் கண் வாழும் மக்களது முயற்சியால் ஆகும் பயன் குறையப் பெறும், அறுதொழிலோர் நூல் மறப்பர்-முதன்மையான தொழிலுடையோர் தம் தொழிலுக்குரிய அறிவை மறந்து விடுவர்.

ஆபயன் - வினைத்தொகை. ஆனபயன், ஆகின்ற பயன், ஆகும்பயன் எனவிரியும். ஆ - ஆதல். அறுதொழில்-வினைத்தொகை. அறுத்த, அறுக்கின்ற அறுக்

குந் தொழில். அறுத்தல்-அறுதி செய்தல், வரையறை செய்தல். இன்றியமையாத சிறந்த தொழிலென அறுதி செய்யப்பட்ட தொழில். அத் தொழில்களாவன-உழவு, வாணிகம், நெசவு, தச்சு, கொல் முதலிய முதன்மையான தொழில்கள். கொடுங்கோலரசன் நாட்டில் அமைதியிரா தாகையால் இத்தொழில்கள் ஒழுங்காக நடைபெறு வென் பதாம். மறத்தல் - முயன்று செய்யாமை. நூல் - அத் தொழில்களின் நுட்ப அறிவை யுணர்த்திற்று. கொடுங் கோலன் நாடு கெடும். (ய)

## 58 வெருவந்த செய்யாமை

குடிமக்கள் அஞ்சத்தக்கவற்றைச் செய்யாதிருத்தல். வெருவுதல்-அஞ்சுதல். வெருவந்த-அஞ்சத்தக்க செயல் கள்.

571 தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து.

*தக்காங்கு நாடி*-ஒருவன் செய்த குற்றத்தைத் தக்க வாறு ஆராய்ந்து, *தலைச்செல்லா வண்ணத்தால்*-பின்னும் அது செய்யாமல் இருத்தற்காக, *ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து*-அக்குற்றத்திற்கு ஏற்றவாறு ஒறுப்பவனே அரச னவான்.

தக்கவாறு நாடாமையும், யாதானுமொரு காரணம் பற்றி மிகவொறுத்தலும் குடிகளஞ்சும் வினையாயின. (க)

572 கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

*ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர்*-செல்வம் தம்மிடம் நெடுங்காலம் நிலைபெறுதலை விரும்புபவர், கடிது

ஓச்சி மெல்ல எறிக-அளவுகடந்து செய்வார் போல் தொடங்கி, செய்யுங்கால் அளவுகடவாமல் செய்ய வேண்டும்.

ஓச்சி - செய்து, இங்கே செய்யத் தொடங்குதல். அளவுகடந்து செய்வார் போல் காட்டித் தக்காங்கு ஒறுக்க வேண்டும். அதாவது குறைந்த தண்டனை கொடுக்க வேண்டும். (உ)

573 வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்.

வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின்-குடிமக்கள் அஞ்சத்தக்க செயல்களைச் செய்யும் அரசன், ஒருவந்தம் ஒல்லை கெடும் - கட்டாயம் விரைவில் கெடுவான்.

ஒருவந்தம்-உறுதி. குடிகளஞ்சும் செயல் செய்வான் கட்டாயம் விரைவில் கெடுவான். (ங)

574 இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச் சொல் வேந்தன் - குடிமக்களால் நம் அரசன் பொல்லாதவன் என்று சொல்லப்படும் துன்பந்தரும் சொல்லையுடைய அரசன், உறை கடுகி ஒல்லைக் கெடும்-வாழ்நாள் குறைந்து விரைவில் கெடுவான்.

உறை - முதல்நிலைத் தொழிற்பெயர். அது தொழிலாகு பெயராய் உறைதலைச் செய்யும் வாழ்நாளுக்காயிற்று. குடிமக்கள் பழி தூற்றுங் கவலையால் வாழ்நாட் குறைந்து கெடுவான். (ச)

575 அருஞ்செவ்வி யின்ன முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

அரும் செவ்வி இன்ன முகத்தான் பெருஞ்செல்வம்-தன்னைக் காண வேண்டி வந்தோர்க்கு அரிய செவ்வியையும் கண்டால் இனிமையில்லாத முகத்தையும் உடையவனது பெரிய செல்வம், பேய்கண்டு அன்னது உடைத்து-அச்சந்தரும் பொருளைக் கண்டதுபோல அச்சந்தருதலை உடையது.

செவ்வி-தக்க காலம். அருஞ் செவ்வி-காணமுடியாத காலம். பேய்-அச்சம். இங்கே அச்சந்தரும் பொருளைக் குறித்தது. பேயிருள் - அச்சந்தரும் இருள். பேய்க் காய்ச்சல்-அச்சந்தரும் காய்ச்சல். அச்சத்தைப் பேயென்பது உலகவழக்கு. ஒருவனுடைய அச்சமே அவன் எண்ணும் உருவெளித் தோற்றமாகி அவனை அச்சுறுத்தும். அவ்வச்சம் வெறிநோயை உண்டாக்கும். பெரும்பாலும் பெண்களே, அவர்களிலும் இரவில் வெளிச் செல்லாத பெண்களே பேய்பிடித் தாடல் காண்க. பேய்பிடித்தல்-அச்சநோய் கொள்ளல். இரவில் வெளிச் சென்று தொழில் செய்து வரும் சக்கிலிப் பெண்கள் போன்றாரைப் பேய் பிடியாமை யறிக. பேய்-பொய்த்தோற்றம், போலித்தோற்றம் என்பதை-பேய்க்கரும்பு, பேய்ச்சுரை, பேய்த் தேர் என்னும் வழக்காலறிக. அருஞ் செவ்வியும் இன்ன முகமும் உடையான் செல்வம் அச்சத்தால் அடைய முடியாதாகையால், பேய் கண்டன்னது என்றார். 850-ல் வரும் அலகை என்பதும் இது. (ரு)

576 கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும்.

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் - ஒருவன் கடுமையான சொற்களை யுடையவனும் இரக்கம் இல்லாதவனும் ஆனல், நெடும் செல்வம் நீடு இன்றி ஆங்கே

கெடும் - அவனது பெரிய செல்வம் நிலைக்காமல் அப்போதே கெடும்.

கண்-இரக்கம். இவ்விருவகைக் குணமுடையவனையும் மக்கள் விரும்பாததால் செல்வம் கெடும். (சு)

577 கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் டேய்க்கு மரம்.

கடுமொழியும் கை இகந்த தண்டமும்-கடுஞ் சொல்லும் குற்றத்திற்கு மிக்க தண்டனையும், வேந்தன் அடும் முரண் தேய்க்கும் அரம்-அரசனது பகையை வெல்லும் வலிமையாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாகும்.

அடுதல்-வெல்லுதல். இவ்விரு குணமுடையோரை மக்கள் வெறுப்பதால் வலிகுறைவதாயிற்று. (எ)

578 இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன்-அரசியல் காரியத்தை அமைச்சரோடு கலந்து ஆராயாத அரசன், சினத்து ஆற்றிச் சீறின்-அத்தவறுதலால் தன்காரியந் தப்பிய விடத்துத் தன்னைச் சினமாகிய குற்றத்தின் கண்ணே செலுத்தி அவ்வமைச்சரை வெகுளுவானாயின், திருச்சிறுகும்-அவன் செல்வஞ்சுருங்கும்.

இனம்-அமைச்சர். சினமாகிய குற்றத்தின் கண்ணே செலுத்தல்-சினங்கொள்ளல். தன் குற்றத்தை அறியாது அவரைச் சினக்கின் அவர் அஞ்சி நீங்குவார். நீங்கவே அரசியல் இனிது நடைபெறுமையால் திருச்சிறுகும் என்றார். அமைச்சரோடு கலந்தாராயாத ஒரு காரியந் தப்பின், அதற்காக அமைச்சரைச் சினப்போன் செல்வஞ் சுருங்கும். இது அமைச்சரஞ்சும் வினை. (அ)

579 செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

*சிறை செய்யாவேந்தன்-போர் வருவதற்கு முன்னே தனக்குப் பாதுகாப்புச் செய்து கொள்ளாத அரசன், செருவந்த போழ்தில் வெருவந்து வெய்து கெடும்-போர் வந்தபோது பாதுகாப்பின்மையால் அஞ்சி விரைவிற் கெடுவான்.*

*அரண் இன்மையால் பகையை அஞ்சித் தம்மவர் நீங்குதலான் தனியனாய்த் தானும் அஞ்சிப் பகைவரைப் பணிவான் என்பதாம். இது தானஞ்சும் வினை.* (கூ)

580 கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

*கடுங்கோல் கல்லார்ப் பிணிக்கும் - கொடுங்கோலரசன் கல்லாதவர்களைத் தனக்கு உறுப்பாகக் கூட்டிக் கொள்வான்; அது அல்லது நிலக்குப் பொறை இல்லை - அதுவல்லாமல் நிலத்திற்கு மிகுந்த சுமை வேறு இல்லை.*

*நிலத்திற்கு என்பதன் அத்துச்சாரியை தொக்கது. கல்லார்ப்பிணிக்கும் கடுங்கோலன் நிலத்திற்குச் சுமையே யன்றி இருப்பதிற் பயனில்லை. பிணித்தல் - நட்பாக்கிக் கொள்ளல்.* (ய)

## 59 கண்ணோட்டம்

*பழக்கமுடையார் சொல்லை மறுக்க முடியாமல் இரக்கங்காட்டுதல்.*

581 கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு.

*கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை உண்மையான்-கண்ணோட்டம் என்னும் மிகவும் பெரிய அழகு*

உண்டாயிருத்தலால், இவ்வுலகு உண்டு-இவ்வுலகம் நிலை பெற்றிருக்கிறது. அஃதில்லையேல் உலகு கெடும் என்பதாம்.

கண்ணோட்டம்-இரக்கம். கண்ணோட்டமுள்ள அரசனது நாட்டு வாழ்வார் அச்சமின்றி வாழ்வாராகையால் உலகு உண்டு என்றார். (க)

582 கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

உலகியல் கண்ணோட்டத்து உள்ளது - உலகநடை கண்ணோட்டத்தினால் நடைபெறுகிறது; அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை - அக்கண்ணோட்டம் இல்லாதவர் இருப்பது நிலத்திற்குச் சுமையாகும்.

நிலக்கு-நிலத்துக்கு. கண்ணோட்டமில்லாதவர் நிலத்துக்குச் சுமையாவர். (உ)

583 பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்
கண்ணோட்ட மில்லாத கண். (ணும்

பண் பாடற்கு இயைபு இன்றேல் என்னும் - இசையானது பாட்டோடு பொருந்தா விட்டால் என்ன பயனுடையதாகும்? கண் கண்ணோட்டம் இல்லாதகண் என்னும் - அதுபோல, கண்ணானது கண்ணோட்டம் இல்லாதவிடத்து என்ன பயனுடையதாகும்?

இல்லாதகண்; கண் ஏழனுருபு. பாட்டோடு பொருந்தாத இசை பயனற்றதுபோல, கண்ணோட்டத்தோடு பொருந்தாத கண்ணால் பயனில்லை. (ந)

584 உளபோல் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

அளவினால் கண்ணோட்டம் இல்லாதகண் - அளவைக் கடவாத கண்ணோடுதலை யுடையதல்லாதகண்கள்.

முகத்து உளபோல் எவன் செய்யும் - முகத்தில் உள்ளன போல் தோன்றுவதன்றி வேறு என்ன பயனைச் செய்யும்?

கழிகண்ணோட்டத்தில் நீக்குதற்கு 'அளவினல்' என்றார். ஒரு பயனையும் செய்யா வென்பதாம். (௪)

585 கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் - ஒருவனது கண்ணுக்கு அணியும் அணிகலமாவது கண்ணோட்டமாகும்; அஃது இன்றேல் புண் என்று உணரப்படும் - அவ்வணிகலம் இல்லாவிட்டால் புண் என்று அறியப்படும்.

நோய்களாலும் புலன் பற்றுதலாலும் துயர்விளைத்தலான் புண் என்றார். அணிகலம் - நகை. கண்ணுக்கணிகலம் கண்ணோட்டம். (௫)

586 மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் - கண்ணிருந்தும் கண்ணோடாதவர், மண்ணோடு இயைந்த மரத்து அனையர் - மண்ணோடு பொருந்தியிருக்கும் மரத்திற்கு ஒப்பாவர். கண்ணோடாதவர் மரத்திற்கொப்பாவர். (௬)

587 கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்.

கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் - கண்ணோட்டம் இல்லாதவர் கண்ணில்லாதவரே யாவர், கண்ணுடையார் கண்ணோட்டம் இன்மையும் இல் - கண்ணுடையவர் கண்ணோட்டம் இல்லாதவராதல் இல்லை. கண்ணுடையவர் கண்ணோடவேண்டும் என்பதாம். (௭)

588 கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு - தம் தொழில் கெடாமல் கண்ணோட வல்லவர்க்கு, இவ்வுலகு உரிமை உடைத்து - இவ்வுலகம் உரிமை யுடையதாகும்.

தொழில் - முறைசெய்தல். பிறர்க்குத் துன்பஞ் செய்த நண்பர்மீது கண்ணோடித் தண்டிக்காது விடுவது முறை கேடாகும் (551). ஆகையால், முறைகெடாமல் கண்ணோட வேண்டுமென்றார். முறைகெட வரும்போது கண்ணோடாமையும், முறைகெடாவழிக் கண்ணோடலும் ஒருவர்க்கு அமைதலருமையால் 'கண்ணோட வல்லார்க்கு' என்றார். (அ)

589 ஒறுத்தாற்றும் பண்பினோர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

ஒறுத்தாற்றும் பண்பினோர் கண்ணும் - தம்மை வருத்தும் இயல்புடையவரிடத்தும், கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பே தலை - கண்ணோட்டம் செய்து அவர் செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளும் தன்மையே முதன்மையானது.

தீமை செய்தாரிடத்தும் கண்ணோடுதல் சிறப்புடைமையாகும். (க)

590 பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

நயக்கத்தக்க நாகரிகம் வேண்டுபவர் - எல்லோராலும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தை வேண்டுபவர், நஞ்சு பெயக் கண்டும் உண்டு அமைவர் - பழகினவர்கள் தமக்கு நஞ்சை ஊற்றி வைக்கக் கண்டும் கண்ணோட்டத்தினால் அதனை யுண்டு மறுபடியும் அவரோடு பொருந்தியிருப்பர்.

நயக்கத்தக்க என்பது நயத்தக்க என நின்றது. நாகரிகம் - கண்ணோட்டம். பெய்தல் - ஊற்றுதல். பழக்க முள்ளவர்கள் உண்ணும் உணவுடன் நஞ்சைக் கலப் பதைப் பார்த்தும், அவரை வருத்தாது அவர்மீது கண் ணோடி அந் நஞ்சையுண்டு, பின்னும் அவருடன் கூடி வாழ்வர். இவை இரண்டு பாட்டும் தமக்குத் தீங்கு செய்தாரைத் தண்டிக்காது கண்ணோட வேண்டுமென் பது கூறப்பட்டது. நஞ்சூட்டுதல் - கொடுந்துன்பம் செய் தற்கு எடுத்துக்காட்டு. (ய)

## 60 மடியின்மை

வினை செய்தற்கண் சோம்பலின்மை. மடி-சோம்பல்.

591 குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

குடி என்னும் குன்றா விளக்கம் - தான் பிறந்த குடி யாகிய அணையா விளக்கு, மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும் - ஒருவனது சோம்பலாகிய இருள் அடர அணைந்துபோகும்.

உலகநடை உள்ளளவும் இடையறாது தன்னுட் பிறந்தாரை விளக்குதலின் குடியை 'விளக்கம்' என்றார். உலகநடை - ஒருகுடி அழியாது இருப்பது. குடி - குடும் பம். சோம்பேறி பிறந்த குடி பெயர்கூட இல்லாமல் கெட்டுவிடும் என்பதாம். (க)

592 மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

குடியைக் குடியாக வேண்டுபவர் - தாம் பிறந்த குடியை மேன்மேல் உயருங்குடியாக விரும்புபவர், மடியை

மடியா ஒழுகல் - சோம்பலைச் சோம்பலாகவே கொண்டு முயற்சியுடன் நடப்பாராக.

பாம்பைக் கயிறாகக் கொள்ளாது, பாம்பைப் பாம்பாகவே கொண்டு அஞ்சி அகலுதல்போல, மடியை மடியாகவே கொண்டு மடியைவிட்டு முயற்சியைக் கைகொள்ள வேண்டுமென்பதாம். மடிநீங்கக் குடியுயரும். (உ)

593 மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து

மடி மடிக் கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி - விலக்கத்தக்க சோம்பலைத் தன்னுள்ளே கொண்டு நடக்கும் அறிவில்லாதவன் பிறந்த குடியானது - தன்னினும் முந்து மடியும் - அவனுக்கு முன்பே மடிந்துவிடும்.

மடிமடி - மடிக்கத்தக்க மடி; வினைத்தொகை. மடித்தல் - அழித்தல். விலக்கத்தக்க மடி என்பதாம். மடிக்கொண்டு - மடியைக் கொண்டு. இரண்டன் தொகை. அச்சோம்பேறியால் பாதுகாக்கப்படுதலின் அவன் குடும்பம் அவனினும் முன்னரே அழிந்துவிடும் என்பதாம். (ங)

594 குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

மடிமடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு - சோம்பலின்கண்ணே வீழ்ந்ததால் சிறந்த முயற்சி இல்லாதவர்க்கு, குடிமடிந்து குற்றம் பெருகும் - குடியும் அழிந்து குற்றமும் பெருகும்.

மடிமடிந்து - ஏழாம் வேற்றுமைத்தொகை. மடிந்ததால் என்னும் வினையெச்சம் மடிந்து எனத் திரிந்தது மடிமடிந்து - சோம்பலினால். உஞற்றுதல் - செய்தல். சோம்பேறியின் குடியழிவதோடு, குற்றமும் பெருகும். (ச)

595 நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

மடி நெடுநீர் மறவி துயில் நான்கும் - சோம்பலும் தாழ்த்தலும் மறதியும் தூக்கமும் ஆகிய நான்கும், கெடும் நீரார் காமக்கலன்-அழியும் இயல்பினையுடையார் விரும்பியேறும் கப்பலாகும்.

தாழ்த்தல் - விரைந்து செய்வதனை நீட்டித்துப் செய்யுமியல்பு. தூக்கம் - விழிப்பின்மை. காமம் - விருச்பம். இந்நான்கு செயலுமுடையவர் கெடுவர். (ரு)

596 படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.

படி உடையார் பற்று அமைந்தக் கண்ணும் - நிலத்தை ஆள்பவராத செல்வம் தம்மை அடைந்த போதும், மடி உடையார் மாண்பயன் எய்தல் அரிது - சோம்பலுடையவர் அச்செல்வத்தால் சிறந்த பயனை அடைதல் இல்லை.

பற்று - செல்வம். படிஉடையார் பற்று - அரசச் செல்வம், படிஉடையார் பற்று அமைந்தக் கண்ணும் - அரசச் செல்வம் கிடைத்தபோதும். முயற்சியின்மையால் அச்செல்வமும் அழியும். அரசும் அழியும் என்பதாம். (சு)

597 இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர் - சோம்பலை விரும்புவதால் சிறந்த முயற்சி இல்லாதவர், இடி புரிந்து எள்ளும் சொல்கேட்பர் - தமது நண்பர்களால் இடித்துரைத்தும் பயன்படாமையால் பின் இகழ்ந்துரைக்கும் சொல்லைக் கேட்பர்.

இடித்துரைத்தல் - கடிந்து கூறுதல். தம் நண்பனைச் சோம்பலைவிட்டு முயற்சியுடன் நடக்கும்படி கடிந்துகூறியும் அவன் கேளாததால் முடிவில் இகழ்வர் என்பதாம். நண்பரே இகழின் பிறர் இகழ்தல் கூறவேண்டியதில்லை. சோம்பர் இகழப்படுவர். (எ)

598 மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஞென்ஞர்க்
கடிமை புகுத்தி விடும்.

மடிமை குடிமைக்கண் தங்கின் - சோம்பலானது குடிசெய்வானிடம் தங்குமாயின், தன் ஒன்ஞர்க்கு அடிமை புகுத்திவிடும் - அது அவனைத் தன் பகைவர்க்கு அடிமையாக்கிவிடும்.

ஒன்ஞர்க்கு என்றதனுல் அரசனைக் குறித்தது. சோம்பலுள்ள அரசன் தோற்றுப் பகைவர்க் கடிமையாவான். குடிசெய்வானுக்கு மடி கூடாது. குடிசெய்தல் - குடியோம்பல். (அ)

599 குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

ஒருவன் மடி ஆண்மை மாற்ற - ஒருவன் சோம்பலை ஒழித்துவிடின், குடி ஆண்மையுள் வந்த குற்றம் கெடும் - அவன் குடியையாளும் தன்மையில் வந்த குற்றங்கள் பலவும் நீங்கும்.

மடி ஆண்மை - சோம்பலை ஆளுந்தன்மை - சோம்பலுடைமை. குடியாண்மை - குடியோம்பல். சோம்பலில்லையேல் குடிசெயலால் வரும் குற்றமில்லை. (கூ)

600 மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
ருஅய தெல்லா மொருங்கு.

மடிஇலா மன்னவன் - சோம்பலில்லாத அரசன், மடி அளந்து ஆன்ருயது எல்லாம் - சோம்பலடைந்ததால்

முன்பு தன்னைவிட்டு நீங்கிய செல்வத்தை யெல்லாம், ஒருங்கு எய்தும் - ஒருங்கே அடைவான்.

அளத்தல் - கலத்தல். மடி அளந்து - சோம்பலைக் கலந்து - சோம்பலடைந்து. ஆன்று - நீங்கி. முடிந்தது - முடிந்தாயது என நிற்பதுபோல, ஆன்றது - ஆன்றுயது என நின்றது. ஆன்றது - வினையாலணையும் பெயர். நீங்கிய செல்வத்தைக் குறித்தது. 'மடியளந்து' என்றதால், 'மடியிலான்' என்றது மடியை நீக்கினவன் என்பதாம். சோம்பலில்லாத அரசன், முன்பு சோம்பலடைந்ததால் இழந்த செல்வத்தை யெல்லாம் ஒருங்கடைவான். இது மடியிலாதான் அடையும் பயன் கூறியது. (ய)

## 61 ஊக்கமுடைமை

வினை செய்தற்கண் மனந்தளராமை. ஊக்கம் - மன முயற்சி. ஆள்வினை (62) என்பது - மெய்ம் முயற்சி.

601 உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோமற்று.

உடையர் எனப்படுவது ஊக்கம் - ஒருவரை உடையர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது ஊக்கம்; அஃது இல்லார் மற்று உடையது உடையரோ - அவ்வூக்கம் இல்லாதவர் வேறு பொருளை உடைமைதானும் உடையவர் ஆவரோ? ஆகார்.

ஊக்கமில்லாதவர் அப்பொருளைக் காக்கும் ஆற்றல் இலர் ஆகையால் அதுவும் இழப்பர் என்பதாம். ஊக்கமுடைமையே உடைமையாகும். ஊக்கம் உடைமை - வினை செய்தற்கண் மனந்தளராமை. (க)

602 உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

உள்ளம் உடைமை உடைமை - ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலையான உடைமையாகும், பொருள் உடைமை நில்லாது நீங்கிவிடும். ஏனைப் பொருளுடைமை நிலைபெற்று நில்லாது நீங்கிவிடும். உள்ளம் - ஊக்கம். (உ)

603 ஆக்க மிழந்தேமேன் றல்லாவா ரூக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார்.

ஒருவந்தம் ஊக்கம் கைத்து உடையார்-உறுதியான ஊக்கத்தைக் கைப்பொருளாக உடையார், ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் - இழந்தாராயினும், 'கைப்பொருளை இழந்தேம்' என்று வருந்தமாட்டார்.

ஒருவந்தமாய ஊக்கம். அவ்வூக்கமுடைமையால் பின் ஈட்டிச் கொள்ளலாமாகையால் இழந்தேமென்று வருந்தார். (ங)

604 ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

அசைவு இலா ஊக்கம் உடையான் உழை - தளராத ஊக்கமுடையவனிடத்து, ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் - செல்வமானது தானே வழிகேட்டுக்கொண்டு செல்லும்.

வழி கேட்டுக்கொண்டு செல்வார் போலச் செல்வம் தானே சேரும். தனே சேரல் - ஊக்கமிகுதியால் எண்ணிய எண்ணியாங் கெய்துதல் (696). (ச)

605 வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

மலர் நீட்டம் வெள்ளத்து அனைய - நீர்ப் பூக்களின் தாள்களின் நீளம் அவை நிற்கும் நீரினது ஆழத்தின்

அளவினவாகும், மாந்தர்தம் உயர்வு உள்ளத்து அனையது - அதுபோல, மக்களது உயர்ச்சி அவரது ஊக்கத்தின் அளவினதாகும்.

மலர் - ஆகுபெயராய் அதன் தாளைக் குறித்தது. நீர் மிகமிக மலர்த்தாளும் நீளும். உயர்தல் - பொருள் முதலியவற்றால் மிகுதல். தாள் - காம்பு. (ரு)

606 உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் - ஒருவன் கருதுவதெல்லாம் தன் உயர்ச்சியையே கருதக் கடவன், அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து - அவ்வுயர்ச்சி கைகூடாவிடினும் கூடிய தன்மையது.

அது ஆகாவிடினும் ஊக்கமுடைமையால் நல்லோர் பழியார் என்பதாம். (சா)

607 சிதைவிடத் தோல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

களிறு புதை அம்பில் பட்டுப் பாடு ஊன்றும் - யானையானது பல அம்புகளால் புண்பட்டபோது தளராது தன் பெருமையை நிலைநிறுத்தும், உரவோர் சிதைவிடத்து ஒல்கார் - அதுபோல, ஊக்கமுடையவர் தமது முயற்சிக்கு அழிவு வந்தபோது மனந்தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர்.

சிதைதல் - கெடுதல். ஒல்குதல் - மனந்தளர்தல். புதை - அம்புக்கட்டு. பாடு - பெருமை. கருதியது ஆகாவிடினும் மனந்தளராது முயன்று அதை முடிக்க வேண்டும். (எ)

608 உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

உள்ளம் இலாதவர் - ஊக்க மில்லாதவர், உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு எய்தார் - இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேம் என்னும் மதிப்பை அடையமாட்டார்கள்.

வண்மை - கொடை. ஊக்கமில்லார் பொருளீட்டிப் பொருளைக் கொடுத்துச் செருக்கெய்த முடியாது. செருக்கு - மதிப்பு. (அ)

609 பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

யானை பரியது கூர்ங் கோட்டது ஆயினும் - யானை எல்லா விலங்குகளிலும் பெரியதும் கூர்மையான கொம்புகளையுடையதும் ஆயினும், புலிதாக்குறின் வெரூஉம் - புலியினால் தாக்கப்பட்டால் அதற்கஞ்சும்.

புலியைவிட உடல்வலியும் கொம்பும் உடையதாயினும் யானை ஊக்க மின்மையால் அஃதுடைய புலிக்கஞ்சுமென்ற இது, பகைவரைவிட உடல் வலியும் சிறந்த கருவியும் உடையராயினும் ஊக்கம் இலராயின் அஃதுடையவருக்கஞ்சுவர் என்பது பெற நின்றமையால் பிறிது மொழி தலணி. (கூ)

610 உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

ஒருவற்கு உரம் உள்ள வெறுக்கை - ஒருவனுக்குச் சிறந்த அறிவானது ஊக்கமிகுதி, அஃது இல்லார் மரம்- அவ்வூக்கம் இல்லாதவர் மரத்துக்கு ஒப்பாவர், மக்கள் ஆதலே வேறு-மக்கள் வடிவாதலே அம்மரத்திற்கும் இவருக்குமுள்ள வேறுபாடு. வேறில்லை. ஊக்கமில்லாதவர் மரத்தோடொப்பர். (ம)

## 62 ஆள்வினையுடைமை

இடைவிடாத மெய்ம்முயற்சி யுடையவனாதல். இடைவிடாத முயற்சி - விடா முயற்சி. முன் (61) ஊக்கம் என்றது - மன முயற்சியை.

611 அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்- இச்செயல் நம்மால் செய்தற்கு அருமையுடையது என்று எண்ணி மனந்தளரா திருத்தல் வேண்டும், பெருமை முயற்சி தரும் - அதை முடித்தற்கேற்ற பெருமையை நமக்கு முயற்சியானது உண்டாக்கும்.

இச்செயல் நம்மால் செய்ய முடியாதென்று மனந் தளரக்கூடாது. முயன்றால் முடியும். அசா - தளர்ச்சி. உடல் வருந்தும் என மனந்தளர்தல். (க)

612 வினைக்கண் வினைகெட லோம்பல் ; வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று - வினையாகிய குறையைச் செய்யாது விட்டாரை உலகம்விட்டது; வினைக்கண் வினைகெடல் ஓம்பல்-ஆதலால், செய்யப்படும் வினைக்கண் தவிர்ந்திருத்தலை ஒழிக.

வினைக்குறை-ஒரு காரியத்தை செய்து முடிக்காது அரைகுறையாக விடுதல். ஒரு காரியத்தைச் செய்து முடிக்காது விடுபவர்க்கு உலக வாழ்வில்லை. ஆதலால், ஒரு வினையை முடியாது அரைகுறையாக விடுதலை ஒழிய வேண்டும். ஓம்புதல்-ஒழிதல். ஒரு காரியத்தைச் செய்வோர் இடையில் மெய்ம் முயற்சியின்றி அக்காரியத்தை விடக்கூடாது. (உ)

613 தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

*வேளாண்மை என்னும் செருக்கு*-எல்லோருக்கும் உதவி புரிதல் என்னும் மேம்பாடு, *தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று*-முயற்சி என்னும் உயர்ந்த குணத்தின்கண் தங்கியுள்ளது.

செருக்கு-மேம்பாடு. வேளாண்மை-உதவியுடைமை. தாளாண்மை-முயற்சியுடைமை. உதவி மேம்பாட்டைத் தருதலான் 'வேளாண்மை என்னும் செருக்கு' என்றார். முயற்சியுடையோர்தான் பெரும் பொருளீட்டி எல்லார்க்கும் உதவ முடியுமாகையால், அவ்வுதவியை முயற்சி என்னும் உயர்ந்த குணத்தின்கண் தங்கிற்று என்றார். (௩)

614 தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

*தாளாண்மை இல்லாதான் வேளாண்மை* - முயற்சியில்லாதவன் உதவியாளனாகுந்தன்மை, *பேடிகை வாள் ஆண்மைபோலக் கெடும்*-படையைக் கண்டஞ்சும் பேடி தன் கையிலுள்ள வாளை ஆளுந்தன்மை இல்லாததுபோல இல்லையாகும்.

பேடிகை வாளால் பயனின்மைபோல, முயற்சி யில்லாதவன் உதவ நினைப்பதும் பயனின்மையே ஆகும். பேடி-அலி. ஆண்மையும் பெண்மையும் இல்லாததன்மை அலித் தன்மை. பெண்தன்மை மிக்கு ஆணுறுப்புடையவள் பெண்ணலி. ஆண்தன்மை மிக்குப் பெண்ணுறுப்புடையவன் ஆணலி. ஆணலி மிகக் குறைவு. (௪)

615 இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

*இன்பம் விழையான் வினை விழைவான்* - தனக்கு இன்பத்தை விரும்பாதவனாய் வினைமுடித்தலையே விரும்பு

வோன், தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண் - தன் உறவினராகிய சுமையின் துன்பத்தை நீக்கி அதனைத் தாங்கும் தூணவான்.

கேளிரைச் சுமையாகக் கூறுததால் ஒரு கூற்றுருவகம். ஊன்றுதல் - தாங்குதல். கேளிர் - நட்பும் சுற்றமும். முயற்சியுடையவன் தன் உறவினரது வறுமையைத் தீர்த்து அவர்க்குப் பாதுகாப்பும் செய்வான். (ரு)

616 முயற்சி திருவினை யாக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

முயற்சி திருவினை ஆக்கும் - முயற்சி செல்வத்தை வளர்க்கும்; முயற்று இன்மை இன்மை புகுத்தி விடும் - முயற்சி யில்லாமை வறுமையுள் செலுத்தி விடும். முயற்சி செல்வத்தையும், முயற்சியின்மை வறுமையையும் உண்டாக்கும். (சு)

617 மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

மா முகடி மடி உளாள் - கரிய மூதேவி ஒருவனது சோம்பலின் கண்ணே இருப்பாள்; தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்ப-திருமகள் சோம்பலில்லாதவன் முயற்சியின் கண்ணே இருப்பாள் என்று கூறுவர் அறிவுடையோர்.

செல்வத்தை இளையவள், செய்யவள் என்றும், வறுமையை மூத்தவள், கரியவள் என்றும் கூறுதல் நூல் மரபு. முகவுரை பார்க்க. சோம்பல் வறுமையை உண்டாக்கும்; முயற்சி செல்வத்தை உண்டாக்கும். (எ)

618 பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

பொறி இன்மை யார்க்கும் பழியன்று - செல்வமில்லாமை யாவர்க்கும் பழியாகாது, அறிவு அறிந்து ஆள் வினை இன்மை பழி-அறிய வேண்டுவனவற்றை அறிந்து முயற்சியில்லாதிருத்தலே பழியாகும்.

பழி - குற்றம், பழிப்பு. செல்வமின்மை குற்றமும் பழிப்பும் ஆகாது. முயற்சியின்மையே அவ்விரண்டுமாகும். (அ)

619 தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

முயற்சி தெய்வத்தான் ஆகாது எனினும் - முயற்சி ஊழின்படி கருதிய பயனைக் கொடுக்காதாயினும், தன் மெய் வருத்தக்கூலிதரும்-தன் உடம்பை வருத்திய வருத்தத்தின் அளவு கூலி கொடுக்கும். வீண்போகாது

தெய்வம்-ஊழ். 38-ஆம் அதிகாரம் பார்க்க. ஊழின்படி ஆகாவிடினும் முயலவேண்டும். ஊழை வெல்லும் வழி அடுத்த பாட்டில் கூறுகிறார். (கூ)

620 ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

உலைவு இன்றி தாழாது உஞற்றுபவர் - தளர்வில்லாமல் குறையாது முயற்சி செய்பவர், ஊழையும் உப்பக்கங் காண்பர் - ஊழையும் புறங்காட்டி ஓடச் செய்வர்.

உலைதல் - வினைமுடியாமைக்கு மனம் தளர்தல். குறைதல் - குன்றுதல். ஆகாமைக்காக மனந்தளராது, இடைவிடாது முயற்சி செய்பவர் ஊழைத் தோற்றோடும்படி செய்வர். உப்பக்கம் காணுதல் - புறங்காணுதல். புறம்-முதுகு. முதுகு காட்டி ஓடும்படி செய்தல். (ய)

# 63 இடுக்கணழியாமை

துன்பம் வந்தால் அதற்கு மனங்கலங்காமை. இடுக்கண் - துன்பம். அழிதல் - மனங்கலங்குதல்.

621 இடுக்கண் வருங்கால் நகுக; வதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

இடுக்கண் வருங்கால் நகுக - துன்பம் வரும்போது மனமகிழ்க; அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல்-அத்துன்பத்தை மேன்மேலும் எதிர்க்கவல்லது அம் மகிழ்ச்சி போன்றது வேறு இல்லை.

அம்மகிழ்ச்சி மனவெழுச்சியை உண்டாக்கி, அத் துன்பத்தைக் கடந்து வினை முடிக்க உதவும். அடுத்து ஊர்தல் - மேன்மேலும் எதிர்த்தல். இடுக்கண் - துன்பம். (க)

622 வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும்.

வெள்ளத்து அனைய இடும்பை - வெள்ளம் போன்ற மிகுந்த துன்பங்களெல்லாம், அறிவுடையான் உள்ளத்தில் உள்ளக் கெடும்-அறிவுடையவன் நெஞ்சினால் அவற்றை மாறுபட நினைத்தவுடன் கெடும்.

மாறுபட நினைத்தல் - அத்துன்பங்களையே நினைத்துக்கொண்டிருக்காமல் மனத்தைவேறுவழியில்செலுத்தி முயலுதல். துன்பம் என்பது மனத்தில் தோன்றும் திரிபெண்ணமேயாகும். அதாவது கருதியது முடியாமை, ஒன்றை யிழத்தல், ஒன்றுறுதல் ஆகியவைபற்றி உள்ளத்தே கொள்ளும் ஒருவகை மாறுபட்ட கொள்கை. ஆகவே, மாறுபட நினைக்க அக்கொள்கை அகலும். (உ)

623 இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

*இடும்பைக்கு இடும்பை படாதவர் - துன்பத்திற்கு வருந்தாதவர், இடும்பைக்கு இடும்பை படுப்பர் - துன்பத்திற்குத் துன்பத்தை உண்டாக்குவர். துன்பத்திற்கு வருந்தாதவர் துன்பங்கெடும்.* (௩)

624 மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

*மடுத்தவாய் எல்லாம் பகடு அன்னான் - தடை உண்டான இடங்களிளெல்லாம் தளர்வின்றி வண்டியை இழுத்துச் செல்லும் எருதுபோலத் தளர்வின்றித் தொழில் செய்ய வல்லவனை, உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து - உற்ற துன்பம் தானே துன்பப்படுதலை உடையது.*

*மடுத்தல் - இடையூறு தோன்றுதல். மடுத்தவாய் - இடையூறு தோன்றிய இடம். அது - மணலிலேனும் சேற்றிலேனும் வண்டிக்கால்கள் (சக்கரம்) புதைதல். இடையூறு தோன்றியபோது எருது - பக்கத்தே சாய்ந்தும், மூக்கை நிலத்தில் ஊன்றியும், மண்டியிட்டும், ஆன்ற அறிவுடனும், விடாப் பெருமுயற்சியுடனும் முனைந்து இழுத்து அவ்விடை யூற்றைக் கடக்கும். அதுபோல், முயன்று வினைமுடிக்க வேண்டும் என்பதாம்.* (௪)

625 அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.

*அடுக்கி வரினும் - இடைவிடாது மேன்மேல் வந்தாலும், அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கண்படும் - மனவுறுதியை விடாதவனை உற்ற துன்பங்கள் துன்பப்பட்டுப் போகும்.*

ஒரு துன்பமே பலகால் வருதலும், வெவ்வேறு துன்பங்கள் கலந்து வருதலும் அடங்க, 'அடுக்கிவரினும்' என்றார். (ரு)

626 அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
ரோம்புத றேற்ரு தவர்.

பெற்றேம் என்று ஓம்புதல் தேற்ருதவர் - செல்வம் வந்து குவிந்த காலத்தில் அதைப் 'பெற்ரேம்' என்று போற்றி வைத்தலை அறியாதவர், அற்றேம் என்று அல்லல் படுபவோ - வறுமைக் காலத்தில் 'பொருள் அற்ரேம்' என்று துன்பப்படுவார்களோ? படமாட்டார்.

செல்வக் காலத்து ஈயாத்தன்மை யில்லாதவர் (ஈவோர்) வறுமைக் காலத்து மனத்துயரங்கொள்ளார்.

627 இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாருக் கோள்ளாதா மேல்.

உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று - உடம்பு துன்பமாகிய வாளுக்கு இலக்கு என்று அறிந்து, கலக்கத்தைக் கையாருக் கொள்ளாதாம் மேல் - துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளார் அறிவுடையோர்.

இலக்கு - குறிப்பொருள். வெடியால் (துப்பாக்கி) ஒரு பொருளைக் குறிபார்த்துச் சுடுதல் அறிக. கலக்கம், கையாறு - துன்பம். கையாறு ஆ - கையாருக. உடம்பைக் குறிப்பொருளாக்கித் துன்பத்தை வாளாக்காத தால் ஒருகூற் றுருவகம். துன்பமுறுதல் இயல்பென்று அறிந்தார் துன்பத்திற்கு வருந்தார். (எ)

628 இன்பம் விழையா னிடும்பை யியல்பேன்பான்
துன்ப முறுத லிலன்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான் - இன்பத்தை விரும்பாமல் துன்பத்தை இயல்பென்று

அறிபவன், துன்பம் உறுதல் இலன் - எப்போதும் துன்பமடைய மாட்டான். (அ)

629 இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

இன்பத்துள் இன்பம் விழையாதான் - இன்பம் வந்தபோது அவ்வின்பத்தை விரும்பாதவன், துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் - துன்பம் வந்தபோதும் அத்துன்பத்தால் துன்புறான்.

இன்ப துன்ப முறுதல் இயல்பென்று இரண்டையும் ஒரு தன்மையாக மதிக்கவேண்டும். (கூ)

630 இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

இன்னாமை இன்பம் எனக் கொளின் - ஒருவன் துன்பத்தை இன்பமாகக் கொள்வானாயின், தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் - அது தன் பகைவரும் விரும்பத்தக்க சிறப்பாகும்.

துன்பத்தை இன்பமாகக் கொள்ளவே, மனமகிழ்ச்சியுடையனாய்த் தொடங்கிய வினை முடிக்கும் ஆற்றலுடையவனாவதால், பகைவர் விரும்பும் உயர்ச்சியை அடைவான் என்றார். (ய)

அரசியல் முற்றிற்று

# 2 அமைச்சியல் - (10)

அமைச்சு இயல் - அமைச்சரது இலக்கணம். தூதரும் (72) அமைச்சர் குழுவினரே யாவர்.

## 64 அமைச்சு

அமைச்சனது தன்மை. அவன் குணஞ் செயல்கள்.

631 கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு.

செய்யும் அருவினையும் - செய்யப்படும் அரிய செயலும், கருவியும் - அதற்குக் கருவியும், காலமும் - காலமும், செய்கையும் மாண்டது அமைச்சு - அச்செயலைச் செய்யுமாறும் பொருந்த எண்ணியறிய வல்லானே அமைச்சனாவான்.

கருவி - பொருளும் படையும். செய்யுமாறு - வினையைத் தொடங்கும் வழியும், இடையூறின்றி முடிக்கும் வழியும். மாண்டது - மாட்சிமைப்பட்டது. மாட்சிமையுடையவன் என்பதாம். (க)

632 வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

வன்கண் - அஞ்சாமையும், குடி காத்தல் - குடிகளைக் காத்தலும், கற்றறிதல் - அற நூல்களைக் கற்றறிதலும், ஆள்வினையோடு - முயற்சியும் ஆகிய நான்கும், ஐந்துடன் மாண்டது அமைச்சு - ஐம்பொறிகளின் தூய்மையுடன் திருந்த உடையவனே அமைச்சனாவான்.

வன்கண் முதலிய நான்கும், ஐம்பொறித் தூய்மையுடன் திருந்த உடையவனே அமைச்சனாவான். ஐந்து -

தொகைக் குறிப்புச்சொல். வன்கண் முதலிய நான்க ேேடு ஐம்பொறித் தூய்மையும் உடையவனென்க. (உ)

633 பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

பிரித்தலும்-பகைவர்க்குத் துணையாயினேரை அவரினின்றும் பிரித்தலும், பேணிக்கொளலும் - தம்மவரைத் தம்மைவிட்டுப் பிரிந்து போகாமல் காத்துக்கொள்ளுதலும், பிரிந்தார்ப் பொருத்தலும்-தம்மிடமிருந்து பிரிந்தவர்களை மீண்டும் தம்மோடு சேர்த்தலும், வல்லது அமைச்சு-வல்லவனே அமைச்சனுவான். (௩)

634 தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

தெரிதலும்-ஆராய்ந்து அறிதலும், தேர்ந்து செயலும்-ஆராய்ந்து செய்தலும், ஒரு தலையாச் சொல்லலும்-ஐயுருமல் துணிந்து சொல்லுதலும், வல்லது அமைச்சு - வல்லவனே அமைச்சனுவான்.

அரசனிடத்து ஒன்றைச் சொல்லும்போதும், பிரித்தல், பொருத்தல் (633) செய்யும்போதும் அன்னர் ஐயுருது துணிந்து சொல்லுதலுமாம். (௪)

635 அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான் - அறங்களை அறிந்து, அறிவால் நிறைந்து அமைந்த சொல்லையுடையவனுய், எஞ்ஞான்றும் திறன் அறிந்தான்- எப்போதும் வினைசெய்யுந் திறங்களை அறிந்தவனே, தேர்ச்சித் துணை-மன்னனுக்குச் சூழ்ச்சித் துணையாவான்.

அறிவால் நிறைந்து அமைந்த சொல் - பொருளமைந்த சொல். திறம் - வகை. சூழ்ச்சி - ஆலோசனை.

அறனறிவும், ஆன்றமைந்த சொல்லும், வினைசெய்யுந் திறனுமுடையவனே அமைச்சனாவான். (ரு)

636 மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு-நுண்ணறிவை நூலறிவுடன் உடையவராகிய அமைச்சருக்கு, அதி நுட்பம் முன் நிற்பவை யாஉள-மிக்க நுட்பமானவைகளாய் முன்னிற்பவை எவையுள்ளன? ஒன்றுமில்லை.

மதிநுட்பம்-நுட்பமதி. நூலறிவோடு நுண்ணறிவை யுடைய அமைச்சர்க்கு ஆகாதது ஒன்றுமில்லை. பகைவர் எண்ணங்களை அறிந்து அவை கைகூடாமல் செய்து அவரறிந்து தடுக்காதபடி தாம் சூழ்வர் என்பதாம். சூழ்தல்-ஆலோசித்தல். (சா)

637 செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

செயற்கை அறிந்தக் கடைத்தும் - நூல் வழியாகத் தொழில் செய்யும் முறைகளை அறிந்தவிடத்தும், உலகத்து இயற்கை அறிந்து செயல்-அப்போது நடைபெறும் உலக நடையை அறிந்து அதற்குப் பொருந்தச் செய்ய வேண்டும்.

அவ்வப்போது நடக்கும் உலக நடைக் கேற்றவாறு செயலாற்றுவதே நூலறிவின் பயனாகும். சட்டங்களின் படி நடவாமல், உலக நடைக்கேற்றவாறு சட்டங்களை மாற்றிக்கொள்ள வேண்டு மென்பதாம். (எ)

638 அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

அறி கொன்று அறியான் எனினும்-அறிந்து சொல்வோரது அறிவையும் ஏற்காமல் தானும் அறியானாயி

னும், உறுதி கூறல் உழையிழந்தான் கடன் - அம்மன்ன வனுக்கு உறுதி மொழிகளைக் கூறுவது அமைச்சனது கடமையாகும்.

அறி-முதல்நிலைத் தொழிற்பெயர்; அறிவு என்னும் விகுதிபெற்ற தொழிற்பெயரின் பொருளை உணர்த்திற்று. அரசன், சொற்பேச்சையுங் கேளாமல, தானும் அறியா மல் இருந்தாலும் அவனுக்கு உறுதி கூறுவது அமைச் சர் கடமையாகும். (அ)

639 பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோர்
எழுபது கோடி யுறும்.

பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின் - பக்கத் திருந்து தீங்கு நினைக்கும் அமைச்சனொருவனுக்கு, ஓர் எழுபது கோடி தெவ் உறும் - எழுபது கோடி பகைவர் ஒப்பாவார்.

மந்திரியின் - மந்திரிக்கு ; உருபு மயக்கம். எழுபது கோடி-மிகப்பல. வெளிப்படையான பகைவர் மிகப்பல ராயினும் காக்கப்படுவர்; உட்பகை ஒருவனேனும் காக் கப் படான் என்பதற்கு இவ்வாறு கூறினர். பல வெளிப் பகையினும் ஒருட்பகை கொடியது என்பதாம். இவர் விலக்கத் தக்கவர். (கூ)

640 முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

திறப்பாடு இல்லாதவர்-வினை செய்யுந் திறமை இல் லாதவர், முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்- முன்னரே அடைவுபட எண்ணியிருந்தும் அவை செய்யுங் கால் முடிவிலவாகவே செய்வார்.

அடைவுபட எண்ணுதல் - வினை செய்யும் வழிகளை ஒழுங்குபட ஆராய்ந்து முடிவு செய்தல். முடிவிலவாகச் செய்தல்-ஒன்றும் முற்றுப்பெறுமல் அரைகுறையாகச்

செய்தல். 612 உரை பார்க்க. எண்ணவல்லராய் இருந்தும் வினை செய்யமாட்டாதவ ரென்பதாம். இவரும் விலக்கத் தக்கவர். (ய)

## 65 சொல்வன்மை

பேச்சுத் திறமை. அமைச்சர்க்கு இது இன்றியமையாதது.

641 நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

நாநலம் என்னும் நலன் உடைமை - நாநலம் எனச் சிறப்பித்துச் சொல்லப்படும் நலம் ஒருவனுக்கு உடைமையாகும்; அந்நலம் யா நலத்து உள்ளதும் அன்று - அந்நலம் பிற எல்லா நலங்களினுள்ளும் அடங்குவதன்று; அவற்றின் மிக்கதாகும்.

நாநலம் - சொல்வன்மை. நாநலம் என்பது - நாவினது நலம், நாவின்கண் உள்ள நலம், நாவாலாகிய நலம் என விரியும். உடைமை - செல்வம். இது சொல்வன்மைச் செல்வம். (க)

642 ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் - வாழ்வும் தாழ்வும் அச்சொல்லினால் வருவதால், சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல் - சொல்லின்கண் சோர்வுபடுதல் தம்மிடம் இல்லாமல் போற்றிக் காக்கவேண்டும்.

சோர்வுபடல்-பிழைபடல். நற்சொல்லால் வாழ்வும். தீச்சொல்லால் தாழ்வும் வரும். சொற்சோர்வு படேல்.

643 கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்-கேட்டவர் மனத்தைக் கவர்ந்துகொள்ளும் தன்மையையுடையனவாய், கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்-நேரில் கேளாதவரும் இனி எப்போது கேட்போம் என்று விரும்பும்படி பேசுவதே சொல்லாகும்.

கேட்டார் - நேரில் பேசக் கேட்டவர். கேளார் - நேரில் கேளாது கேட்டார் சொல்லக் கடவர். நேரில் கேட்டவரேயன்றிக் கேட்டார்வாய்க் கேட்டாரும் கேட்க விரும்பும்படி பேசுவதே சொல்வன்மையாகும். அறிஞர் அண்ணாவின் பேச்சு இதற்கு எடுத்துக்காட்டாகும். (௩)

644 திறனறிந்து சொல்லுக சொல்லை; யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

சொல்லை திறன் அறிந்து சொல்லுக - சொல்லை வகையறிந்து சொல்லுக; அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல் - அப்படி சொல்லுதற்கு மேற்பட்ட அறமும் பொருளும் இல்லை.

வகை - கேட்போர் விரும்புவனவும், ஏற்பனவுமான சொற்கள். திறமறிந்து சொல்லுதலின் அறமாயிற்று. தஞ்சொல்லை அவர் கேட்பதால் தங்காரிய முடித்தலின் பொருளாயிற்று. (௪)

645 சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

சொல்லை வெல்லும் சொல் பிறிது ஓர் சொல் இன்மை அறிந்து - சொல்லக் கருதிய சொல்லை வெல்லக் கூடிய சொல் வேறொரு சொல் இல்லாமையை அறிந்து,

அச்சொல்லேச் சொல்லுக - பிறகு அச்சொல்லேச் சொல்லுக.

பிறிதோர் சொல் - தஞ்சொல்லே மறுத்துக் கூறும் அயலார் சொல். அவ்வாறு அவர்கள் கூறமுடியாமல், அதாவது தஞ்சொல்லே வேருெரு சொல் வெல்ல முடியாமல் நன்கு ஆராய்ந்து பேசவேண்டும். இது சொற்பொருட் பின்வருநிலே. (ரு)

646 வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்ருர் கோள்.

வெட்பத் தாம் சொல்லி - தாம் சொல்லும்போது பிறர்விரும்புமாறு சொல்லி, பிறர் சொல் பயன் கோடல் - பிறர் சொல்லும்போது அவர்களது சொல்லின் பயனேத் தெரிந்து கொள்ளுதல், மாட்சியில் மாசு அற்ருர் கோள் - சிறந்த குணங்களுடன் குற்றமற்ருரது கொள்கையாகும்.

பிறர் விரும்பும்படி சொல்லிப் பிறர் சொல்லின் கருத்தை அறிவதே அறிஞர் கடமையாகும். மாட்சி - நற்குணம். மாட்சியில் மாசு அற்ருர் - குற்றமற்ற நற்குணமுள்ளவர். (சு)

647 சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனே
இகல்வெல்லல் யார்க்கு மரிது.

சொலல் வல்லன் சோர்வு இலன் அஞ்சான் - தான் எண்ணியதைப் பிறர்க்குச் சொல்லுதலில் வல்லவனுகி, அச்சொல்வதில் சோர்வில்லாதவனுய், யார்க்கும் அஞ்சாதவனுயின், அவனே இகல் வெல்லல் யார்க்கும் அரிது - அவனேச்சொற்போரின்கண் வெல்லுதல் எவராலும்முடியாது.

சோர்வு - சொல்லவேண்டியதை ஒழுங்காகச் சொல்லாமையும், மறத்தலும். யார்க்கும் என்றது அவையோரையும், எதிர் பேசுவோரையும். அஞ்சாமல்,

சோர்வு படாமல் சொல்ல வல்லவனை எவராலும் வெல்ல முடியாது. (எ)

648 விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின் - சொல்லப்படுவனவற்றை வரிசைப்படுத்தி இனிதாகச் சொல்லுதலில் வல்லாரைப் பெற்றால், ஞாலம் விரைந்து தொழில் கேட்கும் - உலகத்தார் அவற்றை விரைந்து ஏற்றுக்கொள்வர்.

நிரந்து - வரிசையாக. நிரல் - வரிசை. தொழில் கேட்டல் - ஏற்றுக்கொள்ளல். சொல்லுவதை வரிசையாகவும் இனிமையாகவும் சொன்னால் கேட்போர் தயங்காமல் விரைந்து ஏற்றுக்கொள்வர். (அ)

649 பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர் - குற்றமற்றனவாகச் சில சொற்களைத் தெளிவாகச் சொல்ல அறியாதவர், பல சொல்லக் காமுறுவர் - பல சொற்களைச் சொல்ல விரும்புவர். சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டும். (கூ)

650 இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

கற்றது உணர விரித்து உரையாதார் - தாம் கற்றவற்றைப் பிறர் அறியுமாறு விளக்கமாகச் சொல்ல மாட்டாதவர், இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் - பூங்கொத்தில் மலர்ந்தும் மணக்காத பூவை ஒப்பர்.

இணர் - பூங்கொத்து. ஊழ்த்தல் - மலர்தல். மலர்ந்தும் மணமில்லாத பூச் சூடப்படாதவாறு போலக் கற்

றிருந்தும் சொல்லமாட்டாதவர் நன்கு மதிக்கப்படார் என்பதாம். (ய)

## 66 அவையறிதல்

அவையின் இயல்பு அறிந்து சொல்லுதல். அவை - அறிஞர் கூட்டம், அரசவை.

651 அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர் - சொல்லின் தொகையை அறிந்த தூயவர், அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக - அவையின் தன்மையை அறிந்து அதற்கேற்றவாறு ஆராய்ந்து சொல்ல வேண்டும்.

சொல்லின் தொகை -சொற்கூட்டம். அவையோர் தன்மையை அறிந்து அதற்கேற்றவாறு சொல்ல வேண்டும். (க)

652 இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

சொல்லின் நடைதெரிந்த நன்மையவர்-சொற்களின் நடை தெரிந்த நல்லோர், இடைதெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக - அவையின் செவ்வியை ஆராய்ந்தறிந்து மிகவும் தெளிந்து சொல்லக் கடவர்.

சொல்லின்நடை-சொற்களை இனிமையுண்டாகும்படி அடுக்கிப் பேசுதல். செவ்வி-கேட்பதற்கு விருப்புடைய காலம். தெளிந்து-சொல்லுமுறையை அறிந்து. அவையின் செவ்வியறிந்து தெளிவாகச் சொல்ல வேண்டும்.

653 அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்
வகையறியார் வல்லதூஉ மில். [லின்

அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர்-அவையின் தன்மையை அறியாது ஒன்று சொல்லத் தொடங்குவோர், சொல்லின் வகை அறியார் வல்லதும் இல் - சொல்லின் வகையும் அறியார், கற்றுவல்ல கல்வியும் அவர்க்கில்லை.

ஓரவையில் பேசும் வகையும் கல்வி வன்மையும் இல்லாதவரே அவையின் தன்மையை அறியாது பேசப் புகுவர். (ங)

654 ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

ஒளியார் முன் ஒள்ளியர் ஆதல் - அறிவுடையார் கூடிய அவையில் தாமும் அறிவுடையராக வேண்டும், வெளியார் முன் வான்சுதை வண்ணம் கொளல்-அறிவிலாரவையில் வெண்மையான சுண்ணும்பின் நிறத்தைக் கொள்ளவேண்டும்.

ஒள்ளியார் என்பது ஒளியார் என்றாயது. காழில்லாத மரத்தை வெளிறு என்னும் வழக்குப்பற்றி, அறிவிலாரை 'வெளியார்' என்றார். (காழ்-வயிரம், சேவு) அறிவிலார் மதிக்கும்படி அவரினும் வெண்மையுடையவராக வென்பார் 'வான்சுதை வண்ணம் கொளல்' என்றார். வான் - வெண்மை. சுதை - சுண்ணும்பு. (ச)

655 நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.

முதுவருள் முந்து கிளவாச் செறிவு - தம்மினும் சிறந்த அறிஞர் கூடிய அவையில் அவருக்கு முன்னதாகப் பேசாத அடக்கமானது, நன்று என்றவற்றுள்ளும் நன்றே-நற்குணங்கள் என்று சொல்லப்பட்ட எல்லா

வற்றிலும் மிக நல்ல குணமாகும். முதுவர்-மிக்க அறிவுடையவர். (ரு)

656 ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு - விரிந்த நூற்பொருளைக்கேட்டு அறியவல்லவர் முன்னிலையில் குற்றமுண்டாகும்படி சொல்லுதல், ஆற்றின் நிலை தளர்ந்து அற்று-நல்ல வழியில் நின்றவன் அதினின்றும் தவறியது போலும்.

நன்னெறியில் நடப்பவன் தவறுவது போலும் நல்லோரவையில் பொல்லாத சொல்லுதல். பயனிழைத்தலோடு இகழவும்படுவ ரென்பதாம். (சு)

657 கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

கசடு அற சொல் தெரிதல் வல்லாரகத்து - குற்றமறச் சொற்களை அறிதலில் வல்லாரது அவையில் சொன்னால், கற்று அறிந்தார் கல்வி விளங்கும் - கற்றறிந்தவருடைய கல்வியானது விளங்கும்.

சொல்லும் சொற்களின் பயனை அறிவாரவையில் சொல்வோர் கல்வி சிறப்புறும். (எ)

658 உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

உணர்வது உடையார் முன் சொல்லல் - தாமே உணரவல்ல அறிவுடையார் முன்னிலையில் ஒன்றைச் சொல்லுதல், வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று - தானாக வளரும் பயிரையுடைய பாத்தியில் நீரை ஊற்றினாற்போலும். பயிர் வளர்வதுபோல, சொல்வோன் அறிவு வளருமென்பதாம். (அ)

659 புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.

*நல் அவையுள் நன்கு செலச் சொல்லுவார் - நல்லாரவையில் நல்ல பொருள்களை அவர் மனங் கொள்ளும்படி சொல்ல வல்லவர், புல் அவையுள் பொச்சாந்தும் சொல்லற்க-புல்லியாரவையில் மறந்தும் அவற்றை சொல்லற்க.*

*புல்லியார் - நல்லவரல்லாதவர், அறிவில்லார். புல்லவையுள் நல்லவைகளைச் சொல்வதால் பயனில்லை.* (கூ)

660 அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்தர்
அல்லார்முற் கோட்டி கொளல்.

*தம் கணத்தர் அல்லார்முன் கோட்டி கொளல் - நல்லவர், தம் இனத்தவர் அல்லாதார்முன் ஒன்றையும் சொல்லுதல் கூடாது; அங்கணத்துள் உக்க அமிழ்தற்று-சொல்லின், அது சலதாரையில் ஊற்றிய அமிழ்தம் போலும்.*

*தம் இனத்தவர் - தம்மோடொத்தவர், அறிஞர். அமிழ்தம்-பால். கோட்டி-பேச்சு. கொளல்-கொள்ளற்க; எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. அறிவிலாரிடம் ஒன்றைச் சொல்லுதல் சாக்கடையில் ஊற்றிய பால் போல் பயனற்றதாகும்.* (ய)

## 67 அவையஞ்சாமை

*அவையைக் கண்டு அஞ்சாமை, அல்லது அவையை அஞ்சாமை.*

661 வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

*சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்—சொற்களது தொகையை அறிந்த தூயவர். வகை அறிந்து-கற்று*

வல்ல அவை, அல்லா அவை என்னும் அவையின் வகையை அறிந்து, வல் அவை வாய் சோரார்--கற்றுவல்லார் அவையில் ஒன்றைச் சொல்லுங்கால் அச்சத்தால் பிழை படச் சொல்லார்.

சொல்லின் தொகை—சொற்கூட்டம். அவை அஞ்சு வான் பிழையில்லாமல் பேசமுடியாது. புதிதாகப் பேசு வோர் அவையஞ்சிப் பேச முடியாமல் தடுமாறுதல் காண்க. (௧)

662 கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

கற்றார்முன் கற்ற செலச்சொல்லுவார்—கற்றார் முன் னிலையில் தாம் கற்றவற்றை அவர் மனத்தில் கொள்ளு மாறு சொல்லவல்லவர், கற்றாருள் கற்றார் எனப்படுவர்— கற்றவர்களில் இவர் நன்குகற்றவர் என்று பெரியோரால் சொல்லப்படுவர்.

கற்றவர் ஏற்கும் வகையில் சொல்ல வல்லவரே நன்கு கற்றவராவர். (௨)

663 பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்
அவையகத் தஞ்சா தவர்.

பகை அகத்துச் சாவார் எளியர் - பகைவர்களிடம் அஞ்சாது புகுந்து இறப்பார் பலர்; அவை அகத்து அஞ்சாதவர் அரியர் - அவையினிடம் அஞ்சாது புகுந்து சொல்லவல்லவர் சிலர்.

எளியர் அரியர் என்பன - பலர் சிலர் என்னும் பொருளன. பகையச்சத்தினும் அவையச்சம் பெரிதென் பதாம். (௩)

664 கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

கற்றார் முன் கற்ற செலச்சொல்லி - கற்றவரவை முன் தாம் கற்றவற்றை அவர் மனங்கொள்ளுமாறு சொல்லி, தாம் கற்ற மிக்க மிக்காருள் கொளல் - தாம் கற்றவைகளினும் மிகுதியானவைகளைத் தம்மினும் மிகுதியாகக் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ளக்கடவர்.

ஒருவரால் எல்லாவற்றையும் கற்றல் முடியாதாகையால் வெவ்வேறு கல்வியுடையார் முன் சொல்லி அவற்றையெல்லாம் அவரிடமிருந்து கற்க வேண்டுமென்பதாம். சொல்வதோடு கேள்வியும் உடன் கூறிற்று. (ச)

665 ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

அவை அஞ்சா மாற்றம் கொடுத்தற் பொருட்டு - அவையை அஞ்சாது மறுமொழி சொல்லுதற்பொருட்டு, ஆற்றின் அளவு அறிந்து கற்க - முறையாகக் கற்க வேண்டிய நூல்களை அறிந்து நன்கு கற்க வேண்டும். (ரு)

266 வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

வன்கணர் அல்லார்க்கு வாளொடு என் - வீரம் இல்லாதாருக்கு வாளுடன் என்ன தொடர்பு இருக்கிறது? நுண் அவை அஞ்சுபவர்க்கு நூலொடு என் - அதுபோல, நுண்ணறிவுடையோரது அவையை அஞ்சுபவர்க்கு நூலுடன் என்ன தொடர்பிருக்கிறது? ஒன்றுமில்லை என்பதாம்.

நூல் - நூலறிவு. வீரமில்லாதார்க்கு வாளால் பயனில்லாதது போல், அவையஞ்சுவார்க்கு நூலறிவால் பயனில்லை. (சா)

667 பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

*அவை அகத்து அஞ்சுமவன் கற்ற நூல் - அவை நடுவே நின்று அதனைக்கண்டு அஞ்சுபவன் கற்ற நூலானது, பகை அகத்துப் பேடிகை ஒள்வாள் - பகை நடுவே நின்று அதனைக்கண்டு அஞ்சும் பேடி தன்கையில் பிடித்த கூரிய வாளைப் போலும்.*

*பேடி - அலி. 614 குறகுறை பார்க்க. பேடி பிடித்த வாள் சிறப்பில்லாததுபோல், அஞ்சுமவன் கற்றநூலும் சிறப்பில்லாததாயிற்று.* (எ)

668 பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

*நல் அவையுள் நன்கு செலச் சொல்லாதார் - நல்லாரவையில் நல்ல பொருள்களை அவர் மனங் கொள்ளும்படி சொல்லமாட்டாதவர், பல்லவை கற்றும் பயம் இலரே - பல நூல்களைக் கற்றிருந்தும் பயனில்லாதவரே ஆவர்.*

*அறிவார்முன் சொல்லாமையால் அவர் கல்வியின் பெருமை தெரிந்து போற்றுவார் இல்லையாகையால் பயனில்லாதவராயினர். பயம் - பயன்.* (அ)

669 கல்லா தவரிற் கடையேன்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

*கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார் - கற்றறிந்திருந்தும் நல்லோர் அவையை அஞ்சுவோரை, கல்லாதவரில் கடை என்ப - கல்லாதவரினும் கடை என்று சொல்லுவர் அறிவோர்.*

*கல்வியறிவால் தாமும் பயனடையாது பிறர்க்கும் பயன்படச் செய்யாது வீண்படச் செய்தலின் 'கல்லாதவரில் கடை' என உலகம் பழிக்கும்.* (கூ)

670 உளரேனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

களன் அஞ்சிக் கற்ற செலச் சொல்லாதார் - அவைக் களத்தை அஞ்சித் தாங்கற்றவற்றை அவ்வவைக் கெற்பச் சொல்லமாட்டாதார், உளர் எனினும் இல்லாரோடு ஒப்பர் - உயிருடன் இருப்பினும் இறந்தவரோடு ஒப்பர். மக்களுள் ஒருவராக மதிக்கப்படார் என்பதாம். (ம)

## 68 குறிப்பறிதல்

*ஒருவர் உள்ளக் கருத்தை அவர் கூறாமல் அறிதல்.*

671 கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

குறிப்பு கூறாமை நோக்கி அறிவான் - ஒருவன் குறிப்பை அவன் கூறாமலே அவனை நோக்கி அறிபவன், எஞ்ஞான்றும் மாறாநீர் வையக்கு அணி-எப்போதும் வற்றாத நீரால் சூழப்பட்ட உலகத்திற்கு அணிகலமாவான்.

கூறாமல் அறிதல் - அவன் கண்ணையும் முகத்தையும் உற்று நோக்கியறிதல். நீர் - கடல். அணி - நகை. முகக் குறிப்பால் அகக்குறிப்பை அறிபவனே சிறந்தவனாவான்.

672 ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

அகத்தது ஐயப்படாது உணர்வானை - ஒருவன் மனத்திலுள்ளதை ஐயமற அறியவல்லவனை, தெய்வத்தோடு ஒப்பக்கொளல் - மேன்மையாக மதிக்கவேண்டும்.

தெய்வத்தோடு ஒப்பக்கொளல் - நன்கு மதித்தல். தெய்வத்தமிழ் என்பதுபோலத் தெய்வம் மேன்மைக்கு எடுத்துக்காட்டு. முகவுரை பார்க்க. (உ)

673 குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

குறிப்பின் குறிப்பு உணர்வாரை - தம் குறிப்பு நிகழ்வதை அறிந்த பழக்கத்தினுல் பிறர் குறிப்பை அறிய வல்லவரை, உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் - அரசர் தம் உறுப்புக்களுள் அவர் விரும்புவதொன்றைக் கொடுத்தாயினும் தமக்குத் துணையாகக் கொள்ளவேண்டும்.

மனநிகழ்ச்சி எல்லார்க்கும் ஒரே மாதிரி நிகழுமாகையால் பிறர் குறிப்பு அறிவதற்குத் தங்குறிப்புக் கருவியாயிற்று. உறுப்பு - நாடு யானை குதிரை பொருள் முதலியன. (௩)

674 குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

குறித்தது கூறாமைக் கொள்வாரோடு - ஒருவன் மனத்தில் கருதியதை அவன் சொல்லாமல் அறியவல்லாரோடு, ஏனை உறுப்பு ஓரனையர் - குறிப்புணரமாட்டாதார், கைகால் முதலிய உறுப்புக்களினுல் ஒரு தன்மையர் ஆயினும், வேறு - அறிவால் வேறுபட்டவரே யாவர்.

குறிப்புணர மாட்டாதார் உறுப்பால் மக்களே யல்லாமல் அறிவால் வேறுவர். விலங்கென்னும் கருத்தால் வேறென்றார். ஆல் - அசை. (௪)

675 குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.

குறிப்பின் குறிப்பு உணராவாயின் - எதிர்ப்பட்டதைக்காணவல்ல தம் காட்சியறிவினுல், பிறர் முகக் குறிப்பைக் கொண்டு அவர் மனக்கருத்தை உணரமாட்டாவாயின், உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ - ஒருவன் உறுப்புக்களுள் சிறந்த கண்கள் வேறு என்ன பயனைச்

செய்வனவோ அறியேன். குறிப்பிற் குறிப்புணராத கண்களால் பயனில்லை. (ரு)

676 அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம்.

அடுத்ததுகாட்டும் பளிங்குபோல் - தன்னையடுத்த பொருளின் உருவத்தைத் தானே கொண்டுகாட்டும் கண்ணுடிபோல, நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும் - ஒருவனது நெஞ்சில் மிகுந்த எண்ணத்தை அவன் முகம் தானேகொண்டு காட்டிவிடும்.

கடுத்தல் - மிகுதல். நெஞ்சங்கடுத்தது - நெஞ்சில் நினைத்தது; அதாவது மனக்கருத்து. தன்னையடுத்த பொருளின் உருவத்தைக் காட்டும் கண்ணுடிபோல் மனக்கருத்தை முகங்காட்டும். கொண்டுகாட்டல் - அதைத் தான்கொண்டு தன்னிடத்தே காட்டுதல். (சு)

677 முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினும் தான்முந் துறும்.

உவப்பினும் காயினும் தான் முந்துறும் - ஒருவன் மகிழ்ந்தாலும் சினந்தாலும் அவற்றைத்தான் முதலில் தெரிவிக்குமாகலான், முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ - முகத்தைப்போல அறிவுமிக்கது வேறொன்று உண்டோ? இல்லை.

முதுக்குறைவு - அறிவு. முதுக்குறைந்தது - அறிவு மிக்கது. ஒருவன் மனத்தில் தோன்றும் வெறுப்பை முதலில் பிறரறியச் செய்வது முகமேயாகும். ஆகவே, முகக்குறிப்பால் அக்குறிப்பை அறியவேண்டும். (எ)

678 முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின்.

அகம்நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின் - தன் மனத்தைக் குறிப்பால் நோக்கித் தானுற்றதனை அறிய வல்லாரை ஒருவன் பெற்றால், முகம் நோக்கி நிற்க அமையும் - அவர் தன் முகத்தைப் பார்க்கும்படி தான் அவர் முகத்தை நோக்கிக்கொண்டு நிற்றலே போதும்.

முகக்குறிப்பால் அகக்குறிப்பை அறிவார்முன், தன் முகத்தை அவர் பார்க்கும்படி நின்றால் போதும். குறிப்பறிந்து ஆவன செய்வர். தன்மனம் என்றது - ஒன்று வேண்டி நிற்பான் மனத்தை. (அ)

679 பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின் - பிறர் பார்வை வேறுபாட்டை அறிய வல்லார்க்கு, பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் - பிறர் மனத்துள்ள பகையையும் நட்பையும் அவர் சொல்லவேண்டியதில்லை. அவர் கண்களே சொல்லும்.

கண்ணின் வகைமை - கண்பார்க்கும் பார்வை வேறுபாடு. கண் - ஆகுபெயர். கண்ணின் பார்வை வேறுபாட்டை அறிய வல்லவர், பிறர் நெஞ்சிலுள்ள வெறுப்பு விருப்பை அவர் கண்களால் அறிவர். (கூ)

680 நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் - யாம் நுண்ணறிவுடையேம் என்பவர் பிறர் கருத்தினை அளக்கும் கோலாவது, காணுங்கால் கண் அல்லது பிற இல்லை - ஆராயுங்கால், அவர் கண்ணல்லது வேறில்லை.

ஒருவர் கருத்தை அளக்கும் அளவுகோல் அவர் கண்ணேயாகும். ஒருவர் கண்ணின் வேறுபாட்டைப் பார்த்துக் கருத்து வேறுபாட்டை அறியவேண்டும் என்பது கருத்து. (ய)

## 69 வினைத்தூய்மை

செய்யுஞ் செயலைக் குற்றமில்லாமல் செய்தல். அதாவது நல்லனவாகச் செய்தல்.

681 துணைநல மாக்கந் தருஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

துணைநலம் ஆக்கம் தரும் - ஒருவனுக்குத் துணைவர்களது நன்மை செல்வத்தை மட்டும் கொடுக்கும், வினைநலம் வேண்டிய எல்லாம் தரும் - ஆனால் வினையினது நன்மை அவன் விரும்பும் எல்லாவற்றையும் கொடுக்கும்.

துணைநலம் - துணைவர்களது உதவி. வினைநலம் - வினைத்தூய்மை. (க)

682 என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

புகழொடு நன்றி பயவா வினை - புகழையும் நன்மையையும் தராத தொழில்களை, என்றும் ஒருவுதல் வேண்டும் - எப்போதும் செய்யாதிருக்க வேண்டும்.

ஒருவுதல் - நீக்குதல். கெட்ட காரியத்தை ஒரு நாளும் செய்யக்கூடாது. (உ)

683 ஓடுதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

ஆதும் என்னுமவர் - மேலாக உயரக் கடவோம் என்று எண்ணுபவர், ஒளிமாழ்கும் செய்வினை ஓதல்

வேண்டும் - புகழைக் கெடுக்கும் செயல்களைச் செய்யா திருக்க வேண்டும்.

ஒவுதல் என்பது குறைந்து நின்றது. ஒவுதல் - நீக்குதல். முன்னேறவேண்டும் என்றெண்ணுவோர் புகழைக் கெடுக்கும் கெட்ட செயல்களைச் செய்யக்கூடாது. (௩)

684 இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

நடுக்கு அற்ற காட்சியவர் - தெளிவான அறிவினையுடையவர், இடுக்கண்படினும் இளிவந்த செய்யார் - துன்பத்தில் அகப்பட்டாலும் இழிவான தொழில்களைச் செய்யமாட்டார்.

நடுங்குதல் - அசைதல். நடுக்கு அற்ற - அசையாத, தெளிவான. காட்சி - அறிவு. நல்லறிவுடையார் துன்பமுற்றாலும் அது தீர்தற் பொருட்டுக் கெட்ட காரியங்களைச் செய்யார். (௪)

685 எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

எற்று என்று இரங்குவ செய்யற்க - 'யான் செய்தது எத்தகையது' என்று பின் தானே நினைந்து வருந்தக் கூடிய செயல்களை ஒருபொழுதும் செய்யாதிருக்க வேண்டும்; செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று - ஒருக்கால் தவறி ஒருவன் செய்வானாயின், அதிலிருந்து அத்தகைய செயல்களைச் செய்யாதிருத்தல் நல்லது.

தானே இரங்கத்தக்க செயலை ஒருமுறை தவறிச் செய்தாலும், பின்னும் அத்தகைய செயலைச் செய்யக் கூடாது. (௫)

686 ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் - தன்னைப்பெற்ற தாயின் பசிநோயைக் கண்டானாயினும், சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க - அறிவுடையோர் பழிக்கும் செயல்களைச் செய்யாதிருக்க வேண்டும்.

தாயின் பசியைப் போக்குவதற்காகவும் தீச்செயல் புரியக்கூடாது. (சு)

687 பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் - தீய காரியங்களைச் செய்து அதனால் பழியை மேற்கொண்டு பெற்ற செல்வத்தைவிட, சான்றோர் கழி நல்குரவே தலை - பழியை மேற்கொள்ளாத சான்றோரது மிகுந்த வறுமையே மேலானதாகும்.

நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையான பழியைத் தேடிக்கொள்ளக்கூடாது. மலைந்து - மேற்கொண்டு. கழி - மிக. நல்குரவு- வறுமை. (எ)

688 கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

கடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு - அறிஞர்கள் செய்யத் தகாதவையென விலக்கிய செயல்களைத் தாமும் விலக்கிவிடாமல் செய்தவர்களுக்கு, அவை தாம் முடிந்தாலும் பீழை தரும் - அச்செயல்கள் முடிந்தாலும் பின் துன்பத்தையே கொடுக்கும்.

கடிந்த - கடிந்த செயல்கள். கடிதல் - விலக்குதல், நீக்குதல். ஒரார் - நீக்கார். ஒருவு ஆர் என்பதன் வு கெட்டது. பெரியோரால் விலக்கப்பட்ட தீச்செயல்கள் செய்தால் துன்பந்தரும். (அ)

689 அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

அழக் கொண்ட எல்லாம் அழப்போம் - பிறர் அழுமாறு துன்புறுத்திக் கொண்டபொருளெல்லாம் தான் அழுமாறு தன்னை விட்டுப் போய்விடும்; நற்பாலவை இழப்பினும் பின்பயக்கும் - நல்ல செயல்கள் முதலில் இழப்பைத் தரினும் பின்பு நன்மை பயக்கும்.

நேர்மையான செயல்களால் மிகுந்த பொருள் கிடைக்காவிட்டாலும், பின்னர் அந்நேர்மையால் எல்லாக் காரியமும் முடியுமாகையால் 'நற்பாலவை இழப்பினும் பின்பயக்கும்' என்றார். இழப்பைத் தருதல் - உழைப்புக்கேற்ற ஊதியம் பெறாமை. (௯)

690 சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல் - தீய செயல்களால் பொருள் தேடி அதைக்கொண்டு ஒருவன் தனக்குப் பாதுகாப்புச் செய்துகொள்ளல், பசுமண் கலத்துள் நீர்பெய்து இரீஇயற்று - பச்சை மண்ணாலாகிய கலத்தினுள் நீரை ஊற்றிக் காத்தலோடொக்கும்.

சலம் - வஞ்சனை என்றுமாம். பசு மட்கலம் - சுடாத மட்கலம். பச்சை மண் பாண்டத்தில் நீரை ஊற்றிவைத்தால் நீர் நில்லாததோடு அப்பாண்டமும் அழிந்து போவதுபோல், தீய செயல்களால் தேடிய பொருள் அழிவதோடு அவனும் கெடுவான் என்பதாம். ஏமம் ஆர்த்தல் என்பது குறைந்து நின்றது. ஏமம் - காவல். ஆர்த்தல் - செய்தல். (൰)

## 70 வினைத்திட்பம்

செயல் முடிப்பதற்கான மனஉறுதி.

691 வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற.

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம் - மேற்கொண்ட செயலைத் தப்பாமல் முடித்தற்குரிய வன்மை என்பது மன வன்மையேயாகும்; மற்றைய எல்லாம் பிற - மன வன்மை யொழிந்தனவெல்லாம் அவ்வினை முடித்தற்குரிய வன்மையாகா.

திட்பம் - திண்மை, வன்மை, உறுதி. ஒழிந்தன - படை, பொருள், நட்பு முதலியவற்றின் வன்மை. மனத் திட்பமே வினைத் திட்பமாகும். (க)

692 ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டின்
ஆறென்ப ராய்ந்தவர் கோள்.

ஆய்ந்தவர் கோள் - நூல்களை ஆராய்ந்தறிந்த அறிவுடையோர் கொள்கையாவது, ஊறு ஒரால் - தீய காரியங்களைச் செய்யாமையும், உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்பர் - மேற்கொண்ட செயல் பழுதுபட்டால் அதற்கு மனந்தளராமையும் ஆகிய இவ்விரண்டன் வழியாகுமென்பர் அறிவோர்.

ஊறு - தீமை. ஒரால் - ஒருவுதல், நீக்குதல். பழுதுபடல் - முடியாது போதல். தீய செயல்களைச் செய்யாமல் நீக்குதலும், மேற்கொண்ட செயல் முடியாவிட்டால் மனந்தளராமையும் அறிவுடையோர் கொள்கையாகும். 'ஊறொரால்' என வினைத்தூய்மையும் உடன் கூறினர். (உ)

693 கடைக்கோட்கச் செய்தக்க தாண்மை யிடைக்
எற்ரு விழுமந் தரும். [கோட்கின்

கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை - செய்யுந் தொழிலை முடிவில் வெளிப்படும்படி முன்பெல்லாம் மறைவாகச் செய்வதே ஆண்மையாகும்; இடைக் கொட்கின் எற்ரு விழுமம் தரும் - இடையே அச்செயல் வெளிப் படுமாயின் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

கொட்குதல் - வெளிப்படுதல், பிறருக்குத் தெரிதல். ஒரு தொழில் முடியும் வரை பிறருக்குத் தெரியாமல் மறைவாகச் செய்யவேண்டும். இடையில் தெரிந்தால் அத்தொழில் முடியாமலும், துணை செய்வாரை உதவாம லும் செய்வர். மறைத்துச் செய்வதாவது - சொல், செயல், குறிப்பு முதலியவற்ருல் பிறரறியாமல் செய்தல்.

694 சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

சொல்லுதல் யார்க்கும் எளிய - யாம் இத்தொழிலை இவ்வாறு செய்வோம் என்று சொல்லுதல் எவருக்கும் எளியவாகும், சொல்லிய வண்ணம் செயல் அரியவாம் - சொன்னபடி செய்தல் எவருக்கும் அரியவாகும். (௪)

695 வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி யுள்ளப் படும்.

வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம் - எண்ணத் தால் சிறப்பெய்தி வினைசெய்தற் குரிய பிற இலக்கணங்க ளாலும் மாட்சிமைப் பட்டவர்களது வினைத்திட்ப மானது, வேந்தன்கண் ஊறு எய்தி உள்ளப்படும் - வேந்த னிடத்தில் உறுதலைச் செய்தலான் எல்லாராலும் நன்கு மதிக்கப்படும்.

எண்ணத்தில் சிறப்பெய்தல் - நன்கு எண்ணியறிதல். பிற இலக்கணம் - அடுத்த அதிகாரமான வினைசெயல்

வகையில் சொல்லப்படுவனவும் பிறவும். ஊறு - உறுதல். முதனிலை திரிந்த தொழிற் பெயர். வேந்தன்கண் ஊறு எய்தல் - மேற்கொண்ட வினை அத்திட்பத்தால் முற்றுப் பெற்றுச் செல்வமும் புகழும் அரசனைச் சேர்தல். அது கண்ட மக்கள் அத்தொழில் முடித்தானை நன்கு மதித்தல்.

696 எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

எண்ணியார் திண்ணியர் ஆகப் பெறின் - வினைசெய்ய எண்ணியவர் வினைத்திட்பம் உடையவரானால், எண்ணிய எண்ணியாங்கு எய்துப - எண்ணிய பொருளை எண்ணிய படியே அடைவர். எளிதின் எய்துவர் என்பதாம். (சு)

697 உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

உருள் பெருந்தேர்க்கு அச்சாணி அன்னார் உடைத்து- உருளுகின்ற பெரிய தேருக்கு அமைந்த சிறிய அச்சாணியைப்போல உருவிற் சிறியராய்க் காரிய முடித்தலில் மிக்க வன்மை உடையவர்களை உலகம் உடையது, உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - ஆகையால், அவர்களது வடிவத்தைக் கண்டு அவர்களை இகழாதிருக்க வேண்டும்.

அச்சாணி - கடையாணி. அச்சாணி வடிவால் சிறிதாயிருந்தும் பெரிய தேரோட உறுதியுடையதா யிருப்பது போல, வடிவால் சிறியோரும் பெரிய வினையை முடிக்கும் திட்பமுடையராவர் என்பதாம். (எ)

698 கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

கலங்காது கண்ட வினைக்கண் - மனந்தெளிந்து செய்யத் துணிந்த தொழிலினிடத்து, துளங்காது தூக்கம் கடிந்து செயல் - மனந்தளராமல் தாழ்ச்சியின்றிச் செய்ய வேண்டும்.

நன்கு எண்ணிச் செய்யத் துணிந்த வினையைத் தளர்ச்சியும் தாழ்ச்சியுமின்றிச் செய்யவேண்டும். தளர்ச்சி - வினை செய்யும்போது நேரும் துன்பத்தால் மனம் தளர்தல். (அ)

699 துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

துன்பம் உறவரினும் - முதலில் துன்பம் மிகுதியாக வரினும், இன்பம் பயக்கும் வினை துணிவு ஆற்றிச் செய்க- முடிவில் இன்பந்தரக் கூடிய தொழிலை உறுதியுடையராய்ச் செய்க.

முதலில் பெருந்துன்பந் தருமாயினும் முடிவில் இன்பந்தரும் வினையை மனவுறுதியுடன் செய்யவேண்டும்.(கூ)

700 எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

வினைத்திட்பம் வேண்டாரை - தொழில் வன்மையை விரும்பாதவரை, எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் - வேறு எல்லா வகைத் திண்மையும் பொருந்திய விடத்தும், உலகு வேண்டாது - உயர்ந்தோர் நன்கு மதிக்க மாட்டார்.

வேறு திண்மை - படை, அரண் முதலியவற்றின் திண்மை. வினைத்திட்பத்தை விரும்பாதவர் எனைத் திட்ப முடையராயினும் உலகம் அவரை மதியாது. (ய)

## 71 வினைசெயல்வகை

வினையைச் செய்யும் வகை

701 சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது.

சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் - ஆராய்ச்சியின் முடிவு தெளிவான உறுதியைப் பெறுவதாகும், அத் துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது - அவ்வாறு உறுதி பெற்றபின் காரியத்தைச் செய்யாமல் காலந் தாழ்த்துவது குற்றமாகும்.

தெளிவான உறுதி - ஐயமற்ற உறுதி. ஆராய்ந்து முடிவு செய்த காரியத்தை உடனடியாகச் செய்து முடிக்கவேண்டும். காலந் தாழ்த்துவது காலக்கழிவோடு, பகைவர் அறிந்து அழித்தற்கும் ஏதுவாகலான் தீது என்றார். (க)

702 தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

தூங்கிச் செயற்பால தூங்குக - நீட்டித்துச் செய்ய வேண்டிய செயல்களை நீட்டித்துச் செய்க, தூங்காது செய்யும் வினை தூங்கற்க - நீட்டியாது செய்யும் செயல்களை விரைவில் செய்க.

தூங்குதல் - நீட்டித்தல், காலந்தாழ்த்தல். வலியும் காலமும் ஒத்தலும் ஒவ்வாமையுமே நீட்டாமைக்கும் நீட்டித்தலுக்கும் காரணங்களாகும். (உ)

703 ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று - இயலும் இடத்தெல்லாம் வினை செய்தல் நல்லது, ஒல்லாக்கால் செல்

னும் வாய் நோக்கிச் செயல் - இயலாத இடத்து அது முடியும் இடம் பார்த்துச் செய்க.

இயலுமிடம் - காரியம் எளிதில் கைகூடுங்காலம். இயலாத இடம் - காரிய முடிக்கும் வழியில்லாத காலம். முடியும் இடம் - காரியம் முடியும் வழி. காரியம் எளிதில் கைகூடும் காலத்து அதைச் செய்து முடிக்கவேண்டும். கைகூடாத காலத்து முடிக்கும் வழியை ஆராய்ந்து பார்த்துச் செய்து முடிக்க வேண்டும். (௩)

704 வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

வினை பகை என்று இரண்டின் எச்சம் - செய்யத் தொடங்கிய வினையும், களையத் தொடங்கிய பகையும் என்று சொல்லப்பட்ட இரண்டனது மிச்சமும், நினையுங்கால் தீ எச்சம் போலத் தெறும் - ஆராயுங்கால் அவித்த பின் அவியாதிருந்த நெருப்பின் குறையைப்போல வளர்ந்து கெடுக்கும்.

குறை - செய்யாமல் விட்ட மிச்சம். வினையை முடியாதும், பகையை வெல்லாதும் குறையாக விடுதல் கூடாது. 612 குறளுரை பார்க்க. களை களையும் போது நன்றாகக் களையாது விட்டால் விட்ட புற்கள் வளர்ந்து பயிரைக் கெடுத்தல் இதற்குக் காட்டாகும். (௪)

705 பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல்.

பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும் - வினை செய்யும்போது, பொருளும் கருவியும் காலமும் வினையும் இடமும் ஆகிய இவ்வைந்தையும், இருள் தீர எண்ணிச்-செயல் ஐயந்தீர எண்ணிச் செய்யவேண்டும்.

பொருள் - அழியும் பொருளும், ஆகும் பொருளும். கருவி - தன்படையும், மாற்றார் படையும். காலம் - தனக்

காகும் காலமும், அவர்க்காகுங் காலமும். வினை - தான் வினைவல்லனாதலும், அவர் வினைவல்லராதலும். இடம் - தான் வெல்லுமிடமும், அவர் வெல்லுமிடமும். இவ்வைந்தையும் தான் வெற்றிபெறும் வகையில் நன்கு எண்ணிச் செய்யவேண்டும். (ரு)

706 முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

முடிவும் - வினை செய்யுங்கால் அது முடிதற்கு வேண்டிய முயற்சியும், இடையூறும் - அவ்வினை முடிவிற்கு வரும் இடையூறும், முற்றியாங்கு எய்தும் படுபயனும் - அவ்விடையூறு நீங்கி வினை முடிந்தால் எய்தும் பெரும் பயனும், பார்த்துச் செயல் - எண்ணிப் பார்த்துச் செய்ய வேண்டும்.

முயற்சி இடையூறுகளைவிடப் பயன் பெரிதாயின் செய்ய வேண்டும். (சா)

707 செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கோளல்.

செய்வினை செய்வான் செயல்முறை - செய்யப்படும் வினையைச் செய்யத் தொடங்கினவன் செய்யும் முறையாவது, அவ்வினை உள் அறிவான் உள்ளம் கொளல்-அத்தகைய வினை செய்தவன் பழக்கத்தைத் தானறிந்து செய்வதேயாகும்.

உள் அறிவான் - முன் செய்து பழக்க முள்ளவன். உள்ளம் - பழக்கம். அவன் பழக்கத்தை யறியவே தானும் அவ்வாறு பயன் அடைவான். (எ)

708 வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

வினையான் வினை ஆக்கிக் கோடல் - செய்கின்ற வினையினாலே மற்றோர் வினையை முடித்துக் கொள்க, நனை

கவுள் யானையால் யானை யாத்தற்று-அவ்வாறு செய்தல், வெறி நீரால் நனைந்த கன்னத்தினையுடைய யானையாலே மற்றொரு யானையைக் கட்டியது போலாகும்.

செய்கின்ற வினையால் வேறொரு வினையை முடித்தற்கு வழிகாணின், அவ்வாறே பல வினையும் எளிதில் முடியும். ஒரு வினையின் பழக்கமே மற்ற வினைகள் செய்வதற்குப் பயன்படும் என்பதாம். (அ)

709 நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

நட்டார்க்கு நல்ல செயலின் - நண்பருக்கு நல்லவை செய்வதைக் காட்டிலும், ஒட்டாரை ஒட்டிக் கொளல் விரைந்ததே - பகைவர்க்குப் பகைவரை நண்பராக்கிக் கொள்ளுதல் விரைந்து செய்யத்தக்கதாகும்.

வினை செய்யுந் திறமாகலின் ஒட்டார் - பகைவர்க்குப் பகைவராயினோர். நண்பர்க்கு நல்ல செய்வதினும் பகைவர்க்குப் பகைவரை நண்பராக்கிக் கொள்ளுதல் இன்றியமையாததாகையால் விரைந்து செய்யவேண்டியதாயிற்று. (கூ)

710 உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறின்
கோள்வர் பெரியார்ப் பணிந்து.

உறை சிறியார் - ஆளுமிடம் சிறிதாக உள்ளவர், உள் நடுங்கல் அஞ்சி - தம்மினும் வலியார் எதிர்த்த போது, தம்மவர் நடுங்குவதற்கு அஞ்சி, குறைபெறின் - தாம் எண்ணியபடி உடன்பாடு செய்துகொள்ள இசைவாரானல், பெரியார்ப் பணிந்துகொள்வர் - அவ்வலியாரைப் பணிந்து கொள்வர்.

உள்-தங்நாட்டகத்துள்ளார். வலியாரோடு எதிர்த்து அழிவதைவிட உடன்பாடு செய்து கொள்ளுதலே முறையாகும். (ய)

## 72 தூது

அயல் வேந்தரிடம் தூது செல்வார் தன்மை. பொது மக்களுக்கும் கொள்க.

711 அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

அன்பு உடைமை - தம்மரிடத்து அன்புடையவனா யிருத்தலும், ஆன்ற குடிப்பிறத்தல் - சிறந்த நற்குடியில் பிறத்தலும், வேந்து அவாம் பண்பு உடைமை - அரசன் விரும்பும் குணம் உடையவனா யிருத்தலும், தூது உரைப் பான் பண்பு - இவை மூன்றும் தூதுரைப்பவனது இலக் கணமாகும். நற்குடி - வழிவழியாக வந்த குடி. (க)

712 அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

அன்பு - தம்மரசனிடத்து அன்புடைமையும், அறிவு - ஆவன அறியுமறிவும், ஆராய்ந்த சொல்வன்மை - ஆராய்ந்து சொல்லும் சொல்வன்மையும் என, தூதுரைப் பார்க்கு இன்றியமையாத மூன்று - தூதுரைப்பார்க்கு இன்றியாத குணங்கள் மூன்றாகும். (உ)

713 நூலாரு ணூல்தல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு - வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வெற்றி தரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கண மாவது, நூலாருள் நூல் வல்லான் ஆகுதல் - அறநூலை அறிந்தவர்களுள் தான் அந்நூலில் வல்லவனாதல்.

அற நூலில் மிகுந்த பயிற்சியுடையவனாதல் தூதுவன் இலக்கணமாகும். (ங)

714 அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

அறிவு - இயற்கையறிவும், உருவு - கண்டார் விரும்பும் தோற்றப் பொலிவும், ஆராய்ந்த கல்வி - பலரோடும் பலகாலும் ஆராய்ந்து கற்ற கல்வியுமென, இம் மூன்றன் செறிவு உடையான் வினைக்குச் செல்க - இம்மூன்றும் நன்கு அமையப் பெற்றவனே வேற்று வேந்தரிடம் தூது செல்க.

இயற்கை யறிவு - பகுத்தறிவு. அறிவு, உருவு, கல்வி மூன்றும் அமையப் பெற்றவனே தூது போகத் தக்கவனாவான். (௪)

715 தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

தொகச் சொல்லி - சுருங்கச் சொல்லியும், தூவாத நீக்கி நகச் சொல்லி - கடுஞ் சொற்களை விலக்கி இனிய சொற்களால் கேட்போர் மனமகிழச் சொல்லியும், நன்றி பயப்பது தூதாம் - தன்னரசனுக்கு நன்மையை உண்டாக்குபவனே தூதனாவான்.

சுருக்கமாக, கடுஞ் சொல்லின்றி, இனிமையாக, கேட்பவர் மகிழும்படி சொல்லி உடன்பாடு செய்பவனே தூதனாவான். (௫)

716 கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

கற்று - அறநூல்களைக் கற்று, செலச்சொல்லி - பகைவர் மனங்கொள்ளும்படி சொல்லி, கண் அஞ்சான் - பகைவர் சினந்து பார்த்தால் அப்பார்வைக்கு அஞ்சாது, காலத்தால் தக்கது அறிவது தூதாம் - காலத்தோடு பொருந்த அவ்வினை முடிக்கத்தக்க வழியறிபவனே தூதனாவான்.

காலத்தோடு பொருந்துதல் - ஏற்றகால மறிந்து சொல்லுதல். காலம் - செவ்வி. செலச் சொல்லல் - ஏற்றுக் கொள்ளும்படி சொல்லுதல். (சு)

717 கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

கடன் அறிந்து - வேற்றரசரிடம் தான் நடந்து கொள்ளு முறையறிந்து, காலம் கருதி - அவர் செவ்வி பார்த்து, இடம் அறிந்து - சொல்லுதற் கேற்ற இடம் அறிந்து, எண்ணி உரைப்பான் தலை - சொல்லவேண்டியதை ஆராய்ந்து சொல்வான் தூதரில் சிறந்தவனாவான்.

வேற்றரசரிடம் நடந்து கொள்ளும் முறையையும் காலத்தையும் இடத்தையும் அறிந்து ஆராய்ந்து சொல்பவனே தூதரில் மிக்கானாவான். (எ)

718 தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

தூய்மை-மனத்தூய்மையும், துணைமை-அவ்வேற்று வேந்தரது அமைச்சர் துணையும், துணிவுடைமை - அஞ்சாத மனவுறுதியும், இம்மூன்றின் வாய்மை - ஆகிய இம் மூன்றையும் உண்மையாக உடைமை, வழியுரைப்பான் பண்பு - தூதுவன் இலக்கணமாகும்.

தன்னரசனைப் புகழ்ந்து கூறும்போது பகைவர் வெகுளின், இது தூதர் கடமையெனக் கூறி அவர் வெகுளி நீக்குதற்காக அவரமைச்சர் துணைவேண்டும். வழியுரைப்பான் - தூதன். (அ)

719 விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

வடுமாற்றம் வாய்சோரா வன்கணவன் - தனக்கு வருந் துன்பத்திற் கஞ்சித் தன்னரசனுக்கு இழிவைத்

தரும் சொற்களைத் தவறியும் சொல்லாத திண்மையுடையவனே, விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்-தன்னரசன் சொல்லிவிட்ட சொல்லை வேற்றரசனுக்குச் சென்று உரைப்பவனாவான்.

வடு - இழிவு. விடுமாற்றம் - இறந்த காலவினைத் தொகை. விட்டமாற்றம். சொல்லிவிட்ட சொல். மாற்றம்-சொல். பகைவரால் தனக்கு வரும் துன்பத்திற் கஞ்சித் தவறியும் தன்னரசனுக்குப் பழியுண்டாகுமாறு பேசாதவனே தூதனாவான். (௯)

720 இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

இறுதி பயப்பினும் எஞ்சாது - தான் சொல்லும் சொல் தன்னுயிர்க்கு முடிவைத் தருமாயினும் அதற்கஞ்சித் சொல்லுதல் ஒழியாது, இறைவற்கு உறுதி பயப்பது தூதாம் - தன்னரசனுக்கு நன்மையைத்தரும் சொற்களைச் சொல்பவனே தூதனாவான்.

உறுதி பயப்பது - உறுதியைத்தரும் சொற்களைச் சொல்வது. உறுதி-நன்மை. தான் சொல்லுகிற சொல்லால் பகைவர் வெகுண்டு கொல்லத் துணிவாரெனத் தெரியினும் அஞ்சாது சொல்பவனே தூதனாவான். (ய)

## 73 மன்னரைச் சேர்ந்தொழுகல்

அரசரோடு பழகுதல். அரசியல் தலைவர்களைச் சேர்ந்தொழுகுதலுங் கொள்க.

721 அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார் - இகலும் அரசரைச் சேர்ந்து வாழ்பவர், அகலாது அணுகாது தீக்

காய்வார் போல்க - அவரை மிக நீங்காமலும் மிக நெருங்காமலும் தீக்காய்வார் போல இருக்கவேண்டும்.

இகல்வேந்தர் - விரைவில்வெகுளுந் தன்மையுடைய அரசர். இகல் - பகைமைக்குணம். மிக அகன்றால் பயன் கொடாது, மிக அணுகினால் மதியாமை பற்றித் தண்டிக்கும் வேந்தர்க்கு, மிக அகன்றால் குளிர் நீக்காது மிக அணுகினால் சுடுவதாய தீ தொழிலுவமம். தீக்காய்தல்-குளிர்காய்தல். (க)

722 மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

மன்னர் விழைப விழையாமை-மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதிருத்தல், மன்னரால் மன்னிய ஆக்கம் தரும்-அம்மன்னராலேயே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும்.

தாம் விரும்புவனவற்றை விரும்பாமைக்கு மகிழ்ந்து அம்மன்னரே எல்லாச் செல்வமும் தருவர் என்பதாம். (உ)

723 போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது.

மன்னரைச் சேர்ந்தொழுகுவார் ; போற்றின் அரியவை போற்றல்-தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள் தம்மிடம் வராமல் காக்கக் கடவர் ; கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது - அரியபிழைகள் செய்தனவாகக் கேட்டு அவ்வரசர் ஐயுற்றால் அவரைப் பின் தெளிவித்தல் எவராலும் முடியாது.

அரியபிழைகளாவன-பகைவரோடு சேர்தல், அரும்பொருள் கொள்ளல் முதலாயின. காத்தலாவது - ஒருவன் சொன்னால் அரசன் அதை நம்பாமலிருக்கும்படி நடந்துகொள்ளுதல். ஒருவாறு தெளிவித்தாலும் கண்ட

போதெல்லாம் அந் நினைவு வருமாதலின் 'யார்க்கும் அரிது' என்றார். (௩)

724 செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.

ஆன்ற பெரியார் அகத்து - சிறந்த அரசர் பக்கத்திலிருந்தால், செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல் - அவர் காண ஒருவன் காதின்கண் சொல்லுதலையும், ஒருவன் முகம் நோக்கிச் சிரிப்பதையும் ஒழித்து நடக்கவேண்டும்.

அவை செய்யின், அரசர் தங்குற்றங் கண்டு செய்தனவாகக் கருதுவ ரென்பதாம். (௪)

725 எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

மறை - அரசன் பிறரோடு மறைவாகப் பேசிக் கொண்டிருக்கும்போது, எப்பொருளும் ஓரார்-யாதொரு பொருளையும் செவி கொடுத்துக் கேளாமலும், தொடரார் - அவனை விரைந்து வினவாமலும், அப்பொருளை விட்டக்கால் கேட்க-அப்பொருளை அவனே சொன்னால் மட்டும் கேட்கக்கடவர்.

செவிகொடுத்துக் கேட்டால் ஐயுறுவான். வினவினால் வெகுளுவான். இது அரசன் ஒருவரோடு மறை (இரகசியம்) பேசும்போது நடந்துகொள்ளும் முறை. (௫)

726 குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்

குறிப்பு அறிந்து-அரசன் குறிப்பையறிந்து, காலம் கருதி - ஏற்ற காலத்தையும் நோக்கி, வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல் - வெறுப்பில்லாதவைகளும்

விரும்பப்படுபவைகளுமாகிய செயல்களை அவன் விரும்பு மாறு சொல்லக்கடவர்.

வேட்பச்சொலல்-சுருக்கமாய் விளக்கமாய் இனிமை யாய்ச் சொல்லுதல். (சு)

727 வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

வேட்பன சொல்லி - அரசன் விரும்பப்படுவன வற்றைச் சொல்லி, எஞ்ஞான்றும் வினைஇல கேட்பினும் சொல்லாவிடல் - எப்போதும் பயனில்லாதவற்றை அரசனே கேட்டாலும் சொல்லாது விடவேண்டும். வினை - பயன். (எ)

728 இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.

இளையர் இனமுறையர் என்று இகழார்-இவர் எம்மினும் இளையவரென்றும், எமக்கின்ன முறையினையுடையவரென்றும் அரசரை இகழாமல், நின்ற ஒளியோடு ஒழுகப் படும் - நிலைபெற்ற தலைமையோடுபொருந்த நடந்து கொள்ளவேண்டும்.

அரசர் இளையராகவும், இளைய முறையுடையவராகவிம் இருந்தாலும் அரசன் என்னும் தலைமைக்கேற்றவாறு நடந்துகொள்ள வேண்டும். ஒளி - அரசர் தூங்கினும் இவ்வுலகங் காக்கும் அவர் தலைமைத்தன்மை. இளையமுறை - தம்பிபோன்ற முறை. தலைவர்களிடமும் அதிகாரிகளிடமும் இவ்வாறே நடந்துகொள்ள வேண்டும்.

729 கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்
துளக்கற்ற காட்சி யவர். [யார்

கொளப்பட்டேம் என்று எண்ணிக் கொள்ளாத செய்யார் - அரசனால் யாம் நன்கு மதிக்கப்பட்டோம் என்று நினைத்து அவன் விரும்பாதவைகளைச் செய்யமாட்

டார், துளக்கு அற்ற காட்சியவர் - அசைவற்ற அறிவினை யுடையவர். (கூ)

730 பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

பழையம் எனக் கருதி - அரசனுக்கு யாம் பழைய நண்பர் என்று எண்ணி, பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை - தமக்கு இயல்பல்லாதவை செய்யும் உரியானது, கேடுதரும் - கெடுதியைத்தரும்.

தகாதன செய்தால் பழமை நோக்கிக் கண்ணோடாது தண்டிப்பான் என்பது கருத்து. கெழுதகைமை - உரிமை. (ய)

அமைச்சியல் முற்றிற்று

## 3 கூழியல் - (1)

கூழ் - உணவு. இங்கு உணவுப் பொருள் முதலிய விளை பொருள்களைக் குறிக்கும். 'தள்ளா விளையுளை யுடையதே நன்னாடாகையால்' (731), நாட்டை விளை பொருளின் பேரால் 'கூழ்' (381 என்றார். கூழியல் - நாட்டியல்; நாட்டின் இலக்கணம்.

### 74 நாடு

நன்னாட்டின் சிறப்புக் கூறுதல். நன்னாட்டின் சிறப் புணர்ந்து அவ்வாறு நாட்டைச் சிறப்புறச் செய்தல் இதன் பயன்.

731 தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
**செல்**வருஞ் சேர்வது நாடு.

தள்ளா விளையுளும் - தப்பாது விளையும் விளை நிலங் களும், தக்காரும் - பொதுநலம் புரியும் சான்றோர்களும்,

தாழ்வு இலாச் செல்வரும் - குறையாத செல்வமுடையோரும், சேர்வது நாடு - ஒன்று சேர்ந்ததே நாடாகும்.

தள்ளா விளையுள் - எவ்லாவகையுணவுகளும் போட்டது போட்டபடி நிறையவிளையும் நிலம். தள்ளா - தள்ளாத. தாழ்விலாச் செல்வர் - கொடுக்கக் கொடுக்கக் குறையாத வருவாயையுடைய செல்வர். நாடு குறைவின்றி விளைந்தாலும் நாட்டு மக்களுக்கு நல்லுரை கூறத் தக்காரும், பொதுநலச் செலவு செய்யப் பெருஞ் செல்வரும் வேண்டும். (க)

732 பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

பெரும்பொருளால் பெட்டக்கது ஆகி - நெல்விளைவால் விரும்பத்தக்கதாகி, அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு - கேடின்மையுடன்கூடி மிகுதியாக விளைவதே நாடாகும்.

பெட்டக்கது - விரும்பத்தக்கது. பெட்பு - விருப்பம். கேடாவது - மிக்கமழை, மழையின்மை, புழுப் பூச்சி, பயிர் நோய் முதலியன. பெரும்பொருள் - நெல். கம்பு, சோளம் முதலிய தவசங்களைச் சிறுதவசம் என்னும் வழக்கால் நெல் 'பெரும்பொருள்' எனப்பட்டது. வயல் சூழ்ந்த இடங்களில் வாழவே மக்கள் விரும்புதல் இயல்பு. "அலகுடை நீழலவர்" (1034) என்பதன் உரை பார்க்க. கம்பு மிகுதியாக விளையும் மேடுகாட்டுப் பக்கங்களில் கம்பைப் பெரிய வேளாண்மை என்பர். நெல்லோடு மற்ற தவசங்களும் கேடின்றி மிகுதியாக விளைவதே நாடாகும். (உ)

733 பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி - இறையல்லாத அரசியல் செலவு பல ஒருங்கே தன்னிடத்து வருங்கால் அவற்றைத் தாங்கி, இறைவற்கு இறை ஒருங்கு

நேர்வது நாடு - அதோடு தன் அரசற்கு இறைப்பொருள் முழுவதையும் கொடுக்கும் ஆற்றலுடையதே நாடாகும்.

பொறை - சுமை. அயல் நாட்டோடு நடக்கும் போர்ச் செலவுக்கோ, நாட்டின் ஒரு பகுதியில் உண்டாகிய பஞ்ச நீக்கத்திற்கோ அணைக்கட்டு முதலிய நாட்டுச் செல வுக்கோ மற்றும் இவைபோன்ற இன்றியமையாத செலவு களுக்கோ குடிகளிடம் வாங்கும்வரி. இறை - நிலவரி முதலிய அரசிறை. இவ்வாறு பலமுறை அடுத்தடுத்துக் கொடுக்க நேரினும் கொடுத்து, முறையாகக் கொடுக்கும் வரியையும் கொடுக்கவல்லதே நாடாகும். அத்தகைய மக்களையுடைய நாடென்பதாம். (௩)

734 உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

உறுபசியும் - மிக்க பசியும், ஓவாப் பிணியும் - நீங் காத நோயும், செறுபகையும் சேராது - அயல்நாட்டி லிருந்துவந்து அழிவு செய்யும் பகையும் இன்றி, இயல்வது நாடு - அமைந்ததே நாடாகும்.

நீங்காத நோய் - தொத்துநோய்கள். நல்ல காற்றும், ஏற்ற தட்ப வெப்ப நிலையும், பழுதுபடாத உணவுப் பண் டங்களும் உண்மையால் நோய் சேராதாயிற்று. அரசனது ஆற்றலும், நிலைப்படையும், அரணும் உடைமையால் செறுபகை இல்லாதாயிற்று. (௪)

735 பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

பல்குழுவும் - மாறுபட்ட பல கூட்டமும், பாழ்செய் யும் உட்பகையும் - உடனுறைந்தே கெடுக்கும் உட்பகை யும், வேந்து அலைக்கும் கொல்குறும்பும் இல்லது நாடு - அரசனை வருத்துகின்ற கொலைத்தொழிலையுடைய சிற்றர சும் இல்லாததே நாடாகும்.

பல்குழு - செல்வாக்குள்ள சிலர், தங்கள் தலைமையின் கீழ் ஊர் மக்களை வெவ்வேறாகப் பிரித்து வைத்து ஊரைக் கெடுக்கும் ஊர்க்கட்சிகள். இவை இன்னும் பெரும்பாலும் எல்லா ஊர்களிலும் இருத்தலை அறிக. இவை இன்றுள்ள அரசியல் வகுப்புக் கட்சிகள்போல நாட்டுக்குக் கேடுசூழ்வன. உட்பகை - வழிபறிப்போர், திருடர் முதலியோர். சிற்றரசுகள்- தங்களுக்குள் போரிட்டும், பலர்கூடிப் பேரரசை எதிர்த்தும் அரசனுக்குத் துன்பந்தருதல். இவை மூன்றும் அரசனாலும், மக்களாலும் நீக்கப்பட்டு அமைதியாக உள்ளதே நாடாகும். (ரு)

736 கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் றலை.

கேடு அறியா - பயிர்நோய் முதலியவற்றால் கெடுதலை அறியாததாய், கெட்டவிடத்தும் வளங்குன்றா நாடு - ஓரிருபோகம் கெட்டதாயினும் வளங்குன்றாத நாட்டினை, நாட்டின் தலை என்ப - எல்லா நாடுகளிலும் முதன்மையான நாடென்று சொல்லுவர் அறிவுடையோர்.

அறியாத, குன்றாத என்பன ஈறுகெட்டன. ஒரு கெடுதலுமின்றி விளையும் நாடே நன்னாடாகும். மழையின்மை, மிகுமழை, பயிர்நோய் முதலியவற்றால் ஒன்றல்லது இரண்டுபோகம் விளைவுகெட நேரினும், அதனால் உணவுத் தட்டுதல் உண்டாகாதபடி மிகுதியாக விளையும் நாடே சிறந்த நாடென்பார், 'கெட்டவிடத்தும் வளங்குன்றா நாடு நாட்டின் தலை' என்றார். (சா)

737 இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

இருபுனலும் - மேல்நீரும் கீழ்நீரும் ஆகிய இரண்டு நீரும், வாய்ந்த மலையும்-பயன்படும் மலையும்,வருபுனலும்- அம்மலையிலிருந்து வருகின்ற நீரும், வல்அரணும் நாட்

டிற்கு உறுப்பு - வலிய அரணும் நாட்டிற்கு உறுப்புக்களாகும்.

மேல்நீர் - மழைநீர். கீழ்நீர் - கிணற்றுநீர். கீழிருந்து ஊறிவருவதால் கீழ்நீர் எனப்பட்டது. வருபுனல் - ஆறு. மழை, கிணறு, மலை, ஆறு, அரண் என்னும் இவை ஐந்தும் பொருந்தியதே சிறந்த நாடாகும். மழைபொருந்தல்-பருவமழை பெய்யும் வகையில்நாடு அமைந்திருத்தல்.

738 பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

பிணிஇன்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ்வைந்து - நோயின்மையும் செல்வமும் விளைவும் இன்பமும் காவலுமாகிய இவ்வைந்தினையும், நாட்டிற்கு அணி என்ப - நாட்டிற்கு அழகு என்று சொல்வர் அறிவுடையோர். இவ்வாறு நாடு அழகுடன் அமையவேண்டுமென்பது. இன்பம் - வறுமை பகை முதலிய துன்பமில்லாதது. (அ)

739 நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

நாடா வளத்தன நாடு என்ப - வருந்தாமல் வளந்தரும் நாடுகளே நல்ல நாடுகள் என்று சொல்வர் அறிவுடையோர் - நாட வளம்தரும் நாடு நாடுஅல்ல - வருந்த வளந்தரும் நாடுகள் நாடுகளாகமாட்டா.

நாடுதல் - வருந்தித்தேடுதல். வளம் - விளைவு. நிலவளமும் நீர்வளமும் பொருந்தி, கெடுதி இல்லாமல், தள்ளா விளைவு விளையும் நாடே அறிவுடையோர் விரும்பும் நாடாகையால், வருந்தித் தேடாமல் வளம்தரும் நாட்டை நல்லநாடு என்றார். போகத்துக்குப் போகம் எருப்போட்டு வருந்த வளந்தருவதும் நீர்வளமற்றதுமான நாடு - நாடவளம் தரும் நாடு ஆகும். (கூ)

740 ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

*வேந்து அமைவு இல்லாத நாடு - அரசனோடு பொருந்தாத நாடானது, ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே - மேற்கூறிய இலக்கணங்களால் நிறைந்திருப்பினும் பயனுடையதன்று.*

*எல்லாச் சிறப்பும் பொருந்தியிருக்கினும் அரசனில்லாத நாடு நாடாகாது. நல்லரசெனக்கொள்க.* (ம)

கூழியல் முற்றிற்று

## 4 அரணியல் - (2)

*அரண் - காவல். அரண் இயல் - அரணினது இலக்கணம். அகமதில், இடைமதில், புறமதில் என்னும் மும் மதிலும், அம்மதில் சூழ்ந்த அகமும் பொருந்திய கோட்டையே அரசற்குச் சிறந்த அரணாகும். அரண் போலவே அரசுக்குக் காவலாய் அமைவதும் (751), பகைவரை அழிக்கும் கருவியும் (753,759) பொருளே யாகையால், பொருளும் அரணில் அடங்கும். எனவே, அரண், பொருள் செயல்வகை இரண்டும் அரணியலாயின.*

## 75 அரண்

*அரணினது சிறப்புக் கூறுதல். அரணின் சிறப் பறிந்து வாழ்விடத்தை அரண் செய்து கொள்ளுதல் இதன் பயன்.*

741 ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

*அரண் - கோட்டையானது, ஆற்று பவர்க்கும் பொருள் - பகைமேற்செல்லும் வலிவுடையார்க்கும் சிறந்*

தது; அஞ்சித் தன் போற்றுபவர்க்கும் பொருள் - தம் மேல் வருவார்க்கு அஞ்சித் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணுவார்க்கும் சிறந்தது.

பகைமேற் செல்வோர் குடும்பம், பொருள் முதலியவற்றைப் பாதுகாப்பில் வைத்துச் செல்லவேண்டியிருப்பதால் அரண் பொருளாயிற்று. ஆற்றுபவர் - வலியுடையவர். தன்னைப் போற்றுபவர் - வலியிலார்; கோட்டைக்குள்ளிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்பவர். (க)

742 மணிநீரும் மண்ணும் மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

மணிநீரும் - மணி போன்ற நிறத்தினையுடைய தெளிந்த நீரும், மண்ணும் - நீரும் நிழலுமற்ற நிலமும், மலையும் - மலையும்-அணிநிழல் காடும் உடையது அரண் - குளிர்ந்த நிழலையுடைய காடும் உடையது அரணாகும்.

மணி நீர் என்றது - எப்போதும் வற்றாத ஆழமான தெளிந்த அகழ் நீரை. அகழ் - மதிலைச் சுற்றியுள்ள கிடங்கு. மண் - நீரும் நிழலும் இல்லாத வெள்ளிடை நிலம். இது மரு நிலம் எனப்படும். இது பகைவர் மதிலை அணுகாமல் பார்த்துக்கொள்ள அகழிக்கு வெளியே உள்ள நிலம். அடர்ந்த காடு என்பார் அணிநிழல் காடு என்றார். இது காவற்காடு எனப்படும். சில கோட்டைகளுக்குத்தான் மலையரண் அமையும். நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்னும் இந்நான்கரணுஞ் சூழப்படுவது அரண் ஆகும். அரண் - கோட்டை. கோட்டையை - மதிலரண் எனலாம். (உ)

743 உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல்.

உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின் அமைவு - உயரமும் அகலமும் வலுவும் அருமையும்

ஆகிய இந்நான்கும் அமையப் பெற்றது, அரண் என்று உரைக்கும் நூல் - மதில் என்று சொல்லுவர் நூலோர்.

உயரம் - ஏணிக்கு எட்டாத உயரம். அகலம் - பகைவரால் வெளியிலிருந்து துளைசெய்ய முடியாத அடியகலமும், அகத்தோர் நின்று போர்செய்யக்கூடிய முடியகலமும். திண்மை - கருங்கல்லாலும், செங்கல்லாலும் சுண்ணும்பு முதலியன கலந்து கட்டபட்டதால் இடிக்க முடியாமை. திண்மை - கெட்டி. அருமை - பொறிகளும் கருவிகளும் மறவருமுடைமையால் அணுகுதற் கருமை. மதிலுறுப்புக்களையும் பொறிகளையும் கருவிகளையும் சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை 207-216 அடிகளிலும், இராவண காவியம் இலங்கைப் படலம் 129-148 செய்யுட்களிலும் காண்க. (௩)

744 சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
ஊக்க மழிப்ப தரண்.

சிறுகாப்பின் பேர் இடத்தது ஆகி - காக்கவேண்டிய இடம் சிறிதாய் மதிலகம் பெரிய இடத்தை உடையதாய், உறுபகை ஊக்கம் அழிப்பது அரண் - மதில் முற்றிய பகைவரது ஊக்கத்தைக் கெடுப்பதே அரணாகும்.

சிறுகாவல் - வாயிலொழிந்த இடங்கள் ஓரிரு பக்கம் மலையும், சுற்றிலும் நீரும், காடும் அமைந்திருத்தல். மதிலகம் - மதிலின் உட்புறம். தமது வலிமைமட்டும் நோக்கி விரைவில் அழித்துவிடலாமென்று வரும் பகைவர் வந்து கண்டதும் அம் முயற்சி யொழிதலுக்கேற்ற வலிபொருந்திய அரண். (௪)

745 கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

கொளற்கு அரிதாய்-புறத்தாரால் கைக்கொள்வதற்கரிதாய், கொண்ட கூழ்த்தாகி - அகத்தார்க்கு நெடுநாளைக்கு வேண்டிய உணவைத் தன்னகத்தே கொண்ட

தாய், அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண் - அகத்தாரது போர் நிலைக்கு எளிதாய தன்மையை உடையதே அரணாகும்.

புறத்தார் - மதில் முற்றுவோர். அகத்தார்-மதிலுக்குடையோர். கொள்ளுதற்கருமை - கிடங்கு, காவற்காடு, பொறிகள், மதிலின் உயர அகல வலி இவற்றால் கொள்ளுதற்கரிதாதல். உணவில் நீரும் அடங்கும். நிலைக்கு எளிதாம் நீர்மையாவது - அகத்தார் விட்ட படைக்கல முதலியன புறத்தார்மேல் எளிதில் சேறலும், புறத்தார் விட்டவை அகத்தார்மேற் சேராமையும், மதிலின் மேலிடம் பரப்புடையதும் முதலாயின. (ரு)

746 எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

எல்லாப் பொருளும் உடைத்தாய் - அகத்தார்க்கு வேண்டும் பொருள்களெல்லாவற்றையும் உள்ளே உடையதாய், இடத்து உதவும் நல்ஆள் உடையது அரண் - புறத்தோரால் மதில் அழிவெய்த நேரும்போது அழிவெய்தாமல் உதவிக் காக்கும் நல்ல வீரரையு முடையதே அரணாகும்.

மதில்முற்றுதலும் காத்தலும் உழிஞைத்திணை எனப்படும். அரசனிடத்தன்பும், நாட்டுப்பற்றும், மானமும், மறமும், சோர்வின்மையும் முதலிய நற்குணங்கள் உடைமைபற்றி 'நல்லாள்' என்றார். (சா)

747 முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

முற்றியும்-புகலொடு போக்கொழியும் வகை நெருக்கமாகச் சூழ்ந்தும், முற்றாது எறிந்தும் - அங்ஙனம் சூழாமல் தளர்ந்த இடம் பார்த்து ஒருமுகமாகப் பொருதும், அறைப்படுத்தும் - நம்பிக்கை யுடையோரைவிட்டு அகத்

தோர் மனத்தை மாற்றி வாயிற்கதவைத் திறப்பித்தும், பற்றற்கு அரியது அரண் - புறத்தோரால் கொள்ளுதற் கரியதே அரணாகும்.

புகலொடு போக்கொழிதல் - அகத்தோர் உள்ளே வரவும் வெளியே போகவும் முடியாதபடி முற்றுதல். இதனால் உணவுப் பொருள் முதலியன இல்லாக்குறை ஏற்படும். எல்லாப் பொருளும் உடைமையால் அக்குறை யில்லை. தளர்ந்த இடம் - அகத்தோர் எதிர் நிற்க முடியாது தளர்ச்சியுற்ற வாயில்வழி. முற்றுதெறிதலும், அறைப்படுத்தலும் நல்லாளுடைமையால் முடியாதாயின. அறைப்படுத்தல் - எதிரி படைஞரை வஞ்சித்துத் தம் மொடு சேர்த்துக் கொள்ளல்; தமக்கு உதவச்செய்தல். அறைபோதல் - பகைவரைச் சேறல். பீடணன் வரலாறு இதற்கு எடுத்துக்காட்டாகும். (எ)

748 முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வேல்வ தரண்.

முற்று ஆற்றி முற்றியவரையும் - படைப்பெருமை யால் மதிலை முற்றவல்லராய் வந்து முற்றிய புறத்தோ ரையும், பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண் - தன்னைப்பற்றி நின்று காக்கவல்ல அகத்தோர் தாம்பற்றி நின்ற இடத்தை விட்டுப் பெயராமல் நின்று பொருது வெல்வதே அரணாகும்.

பற்று - ஆகுபெயராய்ப் பற்றி நின்ற இடத்தைக் குறித்தது. பற்று ஆற்றி - பற்றின் கண் ஆற்றி - பற்றி நின்ற இடத்தில் உறுதியாக நின்று. பெரும்படையானைச் சிறுபடையான் எதிர்த்து நிற்கும்படி அமைந்ததே யன்றி, வெல்லும்படியும் அமைந்ததே அரண் என்ப தாம். (அ)

749 முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

முனைமுகத்து மாற்றலர் சாய - போர் தொடங்கின வுடனே பகைவர் மனந்தளர்ந்து ஒடும்படி, வினைமுகத்து வீறு எய்தி - அகத்தோர் செய்யும் வினைவேறுபாடுகளால் சிறப்புற்று, மாண்டது அரண் - மற்றும்வேண்டிய மாட்சி யுடையதே அரணாகும்.

தொடக்கத்தில் எதிர்நிற்க முடியாது மனமுடைந் தோடினோர் பின்னும் வந்து பொருதல் கூடாமையால் 'முனைமுகத்துச்சாய' என்றார். சாய்தல் - தோற்றோடுதல். வினை வேறுபாடுகளாவன - பகைவர் தொடங்கிய போரின் வகையை அறிந்து எய்தல் எறிதல் குத்துதல் வெட்டுதல் முதலிய வினைகளில் பகைவர் தொடங்கிய போரைத் தோற்கடிக்கக் கூடியன செய்தல். மற்றும் வேண்டிய மாட்சி - புறத்தோரறியாமல் புகுதற்கும் போதற்குமுரிய சுருங்கைவழி முதலாயின வுடையதாதல். (௯)

750 எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் - எவ்வளவு பெருமையுடைய தாகிய விடத்தும், வினைமாட்சி இல்லார் கண் அரண் இல்லது - செயலாற்றும் திறமை இல்லாதாரிடம் அவ்வரண் இல்லாததாகும். பகைவரால் கொள்ளப்படும்.

எவ்வளவு சிறந்தகாவலையுடையதாயினும் செயலாற்றுந் திறமை யில்லாதார்க்கு அதனால் பயனில்லை என்பதாம். (௰)

## 76 பொருள்செயல்வகை

பொருளைத் தேடும்வகை; பொருளின் சிறப்பு.

751 பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள் அல்லது - ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் மதிக்கப் படுவாராகச் செய்யவல்ல பொருளையல்லது, பொருள் இல்லை - சிறந்தபொருள் வேறு இல்லை.

மதிக்கப்படார் - அறிவில்லாரும், நல்லொழுக்க மில்லாரும். பொருளுடையாரை யாவரும் மதிப்பர். (க)

752 இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - நல்லோராயினும் பொருளில்லாதவரை எல்லோரும் இகழ்வார்கள்; செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர் - தீயோராயினும் பொருளுடையவரை எல்லோரும் போற்றுவார்கள். (உ)

753 பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.

பொருள் என்னும் பொய்யா விளக்கம் - பொருள் என்னும் அணையா விளக்கு, எண்ணிய தேயத்துச் சென்று இருள் அறுக்கும் - தன்னை யுடையார் நினைத்த இடத்தில் சென்று பகையென்னும் இருளைக் கெடுக்கும்.

பகையை இருள் என்றதால் ஒருகூற்றுருவகம். ஏனைவிளக்கு இருந்த இடத்தில் தான் இருளறுக்கும். இது எண்ணிய இடத்தில் சென்று இருளறுப்பதால் அதைவிட இது சிறந்ததாயிற்று. பகை கெடுக்கவும் பொருள் வேண்டும். (ங)

754 அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்

*திறன் அறிந்து தீது இன்றி வந்தபொருள் - செய்யுந்திறத்தினையறிந்து பிறருக்குத் தீமை பயத்தல் இன்றி வந்த பொருளானது, அறன் ஈனும் இன்பமும் ஈனும் - அறத்தையும் கொடுக்கும் இன்பத்தையுங் கொடுக்கும்.*

*திறன் - பொருள் செய்யும் வகை. நல்லன பல செய்யவும் புகழீட்டவும் கூடலின் அறனீனும் என்றும், நெடுங்காலம் நின்று துய்க்கப்படுதலின் இன்பமும் ஈனுமென்றுங் கூறினர். குறள் 760 பார்க்க. ‘அழக்கொண்டவெல்லாம் அழப்போம்’ (689) ஆகையால், தீதின்றி வந்த பொருள் என்றார்.* (௪)

755 அருளோடு மன்போடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

*அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் - தம் குடிகளிடம் செலுத்தும் அருளுடனும் அவர் தம்மிடம் செலுத்தும் அன்புடனும் வாராத பொருளீட்டத்தை, புல்லார் புரளவிடல் - அரசர் பொருந்தாது போகவிடவேண்டும்.*

*குடிகளை வருத்தாது அவர் உவந்து கொடுக்கும் வகையில் பொருளீட்டவேண்டும். அருளும் அன்புமின்றிப் பொருளீட்டுதல் கூடாது; அவ்வெண்ணத்தை விட்டுவிடவேண்டும். புல்லார் - பொருந்தாராய். அவ்வாறு ஈட்டிய பொருள் பசுமட்கலத்துள் நீர்போல் (690) அவனொடுங்கெடும்.* (ரு)

756 உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

*உறுபொருளும் - உடையவரில்லாமையால் தானே வந்து சேர்ந்த பொருளும், உல்கு பொருளும் - சுங்கவரி*

யாகிய பொருளும், தன் ஒன்னார்த்தெறுபொருளும் - தன் பகைவரை வென்று திறையாகக் கொள்ளும் பொருளும், வேந்தன் பொருள் - அரசனுக்குரிய பொருள்களாகும்.

உறுபொருள் - நிலத்தில் புதைத்து வைத்தவர் இறந்துபோக நெடுங்காலத்திற்குப் பிறகு கண்டெடுத்த பொருளும் (புதைபொருள்), பங்காளிகள் பெறாத பொருளும். சுங்கம் - கப்பலிலும் வண்டி முதலியவற்றிலும் வரும் பண்டங்கட்கு வாங்கும் வரி. இது குடியிறைப் பொருள் அல்லாமல் வரும் வருவாய் கூறியவாறு. (சு)

757 அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

அன்பு ஈன் அருள் என்னும் குழவி - அன்பினால் பெறப்படும் அருள் என்னும் குழந்தையானது, பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு - பொருள் என்னும் செல்வத்தையுடைய வளர்ப்புத்தாயால் வளரும்.

நமக்குத் தொடர்புடைய பொருள்மீதுள்ள பற்று அன்பு எனப்படும்; தொடர்பு பற்றிச் செல்வது அன்பு. தொடர்பு பற்றாது இயல்பாகவே வருந்தும் உயிர்கட்கெல்லாம் இரங்குவது அருள் எனப்படும். தொடர்பு பற்றாது செல்வது அருள். தொடர்பு பற்றாது செல்லும் அருள் தொடர்புபற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்தவிடத்து உண்டாவதாகலின், அருளை 'அன்பீன் குழவி' என்றார். அவ்வருள் வறியார்மேற் செல்வது அவ்வறுமையை நீக்கும் எண்ணங் கொண்டவர்க்காதலால், அவ் வருளுடையார் பொருளை அவ்வருளுக்குச் செவிலி என்றார். பொருளுடையார்க்கே வறியார்க்கீய முடியுமென்பதாம். (எ)

758 குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

தன்கைத்து உண்டாக ஒன்று வினை செய்வான் - தன் கையில் பொருள் உண்டாக ஒரு செயலைச் செய்தல்,

குன்று ஏறி யானைப்போர் கண்டற்று - மலைமேல் ஏறி நின்று யானைப்போரைக் கண்டதனோ டொக்கும்.

குன்றேறியவன் அச்சமும் வருத்தமும் இன்றி யானைப்போரைக் காண்பது போல, பொருளுடையானும் அச்சமும் வருத்தமுமின்றிப் பிறரைக்கொண்டு வினை முடிப்பானென்பதாம். கைத்து உண்டாக - பொருள் உடையவனாக. (அ)

759 செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.

பொருளைச்செய்க - தமக்குச் சிறப்பு வேண்டுபவர் பொருளை ஈட்டுக; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு - பகைவர் செருக்கை அறுக்கும் படைக்கலம் ஆகும் அது; அதனில் கூரியது இல் - அச்செருக்கறுக்க அப்பொருளைப் போலக் கூரிய படைக்கலம் வேறில்லை.

செருக்கு-தம் வலியால் மிகமகிழ்ந்திருத்தல். பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்பும் உண்டாகும். அதனால் பகைவர் செருக்கொழிந்து தானே அடங்குவர்.

760 ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு.

ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு - நல்ல பொருளை மிகப் படைத்தவர்க்கு, ஏனை இரண்டும் ஒருங்கு எண்பொருள் - மற்றைய அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாகும்.

நல்ல பொருள் - நல்வழியில் வரும் பொருள். காழ்த்தல் - முதிர்தல். காழ்ப்ப இயற்றல் - மிகமிக ஈட்டல். "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் நடுவணது எய்த இருதலையும் எய்தும்" (நாலடியார் 114) என்பதும் இக் கருத்தே. குறள் 754 பார்க்க. (ம)

# 5 படையியல் - (2)

படையினது இலக்கணம். படையாவது - யானை குதிரை தேர் காலாள் ஆகிய நான்கன் தொகுதி.

## 77 படைமாட்சி

படைமாட்சி - படையினது சிறப்பு.

761 உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

உறுப்பு அமைந்து - யானை முதலிய நால்வகை உறுப்புக்களும் நிறைந்து, ஊறு அஞ்சா வெல்படை - போரின்கண் உண்டாகும் துன்பத்திற்கு அஞ்சாது நின்று பகையை வெல்லும் படையானது, வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை - அரசனுடைய செல்வங்க ளெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வமாகும்.

துன்பத்திற்கு அஞ்சினால் வெல்லமுடியாதாகையால் ஊறஞ்சா என்றார். மற்ற செல்வங்களுக்கும் படை காவலாதலின் செல்வங்களுள் தலை என்றார். ஊறு - துன்பம்.

762 உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

தொலைவிடத்து உடலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண் - தான் குறைந்த விடத்தும் போரில் அழிவு வந்த போது தன்மீது காயம் படுவதற்கு அஞ்சாத வீரம், தொல்படைக்கு அல்லால் அரிது - மூலப்படைக் கல்லால் பிறபடைக்கு உண்டாகாது.

தொலைதல் - போரில் அழிந்து படை சுருங்குதல். அழிவுவருதல் - எதிர்த்து நிற்கமுடியாது தன் படை நிலைகுலைதல். ஊறு - உறுதல் - காயம்படுதல். மூலப்படை-

வீரன் மகன் வீரனாக வரும்படை. மூலப்படை, கூலிப் படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை என்னும் அறுவகைப் படையுள் சிறப்புடையது மூலப்படையேயாகும். கூலிப்படை-போர்க்காலத்து மட்டும் கூலிக்காகச் சேர்ந்தபடை. பகைப்படை - பகைவரிடத்திருந்து பிரித்துவந்தபடை. (உ)

763 ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னும் - எலியாகியபகை திரண்டு கடல்போல ஒலித்தால் நாகபாம்புக்கு என்ன துன்பம் வரும்? நாகம் உயிர்ப்பக் கெடும் - அப்பாம்பு மூச்சுவிட்டவுடனே அவ்வெலிக் கூட்டம் ஓடும்.

வீரரல்லாதார் பலர் திரண்டு கூச்சலிட்டால் அதற்கு வீரன் அஞ்சான். அவன் எழுந்தவுடனே அப்பேடிகள் தாமாகக் கெடுவர் என்பதாம். பிறிது மொழிதல் அணி. அரசனுக்கு மற்றைய உறுப்புக்களுள் படைசிறந்தது. அதனுள்ளும் மூலப்படை சிறந்தது. அதைவிட வீரன் சிறந்தவன். வீரரல்லார் பலரினும் வீரனொருவனைக் கொளல் நன்றென்பதாம். (ந)

764 அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

அழிவு இன்று - போரில் கேடடையாமலும், அறைபோகாதாகி - பகைவரால் வஞ்சித்து மாறுபடுத்தப்படாமலும், வழிவந்த வன்கணதுவே படை - தொன்றுதொட்டு வந்த அஞ்சாமையை உடையதே படையாகும்.

அழிவின்மையால் மறமும் மானமும் உடைமையும், அறைபோகாமையான் அரசனிடத்து அன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை - வீரன் மகன் வீரனாக வருதல். (ச)

765 கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.

*கூற்று உடன்று மேல்வரினும் - கூற்றமே வெகுண்டு எதிர்த்துப் போர் செய்ய வந்தாலும், கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை - நெஞ்சொத்து அதன் எதிர் நின்று போர் செய்யும் வல்லமையுடையதே படையாகும்.*

*கூற்று - உடலும் உயிரும் கூறுபடும் சாவைக் கூற்று என உயிருடையதுபோல் கூறல் நூன்மரபு. முகவுரை பார்க்க. தன்னை அடியோடொழிக்கக் கூடிய அவ்வளவு பெரிய படை வந்தாலும் என்பதை இவ்வாறு கூறினர். நெஞ்சொத்தல் - எல்லோரும் ஒரே முகமாய் எதிர்த்தல்.*

766 மறமான மாண்ட வழிச்சேலவு தேற்றம்
எனநான்கே யேமம் படைக்கு.

*மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே - வீரமும் மானமும் முன்னோர் சென்ற நல்லவழியில் நடத்தலும் அரசனுடைய நம்பிக்கையைப் பெறுதலும் என்னும் இந்நான்கு குணமுமே, படைக்கு ஏமம் - படைக்கு அரணாகும். அரண் - காவல்.* (சு)

767 தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

*தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து - தன் மேல் வந்த போரைத்தடுக்கும் தன்மையை அறிந்து, தார் தாங்கிச் செல்வது தானை - அப்பகைவரது முன்னணிப் படையைத் தன்மேல் வராமல் தடுத்துத் தான் அவர்மேல் செல்வதே படையாகும்.*

*தன்மேல் வந்த-தன்னை எதிர்த்த. முன்னணிப்படை, கொடிப்படை, தூசிப்படை என்பன ஒருபொருட் சொற்கள். அது கலப்பையில் கொழுமாட்டும் ஒண்டிபோல் அமைந்தது.* (எ)

768 அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

*தானை - படையானது, அடல்தகையும் - போர் செய்யும் வீரமும், ஆற்றலும் இல் எனினும் - பகைவர் தன்மேல் வந்தால் எதிர்த்து நிற்கும் வலியும் இல்லையென்றாலும், படைத்தகையால் பாடுபெறும் - தன் படைத்தன்மையாலே பெருமை பெறும்.*

*அடுதல்-போர் செய்தல். படைத்தகை-அப்படையிலுள்ள மறவர்கள் ஒன்று பட்டுச்செய்யும் போர்த் தொழில் தன்மை தகை - தகுதி, அத்தகைய தகுதியுடைய படையே சிறந்த படையாகும்.* (அ)

769 சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

*சிறுமையும் - அளவில் குறைதலும், செல்லாத் துனியும் - மனத்தினின்றும் நீங்காத வெறும்பும், வறுமையும் இல்லாயின் - வறுமையும் இல்லையானால், படை வெல்லும் - படை பகையை வெல்லும்.*

*வீரர்கள் படையைவிட்டுப் போவதும், வறுமையும் அரசன் பொருள் கொடாமையால் வருவன. நீங்காத வெறுப்பு - அரசன் தகாதன செய்தலால் வருவது. இவை மூன்றும் உண்டாயின் அரசனிடத்தில் அன்பின்றிப் படை எதிர்த்துப் பொராமையின் இல்லாயின் வெல்லுமென்றார்.* (கூ)

770 நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

*நிலைமக்கள் சால உடைத்தெனினும் - போரில் நிலைத்து நிற்கும் வீரரை மிகுதியாக உடையதாயினும்*

தலை மக்கள் இல்வழித் தானைஇல் - தனக்குத் தலைவராகிய வீரரை இல்லாதவிடத்துப் படையானது போரில் நிலைத்து நிற்காது.

படைத்தலைவர் இல்லாவிட்டால் படை எதிர்த்துப் பொராது. (ய)

## 78 படைச்செருக்கு

படையினது மறமிகுதி ; மறம் - வீரம்.

771 என்னைமுன் நில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

தெவ்விர் என் ஐ முன் நின்று கல் நின்றவர் பலர் - பகைவர்களே ! முன்பு என்னுடைய தலைவன்முன் எதிர்த்து நின்று அவனால் இறந்து நடுகல்லாயினர் பலராவர் ; என் ஐ முன் நில்லன்மின் - ஆதலால், நீங்கள் உயிருடன் இருக்க வேண்டின், என்னுடைய தலைவன் எதிரில் போரேற்று நில்லாதீர்கள்.

இது ஒரு வீரன் கூற்று. நடுகல்லாதல் - வீரனுடைய பேரும் புகழும் உருவும் பொறித்து நடுங்கல். இது நடுகல், வீரக்கல் என வழங்கும். நடுகல்லின் இலக்கணத்தை தொல், பொருள், புறத்திணை 5ஆம் சூத்திரவுரையில் காண்க. நின்றால் நீரும் இறப்பீர் என்பது கருத்து. (க)

772 கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

கான முயல் எய்த அம்பினில் - காட்டின் கண் ஓடும் முயலைத் தப்பாமல் எய்த அம்பை ஏந்துவதைவிட, யானை பிழைத்தவேல் ஏந்தல் இனிது - வெட்டவெளியில் நின்ற யானையை எறிந்து தப்பிய வேலை ஏந்துதல் நல்லது.

இது மாற்றரசன் படையொடு பொருத ஓர்வீரன், அப்படை புறங்கொடுத் தோடுதற்கு நாணி, பின் அப் படைத் தலைவனோடு பொரச்செல்லலுற்றான் சொல்லியது. தோற்றோடுகின்ற படையைத் துரத்துதல் வீரர்க் கழகல்ல. (உ)

773 பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு.

தறுகண் பேராண்மை என்ப - பகைவர்மேல் கண் ணோடாது பொரும் வீரத்தை நூலோர் மிகுந்த ஆண்மை யென்று சொல்லுவர், ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு என்ப - பகைவர்க்கு ஒரு தாழ்வு நேர்ந்த போது கண்ணோடி அத்தாழ்வுதீர உதவுதலை அப்பேராண் மைக்குக் கூர்மையென்று சொல்வர்.

கண்ணோட்டம் - இரக்கம். கூர்மை - மிக்க ஆண்மை. இரக்கமின்றிப் பொரும் வீரம் பேராண்மையும், பகை வர்க்கு உதவுதல் பெரும் பேராண்மையும் ஆகும். (ஙு)

774 கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

கைவேல் களிற்றொடு போக்கி - தன் கையிலிருந்த வேலைத் தன்னை எதிர்த்த யானையின்மேல் எறிந்து, வரு பவன் - அடுத்து வருகின்ற மற்றொரு யானைமேல் எறி வதற்கு வேலைத் தேடிக்கொண்டு திரிகின்ற ஒரு வீரன், மெய்வேல் பறியா நகும் - தன் மார்பில் தைத்திருந்த வேலைக்கண்டு பிடுங்கி வேல்கிடைத்தமைக்காக மகிழ் வான்.

சின மிகுதியாலும், போர் விருப்பாலும், கடனாற்று தலினாலும் மார்பில் வேல் பாய்ந்ததை அறிந்திலன். (ச)

775 விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.

விழித்தகண் - பகைவரை வெகுண்டு நோக்கிய கண்ணை, வேல்கொண்டு எறிய அழித்து இமைப்பின் - அப்பகைவர் வேலால் எறிய அதற்கஞ்சி மூடித்திறப்பா ராயின், வன்கணவர்க்கு ஒட்டு அன்றோ - அதுவும் வீரர்க் குப் புறங்கொடுத்தலோடொக்கும்.

முன்பு நாட்டுப்புறச் சிறுவர்கள் ஒருவனை நன்கு விழித்துப் பார்க்கும்படி செய்து ஒருவன், 'இத்தச் சோட்டு வெண்ணெய் போட்டு இத்தனை மோரூற்று கிறேன் நரிவந்தால் பயந்துக்காதே' என்று அவன் கண்ணில் ஊதுவான். அவன் கண்ணை இமைத்தால் எல்லாச் சிறுவர்களும் அவனைச் சுற்றிப் பழித்துரையாடி விளையாடி, இவ்வீரக் குறிப்பை நினைவு கூர்ந்து வந்தனர்.

776 விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

தன் நாளை எடுத்து - ஒரு வீரனானவன் முன்சென்ற தன் வாழ் நாட்களை எடுத்தெண்ணி, விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைக்கும் - அந்நாட்களில் விழுப்புண்படாத நாட்களையெல்லாம் வீணாகக் கழிந்த நாட்களாக எண்ணி வைப்பான்.

எடுத்தெண்ணுதல் - நினைத்துப் பார்த்தல். விழுப் புண் - முகத்தினும் மார்பினும் பட்டபுண், சிறந்தபுண். புண்படாத நாட்களை வீணாகக் கழிந்த நாளாக எண்ணி வருந்துவான். (சு)

777 சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

சுழலும் இசை வேண்டி வேண்டா உயிரார் - உலகத் தைச் சூழ்ந்து நிற்கும் புகழை விரும்பி உயிர்வாழ்தலை

விரும்பாத வீரர், கழல் யாப்புக் காரிகை நீர்த்து - வீரக் கழலைக் காலில் கட்டுதல் அழகுடையது!

அவ்வீரமே பெரும் புகழைத் தருதலான் அழகுக்காகக் கழல் கட்டுதல் வேண்டியதில்லை யென்பது. (எ)

778 உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

உறின் உயிர் அஞ்சா மறவர் - போர் உற்றால் தம் உயிருக்கு அஞ்சாது போர்க்குச் செல்லும் வீரர், இறைவன் செறினும் சீர்குன்றல் இலர் - தம் அரசன் போர் வேண்டாமென்று முனிந்தாலும் அவ்வீரம் குறையார்.

போரில்லாதிருந்தவர் அறுவரவே அரசன் தடுப்பினும் நில்லாரென்பதாம். (அ)

779 இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

இழைத்தது இகவாமைச் சாவாரை - தாங்கூறிய வஞ்சினம் தப்பாமல் இருத்தற்பொருட்டுப் போருக்குச் சென்று சாவக்கூடிய வீரரை, பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார் - அவ்வஞ்சினந் தப்பினரென்று சொல்லிப் பழிப்பவர் யார்?

இழைத்தல் - இன்னது செய்யேனாயின் இன்னனாவேன் என வஞ்சினங் கூறுதல். 'தமிழரைப் பழித்த தகவிலோன் முடித்தலை துணியேனாயின் துணிக்குவேன் என்னுயிர்' எனக்கூறல். பிழைத்தல் - தவறுதல். ஒறுத்தல் - பழித்தல். (கூ)

780 புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

புரந்தார் கண் நீர்மல்கச் சாகிற்பின் - தம்மைக் காத்த அரசர் கண்களில் நீர்பெருகும்படி போர்செய்து சாகவல்லாராயின், சாக்காடு இரந்து கோட்டக்கது

உடைத்து - அச்சாவு எல்லோராலும் இரங்தாயினும் கொள்ளுங் தகுதியை உடையது.

தமக்குச் செய்த நன்மைகளை நினைந்து அரசர் கண்ணீர் விடுவர். அச்சாவு புகழைத் தருதலான் அதைவிட நல்ல சாவு இல்லையென்பதாம். (ய)

படையியல் முற்றிற்று

## 6 நட்பியல் - (17)

படைபோல அரசுக்கு உதவுவதாய நட்பின் இலக்கணம். இது அரசுக்கு உறுப்பாகக் கூறினும், பொதுவாகக் குடிமக்கட்கும் பொருந்தும். இதில், முதல் 5 அதிகாரம் (79-83) உடன்பாடாகவும், பின் 12 அதிகாரம் (84-95) எதிர்மறையாகவும் கூறப்படுகின்றன. உடன்பாடு - நட்கப்படுவது. எதிர்மறை - நட்கப்படாதது. நட்டல் - நட்புக்கொள்ளல். தீ நட்பும், கூடா நட்பும் நட்டபின்னரே விலக்கப்படுதலின், நட்கப்படுவனவேயாம். இகல் முதலிய நட்கப்படாதவையும் அறிவிலிகளால் மேற்கொள்ளப் படுதலின், நட்பியலின் பாற்பட்டன.

இனி, அவ்வெதிர்மறை பன்னிரண்டனுள் பேதைமையும், புல்லறிவாண்மையும் அறியாமையாய் ஏனைப் பத்துக்கும் அடிப்படையாயின. இகல் முதலிய ஐந்தும் வெகுளியானும், பெண்வழிச் சேறல் முதலிய ஐந்தும் அவாவினானும் வருவனவாம்.

### 79 நட்பு

நட்பின் தன்மை.

781 செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

நட்பின் செயற்கரிய யா உள - நட்புப் போலச் செய்துகொள்ளுதற்கு அரிய பொருள்கள் எவை உள்ளன?

அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள - செய்து கொண்டால், அந் நட்புப்போலப் பகைவர் செய்யும் வினைக்கு அரிய காவல்கள் எவை உள்ளன? ஒன்றுமில்லை.

பகைவர் செய்யும் வினைக்கு அரிய காவல் - அவர் செய்யும் வினை நம்மை அணுகாமல் காக்கும் அரியகாவல். வினை - போர். நட்புச் செய்துகொண்டால் பகைவர் அஞ்சிப் போர் தொடங்கார் என்பதாம். (க)

782 நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

நீரவர் கேண்மை பிறை நிறை நீர - அறிவுடையோர் நட்புக்கள் பிறை நிறையுந் தன்மைபோல நாடோறும் நிறையுந் தன்மையவாம்; பேதையார் நட்பு மதி பின் நீர - அறிவிலார் நட்புக்கள் முழுமதி பின் குறையுந் தன்மைபோல நாடோறும் குறையுந் தன்மையவாம்.

அறிவுடையாரும் அறிவுடையாரும் கொண்ட நட்பு முன் சுருங்கிப் பின் பெருகும்; பேதையாரும் பேதை யாரும் கொண்ட நட்பு முன் பெருகிப் பின்சுருங்கும். நீர்மை-தன்மை. (உ)

783 நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

பண்புடையாளர் தொடர்பு பயில்தொறும் - நற்குண முடையவர் நட்பானது பழகுந்தோறும் அவர்க் கின்பஞ் செய்தல், நூல் நவில்தொறும் நயம்போலும் - நூற் பொருள் கற்குந்தோறும் கற்றார்க்கு இன்பஞ் செய்தலை ஒக்கும்.

நல்லோர் கொண்ட நட்புப் பழகப்பழக இன்பந் தரும். (ந)

784 நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
　　மேற்சென் றிடித்தற் பொருட்டு.

நட்டல் நகுதற் பொருட்டன்று - ஒருவரோடொருவர் நட்புக் கொள்ளுதல் கூடிப்பேசி மகிழ்வதன் பொருட்டன்று; மிகுதிக்கண் மேல் சென்று இடித்தற் பொருட்டு - ஒருவர் தகாத செயலைச் செய்யத் தொடங்கியபோது மற்றொருவர் முற்பட்டு இடித்துரைத்தற் பொருட்டே யாகும்.

தகாத செய்கை துன்பம் பயத்தலால் வேண்டப் படுவதன்மையின் அதனை 'மிகுதி' என்றார். இடித்துரைத்தல் - கடுஞ்சொற் சொல்லித் திருத்துதல். தன் நண்பனைக் குற்றஞ் செய்யாமல் காப்பதே ஒருவன் கடமையாகும். (௪)

785 புணர்ச்சி பழகுதல் வேண்டா ; வுணர்ச்சிதான்
　　நட்பாங் கிழமை தரும்.

புணர்ச்சி பழகுதல் வேண்டா - ஒருவரோடொருவர் நட்பாவதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டியதில்லை ; உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் - இருவர்க்கும் ஒத்த உணர்ச்சியே நட்பாகிய உரிமையைக் கொடுக்கும்.

புணர்ச்சி - ஒரே இடத்தினராதல். இடம் - ஊர் கூற்றம், கோட்டம், நாடு முதலியன. பழகுதல் - பலகால் கண்டும் பேசியும் பழகுதல். நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தல் என்னும் காரணம் மூன்றனுள்ளும் உணர்ச்சியொத்தலே சிறப்புடையதாகும். உணர்ச்சியொத்தல் - குணவொற்றுமையால் இருவரும் ஒருமனப் படுதல். உறையூரி லிருந்த கோப்பெருஞ்சோழனும், மதுரையி லிருந்த பிசிராந்தையாரும் ஒருவரை யொருவர் புலவர் வாயிலாய் அறிந்து, உணர்ச்சி யொத்ததால் நண்பர்களாயிருந்து, கோப்பெருஞ்சோழ னிறக்கப் பிசிராந்தையாரும் உடனுயிர் நீத்தது இதற்கு எடுத்துக் காட்டாகும். (௫)

786 முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

*முகம் நக நட்பது நட்பன்று* - அகமலராமல் கண்ட போது, முக மாத்திரம் மலரும்படி நட்பது நட்பாகாது; *நெஞ்சத்தகம் நக நட்பது நட்பு*-அகமு மலர நட்பதே நட்பாகும். அகமும் முகமும் மலர நட்பதே நட்பாகும். (சு)

787 அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு.

*அழிவினவை நீக்கி ஆறு உய்த்து* - கேட்டினைத் தரும் தீய வழிகளில் செல்லுங்கால் விலக்கி நல்ல வழிகளில் செல்லாக்கால் செல்லும்படி செய்து, *அழிவின் கண் அல்லல் உழப்பது நட்பாம்* - தம்மால் விலக்க முடியாத கெடுதி வந்த போது தானும் உடன் துன்புறுவதே ஒருவனுக்கு நட்பாகும்.

தன் நண்பனைக் கெட்ட வழியில் செல்லவிடாது, நல்ல வழியில் செலுத்தித் துன்பத்தைப் பங்கிட்டுக்கொள்வதே நட்பாகும். தவிர்க்க முடியாத துன்பம் வரின் அதைப் பங்கிட்டுக் கொள்ளவேண்டும். (எ)

788 உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு.

*உடுக்கை இழந்தவன் கைபோல* - ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டு நிற்கையில் ஆடை அவிழ்ந்தால் உடனே நமது கை தானாகவே சென்று அவ்வாடையை உடுத்தி மானத்தைக் காப்பதுபோல, *ஆங்கே இடுக்கண் களைவது நட்பு ஆம்* - நண்பனுக்குத் துன்பம் வந்தால் அவ்வாறே தானே முன் வந்து அத்துன்பத்தைப் போக்குவதே நட்பாகும். (அ)

789 நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்று நிலை.

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் - நட்புக்கு அரசிருக்கை எது வென்றால், கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை - எப்போதும் மன வேறுபாடில்லாமல் தன்னால் இயலும் வழிகளிலெல்லாம் உதவித் தன் நண்பனைத் தாங்கும் நிலையேயாகும்.

அரசிருக்கை - எல்லார்க்கும் மேம்படவிருத்தல். எப்போதும் தன் நண்பனோடு மன வேறுபாடில்லாமல் தன்னால் முடியும் வழிகளிலெல்லாம் உதவுவதே நட்பின் முடிந்த எல்லை ஆதலின், அதை நட்பிற்கு வீற்றிருக்கை என்றார். இதை விட நண்பனுக்கு நண்பன் செய்வது வேறு இல்லை என்பதாம். கொட்பு - வேறுபாடு. (௯)

790 இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும் - இவர் நமக்கு இத்தகைய அன்பினர், நாம் இவர்க்கு இத்தன்மையம் என்று ஒருவரை யொருவர் புகழ்ந்து கூறினும், நட்புப் புல்லென்னும் - நட்பின் பெருமை குறைந்து விடும்.

தான் அவர் என்னும் வேறுபாடின்றி நண்பரைத் தன்னைத் தான்நினைக்குமாறு போலவே நினைக்க வேண்டும். சிறிது வேறுபடுத்து நினைக்கினும் நட்பின் பெருமை குறைந்துவிடும். (ய)

## 80 நட்பாராய்தல்

ஒருவருடைய குணஞ் செயல்களை ஆராய்ந் தறிந்த பின்னரே அவரோடு நட்புக் கொள்ளவேண்டு மென்பது.

791 நாடாது நட்டலிற் கேடில்லை ; நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை - நட்புக் கொள்ள விரும்புவோர்க்கு ஒருவனோடு நட்புச் செய்த பின் அவனை விடமுடியாது; நாடாது நட்டலில் கேடு இல்லை - ஆதலால், ஆராயாது நட்புச் செய்தலைக் காட்டிலும் கேடு தருவது வேறில்லை.

ஆராய்தல் - குணஞ் செயல்களினது நன்மையை ஆராய்தல். ஒருவனோடு நட்புக் கொண்டபின் விடமுடியாதாகையால் முன்னரே நன்கு ஆராய்ந்து நட்புக் கொள்ள வேண்டும். (க)

792 ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை - குணம் செயல்களின் நன்மை தீமைகளைப் பலகாலும் பலவாற்றானும் ஆராய்ந்து கொள்ளாதவன் நட்பானது, கடைமுறை தான் சாம் துயரம் தரும் - முடிவில் தான் சாதற் கேதுவான துன்பத்தினைக் கொடுக்கும்.

குணம் செயல்களின் நன்மை நோக்கிக் கொள்ள வேண்டும். தீயனோடு நட்புக் கொள்ளின் அவனுக் குண்டாகும் பகை யெல்லாம் தனக்கும் உண்டாகு மாதலால் 'தான்சாம் துயரம் தரும்' என்றார். (உ)

793 குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு.

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து - ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும்

குற்றத்தினையும் குறையாத சுற்றத்தினையும் ஆராய்ந்தறிந்து, நட்பு யாக்க - அவனோடு நட்புக் கொள்க.

குடிப்பிறப்பு - வழிவழியாக நல்லொழுக்க முடைய குடியில் பிறத்தல். ஒரு குற்றமும் இல்லார் உலகத்தின்மையின் உள்ள குற்றத்தைப் பொறுத்துக்கொள்வதற்காகக் குற்றமும் ஆராய வேண்டும். குன்றா - குன்றாத. குறையாத சுற்றம் - நிறைந்த சுற்றம். சுற்றப்பிணிப்புடையார் நண்பரோடும் பிணிப்புடையராவர். (௩)

794 குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

குடிப்பிறந்து தன்கண் பழி நாணுவானை - நற்குடியில் பிறந்து தன்னிடத்திலுள்ளதாக உலகோர் சொல்லும் பழிக்கு நாணுபவனை, கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும் - அவன் விரும்பும் பொருளைக் கொடுத்தாயினும் நட்புக் கொளல் வேண்டும்.

குடிப்பிறந்தவன் பிழை செய்யான், பழி நாணுவான், பிழை பொறுப்பான். (௪)

795 அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

அல்லது அழச் சொல்லி - முறையல்லது செய்யக் கருதினால் அழும்படி சொல்லி விலக்கியும், இடித்து-செய்தால் பின்னும் செய்யாதபடி கண்டித்துரைத்தும், வழக்கு அறிய வல்லார் - உலக வழக்கையும் அறியவல்லாரை, ஆய்ந்து நட்புக் கொளல் - ஆராய்ந்து நட்புக் கொள்க. அழச் சொல்லல் - கடுமொழி கூறல். (௫)

796 கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

கிளைஞரை நீட்டி அளப்பது ஓர்கோல் - ஒருவனுக்கு வறுமை என்பது, தன் நண்பர்களாகிய நிலங்களை எஞ்

சாமல் அளப்பதோர் கோலாகும்; கேட்டினும் ஓர் உறுதி உண்டு - ஆதலால், வறுமையினும் ஓர் நன்மையுண்டு.

சுருங்கிய நட்புச் செல்வக் காலத்து வெளிக்குத் தோன்றாது; வறுமைக் காலத்துத் தோன்றும். ஆகவே, வறுமையைச் கோலாக்கினார். நண்பரை நிலங்களாக்காத தால் ஒருகூற்றுருவகம். கேட்டினுறுதி - நட்பின் தன்மை யறிதல். (சா)

797 ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

ஒருவற்கு ஊதியம் என்பது - ஒருவனுக்கு ஊதியம் என்பது, பேதையார் கேண்மை ஒரீஇவிடல் - அறிவிலா ரோடு கொண்ட நட்பினை நீக்கி விடுதலே.

ஒரீஇ - ஒருவி - நீக்கி. பேதையார் நட்பை நீக்கிவிடு வதே ஒருவனுக்கு ஊதியம் (இலாபம்) ஆகும். (எ)

798 உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ ; கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

உள்ளம் சிறுகுவ உள்ளற்க - தம் ஊக்கம் குறை வதற்குக் காரணமான செயல்களைச் செய்ய நினையா திருக்க வேண்டும்; அல்லல் கண் ஆற்று அறுப்பார் நட்புக் கொள்ளற்க - அதுபோல, துன்பம் வந்தபோது கைவிடுவாரது நட்பைக் கொள்ளாதிருக்க வேண்டும். ஆற்று அறுத்தல் - கைவிடுதல். (அ)

799 கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
உள்ளினு முள்ளஞ் சுடும்.

கெடுங்காலை கைவிடுவார் கேண்மை - ஒருவன் கெடுங் காலத்து அவனை விட்டு நீங்குவாரது நட்பு, அடுங்காலை உள்ளினும் உள்ளம் சுடும் - பிறர் தன்னைக் கொல்லும் போது நினைத்தாலும் நினைத்த உள்ளத்தை அந்நட்பு,

தன்னைக் கொல்லுகிறவனைக் காட்டிலும் மிகுதியாக. வருத்தும்.

கெடுதல் - வறுமை. கெட்ட காலத்து விட்டு நீங்குவோர் கொலைஞரினும் கொடியராவர். (கூ)

800 மருவுக மாசற்ருர் கேண்மையோன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு.

மாசு அற்ருர் கேண்மை மருவுக - குற்றமற்றவரது நட்பைக் கொள்க; ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக - தனக்கு நிகரில்லாதவருடைய நட்பை அவர் விரும்பிய ஒரு பொருளைக் கொடுத்தாயினும் நீக்கிவிடுக.

ஒப்பிலார் - தன் குணஞ் செயலோ டொப்பிலார் 812 பார்க்க. தமக்கு மாறுனவரோடு கொண்டுள்ள நட்பைப் பொருள் கொடுத்தேனும் நீக்கிவிட வேண்டும். இது முன் ஆராயாது கொண்ட நட்பு. (ய)

## 81 பழமை

நண்பரது பழமை குறித்து அவர் பிழை பொறுத்தல்; பழைய நண்பரது பிழை பொறுத்தல்.

801 பழமை யெனப்படுவே தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

பழமை எனப்படுவது யாதெனில் - பழமையென்று சொல்லப்படுவது யாதென்ருல், கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு - பழகியவர் உரிமையால் செய்வனவற்றைச் சிறிதும் விலக்காமல் அவற்றிற்கு உடம்படும் நட்பு.

கிழமை - உரிமை. அது ஆகு பெயராய் உரிமையுடையனவற்றைக் குறித்தது. உரிமையால் செய்வனவாவன - ஒன்றைக் கேளாது செய்தல், கெடும்படி செய்

தல், தமக்கு வேண்டிய தாமே கொள்ளல் முதலியன. உரிமையால் செய்வனவற்றை விலக்காத நட்பே பழமை எனப்படும். இது பழமையின் இலக்கணங் கூறியது. (க)

802 நட்பிற் குறுப்புக் கெழுதகைமை ; மற்றதற்
குப்பாதல் சான்ஞேர் கடன்.

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை - நட்புக்கு உறுப்புக்களாவன நண்பர்கள் உரிமையால் செய்வன; அதற்கு உப்பாதல் சான்ஞேர் கடன் - அதனுல் அவ்வுரிமைக்கு இனியராதல் சான்ஞேர்க்கு முறைமையாகும்.

கெழுதகைமை - உரிமை. இதுவும் ஆகுபெயர். இனியராதல் - உரிமையால் செய்வனவற்றை விலக்காமை. உப்பு - இனிமை, தகுதி. (உ)

803 பழகிய நட்பேவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

கெழுதகைமை செய்தாங்கு அமையாக் கடை - நண்பர் உரிமையால் செய்தவற்றைத் தாம் செய்தவை போல் உடம்படாராயின், பழகிய நட்பு எவன் செய்யும் - அவரோடு பழகிய நட்பு என்ன பயனைச் செய்யும்?

உடம்படுதல் - ஒப்புக் கொள்ளுதல். தாஞ் செய்தாற்போல உடம்படல் - தாமும் அவரிடத் துரிமையால் ஒப்புக் கொள்ளுதல். நண்பர் செய்ததைத் தாம் செய்தது போல் கொள்ளாவிட்டால் பழகிய நட்பாற் பயனில்லை. (ந)

804 விழைதகையான் வேண்டி யிருப்பர்கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

நட்டார் கெழுதகையால் கேளாது செயின் - தமது காரியத்தை நண்பர் உரிமையால் தம்மைக் கேளாது செய்தாராளுல், விழைதகையான் வேண்டி இருப்பர் - அச்

செயலினது விரும்பப்படுந் தன்மையால் விரும்பி இருப்பர் அறிவுடையோர்.

ஒருவர்க்குத் தங்காரியம் தம்மையறியாமல் முடிந்திருப்பதை விட நன்மையின்மையின் அக்காரியம் விரும்பத்தக்க தாயிற்று. நமது நண்பர் நம்மைக் கேளாது நமது காரியத்தைச் செய்தால் அதை விரும்ப வேண்டும். (௪)

805 பேதைமை யொன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

நோதக்க நட்டார் செயின் - தாம் வெறுக்கத்தக்கவற்றை நண்பர் செய்தால், பேதைமை ஒன்றோ பெருங் கிழமை என்று உணர்க - அதற்குக் காரணம் அறியாமை அல்லது மிகுந்த உரிமை என்று கொள்க.

ஒன்றோ - எண்ணிடைச் சொல். தமது நண்பர் தகாதன செய்தால் அறியாமலோ, மிகுந்த உரிமையாலோ செய்தாரென்று கொள்ளவேண்டுமே யன்றி, அன்பில்லாமல் செய்தாரென்று கொள்ளக்கூடாது. அவை பொறுக்கவேண்டும். (௫)

806 எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

எல்லைக்கண் நின்றார் - நட்பின் வரம்பைக் கடவாது நிற்பவர், தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவிடத்தும் துறவார் - தம்மோடு பழமையில் மாறுபடாது நின்ற நண்பர்களது நட்பை அவரால் தமக்குப் பொருட்கேடோ தொழிற்கேடோ வந்தவிடத்தும் விடார்.

நட்பின் வரம்பைக் கடவாது நிற்றல்-நட்புமுறை தெரிந்து நடத்தல். பழமையில் மாறுபடாது நின்ற நண்பர் - பழைய நண்பர். பழமையில் மாறுபடாமை - உரிமையில் மாறுபடாமை. பழைய நண்பரால் தமக்குப்

பொருளழிவோ தொழிலழிவோ வந்தாலும் அவர் நட்பை விடக்கூடாது. (சு)

807 அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

அன்பின் வழிவந்த கேண்மையவர் - அன்புடன் பழமையாய் வந்த நட்பையுடையவர், அழிவந்த செய்யினும் அன்பு அறார் - தம் நண்பர் தமக்கு அழிவுதரத் தக்கவற்றைச் செய்தாலும் அவரிடத்து அன்பு நீங்கார்.

அழிவு - பொருட்கேடும் தொழிற்கேடும். அழி - முதல்நிலைத் தொழிற்பெயர். அன்பின் வழிவந்த கேண்மையவர் - அன்புள்ள பழைய நண்பர். பழைய நண்பர்கள் நமக்குக் கேடு செய்தாலும் அவர் நட்பை விடக் கூடாது. (எ)

808 கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு - நண்பர் செய்த பிழையைப் பிறர் சொன்னாலும் ஏற்றுக் கொள்ளாத உரிமையறிய வல்லார்க்கு, நட்டார் இழுக்கம் செயின் நாள் - நண்பர் பிழை செய்வாராயின் அந்நாள் நல்ல நாளாகும்.

கேளாத என்றதால் பிறர் சொன்னாலும் ஏற்றுக் கொள்ளார், தாமும் மனத்துட் கொள்ளா ரென்பதாம். பிழைசெய்யா நாட்கள் நல்லநா ளல்லவாயின. பிழை செய்வதால் தம்மிடம் தமது நண்பருக்குள்ள உரிமையை அறியும்படி செய்வதால் நாள் நல்லநாளாயிற்று. இது பிழை பொறுத்தலின் சிறப்புக் கூறியது. (அ)

809 கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

*கெடா வழிவந்த கேண்மையார் கேண்மை விடார் - உரிமைபருமல் பழையதாய் வந்த நட்பினையுடையாரது நட்பினை அவர் பிழை செய்தாராயினும் விடாதவரை, உலகு விழையும் - உலகம் நட்புக்கொள்ள விரும்பும்.*

*கெடா - கெடாத. நம்மிடத்தும் இவர் இத்தன்மைய ராவரென்று யாவரும் தாமே வந்து நட்பாவர் என்ப தாம்.* (கூ)

810 விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

*பழையார்கண் பண்பில் தலைப் பிரியாதார் - பழைய நண்பர் பிழை செய்தாராயினும் அவரிடத்துத் தம் பண்பினின்று நீங்காதவர், விழையார் விழையப்படுப - பகைவராலும் விரும்பப்படுவர்.*

*பண்பாவது - பிழை செய்யாமுன்போல அன்புடைய ராதல். விழையார் - விழையாராலும். மூன்றன் உருபும் உம்மையும் உடன் தொக்கன. அக்குணம் நோக்கிப் பகைவரும் நண்பர் ஆவர் என்பதாம்.* (ய)

## 82 தீநட்பு

*தீயவர் நட்பின் திறம். பொறுக்க முடியாத குற்ற முடைய தீயவர் நட்புக்கொள்ளத்தக்க தன்று; தள்ளத் தக்கது.*

811 பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

*பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை - கண்ணினால் பருகுவாரைப்போன்று தமக்கு அன்புடைய*

ராய் இருக்கினும் தீக் குண முடையார் நட்பு, பெருகலின் குன்றல் இனிது - பெருகுவதைக் காட்டிலும் குறைவது நல்லது.

பருகுதல் - உண்ணுதல்; அப்படியே எடுத்து விழுங் குவார் போன்ற அவ்வளவு அன்பு. நற்குணமில்லா ரெனவே தீக்குண முடையாராயிற்று. பெருகினால் வருங் கேடு குன்றினால் வராதாகையால 'குன்றல் இனிது' என்றார். (க)

812 உறினட் டறிவொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை - தமக்குப் பயனுண்டானபோது உறவாடிப் பயனில்லாத போது நீங்கிவிடும் ஒப்பிலாரது நட்பினை, பெறினும் இழப் பினும் என் - பெற்றால் உண்டாகும் நன்மை என்ன? இழந்தால் உண்டாகும் தீமை என்ன?

தமக்கு வருவதையே பார்ப்பவர் பிறரோடு பொருத்தமில்லாராகையால் ஒப்பிலார் என்றார். குறள் 800 பார்க்க. அவரை நொதுமலராகவே கொள்ளவேண் டும். (உ)

813 உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

உறுவது சீர்தூக்கும் நட்பும் - நட்பின் அளவைப் பாராது அந்நட்பால் வரும் பயனின் அளவைப் பார்க்கும் நண்பரும், பெறுவது கொள்வாரும் - கொடுப்பாரைக் கொள்ளாது அவர் கொடுக்கும் பொருளைக் கொள் ளும் பொதுமகளிரும், கள்வரும் - பிறர் கேடு நோக்காது அவர் சோர்வு நோக்கும் கள்வரும், நேர் - தம்முளொப்பர்.

கொடுக்கும் பொருள் - விலை. இதனாலேயே கணி கையர்களுக்கு (தாசிகள்) விலைமாதர் என்ற பெயர் வந்

தது. தீநட்பினர் பொருளையே குறித்து வஞ்சித்து ஒழுகலின், விலைமாதர் கள்வரோ டொப்பாயினர். (௩)

814 அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

அமர் அகத்து ஆற்று அறுக்கும் கல்லாமா அன்னார் தமரில் - போர்வராத முன்னெல்லாம் தாங்கிப் போர்க்களத்தில் வீழ்த்திச் செல்லும் அறிவில்லாத குதிரையைப் பொன்றாரது நட்பைக் காட்டிலும், தனிமை தலை - தனிமையே சிறந்ததாகும்.

துன்பம் இல்லாத போது உடனிருந்து, துன்பம் வந்தபோது விட்டுச் செல்வார் என்பதாம். அவர் நட்பானல் வருங்கேடு தனியானல் வாராமையால் தனிமையைத் தலை என்றார். (௪)

815 செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று.

செய்து ஏமம் சாராச் சிறியவர் புன் கேண்மை - நட்புச் செய்து வைப்பினும் தனக்குப் பாதுகாவலாகாத கீழ்மக்களது தீநட்பு, எய்தலின் எய்தாமை நன்று - ஒருவனுக்கு உண்டாதலைக் காட்டிலும் உண்டாகா திருத்தல் நல்லது.

ஏமம் - பாதுகாப்பு. ஏமம்சாராத கேண்மை என்க. ஒருவர்க் கொருவர் உதவியாவதற்காகக் கொள்வது நட்பு. அதற்காகக் கொண்டும், துன்பம் வந்தபோது உதவியாகாதவர் நட்பைப் பெறுவதினும் பெறுமையே நல்லது. (௫)

816 பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும்.

பேதை பெருங்கெழீஇ நட்பின் - அறிவில்லாதவனது மிகச் செறிந்த நட்பைக் காட்டிலும், அறிவுடையார்

ஏதின்மை கோடி உறும் - அறிவுடையாரது பகைமை கோடிமடங்கு நல்லது.

கெழீஇ - கெழுமிய - செறிந்த, பொருந்திய. கோடி - மிகப்பல. அறிவுடையார் பகை ஒரு தீங்கும் தராது; பேதையார் நட்பு எல்லாத் தீங்குந்தரும். (சு)

817 நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

நகைவகையர் ஆகிய நட்பின் - அறிவுவகையராகாது நகைவகையாரோடு கொண்ட நட்பினால் வரும் இன்பங்களைவிட, பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் - பகைவரால் வருந்துன்பங்கள் பத்துக்கோடி மடங்கு நல்லனவாகும்.

நட்பு - நட்பினால்வரும் இன்பத்தை யுணர்த்திற்று. நகைவகையர் - நகைச்சுவையாளர், கழைக்கூத்தர், மாயவித்தைக்காரர் போன்றார். இவர் பலவகையாக மக்களை மகிழ்வித்துப் பொருள் கொண்டு வாழ்பவர். அவ்வாறே தம் நண்பனை மகிழ்வித்துப் பொருள்பறித்து வாழும் தீநட்பினரை 'நகைவகையர்' என்றார். தீநட்பினர், நட்பை விரும்பாது பொருளை விரும்பி நட்பினராயிருப்பவர். (எ)

818 ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை - தம்மால் முடியுங் காரியத்தை முடியாததாக நடிப்பவரோடு கொண்ட நட்பினை, சொல்லாடார் சோரவிடல் - அவரறியச் சொல்லாமலே நழுவ விட்டுவிட வேண்டும்.

சோரவிடல் - விடுவது ஒருநாளைக் கொருநாள் நழுவ விடுதல். அறியச் சொல்லினும், விடுவது தெரியினும் அப்

போது அத்தவற்றைவிட்டுப் பின்னும் நட்பாயொழுகக் கருதுவாராகலின், அறியாமல் நழுவவிடுக என்றார். (அ)

819 கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு - வினையும் சொல்லும் பொருந்தாது வெவ்வேறாக இருப்பவர் நட்பானது, கனவினும் இன்னாது - கனவிலும் துன்பந் தருவதாகும்.

மன் ஒ - அசை. வினைவேறு சொல்வேறு - செயலிற் பகைவராயும் சொல்லில் நண்பராயும் இருத்தல். நண்பரைப் போல் பேசித் தீங்கு செய்பவர். (கூ)

820 எனைத்துங் குறுகுத லோம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

மனைக் கெழீஇ மன்றில் பழிப்பார் தொடர்பு - தனியாக வீட்டில் இருந்தபோது நட்புப்பாராட்டிப் பலர் முன்னிலையில் பழித்துப் பேசுவாரது நட்பினை, எனைத்தும் குறுகுதல் ஓம்பல் - கொஞ்சங்கூடத் தம்மை அணுகுதலை நீக்குக. அந் நட்பைக் கொஞ்சமுங் கொள்ளக் கூடாது.

கெழீஇ - கெழுமி - பொருந்தி. மன்று - அவை. மனையில் புகழ்ந்து மன்றில் இகழ்வோர் ஒருபோதும் தம்மை அணையாவகை எச்சரிக்கையாகக் காக்கவேண்டும். (ய)

332

## 83 கூடாநட்பு

மனத்தால் கூடாமல் புறத்தால் கூடி ஒழுகுவார் நட்பின் தன்மை. உள்ளுக்கு நட்பாகாமல் தமது காரியம் ஆகுமட்டும் வெளிக்கு நட்டார்போல் நடித்தல்.

821 சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

நேரா நிரந்தவர் நட்பு - மனத்தால் கூடாதிருந்தே தமக்கு வாய்ப்புக் கிடைக்கும் வரையில் கூடியிருப்பவர் நட்பானது, சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை - வாய்ப்புக் கிடைத்தால் இரும்பு முதலியவற்றைத் துண்டாக வெட்டுதற்குத் துணை செய்யும் பட்டடைக்கு ஒப்பாகும்.

நேரா - நேராது. எதிர்மறை வினையெச்சம். நேர்தல்- பொருந்துதல். நிரத்தல் - கலத்தல், பொருந்துதல். சீரிடம். வாய்த்த இடம். காரியம் கைகூடும் நேரம். பட்டடை- கொல்லம் பட்டறையில் காய்ச்சிய இரும்பை அடிக்கவும், துண்டாக வெட்டவும் தாங்கலாய் இருக்கும் பட்டடைக் கல். இரும்பை வெட்டும்வேளை வரும்வரை தாங்குவது போன்றிருந்து, அவ்வேளை வந்ததும் துண்டாக வெட்ட உதவும் பட்டடைக்கல்போல, காரியம் கைகூடும் வரை நண்பர்போல் நடித்துக் காரியம் கைகூடினதும் கேடு செய்யும் நட்பினைப் பட்டடையாகக் கூறினர். இது இப்போது பட்டறையென வழங்குகிறது. (க)

822 இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

இனம் போன்று இனமல்லார் கேண்மை - நட்பினர் போன்று நட்பில்லாதவருடைய நட்பானது, மகளிர் மனம் போல வேறு படும் - பொதுமகளிர் மனம் போல வேறு படும்.

பொதுமகளிர் மனம் அன்பின்றிப் பொருளையே நாடிப் பொருள் தீர்ந்தால் அவனைப் புறக்கணிப்பது போன்றதே இவர் நட்பும். (உ)

823 பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது.

நல்ல பல கற்றக் கடைத்தும் - நல்ல நூல்கள் பல வற்றைக் கற்ற போதிலும், மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது - அதனால் மனந்திருந்தி நண்பராகுதல் பகைவர்க்கு இல்லை,

மனம் நல்லராகுதல் - செற்றம் நீங்குதல். செற்றம் - தணியாச் சினம். உள்ளே செற்ற முடையாரைக் கல்வி யுடைமை பற்றி நட்பென்று கருதக்கூடாது. மாணார் - பகைவர். (ந)

824 முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

முகத்தின் இனிய நகா அகத்து இன்னா வஞ்சரை - கண்டபொழுது முகத்தால் இனிமையாகச் சிரித்து எப் பொழுதும் மனத்தால் கேடு செய்ய நினைக்கும் வஞ்சகர் களை, அஞ்சப்படும் - அஞ்ச வேண்டும்.

முகத்தால் - முகமலர்ந்து. நகா - நக்கு. இன்னா வஞ்சர் - இன்னாதன செய்ய எண்ணும் வஞ்சர். (ச)

825 மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

மனத்தின் அமையாதவரை - மனத்தால் தம்மொடு பொருந்தாதவர்களை, சொல்லினால் எனைத் தொன்றும் தேறற்பாற்று அன்று - அவர் சொல்லைக் கொண்டு யாதொரு செயலினும் தெளிதற்பால தன்று.

அவர் வஞ்சனைச் சொல்லை உண்மையான சொல்லென எண்ணி ஒரு காரியஞ் செய்ய அமர்த்தக் கூடாது. (௫)

826 நட்டார்போனல்லவை சொல்லினுமொட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும்.

நட்டார் போல் நல்லவை சொல்லினும் - நண்பர்போல நல்லவைகளைச் சொன்னாராயினும், ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும் - பகைவர் சொல்லும் சொற்கள் நன்மை தராமை விரைவில் அறியப்படும். தீமை தரும் என்பதாம்.

827 சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்
தீங்கு குறித்தமை யான். [வணக்கம்

வில்வணக்கம் தீங்கு குறித்தமையான் - வில்லினது வணக்கம் தீமை செய்தலைக் குறித்தமையால், ஒன்னார் கண் சொல் வணக்கம் கொள்ளற்க - பகைவரிடத்தி லிருந்து பிறக்கும் சொல்லினது வணக்கத்தையும் நமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கொள்ளா தொழிக.

வில் வணக்கம் - வில்லினது வளைவு. சொல்வணக்கம்- வணக்கமாகச் சொல்லும் சொல். வணக்கம் - தாழ்வு, பணிவு. வணங்கும் குறிப் பொப்புமை பற்றிக் கூறினார். வல்லியது குறிப்பு அவனால் வளைக்கப்படும் வில்வணக்கத் தின் மேல் நிற்பது போல, பகைவர் குறிப்பும் அவரால் சொல்லப்படும் சொல்வணக்கத்தின் மேல் நின்றது. பகைவர் சொல்லும் வணக்கச் சொல்லும் வில் வணக்கம்போல் தீமை குறித்த தென்று கொண்டு அச்சொல்லை நம்பக் கூடாது. (எ)

828 தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்து.

ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் - பகைவர்களது வணங்கும் கையினுள்ளும் படைக்கலம்

மறைந்திருக்கும்; அழுத கண்ணீரும் அனைத்து - அவர் அழுத கண்ணீரும் அவ்வாறே அப்படை மறைந்திருக்கும் இடமாகும்.

பகைவர் தாம் நண்பர் என்பதனைத் தம் கையால் தொழுதும், கண்ணால் அழுதும் காட்டிப் பின் கொல்லு தற்கு எடுக்கும் படைக்கலம் ஆராய்ந்தறியின் தொழுதும் அழுதும் காட்டும் அச் செயல்களிலேயே தோன்றும் என்பார் 'ஒடுங்கும்' என்றார். உலகம் போற்றும் உயர்ந் தோன் காந்தியடிகளைத் தொழுத கோட்சேயின் கையே வெடியைக் கொண்டு அடிகளைச் சுட்டுக் கொன்றது இதற்கு எடுத்துக் காட்டாகும். பகைவர் தம் எளிமை காட்டித் தொழினும் அழினும் அச் செயலால் அவரை நம்பாது குறிப்பையே நோக்கி எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். (அ)

829 மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

மிகச்செய்து தம் எள்ளுவாரை - பகைமை தோன்றாமல் புறத்தே நட்பினை மிகச்செய்து அகத்தே தம்மை இகழும் பகைவரை, நட்பினுள் நகச் செய்து சாப் புல்லல் பாற்று - தாமும் அவ்வாறே புறத்தே அந்நட்பினை மிகச் செய்து அகத்தே அது சாகும்படி பொருந்தும் பான்மை உடையது முறையாகும்.

புறத்தே நட்பினை மிகச்செய்தல் - வெளிக்கு நட்புடையவர்போல் நடித்தல். சாகும்படி பொருந்துதல் - அந்நட்பை அறவே நீக்கிவிடுதல். உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவற்குத் தகா தெனினும், பகைவரிடத் தாயின் தகுமென்பது அரசியல் முறை. எள்ளுவாரைப் புல்லல் எனக் கூட்டுக. நட்பினுள் நகச்செய்தல் - புறத்தே செய்யும் நட்பைக் கண்டு மகிழும்படி செய்தல். (கூ)

830 பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

*பகை நட்பாம் காலம் வருங்கால் - தம் பகைவர் தமக்கு நண்பராக நடக்கும் காலம் வந்தால், முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇவிடல் - தாமும் அவரோடு முகத்தால் நட்புச் செய்து அகத்தால் அந்நட்பை விலக்கிப் பின் அம்முக நட்பையும் விட்டு விடவேண்டும்.*

*அக்காலமாவது - பகைவரென்று வெளிப்படையாக விலக்க முடியாமல் நடந்துகொள்ளுங் காலம். அக்காலத்தே முகம் நட்டு அகம் விட்டுப் பின் நாளடைவில் விலக்கி விடவேண்டும் என்பதாம்.* (ய)

## 84 பேதைமை

*யாதும் அறியாமை; அறிவு சிறிது மின்மை.*

831 பேதைமை யென்பதொன்றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

பேதைமை என்பது ஒன்று யாதெனின் - *அறியாமை* யென்று சொல்லப்படுவது ஒன்று எது வென்றால், ஏதம் கொண்டு ஊதியம் போக விடல் - *அது குற்றந்தருவன வற்றைக் கொண்டு நன்மை தருவனவற்றைக் கைவிடுதல்.* (க)

832 பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

பேதைமையுள் எவ்லாம் பேதைமை - ஒருவனுக்கு *அறியாமைகளிலெல்லாம் மிக்க அறியாமை யாவது,* கை அல்ல தன்கண் காதன்மை செய்தல் - *தனக்காகாத ஒழுக்கத்தின் கண் விருப்பங்கொள்ளுதல்.* காதன்மை - *காதல், விருப்பம்.* கை - *ஒழுக்கம்.* (உ)

833 நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

நாணாமை - நாண வேண்டியவற்றுக்கு நாணாமையும், நாடாமை - ஆராய வேண்டியவற்றை ஆராயாமையும், நார் இன்மை - அன்பின்மையும், யாதொன்றும் பேணாமை - போற்ற வேண்டியவற்றுள் ஒன்றையும் போற்றாமையும், பேதை தொழில் - அறிவில்லாதவனுடைய தொழில்களாகும்.

நாணம் - வெட்கம். பிறரால் பழிக்கப்படும் கெட்ட காரியங்களைச் செய்ய வெட்கப்படுதல். ஆராய வேண்டியவை - நல்லவை, கெட்டவை. போற்ற வேண்டியவை - கல்வி, ஒழுக்க முதலியன. (௩)

834 ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

ஓதி உணர்ந்தும் - நூல்களைக் கற்றறிந்தும், பிறர்க்கு உரைத்தும் - அவற்றைப் பிறர்க்குச் சொல்லியும், தான் அடங்காப் பேதையின் - தான் அடங்கி நடவாத அறிவில்லாதவனைப் போல, பேதையார் இல் - அறிவில்லாதவன் உலகத்தில் இல்லை. (௪)

835 ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

பேதை - அறிவில்லாதவன், எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு - ஏழிடங்களில் தான் புகுந்து அழுந்திக் கிடக்கும் பெருந்துன்பத்தை, ஒருமைச் செயல் ஆற்றும் - ஓரிடத்திலேயே செய்து கொள்ள வல்லவனாவான்.

எழுமை - பல என்னும் பொருளது. முகவுரை பார்க்க. அளறு - பெருந்துன்பம். 255ஆம் குறளுரை

பார்க்க. பல இடங்களில் படுந்துன்பங்களை ஓரிடத்தி லேயே படுவானென்பது. (ரு)

836 பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

கை அறியாப் பேதை வினைமேற்கோளின் - செய்யும் முறையறியாத அறிவில்லாதவன் ஒரு தொழிலை மேற் கொள்வானாயின், பொய்படும் ஒன்றோ புனைபூணும் - அத் தொழிலும் கெடும் தானும் தளைபூணுவான்.

பொய்படும் - கெடும். ஒன்றோ - எண்ணிடைச்சொல். தளை - விலங்கு. தொழிலையுங் கெடுத்துத் தானுங் கெடுவான். (சா)

837 ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

பேதை பெருஞ் செல்வம் உற்றக் கடை - அறிவில் லாதவன் பெரிய செல்வத்தை அடைந்தவிடத்து, ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர் - அயலார் உண்ணச் சுற்றத்தார் பசித்து நிற்பர்.

ஆர என்றது - அயலார் எல்லாம் பெறுவ ரென்பது. அறிவிலார் செல்வம் தம்மவருக்குப் பயன்படாது. (எ)

838 மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

பேதை தன்கை ஒன்று உடைமை பெறின் - அறிவில் லாதவன் தன்கையில் ஒரு பொருளை உடைமையாகப் பெற்றால், மையல் ஒருவன் களித்தற்று - அது இயற்கை யாகவே மயக்க முடையான் ஒருவன் மேலும் கள்ளுண்டு களித்தாற்போன்றது.

அறிவின்மைக்கு மயக்கமும், செல்வக்களிப்புக்குக் கள்ளுண்டகளிப்பும் உவமை. அவன் செய்வன தலைதடு மாற்றமாயிருக்கும். (அ)

839 பேரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல் - பிரிய நேர்ந்தபோது பிரியும் இருவர்க்கும் தருவதாகிய துன்பம் ஒன்றில்லை; பேதையார் கேண்மை பெரிது இனிது - ஆதலால், அறிவிலாதார் ஒருவர்க் கொருவர் செய்து கொள்ளும் நட்பானது மிகவும் நல்லது.

பீழை - துன்பம். நாடோறும் தேய்ந்து வருதலின் துன்பந்தராதாயிற்று. இது புகழ்வது போலப் பழித்தது. (கூ)

840 கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

சான்றோர் குழாத்துப் பேதை புகல் - சான்றோரது அவையின்கண் அறிவில்லாதவன் புகுதல், கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று - கழுவாத காலைப் படுக்கையின் மேல் வைத்தாற் போலும்.

குழாம் - கூட்டம். கழாத கால். கழுவாத கால் - மல மிதித்தகால் (இடக்கரடக்கல்). அதனால் அப்படுக்கை இழிவு படுவது போல, பேதையால் சான்றோர் கூட்டம் இழிவுபடும். (ம)

## 85 புல்லறிவாண்மை

புல்லிய அறிவினை ஆளுந் தன்மை என விரியும். அதாவது-தான் சிற்றறிவுடையனாக இருந்தும் தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற் கொள்ளாமை.

841 அறிவின்மை யின்மையு ளின்மை; பிறிதின்மை
இன்மையா வையா துலகு.

இன்மையுள் இன்மை அறிவின்மை - வறுமையுள் மிக்க வறுமையாவது அறிவில்லாமையாகும்; பிறிதின்மை இன்மையா வையாது உலகு-ஏனைப் பொருளில்லாமையை வறுமையாகக் கொள்ளமாட்டார் உலகத்தார்.

அறிவு என்றது - நல்லறிவை. புல்லறிவாளர் செல்வம் பெறினும் பிறர்க்குப் பயன்பட வாழாமையால் அறிவின்மையை இன்மையுள் இன்மையென்றும், நல்லறிவாளர் வறுமை யுறினும் பிறர்க்குப் பயன்பட வாழ்வாராகையால் அதனை இன்மையா வையா தென்றுங் கூறினார். (க)

842 அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் தவம்.

அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் - புல்லறிவுடையான் மனமுவந்து ஒருபொருளை ஒருவனுக்குக் கொடுத்தற்குக் காரணம், பிறிது யாதும் இல்லை - வேறொன்றும் இல்லை; பெறுவான் தவம் - அது பெறுகின்றவனுடைய தவமே யாகும்.

தவம் - நற்செயல். அவன் மனமுவந்து கொடுப்பது இவன் நற்செய லென்பதல்லாமல் அவன் ஒருபோதும் மனமுவந்து கொடானென்பதாம். (உ)

843 அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை - புல்லறிவாளர் தாமே தம்மைத் துன்பப்படுத்திக் கொள்ளும் துன்பமானது, செறுவார்க்கும் செய்தல் அரிது - அத்துன்பஞ் செய்வதற்குரிய பகைவருக்கும் அரிது.

பகைவர் தாம் குறித்த ஒன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது புல்லறிவாளர் போல வறுமை, பழி முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்யமாட்டாமையின் பகைவர்க்கும் செய்த லரிதென்றார். (௩)

844 வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
உடையம்யா மென்னுஞ் செருக்கு.

வெண்மை எனப்படுவது யாது எனின் - புல்லறிவுடைமை என்று சொல்லப்படுவது எதுவென்றால், யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு - தம்மைத் தாமே யாம் நல்லறிவுடையோம் என்று சொல்லிக் கொள்ளும் மயக்கமாம்.

வெண்மை - அறிவு முதிராமை. தம்மைத் தாமே நல்லறிவுடையோம் என்று நன்குமதித்துக்கொள்ளும் மயக்கமே புல்லறிவுடைமை யாகும். (௪)

845 கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

கல்லாத மேற்கொண்டு ஒழுகல்-புல்லறிவாளர் தாம் கல்லாதனவற்றையும் கற்றவர் போலக் காட்டிக்கொண்டு நடத்தலானது, கசடு அற வல்லதும் ஐயம் தரும்-குற்றமறக் கற்ற நூலிடத்தும் பிறர்க்கு ஐயத்தை உண்டாக்கும்.

புல்லறிவாளர் ஒரு நூலில் தாம் வல்லரெனக் கூறிக்கொண்டு பிழைபடக் கூறுவதால் அந்நூலைக் கற்றவர்க்கு

ஐயம் உண்டாவதாயிற்று. அவர் கூறுவதுதான் சரியோ, நாம் எண்ணுவது தப்போ? என்று ஐயம் உண்டாகும். (ரு)

846 அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

*தம்வயின் குற்றம் மறையாவழி* - புல்லறிவாளர் தம்மிடம் உள்ள குற்றங்களை நீக்காராயின், *அற்றம் மறைத்தலோ புல்லறிவு* - ஆடையால் மறைத்தற்குரிய உறுப்பை மறைத்தவராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாகும்.

குற்றம் மறைத்தல் - குற்றம் இல்லாமல் செய்தல். புல்லறிவாளர் குற்றமே உருவானவராகையால், அற்றம் மறைக்காவிடினும் குற்றம் நாடுவார் இல்லை என்பதாம். அற்றம் மறைத்தல் - இடக்கரடக்கல். (சா)

847 அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

*அருமறை சோரும் அறிவிலான்* - அரிய மறை பொருள்களை வெளியிடும் புல்லறிவாளன், *தானே தனக்குப் பெரு மிறை செய்யும்* - தனே தனக்குப் பெரிய துன்பத்தைச் செய்துகொள்வான்.

அருமறை - வெளியிடக் கூடாத மறை பொருள் (இரகசியம்). மிறை - துன்பம். வெளியிடக் கூடாதவற்றை வெளியிட்டுப் பிறரால் துன்பந்தேடிக் கொள்வதால் தானே தனக்குப் பெருமிறை செய்தவனாகிறான். (எ)

848 ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

*ஏவவும் செய்கலான்*-புல்லறிவாளன் தனக்கு உறுதி யாயினவற்றை அறிவுடையோர் செய்யென்று சொன்னாலும் செய்யமாட்டான், *தான் தேறான்* - அதுவன்றித்

தானாகவும் இவை நல்லவை என்று அறியமாட்டான், அவ்வுயிர் போமளவும் ஓர் நோய் - அவன் சாகுமட்டும் உலகிற்கு ஒரு நோய்போலவான்.

சொற்பேச்சுங் கேளான், தானும் அறியான் எனப் பழிப்பதற்காக 'உயிர்' என அஃறிணையால் கூறினார். தன் புல்லறிவினால் தீங்கே செய்வதால் 'நோய்' என்றார். உறுதியாயின - நல்லவை. (அ)

849 காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

காணாதான் காட்டுவான் தான் காணான் - தன்னை எல்லா மறிந்தவனாக மதித்தலால், ஒன்று மறியாத புல்லறிவாளனுக்கு ஒன்றை அறிவிக்கப் புகுந்தவன் அவனால் பழிக்கப் பட்டுத் தான் அறியாதவனாவான்; காணாதான் தான் கண்டவாறு கண்டானாம் - இனி, அவ்வறியுந் தன்மை யில்லாதவன் கொண்டது விடாமையால், தான் அறிந்த வாற்றால் அதனை அறிந்தவனாவான்.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு புகட்டுதல் எவ்வகையினும் முடியாது. தானறிந்த வாற்றால் அறிந்தவனாதல்- ஒன்று மறியாதவனாதல். சொற்பொருட் பின்வரு நிலையணி. (கூ)

850 உலகத்தா ருண்டேன்ப தில்லேன்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் - உயர்ந்தோர் பலரும் உண்டென்பதை இல்லையென்று சொல்லும் புல்லறிவாளன், வையத்து அலகையா வைக்கப்படும்-இவ்வுலகத்தின் கண்ணே திரியும் பேய் என்று எண்ணப்படுவான்.

உலகத்தார் உண்டென்பதை இல்லையென்பது புல்லறிவாளர் தன்மை. அலகை - பேய் - பேய் அச்சத்தா

அவர் வஞ்சனைச் சொல்லை உண்மையான சொல்லென எண்ணி ஒரு காரியஞ் செய்ய அமர்த்தக் கூடாது. (ரு)

826 நட்டார்போனல்லவை சொல்லினுமொட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும்.

நாடார் போல் நல்லவை சொல்லினும் - நண்பர்போல நல்லவைகளைச் சொன்னாராயினும், ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும் - பகைவர் சொல்லும் சொற்கள் நன்மை தராமை விரைவில் அறியப்படும். தீமை தரும் என்பதாம்.

827 சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்
தீங்கு குறித்தமை யான். [வணக்கம்

வில்வணக்கம் தீங்கு குறித்தமையான் - வில்லினது வணக்கம் தீமை செய்தலைக் குறித்தமையால், ஒன்னார்கண் சொல் வணக்கம் கொள்ளற்க - பகைவரிடத்திலிருந்து பிறக்கும் சொல்லினது வணக்கத்தையும் நமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கொள்ளாதொழிக.

வில் வணக்கம் - வில்லினது வளைவு. சொல்வணக்கம்- வணக்கமாகச் சொல்லும் சொல். வணக்கம் - தாழ்வு, பணிவு. வணங்கும் குறிப் பொப்புமை பற்றிக் கூறினர். வல்லியது குறிப்பு அவனால் வளைக்கப்படும் வில்வணக்கத்தின் மேல் நிற்பது போல, பகைவர் குறிப்பும் அவரால் சொல்லப்படும் சொல்வணக்கத்தின் மேல் நின்றது. பகைவர் சொல்லும் வணக்கச் சொல்லும் வில் வணக்கம்போல் தீமை குறித்த தென்று கொண்டு அச் சொல்லை நம்பக் கூடாது. (எ)

828 தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்து.

ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் - பகைவர்களது வணங்கும் கையினுள்ளும் படைக்கலம்

பற்று - விருப்பம். பற்ருத - வெறுப்பன. பற்ருத - பலவின்பால் வினையாலணையும் பெயர். பற்றிலாத என்பது பொருள். (உ)

853 இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

இகல் என்னும் எவ்வம் நோய் நீக்கின் - மாறுபாடு என்னும் துன்பந்தருகின்ற நோயை ஒருவன் தன் மனத்திலிருந்து நீக்குவாஞயின், தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும் - அவனுக்கு அந்நீக்கம் எப்போதும் அழிவில்லாத குற்றமற்ற புகழைத்தரும்.

எவ்வம் - துன்பம். தவல்-கேடு. தாஇல்-தா-குற்றம். விளக்கம் - புகழ். மாறுபாட்டுக் குணம் நீங்கிஞல் யாவரும் நண்பராவர். அதஞல் பெருஞ் செல்வஞகிப் புகழுடைவான். (ந)

854 இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் - மாறுபாடு என்னும் துன்பங்களுக்கெல்லாம் மிக்க துன்பம் ஒருவனுக்கு இல்லையாயின், இன்பத்துள் இன்பம் பயக்கும் - அது அவனுக்கு இன்பங்களி லெல்லாம் மிக்க இன்பத்தைக் கொடுக்கும்.

மாறுபாடில்லாதவனுக்கு யாவரும்நட்பாவராதலின் இன்புறுவான். (ச)

855 இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - மாறுபாட்டை ஏற்றுக்கொள்ளாமல் நடக்கவல்லாரை, மிகல்

ஊக்கும் தன்மையவர் யார்-வெல்லக் கருதும் தன்மை யுடையவர் யார்? ஒருவருமில்லை.

எதிர்சாய்தல் - ஏற்றுக் கொள்ளாமை. எல்லோரும் உறவாவதால் பகை இல்லை என்பதாம். மிகல் - வெற்றி. மிகல்ஊக்கல் - வெல்ல முயலுதல். (ரு)

856 இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை - பிறரோடு மாறுபடுதலில் மிகுதல் எனக்கு இனிது என்பவனுடைய வாழ்க்கையானது, தவலும் கெடலும் நணித்து- வறுமையால் துன்பமடைதலும் முழுதும் கெடுதலும் விரைவில் உண்டாகும்.

இகலின் மிகல்-மிகுந்த மாறுபாடுடையனாதல். முழுதும் கெடுதல்-இறத்தல். மிகுந்த மாறுபாட்டைப் பெருக்கிக்கொண்டே போகிறவன் வறுமையால் துன்புற்று முடிவில் இறந்துவிடுவான். பகைவரால் கெடுவான் என்றுமாம். (சு)

857 மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவல்
இன்னா வறிவி னவர்.

இகல் மேவல் இன்னா அறிவினவர் - மாறுபாடு பொருந்துதலையுடைய இன்னாத அறிவினையுடையவர், மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார்-வெற்றி பொருந்துதலையுடைய உண்மைப் பொருளை அறியமாட்டார்.

இன்னாத அறிவு-தமக்கும் பிறர்க்கும் தீங்கு தரும் அறிவு. வெற்றி பொருந்தும் உண்மைப்பொருள் -வெற்றியடைதற்கான உண்மை வழி. மேவுதல்-பொருந்துதல். மாறுபாடுகொண்ட அறிவினையுடையார் வாழ்க்கையில் வெற்றியடையும் வழியை அறியமாட்டார். (எ)

858 இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம்-மாறுபாட்டை ஏற்றுக்கொள்ளாமை ஒருவனுக்கு ஆக்கமாகும், அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம்-மாறுபாட்டில் மிகுதலை மேற்கொள்ளின் கேடு மிகும்.

ஆக்கம்-செல்வம். மாறுபாட்டில் மிகுதல்-மாறுபாடுடையவனாதல். (அ)

859 இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

ஆக்கம் வருங்கால் இகல் காணான் - ஒருவன் தனக்கு ஆக்கம் வரும்போது மாறுபாட்டை நினையான், கேடு தரற்கு அதனை மிகல் காணும்-தனக்குக் கேடு செய்து கொள்ளும்போது அவ்விகலை மிகுதியாக நினைப்பான்.

கேடு செய்து கொள்ளல்-கேடு தேடிக் கொள்ளல். மாறுபாடின்மையால் செல்வமும், மாறுபாட்டினால் வறுமையும் உண்டாகும். (கூ)

860 இகலானா மின்னாத வெல்லா நகலானாம்
நன்னய மென்னுஞ் செருக்கு.

இகலான் இன்னாத எல்லாம் ஆம்-மாறுபாட்டினால் இன்னாதனவெல்லாம் உண்டாகும், நகலான் நல்நயம் என்னும் செருக்கு ஆம்-நட்பால் நல்லறம் என்னும் பெருஞ் செல்வம் உண்டாகும்.

இன்னாதன - துன்பந் தருவன. இகல் துன்பந் தரும். இகலின்மை இன்பந் தரும். பகைக்குணத்தால் துன்பமும், நட்புக்குணத்தால் இன்பமும் உண்டாகும் என்பதாம். (ய)

# 87 பகைமாட்சி

பகை மாட்சி - பகைவனது மாட்சி. மாட்சி-நன்மை தனக்கு நன்மையாகும் பகையை ஏற்றுக்கொள்ளுதல். நன்மை - வெற்றி. பிறரால் எளிதில் வெல்லற்குரியவனது இலக்கணம் இதில் கூறுகின்றார். அதாவது பகைவர் எளிதில் வெல்லும் நிலைமையுடையவன் தன்மை. அத்தகையவனை அறிந்து, அவன்மேல் செல்லவேண்டும் என்பதாம்.

861 வலியார்க்கு மாறேற்ற லோம்புக ; வோம்பா
மெலியார்மேல் மேக பகை.

வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக - தம்மினும் வலியார்க்குப் பகையாகி அவர்களை எதிர்த்தலை ஒழிக; மெலியார்மேல் பகை ஓம்பாமேக - தம்மினும் மெலியார்மீது பகையாகி எதிர்த்தலை ஒழியாது விரும்புக.

ஒழியாது - ஈறு கெட்டது. மேவுக - இடைக்குறை. வலியார் என்னுமிடத்துத் துணைவலியும் அடங்கலின், மெலியார் என்னுமிடத்துத் துணைவலி இன்மையும் கொள்ளப்படும். மெலியார்பகை வெற்றி தருவதால் விடாது கொள்ளவேண்டுமென்பதாம். (க)

862 அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு.

அன்பு இலன் - ஒருவன் தன் சுற்றத்தின்மேல் அன்பில்லாதவன், ஆன்ற துணை இலன் - அதுவேயன்றி வலிய துணையில்லாதவன், தான் துவ்வான் - தானும் வலியில்லாதவன், ஏதிலான் துப்பு என்பரியும் - இத்தகையவன், தன்மேல் வந்த பகைவன் வலியினை எவ்வாறு தொலைப்பான் ?

துவ்வுதல் - வலியுறுதல். துப்பு - வலி. பரிதல் - அழித்தல். சுற்றமும் துணையும் வலியும் இல்லான்மேல் செல்வார்க்கு வலி வளருமென்பதாம். (உ)

863 அஞ்சு மறியா னமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு.

அஞ்சும் - ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சுவான், அறியான் - அறிய வேண்டியவற்றை அறியான், அமைவு இலன் - பிறரோடு பொருத்தமில்லாதவன், ஈகலான் - பிறர்க்கு ஒன்றும் கொடாதவன், பகைக்குத் தஞ்சம் எளியன் - இப்படிப்பட்டவன் பகைவர்க்கு மிகவும் எளியவனாவான்.

தஞ்சம் - எளிமை. தஞ்சம் எளியன் - ஒரு பொருட் பன்மொழி. (ந)

864 நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

வெகுளி நீங்கான் - ஒருவன் வெகுளி நீங்கானாய், நிறை இலன் - பிறரறியாமல் மனத்தில் மறைத்து வைக்க வேண்டிய தொன்றை மறைத்து வையாதவனை, எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது - அவனை வெல்லுதல் எப்போதும் எவ்விடத்தும் யார்க்கும் எளிதாகும்.

வெகுளுந் தன்மையும் மறை வெளிப்படுத்தலும் உடையனுதலால், காலமும் இடமும் வலியும் ஆராய்ந்தறியாமல் எளிதில் மேற்சென்று வெல்லலாமென்பதாயிற்று. (ச)

865 வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

வழி நோக்கான் - ஒருவன் பின் வருவனவற்றை எண்ணிப் பாரான், வாய்ப்பன செய்யான் - வெல்வதற்கு

வேண்டியவற்றைச்செய்துகொள்ளான், பழி நோக்கான்- தனக்கு வரும் பழியையும் பாரான், பண்பு இலன் - நற்குணமில்லாதவன், மற்றூர்க்கு இனிது - அவன் பகைவர்க்கு அப்பகை இனியதாகும்.

இக்குற்றங்களுடையான் தானே யழிதலால், பகைவர்க்கு இனிதென்றூர். (ரு)

866 காணச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணமை பேணப் படும்.

காணச் சினத்தான் - ஒன்றையும் பாராத வெகுளியை உடையவனும், கழி பெருங் காமத்தான் - மிகப் பெரிய ஆசையையுடையவனும் ஆகியவனது, பேணமை பேணப்படும் - பகைமை விரும்பிக் கொள்ளப் படும்.

ஒன்றையும் பாரத வெகுளி - எதையும் எண்ணிப் பார்க்க முடியாத, தணியாத கடுஞ்சினம். காணத - ஈறு கெட்டது. கழிபெருங்காமம் - பெரும் பேராசை. முன்னவனுக்கு யாவரும் பகையாவர்; பின்னவன் ஈயாத் தன்மையால் பலரும் அவனை விட்டு நீங்குவர். ஆகையால், தானே அழிவனென்பதாம். அத்தகையோன் பகையை விரும்பி ஏற்றுக்கொள்ள வேண்டு மென்பது; வெல்லுதல் எளிதாகலின். (சு)

867 கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணத செய்வான் பகை.

அடுத்து இருந்தும் மாணத செய்வான் பகை - பகையை உற்றிருந்தும் அப்பகை வெல்வதற் கேலாதன செய்வான் பகையை, கொடுத்தும் மன்ற கொளல் வேண்டும் - சில பொருளைக் கொடுத்தாயினும் கட்டாயங் கொள்ள வேண்டும்.

பகையை உற்றிருத்தல் - தன்மேல் வருதற்குக் காலம் பார்த்திருக்கும் பகையை உடையனுயிருத்தல். ஏலாதன - படை முதலியவற்றைப் பெருக்காமை; துணை கொள்ளாமை முதலியன. மன்ற - உறுதியாக, கட்டாயம். அவன் வலியடைவதற்குமுன் சில கொடுத்தேனும்போர்க் களத்தை அடையச் செய்து வெல்லவேண்டுமென்பதாம்.

868 குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்ருர்க்
கினனிலனு மேமாப் புடைத்து.

குணன் இலனுய் - ஒருவன் நற்குணமொன்றும் இல்லாதவனுய், குற்றம் பலவாயின் - குற்றங்கள் பல உள்ளவனுயின், இனன் இலனும் - அவன் துணை இல்லாதவனுவான்; மாற்ருர்க்கு ஏமாப்பு உடைத்து - அத்துணையின்மை அவன் பகைவர்க்குத் துணையாவதை உடையது.

குணம் - இறைமாட்சியில் சொல்லியன. குற்றம் - இவ்வதிகாரத்தில் சொல்லியனவும் பிறவும். துணை - சுற்றம், நட்பு, பொருள், படை முதலியன. (அ)

869 செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்.

அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின் - அறிவில்லாத அஞ்சுந்தன்மையுள்ள பகைவரைப் பெற்ருல், செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா - அவரை வெல்வார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்காவாம்.

இலா - இல்லாத. சேண் - உயர்வு. இக்குற்றமுடையார் எதிர்த்த பொழுதே தோற்பாராதலால் வெல்வார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா என்ருர். (கூ)

870 கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளேஞ்ஞான்று
மோல்லானை யோல்லா தொளி.

கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை - அறநூல்களைக் கல்லாதவனுடன் பகைத்தலால் வரும் எளிய

பொருளை அடையாதவனை, எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது- எப்போதும் புகழ் அடையாது.

சிறுபொருள் - சிறு முயற்சியால் வரும் பெரும் பொருள். அறநூலைக் கல்லாதானை வெல்லுதல் எளிதாயிருக்கவும் வெல்ல மாட்டாதானை வெற்றியால் வரும் புகழ் கூடாதென்பதாம். • கல்லான் பகையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதாம். சிறிய முயற்சியால் பெரிய பயன் அடைய வேண்டும். (ய)

## 88 பகைத்திறந்தெரிதல்

பகைவரிடம் நடந்து கொள்ள வேண்டிய வகையை ஆராய்ந்தறிதல். அறிந்து பகை கொள்ளாமல் இருக்க வேண்டும்.

871 பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

பகை என்னும் பண்பு இலதனை - பகையென்று சொல்லப்படும் குணமில்லாததை, ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று - ஒருவன் விளையாட்டின் கண்ணும் விரும்பற்பால தன்று.

குணமில்லாதது - குற்றம். விளையாட்டாகவும் பகையை விருமபக்கூடாது. (க)

872 வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

வில் ஏர் உழவர் பகை கொளினும் - ஒருவன் வில்லை ஏராக உடைய உழவரது பகையைக் கொள்ளினும், சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க - சொல்லை ஏராக உடைய உழவரது பகையைக் கொள்ளற்க.

வில்லேருழவர் - வீரர். சொல்லேருழவர் - அறிஞர், அறநூலை அறிந்தவர். வீரரோடு பகை கொண்டால் கேடு வருதல் தவறினும் தவறும். நுண்ணறி வுடையாரோடு பகை கொண்டால் தவறாது கெடுவதால் அது கொள்ளினும் இது கொள்ளற்க என்றார். கொள்ளினும் என்ற உம்மையால் அதுவும் கொள்ளக் கூடாமை பெறும். இவ்விருவரோடும் பகை கொள்ளக் கூடாது. உழவர் உருவகம். அறிவுடைய பகைவரோடு கட்டாயம் பகை கொள்ளக் கூடாது. (உ)

873 ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவன் - தனியனாய்ப் பலரோடு பகை கொள்பவன், ஏமுற்றவரினும் ஏழை - பித்தரைக் காட்டினும் அறிவில்லாதவனாவான்.

தனிமை - சுற்றம், நட்பு முதலிய துணையின்மை. பித்தர் பித்தினால் தீங்கடைதல் தவறினும், கட்டாயம் தீங்கடையும் துணையிலானை அவரினும் அறிவிலி என்றார். தீங்காவது - துணையுள்ளபோதே வெல்வ தரிதாயிருக்கத் துணையின்றிப் பலரோடு பகை கொண்டு அழிதல். (ங)

874 பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக் கண் - வேண்டியபோது பகையை நட்பாகச் செய்து கொண்டு வாழும் இயல்புடையவனது பெருமையினிடத்து, உலகு தங்கிற்று - இவ்வுலகம் அடங்கிற்று.

நட்பாக்கல் - பகை நிலைமையில் நீக்குதல். உலகம் அவன் ஆட்சிக்கு ளடங்கும் என்பதாம். (ச)

875 தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

தன் துணை இன்று - தனக்குதவும் துணையோ இல்லை; பகை இரண்டு - பகையோ இரண்டு; ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன் துணையாக் கொள்க - இந்நிலையில் இருக்கும் ஒருவன், அப்பகை இரண்டனுள் பொருந்திய தொன்றை தனக்கு இனிய துணையாகச் செய்து கொள்க.

பொருந்தியது - மற்றொன்றை வெல்வதற்கு ஏற்றது. ஆல் - அசை. கொள்க அவற்றின் - தொகுத்தல் விகாரம். (ரு)

876 தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

தேறினும் தேறாவிடினும் - பகைவனை முன்பு ஆராய்ந்து தெளிந்தானாயினும் தெளியானாயினும், அழிவின் கண் தேறான் பகான் விடல் - வேறொரு வினையால் தனக்குத் தாழ்வு வந்தபோது அவனைக் கூடாமலும் நீங்காமலும் நடுநிலையில் விட்டு வைக்க வேண்டும்.

முன் தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாம லிருக்க வேண்டு மென்றது - பகைவருக்கு உடந்தையாய் நின்று தன்னைக் கெடுத்தல் நோக்கி. தெளியானாயினும் அப்பொழுது நீங்காதிருக்க வேண்டு மென்றது - அத் தாழ்வுக்குத் துணையாதல் நோக்கி. இதனால், பகைவரை நொதுமல ராக்க வேண்டு மென்பது. ஒருவனோடு செய்த போரில் தோல்வி நேரின் மற்ற பகைவரிடம் இவ்வாறு நடந்து கொள்ள வேண்டு மென்பது. (சா)

877 நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

நொந்தது அறியார்க்கு நோவற்க - தான் வருத்த முற்றதை அறியாத நண்பர்க்குத் தன் வருத்தத்தைச்

சொல்லற்க; மென்மை பகைவர் அகத்து மேவற்க - வலி யின்மை பார்த்திருக்கும் பகைவரிடம் தனது வலியின்மை யைக் காட்டாதிருக்க.

நோ என்னும் முதனிலைத் தொழிற்பெயர் அதைச் சொல்லுதலை உணர்த்திற்று. பகைவரிடம் தவிர்வது கூறுவார், நண்பரிடம் தவிர்வதும் உடன் கூறினர். (எ)

878 வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

வகை அறிந்து - ஒருவன் தான் போர் செய்தற் குரிய வகையை அறிந்து, தற்செய்து - அது முடித்தற் கேற்பத் தன்னைப் பெருக்கி, தற்காப்ப - மறதி புகாமல் தன்னைக் காக்கவே, பகைவர்கண் பட்ட செருக்கு மாயும்- அவனது பகைவரிடம் உண்டான களிப்புக் கெடும்.

வகை - வலியனுனல் எதிர்த்துப் பொருதல், மெலிய னைதும் போர்விலக்கல் முதலியன. பெருக்கல் - பொருள் படைகளால் தன்னைப் பெருகச் செய்தல். இவ்வாறு செய்யவே பகைவர் மகிழ்ச்சி யொழியும். (அ)

879 இளைதாக முண்மரங் கோல்க; களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

முள்மரம் இளைதாகக் கொல்க - முள்ளையுடைய செடியை இளம் பருவத்திலேயே பிடுங்கி யெறிக; காழ்த்த இடத்துக் களையுனர் கை கொல்லும் - முற்றிய போது தன்னைப் பிடுங்குவோர் கையை வருத்தும்.

முள்மரம் - முட்செடி. முட்செடியை இளம்பருவத் தில் எளிதில் பிடுங்கி யெறியலாம்; முற்றினுல் முள் கை யைக் குத்தும். பகைவர் வலியடைவதற்கு முன்னமே வெல்ல வேண்டும்; வலியடைந்தால் நம்மை வெல்வர். என்பது தோன்ற நின்றமையால் இ.து பிறிது மொழிதல்.

880 உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

*செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார் - தம்மொடு பகைப்பவரது செருக்கினை அடக்க முடியுமாயிருந்தும் அடக்காதவர், உயிர்ப்ப உளரல்லர் - பின் மூச்சுவிடும் அளவிற்கும் உயிருடன் இருப்பவரல்லர்; விரைவில் அழிவர் என்பது பொருள்.*

*மன்ற - உறுதிகுறிக்கும் இடைச்சொல். செம்மல் - செருக்கு. பகையைக் களைய வேண்டிய காலத்துக் களையா விட்டால் தாம் அழிவர் என்பதாம்.* (ய)

## 89 உட்பகை

*உடனிருந்து கெடுக்கும் பகை. அதாவது புறப் பகைக்குத் துணை செய்து, அது வெல்லுமட்டும் நம்முடன் இருக்கும் பகைவர்.*

881 நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

*நிழல் நீரும் இன்னாத இன்னா - நிழலும் நீரும் இனியனவாய்க் காணப்படினும் அவற்றுள் நோய்களைத் தருபவை இனியவை அல்ல; தமர் நீரும் இன்னா செயின் இன்னாவாம் - அதுபோல, சுற்றத்தார் இயல்புகளும் இனிமை தருவனபோல் காணப்படினும் அவர்கள் துன்பம் செய்தால் இனியவை அல்லவாம்.*

*நோய் - பெருங்கால், பெருவயிறு, கக்கல்கழிச்சல் முதலியன. தமர் என்றதனால் உட்பகை யாதற் குரிய பங்காளிகளாம்.* (க)

882 வாள்போற் பகைவரை யஞ்சற்க ; வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.

*வாள்போல் பகைவரை அஞ்சற்க. வெளிப்படையாக வெட்டும் வாளைப் போல வெளிப்படையான பகைவரது பகையைக் கண்டு அஞ்சற்க ; கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக - உறவினரைப் போல மறைவாக நிற்கும் பகைவரது நட்பைக் கண்டு அஞ்சுக.*

*முன்னேயறிந்து காக்கப்படு மாகையால் அஞ்சற்க வென்றும், அறியவும் காக்கவும் படாமையால் கட்டாயம் கெடுக்கும் என்பது பற்றி அஞ்சுக வென்றுங் கூறினர்.* (உ)

883 உட்பகை யஞ்சித்தற் காக்க வுலேவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

*உள்பகை அஞ்சி தன் காக்க-உட்பகையானவர்களைக் கண்டு அஞ்சித் தன்னைக் காத்துக் கொள்க ; உலைவிடத்து மண்பகையின் மாணத் தெறும் - ஏனெனில், தனக்கோர் தளர்ச்சி வந்தபோது குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவிபோல அவர்கள் தப்பாமல் கெடுப்பர்.*

*காத்தல் - அவர் அணுகாமலும் அவர்க்கு உடம்படாமலும் நீக்குதல். மண்ணைப் பகுக்குங் கருவி மட்பகை எனப்பட்டது. பகைமை தோன்றாமல் உள்ளிருந்தே வஞ்சனை செய்தலின் கெடுதல் தப்பா தென்பதாம்.* (௩)

884 மனமாணு வுட்பகை தோன்றி னினமாணு
வேதம் பலவுந் தரும்.

*மனம் மாணு உட்பகை தோன்றின்-புறந்திருந்தியது போல அகந்திருந்தாத உட்பகை ஒருவனுக்கு உண்டாயின், இனம் மாணு ஏதம் பலவும் தரும்-அது அவன் சுற்றத்தார் நல்லவராகாத குற்றம் பலவும் தரும்.*

மாணா-மாணாத. சுற்றத்தார் நல்லவராகாத குற்றம்-சுற்றத்தார் கெட்டவராகும் குற்றம்; அதாவது சுற்றத்தாரைப் பகைவராக்கும் குற்றம். (ச)

885 உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

உறல் முறையான் உட்பகை தோன்றின் - வெளிக்கு உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை ஒருவனுக்கு உண்டாகுமாயின், இறல் முறையான் ஏதம் பலவும் தரும்- அது அவனுக்கு, இறத்தல் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

உறல் முறையான் உட்பகை - வெளிக்கு உறவினர் போன்று உள்ளுக்குள் பகை கொண்டிருத்தல். இறல் முறையான் ஏதம் - இறத்தற் கேதுவாகிய குற்றம். வெளிக்கு உறவினர் போன்று நடிக்கும் உட்பகையை உடையவன் அதனாலே கெடுவான். (ரு)

886 ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

ஒன்றாமை ஒன்றியார் கண்படின்-உட்பகை தனக்கு உட்பட்டவரிடத்தே தோன்றுமாயின், பொன்றாமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது - அவன் இறவாமையுடன் கூடுதல் எப்போதும் அரிதாகும்.

உட்பட்டவர் - உறவினர். இறவாமையுடன் கூடுதல்-இறவாதிருத்தல். உறவினர் உட்பகைவரானால் தப்புதலரிதாகும். (சா)

887 செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

செப்பின் புணர்ச்சி போல் கூடினும் - சிமிழினது புணர்ச்சி போலப் புறத்தே வேற்றுமை தெரியாது கூடினு

ராயினும், உட்பகை உற்ற குடி கூடாது-உட்பகை உற்ற குடியில் உள்ளவர்கள் அகத்தே தம்முள் கூடமாட்டார்.

செப்பின் புணர்ச்சி - சிமிழ் தன்மேல்மூடியுடன் ஒன்றுபட்டுப் பொருந்துதல். செப்பு-சிமிழ். சிமிழ் அதன் மேல் மூடியுடன் கூடினும் திறக்க வேண்டும் போது சிமி ழும் மூடியும் வெவ்வேறுதல் போல, உட்பகையினரும் வெளிக்கு வேற்றுமை தெரியாமல் இருக்கினும் புறப் பகை வந்தால் வேறுவர். புறப்பகை வெளிப்படையான பகை. (எ)

888 அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

உட்பகை உற்ற குடி-உட்பகை உண்டாகிய குடியா னது, அரம் பொருத பொன்போல பொருது உரம் தேயும்-அரத்தால் அராவப்பட்ட இரும்புபோல அவ்வுட் பகையால் அராவப்பட்டு வலி குறையும்.

உட்பகையால் அராவப்பட்டுக் குடியின் வலிதேயும். பொன்-இரும்பு. முன் வளர்ந்துவந்த தாயினும் உட்பகை யுற்ற பிறகு அதனால் பொரப்பட்டு அக்குடி தேயும் என் பதாம். (அ)

889 எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

உட்பகை எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்- ஒருவனது உட்பகை அவன் பெருமையை நோக்க எள் ளின் பிளவைப்போல அவ்வளவு சிறிதாயினும், கேடு உள்ளதாம் - அப்பெருமை முழுவதும் போக்கும் கேடு அதில் உள்ளதாகும்.

பகவு-பகுதி. எட்பிளவு-எள்ளின் ஒருபகுதி. மிகச் சிறுமைக்கு எடுத்துக் காட்டு. மிகச் சிறிய உட்பகை யினால் மிகப் பெரிய கேடு வரும் என்பதாம். (௯)

890 உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

உடம்பாடு இல்லாதவர் வாழ்க்கை-மனப் பொருத்தம் இல்லாதவருடன் கூடி வாழும் வாழ்க்கையானது, குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று - சிறு குடிசையில் பாம்புடன் கூடி வாழ்வதைப் போன்றது.

சிறு குடிசையில் பாம்போடு வாழ்பவன் கட்டாயம் அப்பாம்பால் கடியுண்டிறப்பான் போல, இவனும் அவ்வுட்பகைவரால் இறப்பானென்பதாம். (ய)

## 90 பெரியாரைப்பிழையாமை

பெரியாருக்குப் பிழை செய்யாமை. பெரியார் - ஆற்றலுள்ள அரசரும், பொதுநலப் பெரியாரும்.

891 ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை - மேற்கொண்ட செயலை நன்கு முடிக்க வல்லவர்களது ஆற்றலை இகழாதிருத்தல், போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை-தம்மைக் காப்பவரது காவல்கள் எல்லாவற்றினும் சிறந்தது.

ஆற்றல்-அறிவு, முயற்சி முதலியன. இகழாதிருத்தல்-போற்றுதல். பெரியோர்களது ஆற்றலைப் போற்றுவார்க்கு யாதொரு தீங்கும் வராது என்பார், 'போற்றலுள் எல்லாம் தலை' என்றார். (க)

892 பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

பெரியாரைப் பேணாது ஒழுகின் - பெரியோர்களைப் போற்றாது நடப்பார்களாயின், பெரியாரால் பேரா

இடும்பை தரும் - அந்நடக்கை அவருக்கு அப் பெரியோர்களால் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும்.

போற்றாது-மதியாது, இகழ்ந்து. அரசர்களைப் போற்றாராயின் அவராலும், ஏனைப் பெரியோர்களைப் போற்றாராயின் பிறராலும் துன்பம் வரும். பெரியாரை இகழ்வாரைப் பிறர் துன்புறுத்துவர். (உ)

893 கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
ஞற்று பவர்க ணிழுக்கு.

கெடல் வேண்டின் - ஒருவன் கெட விரும்பினால், அடல் வேண்டின் கேளாது ஆற்றுபவர்கண் - வேற்றரசரை வெல்ல விரும்பினால் ஆராய்ந்து பாராது அதை அப்பொழுதே செய்யவல்ல அரசர்களிடம், இழுக்குச் செய்க - பிழை செய்க.

கேட்டல்-ஆராய்தல். முன்னமே வெல்லும் வகையை ஆராய்ந்து முடிவு செய்யாது நினைத்த உடனே செய்ய வல்லவரென அவர் ஆற்றல் மிகுதியை விளக்கியவாறு. தம்மினும் பெரிய அரசர்க்குத் தவறு செய்வான் கெடுவான். (ங)

894 கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல் - வலிமையுடையவர்க்கு வலிமை யில்லாதார் துன்பந் தருஞ் செயல்களைச் செய்தல், கூற்றத்தைக் கையால் விளித்தற்று - தானே வரும் கூற்றத்தை வருவதற்கு முன்னமே கை காட்டி அழைத்தாற்போலும்.

கூற்றம் - இறப்பின் உருவகம். முகவுரை பார்க்க. வலியில்லாதார் வலியுடையார்க்குத் துன்பஞ் செய்வது சாவைத் தானே வரவழைத்துக்கொண்டது போலாகும். கட்டாயம் கெடுவார் என்பதாம். தாமே வெல்லற் குரி

யாரை அதற்கு முன்னே விரைந்து வரவழைத்துக்கொள் வார் கட்டாயம் விரைவில் அழிவர். (௪)

895 யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

வெம் துப்பின் வேந்து செறப்பட்டவர் - வெய்ய வலிமை பொருந்திய வேந்தனால் வெகுளப்பட்டவர்கள், யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் - அவனைத் தப்பி எங்கே போனாலும், ஓரிடத்திலும் உயிருடன் இருக்க மாட்டார்கள்.

மிக்க வலிமை பொருந்திய வேந்தனுகையால், அவனோடு மாறுபட்டவர் வேறு நாடுகட்குச் சென்றாலும், அந் நாட்டாரும் இடந்தரார். அல்லது அப்பெரு வேந்தனோடு நட்புக் கொள்ளவோ, அவர்கள் பொருளைக்கொள்ளவோ இவரைக் கொல்வர். தன் நாட்டிலேயே இருந்தால் அப் போதே அழிவர் என்பார், 'யாண்டுச் சென்று யாண்டும் உளராகார்' என்றார். வலி மிக்க பெரு வேந்தனால் வெகுளப்பட்டவர் 'அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யார்' என்பதாம். (௫)

896 எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் - நெருப்பினால் சுடப்பட்டாலும் ஒருவாறு உயிர் பிழைத்தல் கூடும், பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் - ஆனால், பெரியோர்க்குப் பிழைசெய்து நடப்பவர் உயிர் பிழையார்.

தீ உடம்பைச் சுட்டுக் கொல்லுமுன் தப்பலாம். பின் மருந்திட்டுப் புண்ணையாற்றலாம். ஆனால், பெரியாரைப் பிழைத்தவரை உலகம் ஒறுக்குமாதலான் உய்வு இல்லை யென்றார். 29-ஆம் குறளுரை பார்க்க. (௬)

897 வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின்.

தகை மாண்ட தக்கார் செறின் - பெருமையினால் மாட்சிமை பொருந்திய பெரியார் வெகுள்வாராயின், வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும் - எல்லா வகையினும் மாட்சிமை பொருந்திய வாழ்க்கையும் சிறந்த பொருளும் என்ன பயனுடையனவாகும்? கெடும் என்பதாம்.

செல்வச் செருக்கால் பெரியார்க்குப் பிழை செய்யின் அவர் வெகுளுவாரானால் அவர் செல்வம் கெடும். (எ)

898 குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியோடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

குன்று அன்னார் குன்ற மதிப்பின் - மலைபோன்ற பெருமை பொருந்தியவர் கெட எண்ணுவாராயின், நிலத்து நின்றன்னார் குடியொடு மாய்வர் - இவ்வுலகத்தில் நிலை பெற்றாற் போலத் தோன்றுபவர்கள் தமது குடியோடும் அழிந்து போவர்.

நிலை பெற்றாற் போலத் தோன்றுபவர் - நிலையாக இருப்பவர் போலக் காணப்படுபவர். செல்வ வாழ்க்கையை நிலையென்று எண்ணியே பெரியாரைப் பிழைத்தலால் இவ்வாறு கூறினார். (அ)

899 ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

ஏந்திய கொள்கையார் சீறின் - உயர்ந்த கொள்கையையுடைய பெரியோர் வெகுளுவாராயின், வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும் - அரசனும் இடையே தன்னிலை யிழந்து கெடுவான்.

வேந்தனும் என்றது, பெருஞ் செல்வமுடைய அரசனும் என்பதுபட நின்றது. வேந்து - அரசு. அரசை யிழந்து தானும் கெடுவான் என்பதாம். (௯)

900 இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

சிறந்து அமைந்த சீரார் செறின் - நனிமிகு பெருமை யுடையவர்கள் வெகுளுவராயின், இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார் - மிகவும் பெரிய பக்கத்துணை உடையவராயினும் தப்பமாட்டார்.

சீர் - பெருமை. சிறந்து அமைந்த சீர் - நனிமிகு பெருமை; மிகவும் மிகுந்த பெருமை. (௰)

## 91 பெண்வழிச்சேறல்

வாழ்க்கைத் துணைவர்களாகிய ஆணும் பெண்ணும் வாழ்க்கையில் ஒத்த உரிமையுடையவராய் நடந்து கொள்ளவேண்டும். அப்போதுதான் வாழ்க்கையில் அறம் பொருளின்பம் அடைந்து இன்புற்று வாழலாம். இல்லறத் தார்க்குரிய கடமைகளையும் குறைவின்றிச் செய்து புக ழுடன் வாழலாம். இங்ஙனமன்றி, ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் அடங்கித் தன்னுரிமையிழந்து, அவரேவல் கேட்டு நடப்பாராயின் இல்லறம் இனிது நடை பெறாது. வாழ்க்கையில் செய்ய வேண்டுவன செய்து இன்புற முடியாது. அறம் பொரு ளின்பம் அடைய முடி யாது.

சில பெண்கள் தம் கணவர்களை அடக்கித் தம் கீழ்ப் படுத்து, தாம் சொல்லுகிறபடி தம்கணவர் ஆடும்படி ஆட்டி வைக்கின்றனர். அப்பெண்ணேவல் செய்தொழுகு வோர் தம் மனைவியர்க்கு வேண்டாத சுற்றத்தாரைப் போற்றவோ, தாம் விரும்பினவர்க்கு ஒன்று செய்யவோ, விரும்பியதொன்றைக் கொடுக்கவோ முடியாமல், மானங்

கெட்டு நிற்கின்றனர். எதற்கும் மனைவியர் கையைப் பார்த்து அலைகின்றனர். அவர்களை உறவினரோ, பிறரோ யாரும் மதிப்பதில்லை. பெண்ணேவல் செய்தொழுகுவான் தனக்கு வேண்டியவரை வீட்டுக்குக் கூட்டிப்போனால் அன்று வீடு போர்க்கள மாகிவிடும். அவன் மானம் மலையேறிவிடும். உலகில் ஓர் ஆண்மகனாக அவன் வாழ முடியாது.

இவ்வாறே சில ஆண்கள் பெண்களை அடிமைகளாக்கி 'மனையாள், இல்லாள்' என்னும் அவர்களது வீட்டதிகார உரிமையைப் பறித்து, நாளும் அரிசி பருப்புக்கூட அளந்து கொடுத்துக் கொண்டு வருவர். இப்பெண்களாலும் வாழ்க்கையின்பத்திற்கு வேண்டிய எதையும் செய்ய முடியாது. கணவர் வீட்டுச் செலவுக்குக் கொடுப்பதில் மிச்சம் பிடித்துச் சிறுவாடு சேர்த்தும், தம் விருப்பம் போல் குடும்ப நடத்த முடியாமலும் திண்டாடுவர்.

இப்பெண்வழிச் சேறலும், ஆண்வழிச் சேறலும் வாழ்க்கை முறைக்குச் சிறிதும் ஏற்றவையல்ல. இக் கெட்ட ஒழுக்கத்தை விலக்க எழுந்ததே இவ்வதிகாரம். ஆண்வழிச் சேறலினும் பெண்வழிச் சேறல் மிகுதியாதலினாலும், இல்லிருந்து விருந்து, சுற்றம், நட்பு முதலியோரைப் போற்றுபவள் பெண்ணாதலினாலும், மனைவி தலைமை பெறின் கணவனுடைய சுற்றத்தாருக்கு யாதொரு உதவியும் செய்யாததோடு, அவர்களை வெறுத்துப் பகையாகக் கொண்டு நடத்துதலினாலும் பெண்வழிச் சேறலின் குற்றங் கூறி ஆண்வழிச் சேறலின் குற்றத்தையும் பெறவைத்தார். இஃதறியார், வள்ளுவர் பெண்ணடிமையை விரும்புகிறார் எனத் தமக்கு வேண்டியவாறெல்லாங் கூறுவர்.

901 மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
　　வேண்டாப் பொருளு மது.

*மனை விழைவார் மாண்பயன் எய்தார்* - மனைவியை விரும்பி அவள் ஏவல் கேட்டு நடப்பவர் சிறந்த இல்லறப்

பயனை அடையமாட்டார்கள்; வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது-இனிப் பொருள் செய்தலை முயலுபவர் விரும்பாத பொருளும் அதுவே.

விழைதல்-விழையும் ஏவல்தொழிலை யுணர்த்திற்று. இல்லறப்பயன்-விருந்து புறந்தருதல், சுற்றம் பேணல் வறியார்க்கீதல், பிற அறங்களைச் செய்தல் முதலியன. தம் எண்ணப்படி வினை செய்ய விடாராகையால் பொருள் செய்யவும் முடியாதென்றார். (க)

902 பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

பேணாது பெண் விழைவான் ஆக்கம்-அறத்தையும் பொருளையும் போற்றாது பெண்மையை விரும்புவோனது செல்வமானது, பெரியது ஓர் நாண் ஆக நாணுத்தரும் - மிகுந்ததோர் வெட்கம் உலகத்தில் நிற்கும்படியான வெட்கத்தைக் கொடுக்கும்.

பெண்மையை விரும்பல் - பெண்மையின் ஏவலை விரும்பல். உலகத்தில் நிற்கும்படியான வெட்கம் - உலகத்தார் முன் தலைகாட்ட முடியாத அவ்வளவு வெட்கம். பெண்ணேவல் கேட்பான் தான் செய்வன செய்ய முடியாமையால் உலகர் முன் வெட்கமடைவான். (உ)

903 இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்.

இல்லாள்கண் தாழ்ந்த இயல்புஇன்மை-மனைவியிடத்துத் தாழ்ந்து நடக்கும் தகுதியின்மை, எஞ்ஞான்றும் நல்லாருள் நாணுத் தரும்-எப்போதும் நல்லோர்களிடையில் பேசும்போது வெட்கத்தைக் கொடுக்கும்.

தாழ்ந்து நடத்தல்-ஏவல் கேட்டல். நல்லன செய்ய முடியாமையால் நல்லன பற்றிப் பேச வெட்கப்படுவானென்க. 59-ஆம் குறள் ஒருகூறு பொருந்தும். (ங)

904 மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

மனையாளை அஞ்சும் மறுமை இலாளன் வினை ஆண்மை-மனைவியைக் கண்டு அஞ்சும் புகழில்லாதவன் ஒருவினையை மேற்கொள்ளினும், வீறு எய்தல் இன்று-அதனால் அவன் பெருமை அடைவதில்லை.

மறுமை - ஒருவன் இறந்த பிறகு இவ்வுலகில் அவன் வாழ்வு. 88-ஆம் குறளுரை பார்க்க. மறுமை வாழ்வு-புகழ். அவ்வினை முடிவு பெறாததால் அவ்வினையால் அவன் பெருமை அடைவதில்லை. (௪)

905 இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

இல்லாளை அஞ்சுவான் - மனைவியை அஞ்சுபவன், நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும் - நல்லோர்க்கு நல்லவை செய்தற்கு எப்போதும் அஞ்சுவான்.

நல்லோர்-விருந்தினர், அறவோர் முதலாயினர். செய்தே தீரவேண்டிய நாளினுங்கூட என்பார், எஞ்ஞான்று மென்றார். (௫)

906 இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர் - மனைவியின் மூங்கில் போன்ற தோள்களுக்கு அஞ்சுபவர், இமையாரின் வாழினும் பாடு இலர்-தேவர்கள்போல வாழ்ந்தாலும் பெருமை இல்லாதவராவர்.

அமை ஆர் தோள் என்பது-பெயரளவாக நின்றது. தேவர்கள் பெருமையுடன் வாழ்பவர் என்னும் அயலார் கூற்றைக் கொண்டு கூறியது. முகவுரை பார்க்க. (௬)

907 பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின்-மனைவியின் ஏவல் தொழிலைச் செய்து நடக்கும் ஆண் மகனது ஆண்மையைக் காட்டிலும், நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து - நாணமுடைய பெண் மகளது பெண்மையே பெருமையுடையது.

ஆண்மை - ஆண் மகனது தன்மை. பெண்மை - பெண் மகளது தன்மை. ஆணுக்கு ஆண்டன்மையும், பெண்ணுக்குப் பெண்டன்மையும் சிறந்தது. அத்தன்மை யாவது-தனக்குள்ள உரிமையை இழக்காமல் நடக்குந் தன்மை. உரிமையை இழந்த ஆண்டன்மையை விட, உரிமையிழக்க நாணும் பெண்டன்மையே சிறந்தது என்பதாம். (எ)

908 நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

நல்நுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர்-நல்ல நெற்றியையுடைய மனைவி விரும்பியவாறு நடப்பவர், நட்டார் குறை முடியார்-நண்பர்களது குறையை முடிக்க மாட்டார்; நன்று ஆற்றார்-நல்லறத்தையும் செய்யமாட்டார்.

பெட்டாங்கு - விரும்பியவாறு. பெட்பு - விருப்பம். நண்பர்க்குதவுதல், அறஞ்செய்தல் ஆகிய மாண்பயன் எய்தாமை (901) கூறப்பட்டது. (அ)

909 அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

அறவினையும் - அறச்செயலும் - ஆன்ற பொருளும்- சிறந்த பொருட்செயலும், பிற வினையும் - இன்பச்செயலும், பெண் ஏவல் செய்வார்கண் இல்-மனைவியின் ஏவலைச் செய்பவர்களிடம் இல்லை.

பெண்ணேவல் செய்வார் அறம் பொரு ளின்பம் ஆகிய மக்கட்பயன் மூன்றையும் முடிவுறப் பெறூர் என்பதாம். (கூ)

910 எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு - எண்ணம் சேர்ந்த நெஞ்சத்தை விரிவாக உடையவர்க்கு, பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல்-மனைவியைச் சேர்வதால் உண்டாகும் அறிவின்மை எப்போதும் இல்லை.

எண் - எண்ணம். எண்ணம் சேர்ந்த நெஞ்சத்தை விரிவாக உடையவர் - ஆராய்ந்து பார்க்கும் அறிவினையுடையவர். மனைவியைச் சேர்வதால் உண்டாகும் அறிவின்மை - பெண்ணேவல் செய்யும் அறிவின்மை. ஆராய்ந்தறியும் அறிவினையுடையார் பெண்ணேவல் செய்யார். (ω)

## 92 வரைவின்மகளிர்

வரைவு இல் மகளிர். வரைவு - வரையறை. தம் இன்பத்திற்கு உரியவர் இவரென்ற வரையறை யில்லாதவர். பொது மகளிர்; விலை மகளிர்.

911 அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்.

அன்பின் விழையார் - ஒருவனை அன்பு பற்றி விரும்பாது, பொருள் விழையும் - பொருள் பற்றி விரும்பும், ஆய் தொடியார் இன்சொல் - ஆய்ந்த வளையல்களை அணிந்த மகளிரது இனிய சொற்கள், இழுக்குத் தரும் - பின்பு கேட்டை உண்டாக்கும்.

பொருளின் - இன் தொக்கது. அணியாலும் சொல்லாலும் மயக்குபவர் என்பதை ஆய் தொடியார், இன்சொல் எனக் குறித்தார். பொருள் பெறுமட்டும் அன்புடையவர்போலப் பேசும் இன்சொல் பின் வறுமை பயத்தலின் இழுக்குத் தருமென்றார். (க)

912 பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல்மகளிர் - தமக்கு உண்டாகும் பயனை அளந்தறிந்து, அது பெறுமளவும். தமது நற்குணங்களைக் கூறும் நற்குணமில்லாத மகளிரது, நயன் தூக்கி நள்ளா விடல் - இன்பத்தை அளந்து பார்த்து அவர்களைப் பொருந்தாது விடுக.

பயன் தூக்கல் - ஒருவனுக்குள்ள பொருளின் அளவையும், அவனது கொடுக்குந் தன்மையையும் ஆராய்ந்து பார்த்தல். குணமில்லாதிருந்தும் பேச்சளவில் உள்ளவர் போல் கூறுதல் அவர்க்கியல்பு. நள்ளாது - பொருந்தாது. இன்பம் பொய்யின்பம் என்பதை அறிதல். (உ)

913 பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

பொருள் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் - கொடுப்போரை விரும்பாது பொருளையே விரும்பும் பொருள் மகளிரது ஒருவனை முயங்கும் பொய் முயக்கமானது, இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇயற்று - கூலிக்குப் பிணமெடுப்பார் இருட்டறையில் கிடந்த தாம் முன் கண்டறியாததும், தமக்குச் சொந்தமல்லாததுமான ஓர் அயற் பிணத்தைத் தழுவி எடுத்தாற் போலும்.

முயங்குதல் - தழுவிக்கொள்ளுதல்; அணைத்துக் கொள்ளுதல். இன்பத்துக்கன்றிப் பொருட்கு முயங்கும் மகளிர் ஒருவனை முயங்கும் குறிப்பு - கூலிக்குப் பிண

மெடுப்பவர் கூலிக்காக இருட்டறையில் கிடந்த ஓர் அயற் பிணத்தை அருவருப்போடு எடுப்பதை ஒக்கும் எனவே, பொருள் மகளிரும் அகத்தில் அருவருப்போடு பொருளுக் காகவே தழுவுவர்; ஆதலால், அவரை விரும்பற்க என்ப தாம். (௩)

914 பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

பொருள் பொருளார் புன்னலம் - இன்பமாகிய பொருளைவிட்டுப் பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புன்மையாகிய இன்பத்தை, அருள் பொருள் ஆயும் அறிவினர் தோயார் - அருளாகிய பொருளை ஆரா யும் அறிவுடையோர் தீண்டார்.

பொருட் பொருள் - பொருள். அருட் பொருள் - அறம். புன்னலம் - தாழ்ந்த நலம். நலம் - இன்பம். (௪)

915 பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

மதிநலத்தின் மாண்ட அறிவினவர் - இயற்கையாகிய அறிவு நலத்தினால் மாட்சிமைப்பட்ட செயற்கை யறிவுடை யோர், பொதுநலத்தார் புன்னலம் தோயார் - பொருள் கொடுப்போர்க்கெல்லாம் பொதுவாகிய நலத்தினையுடைய மகளிரது புன்மையான இன்பத்தைத் தீண்டார்.

செயற்கையறிவு - நூலறிவு. அறிவாளிகள் அம் மகளிர் இன்பத்தை விரும்பார். (௫)

916 தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள் - ஆடல் பாடல் அழகு என்னும் தகைமையால் களித்துத் தம் புன்மையாகிய இன்பத்தை விலைகொடுப்போர் யாவ

ரிடத்தும் பரப்பும் விலைமகளிரது தோளினை, தம் நலம் பாரிப்பார் தோயார் - தமது புகழை உலகத்தில் பரப்பும் பெரியோர் தீண்டார்.

தகை - மேம்பாடு. களிப்பு - மிகு மகிழ்ச்சி. பாரித்தல் - பரப்புதல். (சு)

917 நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

பிற நெஞ்சில் பேணிப் புணர்பவர் தோள் - இன்பமல்லாத பிறவாகிய பொருளை நெஞ்சில் விரும்பி அன்புடையார் போல் நடித்துப் புணரும் மகளிரது தோளை, நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் - நிறைந்த நெஞ்சம் இல்லாதவர் தோய்வர்.

பிற - பொருள். நிறைந்த நெஞ்சம் - அறிவால் நிறைந்த நெஞ்சம். (எ)

918 ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

மாய மகளிர் முயக்கு - வடிவு சொல் செயல்களால் வஞ்சிக்கும் மகளிர் முயக்கம், ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப - ஆராய்ந்தறியும் அறிவில்லாதவர்க்கு அணங்கின் முயக்கம் என்பர் அறிவுடையோர்.

பெண்களை வருத்தும் ஆண்பாற் காமத்தைக் 'காமன்' (1197) என ஆண்பாலால் கூறுவதும், ஆண்களை வருத்தும் பெண்பாற் காமத்தை 'அணங்கு' எனப் பெண்பாலால் கூறுவதும் நூன்மரபு. அணங்கு - வருத்தம். 'தகையணங்குறுத்தல்' (109) என்னும் அதிகாரத்தைப் பார்க்க. அணங்கு - தன் வடிவழகால் ஆடவரை வருத்தும் பெண். அணங்கின் முயக்கம் - மிக்க இன்பந்தரும் முயக்கம். அறிவிலார்க்குப் பொருட்பெண்டிர் முயக்கம் மிக்க இன்பந்தரு முயக்கமாகும் என்பதாம். (அ)

919 வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

வரைவு இலா மாணிழையார் மென்றோள் - வரையறை யில்லாது விலை கொடுப்போர் யாவரையும் கூடும் மாட்சிமைப்பட்ட அணிகளை உடைய மகளிரது மெல்லிய தோளானது, புரை இலாப் பூரியர்கள் ஆழும் அளறு - அறிவில்லாத கீழ்மக்கள் படும் பெருந்துன்பமாகும். 225-ஆம் குறளுரை பார்க்க. (௯)

920 இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும் - பொது மகளிரும் கள்ளும் சூதும் ஆகிய இம்மூன்றும், திருநீக்கப் பட்டார் தொடர்பு - திருவினால் நீக்கப் பட்டவர்களுக்கு நட்பாம்.

இருமனம் - ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தே உடைய மனம். திரு - செல்வம். ஒத்த குற்றமுடைமையால் கள்ளும் சூதும் உடன்கூறப்பட்டன. அடுத்து வரும் அதிகாரங்கட்குத் தோற்றுவாய் எனினுமாம். இவர்களிடம் செல்வம் நில்லாது என்பதாம். (௰)

## 93 கள்ளுண்ணாமை

921 உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

கள் காதல் கொண்டு ஒழுகுவார் - கள்ளின் மீது விருப்பம் கொண்டு வாழ்பவர், எஞ்ஞான்றும் உட்கப் படார் - எப்போதும் பகைவரால் அஞ்சப்படார்; ஒளி இழப்பர் - அதுவே யன்றி முன் அடைந்திருந்த பெருமையையும் இழப்பர்.

பொருள் படை முதலியவற்றால் பெரியவரான காலத்தும் அறிவின்மையால் இவரைக் கண்டு பகைவர் அஞ்சார். பகைவரால் அஞ்சப்படார் - பகைவர் இவரைக் கண்டு அஞ்சார். ஒளி - முன்னோர் பெருமை. (௧)

922 உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.

கள்ளை உண்ணற்க - அறிவுடையோர் கள்ளை உண்ணற்க; உணில் சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க - உண்ண விரும்பின் அறிவுடையோரால் நன்கு மதிக்கப்பட வேண்டாதார் உண்க. கள்ளுண்போரை அறிவுடையோர் மதியார். (௨)

923 ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது - யாது செய்யினும் மகிழும் தாய் முன்பும் ஒருவன் கள்ளுண்டு களித்தல் துன்பந்தருவதாகும்; மற்றுச் சான்றோர் முகத்து என் - அவ்வாறிருக்க, அறிவுடையோர் முன்னிலையில் கள்ளுண்டு களித்தல் அவர்க்கு என்னாம்?

களி - வெறி. களித்தல் - வெறிகொண்டு திரிதல். வெறியால் வெட்கங் கெடும்; கெடவே, தாயும் வெறுக்கும்படி நடக்கச் செய்யும். எத்தீங்கு செய்யினும் பொறுக்கும் தாயும் கள்ளுண்டு களித்தலைப் பொறாளாயின், ஒரு தீங்கும் பொறாத சான்றோர் என்செய்வரென்பதாம். (௩)

924 நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

கள் என்னும் பேணாப் பெருங் குற்றத்தார்க்கு - கள் என்று சொல்லப்படும் பிறரால் விரும்பப் படாத பெரிய குற்றத்தை உடையார்க்கு, நாண் என்னும் நல்

லாள் புறங் கொடுக்கும் - நாண் என்று சொல்லப்படும் நல்லவள் முதுகு காட்டி நீங்குவாள்.

பேணு - பேணாத. கள் என்னும் குற்றத்தார் - குடியர். 'நிலம் என்னும் நல்லாள்' (1040) என்பது போல, நாணைப் பெண்ணென்றார். முதுகு காட்டி நீங்குதல் - குடியரை நோக்குதற்கு நாணி அவர்க்கு எதிர் முகமாகச் செல்லுதல். குடியர்கட்கு வெட்கம் கெடும். குடியர் வெட்கமின்றித் தகாதன செய்வரென்பதாம். (௪)

925 கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல் - ஒருவன் பொருளைக் கொடுத்து மெய்ம்மறதியைக் கைம்மாறாகப் பெற்றுக் கொள்ளுதல், கை அறியாமை உடைத்து - செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாக உடையது.

மெய்ம்மறதி - தன் உடல் நிலையைத் தான் அறியாமை. தன்னை அறியாமை சொல்லவே, ஒழிந்தன யாவும் அறியாமை சொல்ல வேண்டாவாயிற்று. அறிவுடையோர் விலை கொடுத்து ஒன்றை வாங்கினால் நல்லதாக வாங்குவார்கள். குடியர் பொருள் கொடுத்து மெய்ம்மறதியை வாங்குதற்குக் காரணம் செய்வதறியாமை என்பதாம். (௫)

926 துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் - உறங்குபவர் அறிவை இழப்பதனால் செத்தாரைக் காட்டிலும் வேறல்லர்; எஞ்ஞான்றும் கள் உண்பவர் நஞ்சு உண்பார்-அவ்வாறே எப்போதும் கள்ளுண்பவர் மயக்க மடைதலால் நஞ்சுண்பவர் ஆவர்.

உறங்குதல் - தூங்குதல். நஞ்சு போலவே கள்ளும் அறிவை மயக்கு மென்பதாம். (சு)

927 உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

கள் ஒற்றிக் கண் சாய்பவர் - கள்ளை மறைந்துண்டு அக்களிப்பால் தம் அறிவு சோர்பவர், உள்ளூர் உள் ஒற்றி எஞ்ஞான்றும் நகப்படுவர் - உள்ளூரில் வாழ்பவரால் உள்ளது உய்த்துணரப் பெற்று எப்போதும் சிரிக்கப் படுவார்.

ஒற்றுதல்-மறைத்தல், உய்த்துணர்தல். உய்த்துணர்தல்-உடல் தளர்ச்சியால் களிப்பினை யுணர்ந்து, அதனால் கள்ளுண்டதை உணர்தல். கள்ளை மறைந்து உண்டாலும் ஊராரால் அறிந்து பழிக்கப் படுவர் என்பதாம். எஞ்ஞான்றும் என்பதால், ஒரு முறை உண்ணின் அது எப்போதும் இகழ்ச்சிக் குரியதாகும் என்பது கருத்து. (எ)

928 களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

களித்து அறியேன் என்பது கைவிடுக - நான் கள்ளுண்டாலும் களித்து அறியேன் என்று சொல்வதை விட்டு விடுக; நெஞ்சத்து ஒளித்ததும் ஆங்கே மிகும் - உண்ணாத போது நெஞ்சத்தில் மறைத்து வைத்த அக்களிப்பும் கள்ளை உண்ட அப்போதே வெளியில் வந்து விடும்.

களித்தல் - வெறிகொள்ளுதல். வெறி - போதை. கள்ளை யுண்டதும் வெறி வந்து விடுவதால், உண்ணாத போது நான் கள்ளுண்டாலும் எனக்கு வெறியுண்டாகாது என்று பொய் கூறுதலை விடுக என்பதாம். முன் (927) மறைந்துண்டது வெளிப்படுங் காரணங் கூறினர். இதில் களி வெளிப்படுங் காலங் கூறினர். (அ)

929 களித்தானைக் காரணங் காட்டுதல் நீர்க்கீழ்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

களித்தானைக் காரணம் காட்டுதல் - கள்ளுண்டு களித்தவனுக்கு அதை உண்ணுதல் கூடாது என்று காரணங் காட்டுவது, நீர்க்கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇ யற்று - நீருள் மூழ்கினவ னொருவனை விளக்குப் பிடித்துத் தேடுவதை ஒக்கும்.

களித்தானை - உருபுமயக்கம். நீர்க்குள் தீச் செல்லாதது போல அவன் நெஞ்சில் காரணம் செல்லாதென்பதாம். துருவுதல் - தேடுதல். துரீஇ - தேடி. (கூ)

930 கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

கள் உண்ணுப் போழ்தில் களித்தானைக் காணுங்கால் - குடியன் ஒருவன் கள்ளுண்ணுத போது, கள்ளுண்டு களித்த மற்றொருவனைக் காணும் போதாகிலும், உண்டதன் சோர்வு உள்ளான் கொல் - தான் உண்ணும் போது உண்டாகும் சோர்வை நினைக்க மாட்டான் போலும்.

நினைப்பானாயின் குடியான் என்பது கருத்து. இது குடியை விலக்குதற்குக் காரணம் கூறியது. (ய)

## 94 சூது

931 வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

வென்றிடினும் சூதினை வேண்டற்க - தனக்கு வெல்லும் ஆற்றல் இருப்பினும் சூதாடுதலை விரும்பற்க; வென்றதூஉம் தூண்டில்பொன் மீன் விழுங்கியற்று - சூதில் வென்ற பொருளும் இரையால் மூடப்பட்ட தூண்டிலிரும்பினை மீன் விழுங்கினாற் போலும்.

தூண்டிலை இரை யென்று விழுங்கி மீன் உயிரிழத்தல் போல, வென்றதைப் பொருளென்று கருதிச் சூதாடுவார் சூதாடலை நீங்காமைக் கோர் தனையாகும். (க)

932 ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.

ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் - முதலில் ஒரு பொருளை அடைந்து பிறகு மேன்மேலும் வெல்லு வோம் என்ற எண்ணத்தினால் நூறு பொருள்களை இழக் கும் சூதாடிகளுக்கும், நன்று எய்தி வாழ்வது ஓர் ஆறு உண்டாங்கொல் - நன்மையடைந்து வாழ்வதொரு வழி உண்டோ? இல்லை.

ஒன்று - சில, கொஞ்சம். நூறு - பல. பொருளாசை யால் மேன்மேலும் சூதாடி வறியராவ ரென்பதாம். (உ)

933 உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

உருள் ஆயம் ஓவாது கூறின் - ஒருவன் உருளுங் கவற்றிற்குரிய பணயத்தை இடைவிடாமல் கூறிச் சூதாடு வானாயின், பொருள் ஆயம் போய்ப் புறமே படும்-பொரு ளும், பொருள் வருவாயும் அவனைவிட்டுப் போய்ப் பிறரி டம் சேரும்.

ஆயம் - கவறு, பொருள் வருவாய். கவறு - சூதாடு கருவி. ஆயம் ஆகுபெயராய்க் கவற்றிற் குரிய பணயத்தை யுணர்த்திற்று. பணயம் - போட்டிப் பொருள் (பந்தயம்). காத்தலினும் இயற்றலினும் (385) கருத்தின்மையால் அவை இரண்டும் புறத்தே போகும். (ங)

934 சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின் - துன் பங்கள் பல உண்டாக்கி, உள்ள புகழையுங் கெடுக்கும்

சூதுபோல, வறுமை தருவது ஒன்று இல் - ஒருவனுக்கு வறுமையைத் தர வல்லது வேறொன்றில்லை.

சூது துன்பந்தந்து, புகழைக் கெடுத்து, வறுமையை உண்டாக்கும். (ச)

935 கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார்-சூதையும், சூதாடுமிடத்தையும், கவறாடும் கைத்தொழிலையும் விரும்பிவிடாதவர், இல்லாகியார்-வறியராயினர்.

கவறு ஆடும் கைத்தொழில்-சூதாடு கருவியை வெல்லும் வகையில் பிடித்தெறிதல். இவறுதல்-விடாதிருத்தல். இவ்விடாமையே வறுமைக்குக் காரணமாகும். (ரு)

936 அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

சூது என்னும் முகடியால் மூடப்பட்டார்-சூது என்னும் மூதேவியால் மறைக்கப்பட்டவர், அகடு ஆரார் அல்லல் உழப்பர் - வயிறு நிறைய உண்ணப்பெறார்; துன்பத்திலும் உழலுவார்.

சூது செல்வத்தைக் கெடுத்து வறுமை உண்டாக்குவதால் 'சூது என்னும் முகடி' என்றார். முகடி - மூதேவி-வறுமை. வறுமையை மூத்தாள் என்பதும், செல்வத்தை இளையாள் என்பதும் நான்மரபு. முகவுரை பார்க்க. சூது வறுமையை உண்டாக்கி உணவின்றித் துன்புறச் செய்யும். (சா)

937 பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

காலை கழகத்துப் புகின் - ஒருவனது காலம் சூதாடுமிடத்தில் கழியுமாயின், பழகிய செல்வமும் பண்பும்

கெடுக்கும் - அவனது தொன்று தொட்டு வந்த செல்வத்தையும் குணத்தையும் அது போக்கும்.

எப்போதும் சூதாடுதல். காலை - காலம். காலை-காலையில், ஒவ்வொரு நாளும். நாடோறும் சூதாடுமிடத்திற்குச் சென்றால் என்றுமாம். (எ)

938 பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

சூது - சூதானது, பொருள் கெடுத்து - ஒருவனது செல்வத்தைக் கெடுத்து, பொய் மேற் கொளீஇ-பொய்யை மேற் கொள்ளச் செய்து, அருள் கெடுத்து - அருளைக் கெடுத்து, அல்லல் உழப்பிக்கும் - அவனைத் துன்பத்தில் உழலவைக்கும்.

சூது இம் மூன்றையும் செய்யும். தோல்வியால் பொருள் கெட்டு, வெற்றியால் பொய் மேற்கொண்டு, வெகுளியால் அருளைக் கெடுக்குமென்க. (அ)

939 உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

ஆயம் கொளின்-ஒருவன் சூதாட்டத்தை விரும்புவானாயின், ஒளி கல்வி செல்வம் ஊண் உடை ஐந்தும் அடையாவாம் - புகழும் கல்வியும் செல்வமும் உணவும் உடையும் என்று சொல்லப்பட்ட ஐந்தும் அவனைச் சேராவாம். (கூ)

940 இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

இழத்தொறும் காதலிக்கும் சூதே போல்-பொருளை இழக்குந் தோறும் அதை விரும்பும் சூதாட்டத்தைப் போல, துன்பம் உழத்தொறும் காதற்று உயிர் - துன்பப் படுந்தோறும் இன்பத்தை விரும்புவது உயிர்.

துன்பப் படுந்தோறும் உயிர் இன்பத்தை விரும்புவதுபோல, பொருளை இழக்குந்தோறும் ஒருவன் சூதை விரும்புகிறான். பொருளழிவை யுணர்ந்து விலக்குவோர் பெருமையடைவர். (ய)

## 95 மருந்து

உணவின்மீதுள்ள ஆசையால் மிகுதியாகவும், பசியாமுன்னும் உண்பதால் உண்டாகும் நோய்களைத் தீர்க்கும் மருந்தின் சிறப்புக் கூறுதல்.

941 மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் - மருத்துவ நூலோர் வாதம் பித்தம் கவம் என எண்ணிய மூன்றும், மிகினும் குறையினும்நோய் செய்யும் - மிகுமாயினும் குறையுமாயினும் நோயை உண்டாக்கும்.

வாதம்-காற்று. பித்தம் - தீ. கவம் - நீர். காற்று தீ நீர் இவை மூன்றும் உடலின் கூறுகளாகும். இவை மூன்றும் ஏற்ற அளவினவாக இருந்தால்தான் உடல் நன்னிலையில் - நோயில்லாமல் இருக்கும். வாத முதலிய மூன்றும் இருக்கவேண்டிய அளவில் மிகுந்தாலும் குறைந்தாலும் நோயை உண்டாக்கும். இவை உண்ணும் உணவுகளாலும் செய்யும் செயல்களாலும் மிகவும் குறையவும் செய்யும். நோயாளரின் கைந்நாடியைப் பார்த்து மருத்துவர் வாத முதலியவற்றின் நிலையை அறிவர். இது நோயுண்டாதலின் காரணமும், அதை அறியும் வகையும் கூறியது. (க)

942 மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

அருந்தியது அற்றது போற்றி உணின் - ஒருவன் முன்னுண்ட உணவு அற்றதைத் தெளிவாக அறிந்து பின் உண்பானாயின், யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம்- அவன் உடம்புக்கு மருந்து என்று ஒன்று வேண்டியதில்லை.

உணவு அறுதல் - உணவு செரித்தல். முன்னுண்ட உணவு நன்கு செரித்த பிறகு உண்டால் அதுவே நோய் வராமல் தடுக்கும் மருந்தாகையால் வேறு மருந்து வேண்டியதில்லை. (உ)

943 அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

அற்றால் அளவு அறிந்து உண்க - முன்னுண்டது அற்றால் பின் அறும் அளவு தெரிந்து உண்ணவேண்டும்; அஃது உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு - அது உடம்பைப் பெற்றவன் அதை நெடுங்காலம் செலுத்துதற்குரிய வழியாகும்.

முன் உண்டது நன்கு செரித்த பின்பு செரிக்கும் அளவை அறிந்து உண்பவன் நெடுநாளைக்கு வாழ்வான் என்பதாம். இவ்வாறு உண்பவனுக்கு நோய்வராது. அளவறிந்து உண்ணல் - சுவையுடையதென்று அளவுக்கு மீறி உண்ணாமல் பசியடங்கும் அளவு உண்ணுதல். (ந)

944 அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

அற்றது அறிந்து-முன்னுண்டது அற்றதை அறிந்து, துவரப் பசித்து - பின் மிகப் பசித்து, மாறல்ல கடைப்பிடித்துத் துய்க்க - உண்ணும்போது மாறுகொள்ளாத உணவுகளைக் கடைப்பிடித்து உண்ண வேண்டும்.

கடைப்பிடித்து - உறுதியாக. மாறுகொள்ளுத லாவது - வாத பித்த கவங்களுக்குப் பொருந்தாதவற்றை உண்ணுதலும், மழைக்காலம், பனிக்காலம், வெயிற் காலம், காலை, மாலை, நண்பகல் என்னுங் காலவேறுபாடு களுள் ஒன்றற்காவன பிறிதொன்றற் காகாமையும், தேனும் நெய்யும் நல்ல சுவையும் சாரமும் உடையவை யேனும் அவ்விரண்டையும் ஒரே அளவாகக் கலந்தால் நஞ்சாவது போலவுமாம். காலம், சுவை சாரங்களில் மாறு கொள்ளாமல் உண்ணுவிடின் வாத முதலியன மிக்கும் குறைந்தும் நோய்செய்து கொல்லும். (ச)

945 மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு.

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் - அம்மூவகை மாறுபாடு மில்லாத உணவை மனம் விரும்பிய அளவன்றிப் பிணிவாராத அளவு ஒருவன் உண்பானாயின், உயிர்க்கு ஊறுபாடு இல்லை - அவன் உயிர்க்கு நோய்களால் துன்பம் உண்டாதல் இல்லை.

மாறுபாடு 944ஆம் குறளுரையில் கூறப்பட்டவை. மாறுபாடு இல்லாத உணவையும் குறைவாக உண்ண வேண்டும். (ரு)

946 இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபேரிரையான்க ணோய்.

இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம் போல் - உண்ணும் அளவில் சிறிது குறைய உண்பது நன்றென அறிந்து அவ்வாறே உண்பவனிடம் இன்பம் நீங்காது நிற்பதுபோல, கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும் - மிகப்பெரிய உணவை உண்பவனிடம் நோய் நீங்காது நிற்கும்.

இன்பமாவது - வாத முதலிய மூன்றும் அதனதன் நிலையில் நிற்பதால் துன்பமின்றி இன்புறுதல். இரையை அளவின்றி உண்டு அதனால் வருந்தும் விலங்கோ டொத்தலின் 'இரை' என்றார். (சு)

947 தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின் - ஒருவன் தன் உடல்நிலைக்கேற்ற உணவையும் காலத்தையும் ஆராயாது வேண்டிய உணவை வேண்டியபோது வயிற்றுத் தீயின் அளவல்லாமல் மிக உண்பானாயின், நோய் அளவு இன்றிப்படும் - அவனிடம் நோய்கள் அளவின்றி வளரும்.

உடல்நிலை - வாத முதலிய மூன்றும். வயிற்றுத்தீ - பசி. இவை ஆறு பாட்டானும் உண்ணும் வகை கூறப்பட்டது. (எ)

948 நோய்நாடி நோய்முதல் நாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

நோய் நாடி - ஒரு நோயாளியின் நோயை அதன் குறிகளால் இன்னதென்று அறிந்து, நோய் முதல் நாடி - பின் அந்நோய் வந்ததன் காரணத்தை அறிந்து, அது தணிக்கும் வாய் நாடி - பின் அந்நோயைத் தீர்க்கும் வழியை அறிந்து, வாய்ப்பச்செயல் - அவ்வழியில் தப்பாமல் மருத்துவம் செய்க.

குறி - நாடி. காரணம் - உணவும் செயலும் (941). தணிக்கும் வாய் - அறுத்தல், சுடுதல், குருதிநீக்கல், மருந்து செய்தல் முதலியன. தப்பாமை - பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறையில் தப்பாமை. இது மருத்துவன் மருத்துவம் செய்யும் முறை கூறிற்று. (அ)

949 உற்ரு னளவும் பிணியளவுங் காலமுங்
கற்ருன் கருதிச் செயல்.

கற்ருன் - மருத்துவ நூலைக் கற்றவன், உற்ருன் அளவும் - நோயாளியின் அளவையும், பிணி அளவும்-நோயின் அளவையும், காலமும் கருதிச் செயல் - மருத்துவஞ் செய்தற்கேற்ற காலத்தையும் நன்கு எண்ணிப் பார்த்துச் செய்யவேண்டும்.

நோயாளி அளவு - பருவம், வாதமுதலிய மூன்று, உடல் வலி ஆகியவற்றின் அளவு. பிணியளவு - தீர்க்கத் தக்கது, தீர்க்கத்தகாதது, பெரும்பான்மை தீர்க்கத் தக்கது என்னும் வகையும், தொடக்கம், நடு, ஈறு என்னும் நோயின் பருவ வேறுபாடும், வன்மை மென்மை களும். காலம் - நோயாளியின் அளவு, நோயளவுக்கேற்ற காலம். (௯)

950 உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

மருந்து - பிணிக்கு மருந்தாவது, உற்றவன்-நோயுற்றவன், தீர்ப்பான்-நோய்தீர்க்கும் மருத்துவன், மருந்து- மருந்து, உழைச் செல்வான் என்ற அப்பால் நாற்கூற்று- மருத்துவம் செய்பவன் (நர்ஸ்) என்ற அந்நான்கு பிரிவுகளையுடையது.

பிணிக்கு மருந்து—நோய்க்கு மருத்துவம் செய்தல். உழை - இடம். உழைச் செல்வான் - அடிக்கடி நோயாளியிடம் சென்று மருந்து கொடுத்து வருபவன். நோயாளி மருத்துவர் சொற்படி நடக்கவேண்டும். மருத்துவர் கவனித்து மருந்து கொடுக்க வேண்டும். மருந்து நோய்க்கு ஏற்றதாக இருக்க வேண்டும். உழைச்செல்வான் (நர்ஸ்) கவனித்து ஒழுங்காக மருந்து கொடுத்து வர வேண்டும். இவ்வாறு இந் நான்கும் நன்கு அமைந்

ததே மருத்துவம் என்பதாம். இந் நான்கும் நன்கு அமைந்தால்தான் நோய் எளிதில் நீங்கும் என்பது கருத்து. உழைச் செல்வான்-கம்பவுண்டரையும் குறிக்கும். (௰)

நட்பியல் முற்றிற்று

# 7 குடியியல் - (13)

குடிமக்களின் இலக்கணம். குடி - நாட்டுக் குடிமக்கள். இவர்கள் நாட்டின் உயிர்நாடி போன்றவர்; உழவு முதலிய தொழில்கள் செய்து தம் நாட்டை நன்னாட்டின் முன்னாட்டும் நாடாக்குபவர்.

## 96 குடிமை

குடிமக்கள் தன்மை.

951 இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

இல் பிறந்தார் கண் அல்லது - நற்குடிப் பிறந்தாரிடத் தல்லது பிறரிடத்தில், செப்பமும் நாணும் ஒருங்கு இயல்பாக இல்லை - செம்மையும் நாணமும் ஒருங்கே இயல்பாக உண்டாகா.

நற்குடி - வழிவழியாக நல்லொழுக்க முள்ள குடி. இது உயர் குடி எனவும் வழங்கும். செம்மை - எண்ணமும் சொல்லும் செயலும் ஒன்றுதல், நடுவு நிலைமை. குடிப் பிறந்தார்க்கு இவை இயல்பாக அமையும்; பிறர்க்குக் கற்பித்தாலும் நீடித்திரா. (க)

952 ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

குடிப்பிறந்தார் - உயர் குடியில் பிறந்தவர்கள், ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார் - ஒழுக்கம், உண்மை, நாணம் என்ற இம் மூன்றிலும் தவறாது நடப்பார்கள்.

நாணம் - தமக்கொவ்வாத காரியஞ் செய்ய நாணுதல். இம் மூன்றையும் இயல்பாக உடையராயிருப்பர். இது அக்குடிப் பழக்கம். (உ)

953 நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

வாய்மைக் குடிக்கு-எக்காலத்தும் ஒழுக்கந் தவறாத குடிப்பிறந்தார்க்கு, நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப - வறியார் சென்றால் முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந் நான்கும் உரிய கூறு என்று சொல்லுவர் அறிவுடையோர்.

இல்லாரை எல்லாரும் எள்ளுதலின், (752) இகழாமை குடிப்பிறந்தார் கூறாயிற்று. உரிய கூறு - இயல்பாக அமைந்தது. (ங)

954 அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

அடுக்கிய கோடி பெறினும் - பலவாக அடுக்கப்பெற்ற கோடி பொருளைப் பெற்றாலும், குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர் - உயர்குடிப் பிறந்தவர் தமது ஒழுக்கம் குன்றும் செயல்களைச் செய்யார்.

ஒழுக்கம் குன்றும் செயல் - ஒழுக்கம் குன்றுதற் கேதுவான செயல்; கெட்ட காரியம். (ச)

955 வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

*பழங்குடி - பழைய குடியில் பிறந்தவர், வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் - தாம் கொடுக்கும் பொருள் முன்பு இருந்ததைக் காட்டிலும் குறைந்த விடத்தும், பண்பில் தலைப்பிரிதல் இன்று - தமது இயல்பினின்றும் நீங்கமாட்டார்.*

*பழங்குடியாவது,*

*"கல்தோன்றி மண்தோன்று காலத்தே வாளொடு*
*முன்தோன்றி மூத்த குடி"*
*(புறம்: வெண்பாமாலை-கரந்தை 14)*

*"பதியெழ லறியாப் பழங்குடி" (மலைபடுகடாம் 479)*
*"பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய புகார்"*
*(சிலப்: 1: 15)*

*என்றாற் போலத் தொன்று தொட்டு வருங்குடி. பண்பில் தலைப்பிரிதல் - இல்லையென் றிரப்போர்க்கு இல்லையெனல். வழங்குவது உள்வீழ்வதே அவர்க்கு வறுமையாகும்.* (ரு)

956 சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமேன் பார்.

*மாசு அற்ற குலம் பற்றி வாழ்தும் என்பார் - குற்றமற்ற தம் குடிக்கேற்ப வாழ்கின்றேம் என்று எண்ணுபவர், சலம் பற்றிச் சால்பு இல செய்யார் - வறுமையுற்ற போதும், வஞ்சனையாகத் தங்குடிக்கு ஏலாத செயல்களைச் செய்யார்.*

*நற்குடிப் பிறந்தவர் வறுமையுற்ற போதும் தங்குடிக் கேலாத செயல்களைச் செய்யார். குலம் - குடி.* (சு)

957 குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

குடிப் பிறந்தார்கண் குற்றம் - உயர் குடிப் பிறந்தவர்களிடம் காணப்படும் குற்றம் சிறிதாயினும், விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும் - வானத்தில் மதியிடத்துள்ள மறுவைப் போல உயர்ந்து காணப்படும்.

குடியின் உயர்ச்சியானும், மதிபோன்ற அவருடைய நற்குணங்களோடு மாறுபடுதலானும் அச்சிறு குற்றம் உலகெங்கும் பரந்து காணப்படும் என்பதாம். (எ)

958 நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

நலத்தின்கண் நார் இன்மை தோன்றின் - நல்ல குலத்தில் பிறந்தவனிடம் அன்பின்மை காணப்பட்டால், அவனைக் குலத்தின் கண் ஐயப்படும் - அவனை அக்குடிப் பிறப்பில் தப்பினவனென்று ஐயப்படும் உலகம்.

தோன்றின் என்பது தோன்றாமை விளக்கி நின்றது. அன்பின்மையால் ஈயாமை, கடுஞ்சொல் முதலியன குறிப்பிட்டனர். குலநல முடையவனிடம் இவை தோன்றலின் உலகம் ஐயப்படலாயிற்று. (அ)

959 நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சோல்.

நிலத்தில் கிடந்தமை கால் காட்டும் - நிலத்தின் இயல்பை அந்நிலத்தில் முளைத்த முளை காட்டும்; குலத்தில் பிறந்தார் வாய்ச்சொல் காட்டும் - அது போல, உயர் குடியில் பிறந்தவர் இயல்பை அவர் வாயிலிருந்து வரும் சொற்கள் காட்டிவிடும்.

கிடந்தமை - உள்ளபடி; அதாவது இயல்பு. கால் - பயிரின் முளை. முளைத்தவுடனே நிலத்தின் நன்மையும் தீமையும் தெரிதலின் இலை முதலியன கூறவில்லை. 'விளை

யும் பயிர் முளையிலேயே தெரியும்' என்பது பழமொழி. ஆகவே, குடிப்பிறந்தாரின் செயல் முதலியன வேண்டாம், சொல்லே போது மென்பதாம். இன் சொல்லே குலத்தியல்பை அறியுங் கருவிகளுள் முதன்மை யானது. (௯)

960 நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. [வேண்டின்

நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும் - ஒருவன் தனக்கு நலத்தை விரும்புவானாயின் நாணுடைமையை விரும்பக் கடவன்; குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக - உயர்குடித் தன்மையை விரும்புவானாயின் எல்லோரிடத்தும் பணிதலை விரும்பக் கடவன்.

நலம் - புகழ், அறங்கள். எல்லாரிடத்தும் பணிவாக நடந்து கொள்ளுதலே உயர்குடிப் பிறப்பின் தன்மையாகும். (௰)

## 97 மானம்

மானமாவது - எப்போதும் தந்நிலையில் தாழாமையும், தாழநேரின் உயிர் வாழாமையுமாம்.

961 இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

இன்றி அமையாச் சிறப்பின ஆயினும் - இன்றியமையாத சிறப்பை உடையனவாயினும், குன்ற வருப விடல்- குடிப்பிறப்புக் குறையவரும் தொழில்களைச் செய்யாது விடுக.

குடிப்பிறப்புக்குத் தகாத செயலைச் செய்யக்கூடாது குடிப்பிறப்பு - உயர்குடியின் தன்மை. (க)

962 சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரோடு
பேராண்மை வேண்டு பவர்.

*சீரோடு பேராண்மை வேண்டுபவர் - புகழுடன் பெரிய ஆண்மையை விரும்புபவர், சீரினும் சீர் அல்ல செய்யார் - அப் புகழைச் செய்யும்போதும் தம் குடிப் பிறப்புக்கு ஒவ்வாத இழிவான செயல்களைச் செய்யார்.*

*நிலையுடைய புகழின் பொருட்டாகவும் மானமுடையவர் இழிசெயலைச் செய்யமாட்டார்.* (உ)

963 பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

*பெருக்கத்துப் பணிதல் வேண்டும்-குடிப்பிறந்தார்க்குச் செல்வம் பெருகியபோது எல்லோரிடத்தும் பணிவு வேண்டும்; சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும்-செல்வம் மிகவும் குறைந்தபோது பணியாமை வேண்டும்.*

*பணியாமை - தாழ்வு வாராமல் பழைய உயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலத்துத் தாழ்வும் வறுமைக் காலத்து உயர்வும் வேண்டும்.* (௩)

964 தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

*மாந்தர் - உயர்குடிப்பிறந்தவர், நிலையின் இழிந்தக் கடை - தம் குடிக்குரிய நிலையைவிட்டுத் தாழ்ந்தவிடத்து, தலையின் இழிந்த மயிர் அனையர் - தலையைவிட்டு நீங்கிய மயிரைப்போல் இகழப்படுவர்.*

*மயிர் தலையிலிருக்கும்போது நன்கு மதிக்கப்படுதலும், தலையிலிருந்து உதிர்ந்துவிட்டால் கையால் தொடவும் கூடாததாய் அவ்வளவு இழிவுபடுத்தப்படுவதும் போலவே குடிப்பிறந்தாரும் நிலையில் தாழ்ந்தவிடத்து இழிவுபடுத்தப்படுவர்; மதிக்கப்படார்.* (௪)

965 குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

குன்றின் அனையாரும்-குடிப்பிறப்பால் மலைபோன்ற உயர்ச்சியுடையாரும், குன்றுவ குன்றி அனைய செயின் குன்றுவர் - இழிசெயல்களை ஒரு குன்றிமணி அளவு செய்தாலும் பெருமை குன்றுவர்.

மிகுந்த குடிப்பெருமை யுடையோரும் ஒரு சிறுதகாத செயல் செய்யினும் பெருமை குன்றுவர். (ரு)

966 புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

இகழ்வார்பின் சென்று நிலை - மானத்தைவிட்டுத் தன்னை இகழ்வார்பின்னே ஒருவன் சென்று ஒன்றை வேண்டி நிற்கின்ற நிலையானது, புகழ் இன்று - புகழ்பயவாது; புத்தேள் நாட்டு உய்யாது - வானுலகத்தே அவன் பெயரைச் செலுத்தாது; மற்று என்-இனி அது அவனுக்குச் செய்வது யாது?

புத்தேள் நாடு எது என்பதை முகவுரையில் காண்க. பெயரைச் செலுத்துதல் - அவ்வானோர் மதிக்கும்படி செய்தல். இகழ்வாரிடம் ஒன்றைவேண்டி நிற்றல் புகழ் பயவாததோடு, அயல்நாடரும் மதியாமல் செய்யும் என்பதாம். ஆல் - அசை. (சா)

967 ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

ஒட்டார்பின் சென்று ஒருவன் வாழ்தலின்-பகைவர் பின்சென்று ஒருவன் வாழ்வதைக் காட்டினும், அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று -முன்னின்ற வறுமை நிலையிலேயே நின்று இறந்தான் என்று சொல்லப்படுதல் நல்லது.

அயலாரிடம் பொருள் பெற்று உயிர்வாழ்வதை விட வறுமையினால் இறந்துபடுதல் நல்லது. (எ)

968 மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கைபெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

பெருந்தகைமை பீடு அழிய வந்தவிடத்து - உயர் குடிக்குரிய பெருமையானது தன் வலிமை அழிய வந்த விடத்து, ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ-இறத் தலைவிட்டு உடம்பைப் போற்றும் வாழ்க்கையானது பின்னும் இறவாமைக்கு மருந்தாகுமோ? ஒருபோதும் ஆகாது.

பெருமை தன்வலிமை அழிதல் - பெருமை குன்றுதல்- மானங்கெடுதல். சாவது உறுதியாகையால் மானங் கெடாமல் உயிர்விடுதலே உயர்குடிப்பிறப்புக்கு ஏற்றதாகும். (அ)

969 மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் - ஒரு மயிர் நீங்கினும் உயிர்வாழாத கவரிமானைப் போன்றவர், மானம் வரின் உயிர்நீப்பர் - உயிர்நீங்கினால் மானம் வருமாயின் உயிரைவிடுவர்.

உயிரைவிட்டால் மானம் நிலைக்குமெனின் உயிரை விட்டு மானத்தை நிலைநிறுத்த வேண்டும். கவரிமானின் உவமை - உயர்குடிப் பிறந்தோர்க்கு உயிர்விட்டு மானங் காத்தல் இயல்பு என்பதை விளக்கிநின்றது. மேல் (968) உயிர்விட வேண்டுமென்றதை உவமையால் விளக்கினார். (கூ)

970 இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

*இளிவரின் வாழாத மானம் உடையார் ஒளி-தமக்குத் தாழ்வு வந்தபோது உயிர்வாழாத மானமுடையவரது புகழை, உலகு தொழுது ஏத்தும்-உலகினர் தொழுது வாழ்த்துவர்.*

*மானங்காத்து உயிர்விட்டவர் புகழை உலகினர் என்றும் போற்றுவர் எனவே, உயிருக்காக மானத்தை விட்டு உலகப்பழிக் காளாகக் கூடாது.* (ய)

## 98 பெருமை

*செயற்கரிய செய்தல், செருக்கின்மை, பிறர் குற்றங் கூறாமை முதலிய நற்குணங்களால் சிறந்த பெரியாரது தன்மை.*

971 ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃ திறந்து வாழ்து மெனல்.

*ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை - ஒருவனுக்குப் பெருமையாவது பிறரால் செய்தற்கரிய செயலைச் செய்வோம் என்று கருதும் ஊக்க மிகுதி, ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல்-ஒருவனுக்குச் சிறுமையாவது அவ்வூக்கத்தை ஒழித்து வாழ்வோம் என்று எண்ணுதல்.*

*செயற்கரிய செய்யும் ஊக்கமே பெருமை யாகும்; அவ்வூக்கமின்மை சிறுமையாகும். உள்ளம் - ஊக்கம். வெறுக்கை-மிகுதி. இறந்து - கடந்து, ஒழித்து.* (க)

972 பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும்-எல்லா மக்களுக்கும் பிறப்பு ஒக்கும்; செய் தொழில் வேற்றுமையான் சிறப்பு ஒவ்வா - அவரவர்கள் செய்யும் தொழில் வேற்றுமையால் பெருமை சிறுமை என்னும் சிறப்பு ஒவ்வா.

உயிரென்றது மக்களுயிரை. சிறப்பு ஒவ்வாமை-ஒருவன் செய்யும் நல்ல தொழிலினால் பெருமையும், கெட்ட தொழிலினால் சிறுமையும் அடைதலாம். எல்லா மக்களும் பிறப்பினால் ஒரு தன்மையினரே; செய்யுந் தொழிலுக்குத் தக்கவாறு பெரியார் சிறியார் என்னும் பெயர் பெறுகின்றனர். அவ்வாறு மதிக்கப் படுகின்றனர் என்பதாம். 26ஆம் குறளைப் பார்க்க. (உ)

973 மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர் - சிறியோர் மேலான இடத்திலிருந்தாலும் பெரியோராகார்; கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லார் - பெரியோர் கீழான இடத்திலிருந்தாலும் சிறியோராகார்.

மேலிருத்தல் கீழிருத்தல்களால் செல்வமும் வறுமையும்; மேல் கீழ்களால் பெருமையும் சிறுமையும் குறிக்கப் பட்டன. (௩)

974 ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

ஒருமை மகளிரே போல - ஒருமனப் பெண்டிர் தம்மைத் தாம் காத்துக்கொள்ளுதல் போல, பெருமையும் தன்னைத்தான் கொண்டு ஒழுகின் உண்டு - பெருமையும்

ஒருவன் தன்னைத்தான் காத்துக்கொண்டு நடப்பானுயின் அவனிடம் உள்ளதாகும்.

பொது மகளிரை 'இருமனப் பெண்டிர்' (920) என்றதுபோலக் குலமகளிரை ஒருமை மகளிர் என்றுர். குல மகளிர் தம்மைத்தாம் காத்துக் கொண்டு நடப்பதுபோல, ஒருவன் மனமொழி மெய்களை அடக்கி, நல்லன செய்யின் பெருமை யுண்டாகும் என்பதாம். குலமகளிரும் பெருமையுடையோரும் தற்காத்தலால் ஒத்தவராவர். (ச)

975 பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

பெருமை உடையவர் - பெருமை உடையவர், அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார் - செய்தற்கு அரிய செயல்களை அவற்றிற்குரிய வழியிலே செய்யவல்லவர் ஆவர்.

அரிய செயல்களை ஏற்ற வழியில் செய்பவர் பெருமை யுடையவராவர். (ரு)

976 சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கோள் வேமென்னு நோக்கு.

பெரியாரைப் பேணிக்கொள்வேம் என்னும் நோக்கு - பெரியாரைப் போற்றி அவரைத் துணையாகக்கொள்வோம் என்னும் கருத்து, சிறியார் உணர்ச்சியுள் இல்லை - சிறியவர்களது உணர்வின்கண் இல்லை.

பெரியாரைத் துணைக்கொள்ளும் எண்ணம் சிறியார் மனத்தில் தோன்றுவதில்லை. (சு)

977 இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

சிறப்புந் தான் - சிறப்பானது, சீர் அல்லவர்கண் படின் - சிறியோரிடம் உண்டாகுமாயின், இறப்பே புரிந்த

தொழிற்றும் - செருக்கினல் அளவுகடந்து போகும் செயலை உடையவராக்கிவிடும்.

சிறப்பு - கல்வி செல்வம் முதலியவற்றில் மிக்கிருத்தல். சிறியவர்களிடம் சிறப்புக்குரிய தன்மைகள் வாய்க்குமாயின் அவர் செருக்குடையவராவர். இறத்தல்- அளவு கடத்தல். (எ)

978 பணியுமா மேன்றும் பெருமை சிறுமை
அணியுமாங் தன்னை வியந்து.

பெருமை என்றும் பணியும் - பெரியோர் எப்போதும் அடங்கி நடப்பர்; சிறுமை தன்னைவியந்து அணியும்- சிறியோர் தம்மைத்தாமே புகழ்ந்து பெருமைப்படுத்திக் கொள்வர். ஆம் இரண்டும் - அசை. (அ)

979 பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

பெருமை பெருமிதம் இன்மை - பெருமையாவது செருக்கில்லாதிருத்தல், சிறுமை பெருமிதம் ஊர்ந்து விடல் - சிறுமையாவது செருக்கின் முடிவில் நின்று விடுதல். செருக்கின் முடிவு - அளவு கடந்து செருக்குக் கொள்ளுதல். (கூ)

980 அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

பெருமை அற்றம் மறைக்கும் - பெரியோர் பிறரது குற்றத்தை மறைத்துச் சொல்லுவர்; சிறுமை குற்றமே கூறிவிடும் - சிறியோர் பிறரது குற்றங்களையே கூறிவிடுவர்.

பெரியோர் குற்றத்தை மறைத்துக் குணத்தைக் கூறுவர்; சிறியோர் குணத்தை மறைத்துக் குற்றமே கூறுவர். (ய)

## 99 சான்றாண்மை

சான்றாண்மை - எல்லா நற்குணங்களாலும் நிறைந்தவர் தன்மை. சால்பு - நிறைவு. சால்பை ஆளுதல் - சான்றாண்மை.

981 கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கோள் பவர்க்கு.

கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு - நமக்குத் தகுவது இதுவென்றறிந்து எல்லா நற்குணங்களையும் ஆளுந் தன்மையை மேற்கொண்டொழுகுவார்க்கு, நல்லவை எல்லாம் கடன் என்ப - நல்ல குணங்களெல்லாம் இயல்பாக உள்ளனவென்று கூறுவர் அறிவுடையோர்.

தகுவது - தக்கது; நம்மால் கைக்கொள்ளத் தக்கது இது என்றறிதல். எல்லா நற்குணங்களையும் ஆளும் தன்மை - நற்குணங்களெல்லாம் பொருந்திய தன்மை; நற்குணங்களின் தொகுதி. நல்ல குணங்களெல்லாம் இயல்பாக உள்ளதே சான்றாண்மையாகையால் சான்றோர்க்கு அதுவே இலக்கணமாகக் கூறினர். (க)

982 குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

சான்றோர் நலன் குணநலமே - சான்றோர்களது நலமாவது நற்குணங்களாகிய நலமே யாகும், பிறநலம் எந்நலத்தும் உள்ளது அன்று - குணநலமொழிந்த உறுப்புக்களாலாகிய நலம் ஒரு நலத்தினும் உள்ளதன்று.

நலம் - சிறப்பு. உறுப்புக்களாலாகிய நலம் - உடலழகுச் சிறப்பு; அதாவது உருவச்சிறப்பு. குடிப்புறப்பு, கல்வி முதலிய நூலோர் எடுத்த நலங்களில் இவ்வுடல்

நலம் சேராமையால், 'எந்நலத் துள்ளதூஉம் அன்று' என்றார். சான்றோர்க்கு நற்குணச் சிறப்பே சிறப்பாகும், உருவச் சிறப்புச் சிறப்பாகாது. (௨)

983 அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை யோடு ஐந்து - அன்பும் நாணும் ஒப்புரவும் கண்ணோட்டமும் உண்மையும் என்ற ஐந்தும், சால்பு ஊன்றிய தூண்-சால்பு என்னும் கூரையைத் தாங்கும் தூண்களாகும்.

நாண் - குற்றஞ் செய்ய நாணுதல். கண்ணோட்டம்- இரக்கம். இவ்வைந்தும் சால்பு என்னும் கூரையைத் தாங்கிய தூண்களாகும். சால்பைக் கூரையாகக் கூறாத தால் ஒருகூற் றுருவகம். இவ்வைந்து குணங்களில் ஒன் றில்லையேனும் சால்பு நில்லாது என்பது உவமையால் பெறப்படும். (௩)

984 கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

நோன்மை கொல்லா நலத்து - நோன்பு நோற்றல் ஒருயிரையும் கொல்லாத அறத்தின்பாலது; சால்பு பிறர் தீமை சொல்லா நலத்தது - அதுபோல, சால்பு பிறர் குற் றங்களைச் சொல்லாத குணத்தின் பாலது.

அறத்தின்பாலது-அறத்தைச் சேர்ந்தது. நோன்புக் குக் கொல்லா அறஞ் சிறந்தது போலச் சால்புக்குப் பிறர் குற்றஞ் சொல்லாக் குணம் சிறந்த தென்பதாம். கொல் லாத, சொல்லாத. (௪)

985 ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

ஆற்றுவார் ஆற்றல் பணிதல்-ஒரு தொழிலைச் செய்து முடிப்போரது வல்லமையாவது அத்தொழிலுக்குத்

துணை செய்வாரிடத்தில் பணிவாக நடந்துகொள்ளுதல்; அது சான்றோர் மாற்றாரை மாற்றும் படை - அதுவே சால்புடையவர் தம் பகைவரை ஒழிக்கும் கருவியாகும்.

ஆற்றல் - ஒரு தொழிலில் வல்லவராகுந்தன்மை. சால்புக் கேற்ற பணிதற்குணத்தது சிறப்புக் கூறுவார், துணைவரிடம் நடந்துகொள்ளும் முறையும் கூறினார். இது தம்மைப்போல் பிறரையும் எண்ணும் சரிநிகர்ப்பண்பு.(ரு)

986 சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கோளல்.

சால்பிற்குக் கட்டளை யாது எனின் - சால்பாகிய பொன்னின் மாற்றை அறிதற்கு உரைகல் எதுவென்றால், தோல்வி துலை அல்லார் கண்ணும் கொளல்-அது தன்னைக் காட்டிலும் வலியவரிடம் கொள்ளும் தோல்வியை மெலிய வரிடமும் கொள்ளுதல்.

துலை - ஒப்பு. துலை அல்லார் - தனக்கு ஒப்பில்லாத மெலியார். தோல்வியைக் கொள்ளுதல் - வெல்லும் ஆற்ற லுடையராயிருந்தே தோல்வியை ஏற்றுக்கொள்ளுதல். தம்மினும் மெலியாரை வெல்லக்கருதி அவரைத் தமக்கு எதிரியாகக் கொள்ளாது தோல்வியால் அவரினும் உயர் வாராதல்; அதனால் சால்பின் அளவு அறியப்படும் என்ப தால் ஒருகூற்றுருவகம். மெலியாரிடம் கொள்ளும் தோல் வியே, மெலியாரை வெல்லக் கருதாமையே சால்பாகிய பொன்னின் உரைகல்லாகும். (சா)

987 இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் - தமக்குத் தீமை செய்தார்க்கும் நன்மையே செய்யா ராயின், சால்பு என்ன பயத்தது - அவரது சால்பு வேறு என்ன பயனை யுடையது.

*தாமும் இன்னா செய்வாராயின் சால்பினால் ஒரு பயனும் இல்லை யென்பதாம்.* (எ)

988 இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

*சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் - சால்பு என்னும் உறுதி உண்டாகப் பெற்றால், ஒருவதற்கு இன்மை இளிவு அன்று - ஒருவனுக்கு வறுமையானது இகழ்ச்சியாகாது.*

*சால்புடையார் வறுமையுற்றாலும் மேம்படுவர் என்பதாம்.* (அ)

989 ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

*சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார் - சான்றாண்மையாகிய கடலுக்குக் கரை என்று சொல்லப்படுபவர், ஊழி பெயரினும் தாம் பெயரார் - ஏனைய கடல்கள் கரை புரளும்படி காலம் மாறுபட்டாலும் தாம் மாறுபடார்.*

*சான்றாண்மையின் பெருமை தோன்ற அதைக் கடலாக்கியும், அதைத் தாங்கி நிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியும் கூறினார். ஒரு கூற்றுருவகம். இது தென் கடல் பொங்கித் தமிழ் நிலங் கொண்ட வரலாற்றை நினைப் பூட்டுகிறது. அவ்வாறு இனியும் கரை புரண்டு வரினும் மாறுபடாத உறுதியுடையார் என்பதாம்.* (கூ)

990 சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

*சான்றவர் சான்றாண்மை குன்றின் - சான்றோர் தம் தன்மை குன்றுவாராயின், இரு நிலந்தான் பொறை தாங்காது - பெரிய நிலவுலகமும் தன் சுமையைத் தாங்காததாகிவிடும்.*

சான்றவர்க்குச் சான்றாண்மை குன்றாமையும், நிலத்துக்குத் தாங்கலும் இயல்பாதலின் அவை எப்போதும் உளவாகா என்பது தோன்ற நின்றமையின் மன் ஒழியிசை. (ம)

## 100 பண்புடைமை

பெருமை, சான்றாண்மை முதலிய குணங்களில் வழுவாமல், பிறர் இயல்பறிந்து அதற்கேற்ப ஒழுகுங் குணம்.

991 எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

யார்மாட்டும் எண்பதத்தால் - யாவரிடத்தும் எளிய செவ்வியராதலால், பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப - பண்புடைமை என்னும் நன்னெறியினை அடைதல் எளிதென்று சொல்லுவர் அறிவுடையோர்.

செவ்வி - பிறர் எளிதில் காணற்குரிய நிலை. காட்சிக்கெளியராதல் பண்புடைமை எய்துதற்கு ஏற்ற வழியாகும். பதம் - நிலை. பண்புடைமை - பிறர் இயல்புகளுக்கேற்ப ஒழுகுதல். (க)

992 அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

அன்புடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ்விரண்டும் - யாவரிடத்தும் அன்புடையராயிருத்தலும் உயர் குடிப் பிறத்தலும் ஆகிய இவ்விரண்டும், பண்புடைமை என்னும் வழக்கு - பண்புடைமை என்று உலகத்தார் கூறும் நன்னெறி யாகும்.

உயர் குடிப்பிறத்தல் என்றது - உயர்குடிப் பிறந்தாரின் குணம் செயலை. அன்புடைமையும், உயர்குடிக்கேற்ற நற்குண நற்செயலும் பண்புடைமையாகும். (உ)

993 உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று - செறியத் தகாத உறுப்புக்களால் ஒத்தல் ஒருவனுக்கு நன்மக்களோடு ஒப்பதாகாமையின் அது பொருந்துவதன்று, ஒப்பதாம் ஒப்பு வெறுத்தக்க பண்பு ஒத்தல் - இனிப் பொருந்துவதான ஒப்பாவது செறியத்தக்க பண்பாலொத்தல்.

வெறுத்தல் - செறிதல்; வேறுபாடின்றி ஒன்றாகப் பொருந்துதல். உறுப்பொத்தல் - கைகால் முதலிய உறுப்புக்களால் ஒத்தல். பண்பொத்தல் - நன்மக்களுடைய பண்பினை உடையனாதல். பண்பொத்தலே நன்மக்களோடு ஒத்ததாகும், உறுப்பொத்தல் ஒத்ததாகாது. (ங)

994 நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார் பண்பு - முறையையும் அறத்தையும் விரும்பிய பயனுடையவரது பண்புடைமையை, உலகு பாராட்டும் - உலகத்தார் கொண்டாடுவர்.

பண்புடைமையால், முறையையும் அறத்தையும் விரும்பிப் பயனுடையராதலால் அதனை உலகம் பாராட்டுமென்றார். (ச)

995 நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது - இகழ்ச்சியானது ஒருவனுக்கு விளையாட்டின் கண்ணும் துன்பந்தருவ

தாகும், பாடு அறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள - ஆதலால், பிறர் இயல்பறிந்து நடப்பவர்களிடத்துப் பகையின் கண்ணும் இனிய பண்புகளே உள்ளன.

பாடறிவாரெனவே, அவ்வின்னாமையறிதலும், அவ்வின்னாமையை அறிந்தவர் பின் இனியவே செய்வார் என்பதும் கருத்து. பண்புடையார் பகைவர்க்கும் இன்னாதன செய்யார். (ரு)

996 பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு-பண்புடையவரிடத்திற் படுதலால் உலகியல் எப்போதும் நடைபெற்றுவருகின்றது, இன்றேல் அது மண்புக்கு மாய்வது- இல்லையேல், உலகியல் மண்ணில் புகுந்து மாய்ந்து போய் விடும்.

உலகம் இடுகாடாகிவிடும் என்பது. பண்புடையார் துணையாலே உலகியல் நடைபெற்று வருகிறது. இல்லையேல் உலகியல் நடைபெறாது என்பது கருத்து. (சா)

997 அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

மக்கட்பண்பு இல்லாதவர் - மக்களுக்குரிய பண்பில்லாதவர், அரம்போலும் கூர்மையரேனும் - அரத்தின் கூர்மை போல அறிவுக்கூர்மை யுடையவர் ஆயினும், மரம் போல்வர்-ஓரறிவுயிரான மரத்திற்கு ஒப்பாவர்.

நுண்ணறிவுடையரேனும், பிறர் இயல்பறிந்து ஒழுகும் மக்கட்பண்பு இலராயின் மக்களாகார், மரத்திற்கு ஒப்பாவர். (எ)

998 நண்பாற்ரு ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்ரு ராதல் கடை.

நண்பு ஆற்ருராகி நயம் இல செய்வார்க்கும் - தம் மொடு நட்புச் செய்யாது பகை செய்வாரிடத்தும், பண்பு ஆற்ருராதல் கடை - தாம் பண்புடையவராய் நடந்து கொள்ளாமை அறிவுடையார்க்குக் குற்றமாகும்.

நயம் - அன்பு. நயம்இல - பகை. அறிவுடையரா யிருந்தும் பகை செய்யின் தாமும் அவர் தன்மையர் ஆவர் என்பார் 'கடை' என்ருர். (அ)

999 நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

நகல் வல்லர் அல்லார்க்கு - பண்பின்மையால் ஒருவ ரோடு கலந்து மனமகிழ மாட்டாதார்க்கு, மாயிரு ஞாலம் பகலும் இருட்பால் பட்டன்று - மிகவும் பெரிய உலக மானது இருளில்லாத பகற்காலத்திலும் இருளின்கண் கிடாந்ததாகும்.

எல்லாரோடும் கலந்துறவாடத் தெரியாத பண்பி லார்க்கு உலகியல் தெரியாததால் உலகம் இருளின் கண் பட்டன்று என்ருர். (கூ)

1000 பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

பண்பு இலான் பெற்ற பெரும் செல்வம் - பண்பில் லாதவன் பெற்ற பெருஞ் செல்வமானது ஒருவர்க்கும் பயன்படாமற் போதல், நன்பால் கலந்தீமையால் திரிந் தற்று - நல்ல மாட்டுப்பால் ஊற்றிவைத்த கலத்தின் குற் றத்தால் களிம்பேறி ஒருவர்க்கும் பயன் படாமல் போவது போலும்.

கலம் - செம்பிஞற்செய்த ஏனம். களிம்பு - கைப்புச் சுவை. செப்புக் கலத்தில் ஊற்றி வைத்த இனிய சுவை யுடைய பால் கைத்துப் பயன்படாமற் போவது போல, பண்பிலான் செல்வமும் பயன்படா தென்பதாம். (ய)

# 101 நாணுடைமை

தமக்கு ஒவ்வாத காரியம் செய்ய நாணுடையராதல். அதாவது, இழிந்த செயல்களைச் செய்ய நாணுதல்.

1001 கருமத்தா ல்நாணுத ஞணுத் திருநதல்
நல்லவர் நாணுப் பிற.

நாணுக் கருமத்தால் நாணுதல் - நல்லோர்களுக்கு உரிய நாணுவது இழிந்த செயல்களால் நாணுதல், பிற திரு நுதல் நல்லவர் நாணு - மனமொழி மெய்களின் அடக்கத்தால் வரும் பிற நாண்கள் அழகிய நெற்றியை உடைய குலமகளிர் நாண்களாகும்.

தமக்கு ஏலாத செயல்களைச் செய்ய வெட்கப்படுதல் இழிந்த செயல்களால் நாணுதல் - இழிந்த செயல்களைச் செய்ய நாணுதல். (க)

1002 ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறு அல்ல- ஊணும் உடையும் இவை ஒழிந்த பிறவும் எல்லா உயிர்களுக்கும் பொதுவானவை, மாந்தர் சிறப்பு நாணுடைமை - நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே. ஒழிந்தன - தூக்கம், காமம், அச்சம் என்பன. (உ)

1003 ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு.

உயிரெல்லாம் ஊனைக் குறித்த - எல்லா உயிர்களும் தங்களுடைய உடம்புகளை இருப்பிடமாகக் கொண்டுள்ளன. சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது - அது போலச் சால்பானது நாண் என்னும் நல்லியல்பைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டுள்ளது.

உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாவாறு போலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தா தென்பதாம். சால்பு - 99 ஆம் அதிகாரம் பார்க்க. (௩)

1004 அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ - சான்றோர்க்கு நாணுடைமை அழகாகும்; அஃது இன்றேல் பீடுநடை பிணி அன்றோ - அவ்வழகு இல்லையாயின் அவர்களது பெருமித நடையானது கண்டார்க்கு வெறுப்பைத் தருவதாகும்.

அருவருப்புக் கொள்ளத்தக்க கோவென்பதாம். அன்றோ என்னும் ஒகார இடைச்சொல் வினவொடு எதிர்மறை. பெருமித நடை - மேம்பாடாக நடந்து கொள்ளுதல். (௪)

1005 பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் - பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒன்று போல எண்ணி நாணுபவர்களை, உலகு நாணுக்கு உறைபதி என்னும் - உலகத்தார் நாணுக்கு இருப்பிடம் என்று கூறுவர்.

ஒன்றுபோல எண்ணல் - அதுவும் தமக்கு வந்ததாகவே எண்ணுதல். இச்சிறந்த குணமுடையோரை உயர்ந்தோர் யாவரும் இவரே நாணுடையவர் என்று புகழ்வர் என்பதாம். (௫)

1006 நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

மேலாயவர் - உயர்ந்தோர், நாண் வேலி கொள்ளாது - நாணத்தைத் தமக்குக் காவலாகக் கொள்வ

தல்லாமல், வியன் ஞாலம் பேணலர் - பரந்த வையகத்தைக் காவலாகக்கொள்ள விரும்பார்.

வேலி - காவல். தீயவை புகுதாமல் காத்தலின் வேலி என்றார். மேலோரின் மேன்மையைக் காப்பது நாணேயாகும். ஞாலம் - மக்கள். பிறரைக் காவலாகக் கொள்ளார் என்பதாம். (சு)

1007 நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர்.

நாண் ஆள்பவர் - நாணமுடையோர், நாணால் உயிரைத் துறப்பர் - நாணத்தின் பொருட்டுத் தமது உயிரை விடுவர், உயிர்ப் பொருட்டு நாண் துறவார் - உயிரின் பொருட்டு நாணத்தை விடார்.

நாணுடையோர் இழிந்த செயல் செய்ய நேரிடுமேல் அது செய்யாது உயிரைவிடுவர். உயிரினும் நாண் சிறந்ததென்பதாம். (எ)

1008 பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து.

பிறர் நாணத் தக்கது தான் நாணான் ஆயின் - பிறர் நாணத்தக்க பழியைக் கண்டு தான்நாணாது செய்வானாயின், அறம் நாணத்தக்கது உடைத்து - அறம் அவனை விட்டு நீங்கும் தகுதியை உடையது.

பழி - பழித்தற்குரிய செயல். பழியை நாணாதவன் அறத்திற்குப் புறம்பானவனாவான். (அ)

1009 குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

கொள்கை பிழைப்பின் குலம் சுடும் - ஒருவனுக்கு ஒழுக்கம் தவறுமாயின் அது அவனது குடிப் பிறப்பை மட்டும் கெடுக்கும், நாணின்மை நின்றக் கடை நலம்

சுடும் - ஒருவனிடம் நாணின்மை நிலைபெறுமாயின் அது அவனுடைய நலம் அனைத்தையும் கெடுக்கும்.

நிலைபெறல் - ஒருபொழுதும் நீங்காமை. நலம் தொகுதி யொருமையாதலின் கல்வி, குணம், செயல் முதலியவற்றால் வந்தனவெல்லாம் கொள்ளப்படும். ஒழுக்கக் கேட்டினும் நாணக்கேடு மிகத் தீது என்பதாம். (௯)

1010 நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

அகத்து நாண் இல்லார் இயக்கம் - நெஞ்சில் நாண மில்லார் இடம்விட்டுப் பெயர்தல், மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று - மரத்தினால் செய்த பாவை தன்னைக் கட்டிய கயிற்றால் இயங்கி உயிருள்ளதுபோல் மயக்கினாற் போன்றது.

பாவை - பொம்மை. நாண் - கயிறு. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய மரப்பாவை போல்வதல்லது உயிரியக்கமன்று. இயங்குதல்-நடமாடுதல், வாழ்தல். (௰)

## 102 இவறன்மை

இவறன்மை - பற்றுள்ளம் (உலோபகுணம்). பொருளைச் செலவழிக்க மனமில்லாத் தன்மை. இவறல் - விருப்பம். இவறு அன்மை - விருப்பமின்மை.

1011 வைத்தான்வாய் சான்ற பெரும்பொருளஃதுண்ணான்
சேத்தான் சேயக்கிடந்த தில்.

வாய் சான்ற பெரும் பொருள் வைத்தான் அஃது உண்ணான் - மனை நிறைந்த பெரும் பொருளை ஈட்டி வைத்து இவறன்மையால் அதை உண்ணாதவன், செத்தான் செயக்கிடந்தது இல் - உளனாயினும் செத்தவனா

வான் ; அவனால் அப்பொருளைக் கொண்டு செய்யக்கிடந்தது எதுவும் இல்லை.

உலகில் உண்டு வாழ்வதற்கே பொருளீட்டுவதால் உண்ணாதவன் இருந்தும் பயனின்மையால் செத்தவனாவான் என்றார். அப்பொருளாலும் பயனில்லை என்பதாம். உண்ணாதுதானும் வருந்திப் பொருளையும் பயன்படாதாக்கினான். (க)

1012 பொருளான மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

பொருளான் எல்லாம் ஆம் என்று - பொருளினால் எல்லாம் உண்டாகு மென்று அறிந்து அதனை ஈட்டி, ஈயாது இவறும் மருளான் - பின் பிறர்க்குக் கொடுக்காமல் கையழுத்தம் செய்யும் மயக்கத்தினால், மாணாப் பிறப்பு ஆம் - அமைதியில்லாத வாழ்க்கை உண்டாகும்.

ஈட்டுதற்கு முன்னிருந்த அறிவு பின் மயங்குதலின் மருளான் என்றும், அம்மயக்க அறிவினால் அவன் வாழ்க்கை நல்வாழ்க்கையாகாதாகலின் மாணாப் பிறப்பென்றுங் கூறினார். மாணாத பிறப்பு - பிறப்பின் பயனான வாழ்க்கையை உணர்த்திற்று. பொருளால் எல்லாம் உண்டாகும் என்றறிந் தீட்டிப் பிறர்க்குக் கொடாதவர் வாழ்க்கையில் அமைதி இருக்காது. (உ)

1013 ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம் - பொருளீட்டுவதையே விரும்பிப் புகழை விரும்பாத மக்களது பிறப்பு, நிலக்குப் பொறை - நிலத்துக்குச் சுமையாகும்.

இவறுதல் - விரும்புதல். ஆடவர் தோற்றம் - மக்கள் என்னும் பெயர்ருளதாய் நின்றது. பொருளின் பயனறியாத மக்கள் இருப்பது நிலத்துக்குச் சுமையாகும். (௩)

1014 எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரா
னச்சப் படாஅ தவன்.

ஒருவரால் நச்சப்படாதவன் - ஒரு பொருளும் ஈயாமையால் ஒருவராலும் விரும்பப்படாதவன், எச்சம் என்று என் எண்ணுங் கொல் - தான் இறந்த பிறகு எஞ்சி நிற்பதாக எதைக் கருதுவானோ?

எஞ்சி நிற்பது புகழேயாகையால் ஈயாதவனுக்கு எச்சம் ஒன்றுமில்லை யென்பதாம். (௪)

1015 கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

கொடுப்பதும் துய்ப்பதும் இல்லார்க்கு - பிறர்க்குக் கொடுப்பதும் தாம் நுகர்வதும் இல்லாதவர்க்கு, அடுக்கிய கோடி உண்டாயினும் இல் - பலவாக அடுக்கிய கோடி பொருள் உண்டாயினும் அதனால் பயனில்லை.

பொருளின் பயனாகிய அறமும் இன்பமும் அடையப் பெறாமையால் பயன் இல்லை என்றார். (௫)

1016 ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

தான் துவ்வான் - தானும் நுகராதவனாய், தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பு இலாதான் - தகுதியுடையார்க்கு ஒன்றைக் கொடுக்கும் இயல்பும் இல்லாதவனாயின், பெருஞ் செல்வம் ஏதம் - பெரிய செல்வத்திற்கு அவன் ஒரு நோயாவான்.

தக்கார் - ஏற்கத் தகுதியுடைய ஏழைமக்கள். நகரப் படுதலும் ஈயப்படுதலுமாகிய பொருளை அவ்விரண்டும் இன்மையாக்கினதால் அதற்கு நோய் என்றார். (சு)

1017 அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் - வறியவர்க்கு ஒருபொருளைக் கொடுக்காதவனுடைய செல்வம், மிகநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று - மிக்க நலத்தினைப் பெற்ற ஒரு பெண் மணமின்றித் தனியளாய்ப் பருவ முதிர்ந்த தன்மையது.

நலம் - அழகும் குணமும். மிகநலம் - மிகுந்த அழகும் அதற்கேற்ற குணமும் உடையவள். ஒருவன் வாழ்க்கை யின்பத்திற்குரிய அவள் அதுவுமின்றித் தானும் வாழ்க்கை யின்பமின்றிப் பருவங்கழிந்த குமரியோடு உவமை கூறினமையின், பிறர்க்கும் பயன்படாமல் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாம். இதனால், மணமில்லாத துறவு வள்ளுவர்க்கு உடன்பாடன்று எனத் தெரிகிறது. (எ)

1018 நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

நச்சப் படாதவன் செல்வம் - ஈயும் இயல்பு இல்லாமை பற்றிப் பிறரால் விரும்பப் படாதவன் செல்வமானது, ஊர் நடுவுள் நச்சுமரம் பழுத்தற்று - ஊரின் நடுவில் உள்ளதோர் நச்சுமரம் பழுத்தாற்போலும்.

நடுவூர் - ஊர்நடு. நச்சு - நஞ்சு. நச்சுமரம் - நஞ்சுத் தன்மையுள்ள பழம் பழக்குமரம். ஊரின் நடுவிலிருந்தும் நஞ்சுத் தன்மையால் அம்மரத்தின் பழம் பிறர்க்குப் பயன்படாததுபோல, இவறன்மையுடையான் செல்வமும் பிறர்க்குப் பயன்படாது. (அ)

1019 அன்போரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

*அன்பு ஒரீஇ* - ஒருவன் உறவினரிடம் அன்பு காட்டுவதை நீக்கி, *தன் செற்று*-வேண்டுவன நுகராது தன்னையும் வருத்தி, *அறம் நோக்காது* - வறியார்க்கீதல் முதலிய அறத்தையும் எண்ணிப்பாராது, *ஈட்டிய ஒண்பொருள் பிறர்கொள்வார்* - சேர்த்த மிக்க பொருளைக் கொண்டு பிறர் பயனடைவர்.

உறவினர் - சுற்றத்தாரும் நண்பரும். பொருளின் பயனை அறமும் இன்பமும் செய்துகொள்ளாதார்க்கு அப்பொருளை ஈட்டிய துன்பமேயன்றி அதையும் அயலார் கொள்வர். பிறர் - கள்வர் முதலியோர். (கூ)

1020 சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

*சீர் உடைச் செல்வர் சிறுதுனி* - புகழுடைய செல்வரது சிறிதுகாலம் நிற்பதாய வறுமையானது, *மாரிவறங் கூர்ந்தனையது உடைத்து* - முகில் மழை பெய்யாமல் வறுமை மிகுந்தாற் போன்ற இயல்பை உடையது.

துனி - வெறுப்பு. வெறுப்பை உண்டாக்குவதால் வறுமையைத் துனி என்றார். யாவருக்கும் பயன்பட்டார் வறியராயினும் அவ்வறுமை விரைவில் நீங்கிப் பின்னும் பயன்படுவார் என்பது உவமையால் பெறப்பட்டது. எனவே, இவறன்மையுடையான் செல்வம் என்றுமே பயன்படா தென்பதாயிற்று. (ய)

## 103 குடிசெயல்வகை

*தான் பிறந்த குடியை உயரச் செய்யும் வகை.*

1021 கருமஞ் செயவோருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

*கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையில்- தன் குடியை உயர்த்தும் பொருட்டு தான் மேற்கொண்ட காரியத்தை முடிக்காமல் விடேன் என்னும் முயற்சியாகிய பெருமையைப் போல, ஒருவன் பீடு உடையது இல்- ஒருவனுக்குப் பெருமையுடையது வேறு இல்லை.*

*பல்வகையான செயலால் செல்வமும் புகழுமடைந்து குடி உயருமாகலின் பீடுடையது இல் என்றார். கை தூவல்-செயலாற்றுதிருத்தல், தொழில் செய்யாமை. ஒவ் வொருவரும் உளமுயற்சி மெய்ம்முயற்சியுடன் (அதி. 61, 62) தொழில் செய்து தம் குடியை உயர்த்தினால் நாடு தானாக உயரும்.* (க)

1022 ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டின்
நீள்வினையா னீளுங் குடி.

*ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள் வினையால்-மெய் முயற்சியும் நிறைந்த அறிவும் என்ற இரண்டினது இடையாறுத செயலால், குடி நீளும்-ஒரு வனது குடி உயரும்.*

*நிறைதல்-இயற்கையறிவு செயற்கையறிவோடு கூடி நிரம்புதல். முயற்சி - சோம்பல் புகுதாமல் காக்கவும், நிறைந்த அறிவு குடியுயர்தற் கேற்ற செயல் முடிக்குந் திறத்தை அறியவும் வேண்டும்.* (உ)

1023 குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

குடி செய்வல் என்னும் ஒருவற்கு - எனது குடியை நான் உயரச் செய்வேன் என்று அதற்கேற்ற செயல்களில் முயலும் ஒருவனுக்கு, தெய்வம் மடிதற்றுத் தான்முந் துறும் - ஊழ் ஆடையை இறுக உடுத்துக்கொண்டு தான் முன் வந்து நிற்கும்.

தெய்வம் - ஊழ். ஊழ் என்னும் அதிகாரம் (38) பார்க்க. மடி - ஆடை. தற்றுதல் - இறுக உடுத்துதல். ஆகூழ் இவனுக்கு உதவ முன் வந்து நிற்கும். தன் குடியை உயர்த்தப் பெரு முயற்சி செய்வானுக்கு எளிதில் காரியம் கைகூடும் என்பதை இவ்வாறு கூறினார். 620-ஆம் குறளைப் பார்க்க. (ங)

1024 சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

தம் குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு-தம் குடி உயர்தற்குரிய செயல்களை விரைந்து முயல்வார்க்கு, சூழாமல் தானே முடிவெய்தும் - அச்செயலை முடிக்கும் திறத்தை அவர் ஆராயாமல் இருக்கும்பொழுதே அது தானாகவே முடிவடையும்.

கட்டாயம் விரைவில் முடியும் என்பதை இவ்வாறு கூறினார். பெரு முயற்சி செய்வார்க்கு மேற்கொண்ட செயல் விரைவில் முடியும். உஞற்றுதல் - செய்தல். (ச)

1025 குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானை - குற்ற மற்றவனாய்த் தன் குடியை உயரச் செய்து வாழ்பவனை, உலகு சுற்றமாச் சுற்றும் - உலகத்தார் தமக்குச் சுற்றமாக விரும்பித் தாமே போய்ச் சுற்றி நிற்பர்.

தாமும் பயனடைதல் கருதி யாவரும் சென்று அவனைச் சார்வார். (ச)

1026 நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

ஒருவர்க்கு நல் ஆண்மை என்பது - ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று சொல்லப்படுவது எதுவெனில், தான் பிறந்த இல் ஆண்மை ஆக்கிக்கொளல் - தான் பிறந்த குடியை ஆளுந்தன்மையைத் தானே உண்டாக்கிக் கொள்ளுதல்.

குடியை ஆளுந்தன்மை - குடியை உயரச் செய்தல். குடிசெயலே ஒருவனுக்கு நல்லாண்மையாகும். (ரு)

1027 அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

அமரகத்து வன்கண்ணர் போல - போர்க்களத்தில் உள்ள வீரர் பலருக்கும் போரைத் தாங்குதல் வலியாரிடமே உள்ளதுபோல, தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே - குடிப்பிறந்தார் பலருள்ளும் அக்குடியின் சுமையைத் தாங்குதல் வல்லவரிடமே உள்ளது.

ஒரு படையில் வீரர் பலர் இருப்பினும் தம்மேல் வரும் படையைத் தாங்கும் பொறுப்பு வலியார்க்கே உரியதுபோல, குடியை உயரச் செய்யும் பொறுப்பும் அக் குடிப்பிறந்தார் பலருள்ளும் வலியார்க்கே உரியதாகும். (சு)

1028 குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

மடி செய்து மானம் கருதக் கெடும் - தன்குடியினை உயரச்செய்வார் அச் செயலையே நோக்காது காலத்தை நோக்கி, சோம்பலை மேற்கொண்டு மானத்தையும்நோக்கு

வாராயின் குடி கெட்டுவிடும், குடி செய்வார்க்குப் பருவம் இல்லை—ஆகையால், தங்குடியை உயரச் செய்பவர்க்குக் காலவரையறை இல்லை.

காலத்தை நோக்கி: மடிசெய்தல் - வெயில் மழை பனியை நோக்கிப் பின்னர்ச் செய்யலாம் என்றிருத்தல். மானங் கருதுதல் - இக்குடியிலுள்ளார் யாவரும் இன்புற யான் மட்டும் ஏன் வெயில் பனி மழை என்று பாராமல் துன்புறுவேன் என்று எண்ணுதல். காலமறிதல் (50) என்னும் அதிகாரம் பகைவெல்லும் வேந்தர்க்குக் கூறப்பட்டது. குடிசெய்வார்க்குக் கால வரையறையில்லை. மடியும் மானமும் காலமுங் கருதாமல் தொழிலாற்ற வேண்டும் என்பது. (அ)

1029 இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு - தன் குடும்பத்திற்குத் துன்பமுண்டாகாமல் காக்க முயல்பவனது உடம்பு, இடும்பைக்கே கொள்கலம் கொல் - அம்முயற்சித் துன்பத்திற்கே கொள்கலமாமோ? அன்றி, இன்பத்திற்குக் கொள்கலம் ஆதலில்லையோ?

மறைத்தல் - காத்தல். கொள்கலம் - பண்டங்கள் போட்டு வைக்கும் பாண்டம். என் குடிமுழுதும் இன்புற்று வாழ்தலான் நான் இன்புறுவதால் இம்மெய் வருத்தமும் எனக்கு நல்லதே என்று முயலும் அறிவுடையான், அம்முயற்சியை ஒரு நாளும் ஒழியாமை நோக்கி, இடும்பைக்கே கொள்கலம் என்றார். குடிசெய்வான் மெய்வருத்தம் பார்க்கக் கூடாதென்பதாம். (கூ)

1030 இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்றும்
நல்லா ளிலாத குடி.

அடுத்து ஊன்றும் நல்ஆள் இலாத குடி - தன்குடி சாயும்போது அதை விழாமல் தாங்கி உதவி புரியும் நல்ல

ஆண்மகன் இல்லாத குடியாகிய மரம், இடுக்கண் கால் கொன்றிட வீழும்-துன்பமாகிய கோடரிவேரை வெட்டிச் சாய்க்க விழுந்துவிடும்.

'கால் கொன்றிட வீழும்' என்றும் 'அடுத்து ஊன்றும்' என்றும் வந்த தொடர்களால் குடியை மரமாகவும் துன்பத்தைக் கோடரியாகவும் கொள்ளப்பட்டன. இது குறிப்புருவகம். வளர்ப்பார் உள்வழி வளர்ந்து பயன் படுதலும், அவரில்வழிக் கெடுதலும் உடைமையின் குடியை மரமாக்கினார். வறுமைத் துன்பத்தால் குடி நலிவுற்றுக் கெடுதலின் துன்பத்தைக் கோடரியாக்கினார். (ம)

## 104 உழவு

உழவுத் தொழிலின் சிறப்புக் கூறுதல். உழவின் சிறப்புணர்ந்து செய்து வாழ்தல் இதன் பயன்.

1031 சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை.

சுழன்றும் உலகம் ஏர்ப்பின்னது - உழவுத்தொழிலால் உண்டாகும் மெய்வருத்தத்தை நோக்கிப் பிற தொழில்களைச் செய்தாலும் உலகத்தோர் ஏருடையோர் இடத்திற்கே வருவர், அதனால் உழந்தும் உழவேதலை - ஆதலால், வருந்தியும் உழுதலே தலைமையான தொழிலாகும்.

ஏர் - ஆகு பெயராய் உழவரை உணர்த்திற்று. பிற தொழில்களால் பொருளடைந்த விடத்தும் உணவின் பொருட்டு உழுவாரிடம் செல்ல வேண்டுதலின் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றும், வருத்தம் இல்லையாயினும் பிற தொழில்கள் உழவுக்கு அடுத்தவையே என்

பார் 'உழந்தும் உழவேதலை' என்றும் கூறினர். உழவின் சிறப்புக் கூறப்பட்டது. (க)

1032 உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்ரு
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

*அஃது ஆற்ருது எழுவாரை எல்லாம் பொறுத்து - உழவுத்தொழிலைச் செய்யமாட்டாது வேறு தொழில்களின் மேற் செல்வோர் யாவரையும் தாங்குதலான், உழுவார் உலகத்தார்க்கு ஆணி - உழுவார் உலகத்தாராகிய தேர்க்கு ஆச்சாணி யாவர்.*

*பொறுத்தல் - தாங்குதல். உலகத்தாரென்றது உழவரல்லாதாரை. உழவுத் தொழில் செய்யமாட்டாது வேறு தொழில் செய்வோர்க் கெல்லாம் உணவூட்டிக் காத்தலால் உழுவார் உலகத்தோர்க்கு அச்சாணி போன்றனர். ஒருகூற் றுருவகம்.* (உ)

1033 உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

*உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் - யாவரும் உண்ணும்படி உழவுத் தொழிலைச் செய்து அதனல் தாமும் உண்டு வாழ்பவரே உரிமையுடன் வாழ்பவராவர்; மற்றெல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர் - பிறரெல்லாம் அவ்வுழவுத் தொழிலைப் பின்பற்றி வாழ்பவராவர்.*

*தொழுதல் - உழவின் இன்றியமையாமை குறித்துத் தொழுதல். போற்றுதல் என்பதாம். பின்பற்றி வாழ்தல் - தங்கள் தொழிலால் பொருளீட்டினும் உணவுக்கு உழவை யண்டி வாழ்தல். ஆகவே, உழவே உரிமையுடைய தொழிலும் பிறரை வாழ்விக்கும் தொழிலும் ஆகும். அவ்வுழவைப் போற்றுவது மக்கள் யாவர்க்கும் கடமையாகும்.* (ந)

1034 பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

அலகு உடை நீழலவர் - உழவுத் தொழிலால் நெல் விளை யுடையவரான அருளுடையார், பலகுடை நீழலும் தம் குடைக் கீழ்க் காண்பர் - பல வேந்தர்களது குடை நிழலில் உள்ள மண்முழுவதையும் தமது வேந்தரின் குடை நிழலின் கீழே காண்பர்.

அலகு - நெல். உழவால் ஏனைத்தவசங்களும், பிற பொருள்களும் விளையுமேனும் மக்களால் விரும்பப் படுவது நெல்லுனவே யாகலான் (732) உழவரை 'அலகு உடை நீழலவர்' என்றார். உழவுத் தொழிலின் வளர்ச் சியே அந்நாட்டரசனுக்கு வெற்றியைத் தந்து மண் முழுதும் அவனதாக்கும் என்பதாம். (௪)

1035 இரவா ரிப்பார்க்கோன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

கை செய்து ஊண் மாலையவர்-தம் கையினால் உழவுத் தொழில் செய்து உண்ணும் இயல்பை யுடையவர், இர வார் - பிறரிடம் சென்று இரக்கமாட்டார், இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் - தம்மிடம் வந்து இரப்பவர்க்கு அவர் வேண்டியதொன்றை ஒளிக்காமல் கொடுப்பர்.

பிறரிடம் இரவாது தாம் ஈதல் உழவர் சிறப்புக் குணமாகும். மாலை - தன்மை, இயல்பு. கரத்தல் - மறைத்தல், உள்ளதை இல்லையெனல். (௫)

1036 உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமேன் பார்க்கு நிலை.

உழவினார் கை மடங்கின் - உழவர்கள்கை அத் தொழிலைச் செய்யாதிருக்குமாயின், விழைவதும் விட் டேம் என்பார்க்கும் நிலை இல்லை - எப்பொருளையும் துறந்

தேம் என்பவர்களுக்கும் அத்துறவற நிலையில் நிற்றல் முடியாது.

உழவர் தொழிலைக் 'கைமடங்கின்' எனக் கை மேலேற்றினர். துறவறமும் உணவில்லாமல் நடவாதென உழவின் சிறப்புக் கூறியவாறு. எனவே, அறவோர்களும் உழவுத் தொழில் வளர்ச்சிக்கு உதவிபுரிய வேண்டுமென்ப தாம். இவ் வாறுபாட்டானும் உழவின் சிறப்புக் கூறினர். (சு)

1037 தோடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

தொடிப் புழுதி காஃசா உணக்கின் - உழவன் உழுத நிலத்தின் ஒரு பலப் புழுதியைக் காற்பலமாக உலறும் படி செய்வானாயின், பிடித்து எருவும் வேண்டாது சாலப் படும் - அந்நிலத்தின்கண் செய்த பயிர் ஒருபிடி எருவும் வேண்டாது மிகுதியாக விளையும்.

தொடி - ஒரு பலம். கஃசு - காற்பலம். உலறுதல் - ஈரம் போதல்; அதாவது அப்புழுதியிலுள்ள நீர்வற்று தல். உழுத புழுதிநிலத்தில் ஒரு படி மண்ணெடுத்து அதை நிறுத்தால் எவ்வளவு எடை வருகிறதோ அது நாலில் ஒரு பாகம் ஆகும் வரையிலும் புழுதியைப் புரட்டிப் புரட்டி உழவேண்டும் என்பதாம். அவ்வாறு செய்தால் எருப் போடாமலே நன்கு விளையும். உழுத ஈர நிலத்தி லேயே விதைத்தால் பயிர் நன்கு வளராது. பிடி எரு - ஒரு கைப்பிடி அளவு எரு. கொஞ்சங்கூட வேண்டிய தில்லை என்பது. புழுதியுழுவதன் சிறப்புக்கூறியது. (எ)

1038 ஏரினு நன்ரு லெருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு.

ஏரினும் எரு இடுதல் நன்று - உழுதலினும் எருவிடு தல் நல்லது; கட்டபின் அதன் காப்பு நீரினும் நன்று -

உழுது எருவிட்டு விதைத்த பயிர்க்குக் களை களைந்தபின் பயிரைக் காத்தல் அப்பயிர்க்கு நீர்பாய்ச்சுதலினும் நல்லது.

ஏர் - உழுதலைக் குறித்தது. காத்தல்-ஆடுமாடு முதலியவற்ருல் பயிர் அழிவெய்தாமல் காத்தல். பயிர் நோயால் அழிவெய்தாது காத்தலுங்கொள்க. உழுதல், எருவிடுதல், களைகளைதல், நீர்பாய்ச்சல், காத்தல் என்னும் ஐந்தும் முறையே நடைபெற வேண்டும் என்பதாம். எருவிட்டு உழுதல் பெரு வழக்கு. (அ)

1039 செல்லான் கிழவ னிருப்பின் நிலம்புலந்
 தில்லாளி னூடி விடும்.

கிழவன் செல்லான் இருப்பின் - நிலத்திற்கு உரியோன் நிலத்திற்கு நாடோறும் செல்லாமல் சோம்பியிருப்பானாயின், நிலம் இல்லாளின் புலந்து ஊடிவிடும் - அந்நிலம் அவன் மனைவியைப் போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின் ஊடிவிடும்.

செல்லாமல் இருத்தல் -நேரத்துக்கு நேரம் போய்த் தொழிலைப் பாராது வீட்டில் இருத்தல். எருவிடல், கல் பொறுக்கல், ஓரங்கொத்தல் முதலியன செய்யாமல் சோம்பி யிருத்தல். புலத்தல் - வெறுத்தல். ஊடல் - வெறுப்பு முற்றிச் சினங்கொள்ளுதல். தன்னிடம் வாராமலும் வேண்டுவன செய்யாமலும் இருந்தால் மனைவி புலந்து ஊடுதல் போல என்றது, விளைவு குறைந்து பின் விளையாமலே போமென்பது. மனைவி உணர்த்த உணர்ந்து ஊடல் தணிந்து கூடுதல் போல, நிலமும் கிழவன் சென்ருல் விளையுமென்பதும் கருத்தாகக் கொள்க. (கூ)

1040 இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
 நிலமென்னு நல்லாள் நகும்.

இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின்-யாம் வறியோம் என்று சொல்லிச் சோம்பி இருப்பாரைக் கண்

டால், நிலம் என்னும் நல்லாள் நகும் - நிலமகள் என்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள் தனக்குள் சிரிப்பாள்.

உழுதொழிலைச் செய்து உண்டு வாழாது 'யாம் வறுமையுடையேம்' என்று சும்மா இருப்போரைக் கண்டால், யானிருக்க உமக்கென்ன குறை? என்று நிலமகள் சிரிப்பாள் என்று உழவின் சிறப்பைக் குறித்தார். நாணத்தை 'நாணென்னும் நல்லாள்' (924) என்றது போல, நிலத்தைப் பெண் (நிலமகள்) என்பது நூல் மரபு. முகவுரை பார்க்க. (ய)

## 105 நல்குரவு

நல்குரவு - வறுமை. யாதொரு தொழிலும் செய்யாமையால் உண்டாவது.

1041 இன்மையி னின்னாத தியாதெனின் இன்மையி
னின்மையே யின்னா தது.

இன்மையின் இன்னாதது யாது எனின் - ஒருவனுக்கு வறுமையைக் காட்டிலும் துன்பந்தருவது எது வென்றால், இன்மையின் இன்னாதது இன்மையே - வறுமை போலத் துன்பந் தருவது வறுமையே; வேறில்லை.

வறுமைக்கு ஒப்பதில்லை யெனவே, மிக்க தின்மை சொல்லவேண்டிய தில்லை. (க)

1042 இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

இன்மையென ஒரு பாவி - வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவி, மறுமையும் இம்மையும் இன்றி

வரும்-ஒருவனிடம் வருங்கால் அவனுக்கு மறுமையின்பமும் இன்மையின்பமும் இல்லையாக வரும்.

மறுமை-ஒருவனது இறந்த பின் இவ்வுலக வாழ்வு. 88-ஆம் குறளுரை பார்க்க. வறுமையின் கொடுமை நோக்கிப் பாவி (தீயோன்) என ஆண்பாலாகக் கூறினர். முகவுரை பார்க்க. (உ)

4043 தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

நல்குரவு என்னும் நசை - வறுமை என்னும் ஆசையானது, தொல்வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும் - தொன்றுதொட்டு வருகின்ற குடிப்பிறப்பையும் அதற்குரிய சொல்லையும் ஒருங்கே கெடுக்கும்.

ஒன்றை ஆராய்ந்து செய்யமுடியாமல் மனத்தை மயக்கும் பேராசை இல்லையேல் வறுமை இல்லையாகலின், வறுமையைஆசையாக்கி, அது அக்குடியின் முன்னோர்க்கு இல்லாத இழி தொழில்களையும் இழி சொற்களையும் உண்டாக்கலின், பழங்குடிக்குரிய நற்செயலையும் நற்சொல்லையும் ஒருங்கு கெடுக்கும் என்றார். குடிப்பிறப்பு-குடிப் பிறப்பின் பெருமை. (ங)

1044 இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சோற்பிறக்குஞ் சோர்வு தரும்.

இன்மை - வறுமையானது, இல் பிறந்தார் கண்ணேயும்-நற்குடிப் பிறந்தாரிடத்தும், இளிவந்த சொல் பிறக்கும் சோர்வு தரும் - இழிவுக்குக் காரணமான சொற்கள் பிறக்கும் சோர்வினை உண்டாக்கும்.

சொல் -குடிப் பிறப்புக்கு ஏலாத 'எமக்கீயும்' என்னும் சொல். சோர்வு -வறுமைத் துன்ப மிகுதியால் தம் குடிப் பிறப்பினை மறந்து அத்துன்பம் சொல்வதாக நினைத்து அவ்வாறு சொல்லுதல். (ச)

1045 நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

நல்குரவு என்னும் இடும்பையுள் - வறுமை என்னும் துன்பமொன்றினால், பல் துன்பங்கள் சென்று படும்-பல துன்பங்களும் வந்து தோன்றும்.

குரை - அசை. சென்று என்றது வந்து என்னும் பொருளது. துன்பமும் வறுமையும் ஒன்றாக நிகழ்தலின் வறுமையைத் துன்பமென்றார். செல்வரைச் சேர்தல், அவரைக் காணுதல், ஏற்றல் முதலிய பல துன்பங்களும் ஒருங்கே வருதலின் வறுமையால் எல்லாத் துன்பங்களும் வந்து தோன்றுமென்றார். (ரு)

1046 நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் - உண்மைப் பொருளை நன்கு அறிந்து கூறினும், நல்கூர்ந்தார் சொல்பொருள் சோர்வு படும் - வறியார் கூறும் சொல் பொருளற்றதாகவே முடியும்.

பொருளற்றதாக முடிதலாவது-நாம் இவர் சொல்வதை விரும்பிக் கேட்கின் இரக்கந்தோன்றி இவர் வேண்டுவதைக் கொடுக்க நேருமென்று அஞ்சி யாவரும் கேளாமையால் பயனில்சொல்லாய் முடிதல். (சா)

1047 அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

அறம் சாரா நல்குரவு - அறத்துடன் பொருந்தாத வறுமையாளன், ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப் படும்-தன்னைப் பெற்ற தாயினாலும் அயலான் போலக் கருதப்படுவான்.

அறத்துடன் பொருந்தாமை - வறுமை அறநெறியில் நடக்கவிடாமை. அன்புடைய தாயாலும் வெறுக்கப்

படுவானெனவே, பிறரால் வெறுக்கப்படுதல் சொல்ல வேண்டாவாயிற்று. (எ)

1048 இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

நெருநலும் கொன்றது போலும் நிரப்பு - நேற்றும் வந்து என்னைக் கொன்றது போலத் துன்பஞ்செய்த வறுமைத் துன்பம்; இன்றும் வருவது கொல் - இன்றைக்கும் என்னிடம் வரக்கூடுமோ? வந்தால் என் செய்வேன்!

அத்துன்பங்கள் 1045-ஆம் குறளுரையில் கூறியவை. முதல்நாள் மிகவும் வருந்தித் தன் வயிற்றை நிரப்பிஞெருவன் கூற்று. (அ)

1049 நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்-நெருப்பின் நடுவில் ஒருவன் தூங்குவதும் கூடும், நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது - ஆனால், வறுமையின் நடுவில் யாதொரு வழியினாலும் தூங்க முடியாது.

தீயினும் வறுமை கொடியதென்றவாறு. துஞ்சலும் என்ற உம்மை துஞ்சாமையை விளக்கி நின்றது. இதுவும் அவன் கூற்று. (கூ)

1050 துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று.

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை-நுகரப்படும் பொருள்கள் இல்லாதவர் முற்றத்துறவாது வருந்துதல், உப்பிற்கும் காடிக்கும் கூற்று - பிறர் வீட்டிலுள்ள உப்புக்கும் காடிக்கும் கேடாவர்.

முற்றத்துறத்தல் - இறத்தல். உண்ண உணவில்லாதார் சாவாமல் இருத்தல், பிறர்வீட்டிலுள்ளசோற்றுக்குக்

கேடேயாகும். ஆதலால், அவர்கள் சாதலே தகுதியுடையது என்பது பொருள். சாவைக் கூற்றென்பது போல் கேட்டையும் கூற்று என்பது வழக்கு. சிறுவன் ஏதேனும் ஒரு பொருளைக் கெடுத்து விட்டால் தாய் 'என்னடா இதற்கு நீ கூற்றாய்த் தோன்றிவிட்டாய்?' என்னும் வழக்கை யுணர்க. காடி - புளித்த கஞ்சி. (ய)

## 106 இரவு

பிறரிடம் ஒன்றைக் கேட்டுப் பெறுதல். மானந்தீரா இரவு இரவாமையோடொத்தலின் வறியார் உடலோம்பிச் சாவை விலக்குதற் பொருட்டு இரவு கூறினார்.

1051 இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

இரத்தக்கார்க் காணின் இரக்க-வறியோர், இரத்தற்குத் தகுதியுடையாரைக் கண்டால் அவரிடம் இரக்கக்கடவர்; கரப்பின் அவர் பழி தம்பழி அன்று - இரந்தால் அவர் ஒளிப்பாராயின் அது அவரது பழியே, இரப்பவர் பழியன்று.

இரவுக்குத் தக்கார் என்பது தொக்கு நின்றது. இரத்தற்குத் தகுதியுடையவராவார் கேளாமுன் கொடுக்கும் அறிவுடையராய் மறுக்காது ஈவோர். அவரிடம் இரந்தார்க்கு இரவால் வரும் இழிவு இன்மையால் இரக்க வென்றும், அவர் இல்லையென்பாராயின் அப்பழி அவர்க்கு வெள்ளாடையில் பட்ட கறைபோல் விரவில் சேரலின் அவர் பழி என்றும், தகுதியில்லாரிடத் திரவன்மையால் தம்பழி அன்று எனவும் கூறினர். கரத்தல் - இல்லை யெனல். (க)

1052 இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

இரந்தவை துன்பம் உறுவரின் - இரந்த பொருள்கள் துன்பமடையாமல் வருமாயின், ஒருவற்கு இரத்தல் இன்பம் - ஒருவனுக்கு இரப்பதும் இன்பமேயாகும்.

உறுது என்பதன் ஈறுதொக்கது. இரந்தபொருள் துன்பமுறாதுவருதலாவது - இரப்போன் நிலையுணர்ந்து கேளாமுன் ஈதல். (உ)

1053 கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

கரப்பு இலா நெஞ்சின் கடன் அறிவார் முன்நின்று இரப்பும் - ஒளித்தல் இல்லாத நெஞ்சினையுடைய மானமறிவார் முன்னர் நின்று அவரிடம் ஒன்றை இரத்தலும், ஓர் ஏர் உடைத்து-வறியோர்க்கு ஓர் அழகை உடையது.

கேளாமல் கொடுத்தலால், கேட்டலான் வரும் சிறுமையின்மையால் ஓர் ஏருடைத்து என்றார். (ங)

1054 இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு இரத்தலும்- தமக்குள்ளதை இல்லையென்பதைக் கனவிலும் அறியாதவரிடம் ஒன்றை இரத்தலும், ஈதலே போலும் - கொடுப்பதனோடொக்கும்.

அவரிடம் இரத்தல் புகழ்தராதாயினும் முன்னுள்ள புகழ் கெடாமையால் ஈதலே போலும் என்றார். (ச)

1055 கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கோள் வது.

கண்நின்று இரப்பவர் மேற்கொள்வது - ஒருவர்க்கு எதிரில் நின்று இரப்பவர் இரக்குந்தொழிலை மேற்கொள்

வது, கரப்பிலார் வையகத்து உண்மையான் - உள்ளதை ஒளிக்காமல் கொடுப்பவர் சிலர் வையகத்தில் உள்ளதனால்தான். மற்றென்றால் அன்று.

அவரில்லையாயின் மானத்தை விட முடியாமையால் உயிர் விடுவரென்பதாம். (ரு)

1056 கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

கரப்பிடும்பை இல்லாரைக் காணின் - உள்ளத்தை ஒளித்தலாகிய நோயில்லாரைக்கண்டால், நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் - வறுமையாகிய துன்பம் அனைத்தும் ஒருசேரக் கெடும்.

உள்ளதை ஒளியாரைக் காணின் பெருமகிழ்ச்சி கொள்வாராதலின் எல்லாத் துன்பமும் ஒருங்கு கெடுமென்றார். (சு)

1057 இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் - தம்மை இகழ்ந்து இழிவு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால், உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து - இரப்போர் உள்ளம் மகிழ்ந்து உள்ளுக் குள்ளே இன்பமுறுதலை யுடைத்து.

இகழ்ந்து எள்ளாது என்றது - நன்கு மதித்தலையும் இன்சொற் கூறலையுமாம். வறுமைத் துன்பங் கெட்டு இன்பமுறுமாகையால் மகிழ்ந்து உள்ளுள் உவக்கலானார்.

1058 இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

இரப்பார் இல்லாயின் - வறுமையுற்று இரப்பவர் இல்லையானால், ஈர்ங்கண் மாஞாலம் - குளிர்ந்த இடத்தை யுடைய பெரிய உலகத்திலுள்ளவர் செலவு வரவுகள்,

மரப்பாவை சென்று வந்தற்று - உயிரில்லாத மரப்பாவை கயிற்றினால் சென்று வந்து இயங்குதலை ஒக்கும்.

இரப்பாரை என்பதன் ஐ - அசை. வறியார்க் கீந்து புகழ் அடையாதவர் உயிருடனிருந்தும் பயனின்றென்பதாம். செலவு வரவு - அங்கு மிங்கும் நடந்து திரிதல். (அ)

1059 ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை.

இரந்துகோள் மேவார் இலாக்கடை - இரந்து கொள்வதை விரும்பாதவர் இல்லாதவிடத்து, ஈவார்கண் தோற்றம் என் உண்டாம் - கொடுப்பவரிடத்துப் புகழ் எவ்வாறு உண்டாகும்? உண்டாகாது.

தோற்றம்-புகழ். மேவுவார் என்பது மேவார் என்றாயிற்று. இரப்பா ரில்லையேல் கொடையின்மையால் புகழ் அடைதல் இல்லையாயிற்று. (கூ)

1060 இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

இரப்பான் வெகுளாமை வேண்டும் - கொடுப்பவனுக்கு ஒருவேளை பொருள் இல்லையென்றால், 'இவன் எனக்கு ஈயவில்லை' என்று இரப்பவன் வெகுளாதிருத்தல் வேண்டும்; நிரப்பிடும்பை தானேயும் கரிசாலும் - பொருளில்லாமை எல்லார்க்கும் நேரக்கூடும் என்பதை அறிதற்குத் தனது வறுமைத் துன்பம் ஒன்றே சான்றாதல் அமையும்.

கரி - சான்று, சாட்சி. தனக்குள்ளது போலவே பிறர்க்கும் பொருளில்லா நிலைமை உண்டாகும்என்பதை உணர்ந்து வெகுளாதிருக்க வேண்டும். இரப்போன் இயல்பு கூறியது. (ய)

## 107 இரவச்சம்

*மானங் கெடவரும் இரவுக்கு அஞ்சுதல்.*

1061 கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.

*கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை-உள்ளதை மறைக்காமல் மனமுவந்து கொடுக்கும் கண்போலச் சிறந்தவரிடமும் இரவாமல் ஒருவன் வறுமையோடிருத்தல், கோடி உறும்-இரந்து அடையும் செல்வத்தினும் கோடி மடங்கு நல்லது.*

*கண்ணன்னார் கண்ணும் என்னும் உம்மையால், மறைக்காத நண்பரிடத்தும் இரத்தல் கூடாதென்பதாம். பெரு முயற்சியால் உயிரோம்பலே நல்லதென்பது கருத்து.* (க)

1062 இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

*உலகு இயற்றியான் இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் - இவ்வுலகத்தை உண்டாக்கியவன் மக்கள் முயற்சியால் உயிர் வாழ்தலை விரும்பாது பிறரிடம் சென்று இரந்தும் உயிர்வாழ்தலை விரும்புவானானால், பரந்துகெடுக-அக்கொடியோன் இரப்போரைப் போன்று எங்குந் திரிந்து கெடக்கடவன்.*

*தொழில் செய்தற் கேற்ற கைகால் முதலிய உறுப்புக்களும் பகுத்தறிவும் இருந்தும் ஒரு சிலர் பிறரிடம் சென்று இரத்தல் தகாது என்பதை இவ்வாறு கூறினார். இது உலகம் ஒருவனால் உண்டாக்கப்பட்டது என்னும் கொள்கையைக் கொண்டு கூறியது.* (உ)

1063 இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

இன்மை இடும்பை இரந்துதீர்வாம் என்னும் வன்மையின் - வறுமைத் துன்பத்தை முயற்சியால் நீக்காமல் இரந்து நீக்குவோம் என்று எண்ணும் வன்மையைப் போல, வன்பாட்டது இல் - முரட்டுத் தன்மையுடையது வேறொன்று இல்லை.

வன்பாடு - முரட்டுத்தன்மை. வறுமையைத் தீர்க்க ஒழுங்கான முயற்சி யிருக்க, ஒழுங்கல்லாத இரவால் தீர்க்கக் கருதுதலின் வன்மையாயிற்று. (ங)

1064 இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவோல்லாச் சால்பு.

இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லாச் சால்பு - நுகர்தற்குப் பொருள் இல்லாதபோதும் இரத்தற்கு இசையாத நிறைகுணம், இடமெல்லாம்கொள்ளாத் தகைத்தே - அகன்ற நிலமுழுதும் ஒன்றுசேரினும் ஒப்பாகாத பெருமையை உடையது.

சால்புடையார் இரக்கத்துணியார் என்பதாம். இடம் - பொருள். (ச)

1065 தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

தாள் தந்தது தெண்ணீர் அடுபுற்கை யாயினும் - முயற்சியால் கிடைத்த பொருளானது தெளிந்த நீர் போலக் காய்ச்சிய கஞ்சியே யானாலும், உண்ணலின் ஊங்கு இனியது இல் - அதனை உண்ணுவதைக் காட்டிலும் இனிமை வேறொன்றும் இல்லை.

தாள் - முயற்சி. புற்கை - கஞ்சி. அடுதல் - காய்ச்சுதல். முயற்சியால் வந்ததால் அக்கஞ்சி பாலினுமினிய தென்பதாம். (ரு)

1066 ஆவிற்கு நீரேன் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

ஆவிற்கு நீர் என்று இரப்பினும் - நீர் வேட்கையால் சாகுந் தருவாயிலுள்ள ஒரு மாட்டிற்குத் தண்ணீர் வேண்டும் என்று கூறும்போதும், இரவின் நாவிற்கு இளிவந்தது இல்-அவ்விரத்தலைக் காட்டிலும் ஒருவன் நாவிற்கு இழிந்தது வேறொன்று இல்லை.

ஓர் உயிரைக் காப்பதன் பொருட்டு விலை கொடுத்து வாங்க வேண்டாத நீரே எனினும் இரத்தல் இழிவான தாகும். எனவே, அறமும் முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்க வென்பதாம். (சு)

1067 இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று - 'நீங்கள் இரப்பின் தமக்குள்ளதை மறைப்பவரிடம் இராவாதே யுங்கள்' என்று, இரப்பாரை எல்லாம் இரப்பன் - இரப்போர் அனைவரையும் நான் இரக்கின்றேன்.

இரந்து கேட்டுக் கொள்கின்றேன் என்பது கருத்து. இது இரத்தலுக்கு அஞ்சிய ஒருவன் கூற்று. (எ)

1068 இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி - வறுமைக் கடலைக் கடக்க அமைத்துக்கொண்ட இரத்தல் என்னும் காவலற்ற கப்பலானது, கரவு என்னும் கற்பாறையில் தாக்குமாயின் பிளந்துபோகும்.

முயற்சிக் கப்பலேயன்றி இரவுக் கப்பல் வறுமைக் கடலைக் கடக்க ஏற்றதல்ல வென்பதாம். உருவகம். (அ)

1069 இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

இரவு உள்ள உள்ளம் உருகும் - உடையார் முன் இல்லார் சென்று இரந்து நிற்றலின் கொடுமையை நினைந்தால் எம் முள்ளங் கரைந்து உருகா நிற்கும்; கரவு உள்ள உள்ளதும் இன்றிக் கெடும் - இனி அவ்வாறு இரந்து நிற்கும் நிலையைக் கண்டும் 'இல்லை' என்றலின் கொடுமையை நினைந்தால் அவ்வுருகும் நிலையும் இல்லாமல் அழிந்து போய்விடும். இரவினும் கரவு கொடிது. கரத்தல்- உள்ளதை இல்லையென்றல். (கூ)

1070 கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

சொல்லாட இரப்பவர் உயிர் போம் - உள்ளதை மறைப்பவர் இல்லை யென்று சொன்னவுடனேயே இரப்பவர்க்கு உயிர் போகின்றது; கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல் - இனி உள்ளதை மறைப்பவர்க்கு அதற்குப் பின்னும் உயிர் நிற்றலால் முன் இல்லை என்று சொன்ன போது அவ்வுயிர் எந்த இடத்தில் போய் ஒளிந்திருக்குமோ? அறியேன்.

உயிர் போகலாவது - இனி என் செய்வேன் என்று ஏங்கிச் செயலற நிற்றல். கரத்தல் கொடிதினும் கொடிது. (ய)

## 108 கயமை

யாதொரு நற்குணமுமில்லாத கீழோரது தன்மை. அதாவது, குடிமக்கள் ஆகாதார் தன்மை.

1071 மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

மக்களே போல்வர் கயவர் - வடிவால் முழுதும் மக்களைப் போன்றிருப்பர் கயவர், அவர் அன்ன ஒப்பார்

யாம் கண்டது இல் - அவர் மக்களை ஒத்தாற் போன்ற ஒப்பு வேறு எவற்றினும் யாங் கண்டதில்லை.

வேறு எவற்றினும் என்றது - ஒன்றோடொன்றை உவமை கூறப்படும் எப்பொருள்களினும் என்பது. அவர் என்றது - கயவர்களிடத்துள்ள ஒப்புமையை. மக்களுக்கும் கயவர்களுக்கும் வடிவொத்தலின் குணங்களது உண்மை, இன்மைகளால் அல்லது வேறுபாடறியப்படாதென்பதாம். எனவே, கயவர் சிறிதும் மக்களை ஒத்தவராகார்; மக்களல்லர் என்பது கருத்து. ஒப்பார் இ-இகரம் யகரம் வரத் தோன்றிய சாரியை. (க)

1072 தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான்-கயவரைப் போன்றே தேவரும் தாம் விரும்புவனவற்றையே செய்து வருவதால், தேவர் அனையர் கயவர் - தேவரும் கயவரும் ஒரே தன்மையராவர்.

விரும்புவனவற்றையே செய்தல்-செய்வன தவிர்வன என்னும் மக்கட்பண்புச் சட்டத்தை அறிந்து, செய்வன செய்து தவிர்வன தவிர்த்து நடக்காமல் மனம் போன படியே செய்து நடத்தல். அதாவது நல்லொழுக்கமின்மை. தேவரும் செய்வன தவிர்வனவின்றி மனம்போனபடி விரும்பியதையெல்லாம் செய்தொழுகலான், அத்தன்மையுடைய கயவர்களை அத் தேவருக்கு ஒப்பிட்டார். மேல் (1071) கயவர்களுக்கு மக்களுக்குரிய யாதொரு நற்குணமும் இன்மையால் கயவர்கள் மக்களல்லர் என்றார். பின் யாரோடொப்பர் கயவர் என்னும் வினவிற்கு விடையாக, அவரைப் போலவே ஒழுக்கம் சிறிது மில்லாத தேவரோடொப்பர் எனக் கயவர்க்கு இனங்கூறினார். இதனால், மக்களிலும் தேவர்கள் தாழ்ந்தவரேன்பது வள்ளுவர் கருத்தாகும். (உ)

1073 நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

நன்று அறிவாரில் கயவர் திரு உடையர் - தமக்கு நன்மையானவற்றை அறிவாரைக் காட்டிலும் அவை யறியாத கீழ்மக்கள் நல்லவராவர்; நெஞ்சத்து அவலம் இலர்-ஏனெனில், அக் கீழ்மக்கள் தமது உள்ளத்தில் மேன்மக்களைப்போல் நன்மைகளை அறியவேண்டும் என்கின்ற கவலை இல்லாதவ ராவர்.

நன்று - தொகுதியொருமை. நன்மைக ளாவன - அறிவு புகழ் அறம் முதலாயின. மேன்மக்கள் இவற்றைக் குற்றமின்றிச் செய்யவேண்டுமென்று கவலையெடுத்துக் கொள்வர்; கயவர்கள் அவற்றைப்பற்றிய கவலை சிறிதும் இல்லாதவராகையால் 'திருவுடையர்' என இகழ்ந்தவாறு. திரு - நன்மை. கயவர் பழிமுதலியவற்றிற்கு அஞ்சார் என்பதாம், (௩)

1074 அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்

கீழ் - கீழோன், அகப்பட்டி ஆவாரைக் காணின் - தன்னைக் காட்டிலும் குறைந்த பட்டியாய் நடப்பாரைக் கண்டால், அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும்-அவரைக் காட்டிலும் தான் உயர்ந்தவனென்று இறுமாப்புக்கொள்வான்.

பட்டி - ஒழுக்கமில்லான். அகம்-சுருங்குதல், குறைதல். கயவன் தன்னிலும் குறைந்த கயமைத்தன்மையுடைய கீழோரைக் கண்டால் தானே கயமைத் தன்மையில் சிறந்தவனென்று இறுமாப்புக் கொள்வான். கீழோர் பெருமை கூறியவாறு. (௪)

1075 அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

கீழ்களது ஆசாரம் அச்சமே - கயவரிடம் ஒழுக்கங் காணப்படின் அதற்குக் காரணம் அரசனால் தண்டிக்கப் படுவோம் என்று அஞ்சும் அச்சமேயாகும்; எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம்-அஃதொழிந்தால், தம்மால் விரும்பப்படும் பொருள் அதனால் உண்டாகுமாயின் சிறிது ஒழுக்கம் உண்டாகும்.

அவ்வாறு நடந்தால் தாம் விரும்பிய பொருள் கிடைக்குமென்று தெரிந்தால் சிறிது அவ்வாறு ஒழுக்க முடையவராய் நடப்பர் என்பது கருத்து. அச்சத்தினா லும் அவாவினாலும் சிறிது உண்டானால் உண்டாகுமே யன்றிக் கயவர்களுக்கு ஒழுக்கமென்ப தொன்றில்லை என்பதாம் அஃதொழிந்தால்-அவ்வச்சத்தின் பொருட் டின்றேல். கயவர்க்கு ஒழுக்கம் இயல்பன்றென்பது. (ரு)

1076 அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்க லான்-தாம் கேட்ட மறைபொருளைத் தாங்கிக் கொண்டு போய்ப் பிறர்க்குச் சொல்லுதலால், கயவர் அறைபறை அன்னர்-கயவர் அறையப்படும் பறையினை ஒப்பர்.

மறை - இரகசியம். அறைபறை - நாடகம், படக் காட்சி போன்ற வற்றையும், அரசியற் காரியங்களையும் ஊர் மக்கட்கு அறிவிக்க அறையும் பறை. கயவர் தாங் கேட்ட மறையை ஊரறியச் செய்வர். (சா)

1077 ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

கயவர் கொடிறு உடைக்கும் கூன்கையர் அல்லாத வர்க்கு - கீழ்மக்கள் தமது கன்னத்தை நொறுக்கும்

வளைந்த கையை யுடைய கொடியோர் அல்லாதவர்க்கு, ஈர்ங்கை விதிரார்-தாம் உண்டு கழுவிய ஈரக்கையையும் உதறார்.

கயவர் தம்மை உதைத்து வருத்துவோர்க் கன்றிப் பிறர்க்கு ஒன்றுங் கொடார். "செருப்பாலே அடிப்பவர்க்கு விருப்பாலே கோடி செம்பொன் சேவித்தீவார்." "எச்சில் கையால் காக்கை ஓட்டமாட்டான்," "உண்ட கையும் உதறான்" என்பன காண்க. (எ)

1078 சொல்லப் பயன்படுபவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

சான்றோர் சொல்லப் பயன்படுவர் - மேலோர், ஒருவன் தன் குறையைச் சொன்னவுடனே அவனுக்கு உதவி புரிவர், கீழ் கரும்புபோல் கொல்லப் பயன் படும் - அவ்வாறன்றி, கீழ்மக்களோ தம்மைக் கரும்பைப் போல நையப் புடைத்தால்தான் பயன்படுவர்.

பயன்படுதல் - உள்ளது கொடுத்தல். கயவர்களின் இழிவு நன்கு விளங்க மேன்மக்களையும் உடன் கூறினர். நையப் புடைப்போர் - கள்வர், வழிபறிப்போர் முதலியோர். (அ)

1079 உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

உடுப்பதும் உண்பதும் கீழ் காணின் - பிறர் நன்கு உடுப்பதையும் உண்பதையும் கீழ்மகன் கண்டானாயின், பிறர்மேல் வடுக்காண வற்றாகும் - அவற்றைப் பொறாது, அவரிடத்தில் குற்றமில்லாவிட்டாலும் குற்றமுண்டாக்க வல்லவனாவான்.

வடு - குற்றம். வற்றாகும் - வல்லவனாவான். இல்லாத குற்றத்தை அவர்மீது சொல்வான். பிறர் செல்வங் கண்டு பொறாத கயமைக் குணங் கூறப்பட்டது. (கூ)

1080 எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர் - கயவர் தமக்கு ஏதேனும் ஒருகுறை உண்டான போது அது தீர்த்தற்பொருட்டு விரைந்து தம்மைப் பிறர்க்கு அடிமைப் படுத்தற் குரியர்; எற்றிற்கு உரியர் - அதுவன்றி வேறு எதற்குரியர்? ஒன்றுக்கும் உரியரல்லர்.

கயவர்க்கு மானம் என்னும் நற்குணம் இன்மையால் உணவுடை ஏதேனும் ஒன்றின்மை யானல் உடனே பிறரை யடுத்து, அவர் சொன்னபடி கேட்டு, அதைப் பெற்று உயிர் வாழ்வர் என்பதாம். விற்றல் - பிறர் சொற்படி நடத்தல். (ம)

பொருட்பால் முற்றிற்று

# 3 இன்பத்துப் பால்

இன்பமாவது - ஒருவனும் ஒருத்தியும் கூடி இன்புறும் இன்பம். அவ்வின்பவொழுக்கம் - புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என ஐந்து வகைப்படும். அவற்றை 'ஐந்திணை' என்பர் தொல்காப்பியர். அவ்வைந் தொழுக்கத்தையும் களவு, கற்பு என இரண்டாக வகுத்து, அவற்றைப் பெரும்பான்மை உலக வழக்கோடு பொருத்திச் செய்யுள் வழக்கும் இனிது அமையப் பழந் தமிழ் மக்களின் இல்வாழ்க்கையின் நனிமிகு சிறப்பின் நற்பண்பாட்டினைச் சுவை மிக வுடைத்தாய் இனிது கூறுகின்றார் வள்ளுவர். புணர்ச்சி ஒன்றையும் களவு எனவும், பிரிவு முதலிய நான்கையும் கற்பு எனவுங் கொண்டனர். களவினும் பிரிவு நிகழுமேனும் பெரும்பான்மை பற்றிக் கற்பிலடக்கினர். அறத்துப் பாலினும், பொருட் பாலினும் உள்ள பல அதிகாரங்களே காலமாற்றத்தால் தேவையில்லாது போயினும், மக்களினம் உள்ளமட்டும் நின்று நிலவுவது இவ்வின்பத்துப் பாலே யென்பது தேளிக.

## 1 களவியல் - (7)

களவாவது - குடிப்பிறப்பும் அக் குடிப்பிறப்பிற்குரிய தன்மையும் ஆண்மையும் பருவமும் உருவமும் அன்பும் நிறையும் அருளும் அறிவும் செல்வமும் என்னும் பத்தும் தம்முள் ஒத்தவராய தலைமகனும் தலைமகளும் தாமே எதிர்ப்பட்டுக் கூடி மகிழ்வது. உரு - வடிவழகு. நிறை - அடக்கம். இவை ஒருவாறு தம்முளொத்த இருவர் காதல் கொள்வதே உலகியல். இவை பத்தும் ஒருங்கு ஒப்புமை உடைய தொல்: மெய்ப்பாட்டியில் 25.

தாகக் கூறுதல் செய்யுள் வழக்கு. அக்களவு - இயற்கைப் புணர்ச்சி, இடந் தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் என நான்கு வகைப்படும். தோழியிற் கூட்டம் - தோழி மதியும்பாடு, பகற்குறி, இரவுக்குறி ஒருவழித் தணத்தல், வரைவு கடாதல், வரைவுடன் படல், வரை விடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல், அறத்தொடு நிலை, உடன்போக்கு எனப் பன்னிருவகைப்படும்.

## 109 தகையணங் குறுத்தல்

தகை அணங்கு உறுத்தல். தகை - அழகு. அணங்கு- வருத்தம். உறுத்தல் - வற்புறுத்திக் கூறுதல். தலைமக ளது அழகு தன்னை வருத்துதலைத் தலைமகன் கூறுதல்.

1081 அணங்குகோ லாய்மயில் கோல்லோ கனங்குழை
மாதர்கோல் மாலுமேன் னேஞ்சு.

கனங்குழை - கனவிய குழையினை யுடையாள், அணங்குகொல் - அணங்கோ, ஆய்மயில் கொல் - சிறந்த மயிலோ, மாதர்கொல்-அல்லது ஒரு தமிழ்ப் பெண்ணோ, என் நெஞ்சு மாலும் - இவளை இன்னளென்று துணிய மாட்டாது என் உள்ளம் மயங்குகிறது.

குழை - காதணி. ஆய்மயில் - மயில்களில் ஆராய்ந் தெடுத்த மயில். அணங்கு-முகவுரை பார்க்க. இது ஐயம். தலைமகன் தலைமகளை ஐயுற்றது. (க)

1082 நோக்கினு ளேக்கேதிர் நோக்குத ருக்கணங்கு
தானைக்கோண் டன்ன துடைத்து.

நோக்கினுள் நோக்கெதிர் நோக்குதல் - இத்தகைய அழகுடையாள் எனது நோக்கிற்கு எதிர் நோக்குதல், தாக்கு அணங்கு தானைக்கொண் டன்னது உடைத்து -

தானே வருத்தும் அணங்கு வருத்துதற்கு ஒரு படையை யும் கொண்டு வந்த தன்மையை உடையது.

நோக்குதல் - பார்த்தல். எதிர்நோக்கு - குறிப்பு நோக்கு. அழகால் வருத்துதலோடு குறிப்பு நோக்கால் வருத்துதலுங் கூறிற்று. பெண்ணென்று தெளிந்தவன் அவள் நோக்காலாகிய வருத்தங் கூறியது. (உ)

1083 பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

கூற்று என்பதனைப் பண்டு அறியேன்-கூற்று என்று நூலோர் சொல்வதை முன்பு கேட்டு அறிவதல்லது கண் டறியேன், இனி அறிந்தேன் - இப்போது அறிந்தேன், பெண் தகையால் பேர் அமர்க் கட்டு-அது பெண் தகைமை யுடன் பெரிய அமர்த்த கண்களையுடையது.

இதுவுமது. பெண்தகை - நாணம், மடம், அச்சம் பயிர்ப்பு என்னும் பெண்மைக் குணங்கள். நாணம்-காமக் குறிப்பு நிகழும்போது உண்டாகும் பெண்மைக் குணம். மடம் - அறிவிக்க அறிந்து அறிந்ததை வெளிக்காட் டாமை. அச்சம்-அன்பு காரணமாகத் தோன்றுங் குணம். பயிர்ப்பு - புதிதாக ஒன்றைக் கண்டபோது மனங் கொள் ளாமை. துன்பம் பயத்தலின் கூற்று என்றான். கூற்று- முகவுரை பார்க்க. (௩)

1084 கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

பெண்தகைப் பேதைக்குக்கண் - பெண் தன்மையை உடைய இவளுக்கு உள்ள கண்கள்; கண்டார் உயிர் உண் ணும் தோற்றத்தால் அமர்த்தன - தம்மைக் கண்டவரது உயிரை உண்ணும் தோற்றத்துடனே கூடி மாறுபட்டிருக் கின்றன.

இதுவுமது. பேதைமை - காம வேட்கையால் செய்யத் தகுவன அறியாமை. அவள் குணங்களுக்கும், பேதைமைக்கும் மாறுகக் கொடியனவாய் இருந்தன என்பதாம்.

1085 கூற்றமோ கண்ணே பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.

கூற்றமோ - என்னைத் துன்பப் படுத்துதலால் கூற்றமோ? கண்ணே - என்மீது இரக்கங் கொண்டு பார்த்தலால் கண்ணே? பிணையோ - இயல்பாக அஞ்சுதலால் பெண் மானே? அறிகிலேன்; மடவரல் நோக்கம் இம் மூன்றும் உடைத்து - இவள் நோக்கம் இம் மூன்று தன்மைகளையும் உடையதாயிருக்கிறது.

இதுவுமது. இன்பமும் துன்பமும் ஒருங்கு செய்கின்றது என்பதாம். இது ஐயவுவமம். (ரு)

1086 கொடும்புருவங் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

கொடும் புருவம் கோடா மறைப்பின் - கொடிய புருவங்கள் கோணுதலில்லாமல் தடுக்குமானால், இவள் கண் நடுங்கு அஞர் செய்யல - அப்புருவங்களைக் கடந்து வந்து இவள் கண்கள் எனக்கு நடுக்கத்தைத் தரும் துன்பத்தைச் செய்யமாட்டா.

இதுவுமது. கோடா - கோடாது, நடுவுநிலைமை தவறுது. 138 உரை பார்க்க. புருவங்கள் நடுவு நிலைமையுடன் நின்று தடுக்குமானால் அவைகளை மீறிக் கண்கள் எனக்குத் துன்பம் செய்யா என்பதாம். புருவங்கள் இயல்பாகக் கோடுதலுடைமையின் பிறர் தவறு செய்தால் கண்டிக்குந் தன்மையில்லை என்பதுபட நின்றமையால் மன் ஒழியிசை. (சா)

1087 கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

*மாதர் படா முலைமேல் துகில்-இவளது சாயாத முலைமே லிட்ட மேலாடையானது, கடாக் களிற்றின் மேல் கண் படாம்-வெறி யானையின் கண்களை மறைத்திட்ட முகபடாத்தினை ஒக்கும்.*

அவள் மார்பாலாகிய வருத்தங் கூறியது. *முலை தன்னை வருத்தாமல் மேலாடை காத்தலான் அதை, கொல்லுங் குணமுடைய வெறிக் களிற்றின் கண்ணை மறைத்திட்ட முகமூடி போலும் என்றான்.* (எ)

1088 ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.

*ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு-போர்க் களத்தில் பகைவரும் அஞ்சும் எனது வலி, ஒள் நுதற்கு உடைந்ததே-இவளது ஒளி பொருந்திய நெற்றிக்கு ஆற்றாது அழிந்துவிட்டது.*

நெற்றியாலாய வருத்தங் கூறியது. *வலி-மனவலியும், உடல்வலியும். ஓ-வியப்பிடைச் சொல்.* (அ)

1089 பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

*பிணை ஏர் மட நோக்கும் நாணும் உடையாட்கு - பெண்மானைப் போன்ற அஞ்சுந் தன்மையை யுடைய பார்வையையும், நாணத்தையும் உடைய இவளுக்கு, ஏதில தந்து அணி எவன்-வேறு அணிகலன்கள் கொண்டு வந்து அணிவது யாது கருதியோ?*

நகையாலாய வருத்தங் கூறியது. *இவளுக்குச் சுமை யாதலும், எனக்கு வருத்தமாதலுங் கருதாமல் அணிந்தார் அறிவிலர் என்பதாம். ஏர்-உவமவுருபு.* (கூ)

1090 உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

*அடு நறா-கள்ளானது, உண்டார் கண் அல்லது - தன்னை உண்டவர்க்கு மட்டுமே அல்லாது, காமம்போல் கண்டார் மகிழ் செய்தல் இன்று - காமத்தைப் போலத் தன்னைக் கண்டவர்க்கு மகிழ்ச்சியைக் கொடுத்தல் இல்லை.*

தலைவி குறிப்பறிந்து கூறியது. *காமமென்றது-காம நுகர்தற்கிடமாகிய தலைமகளை.* (ய)

## 110 குறிப்பறிதல்

*தலைவி, தோழி ஆகியோர் குறிப்பினைத் தலைவனும் தலைவன், தலைவி குறிப்பினைத் தோழியும் அறிதல்.*

1091 இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

*இவள் உண்கண் உள்ளது இரு நோக்கு - இவள், மையுண்ட கண்களில் உள்ளதாகிய பார்வை இப்போது என்மீது இரண்டு பார்வை ஆயிற்று; ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து - அவற்றில் ஒரு பார்வை எனக்கு நோய் தரும் பார்வை, மற்றொன்று அந்நோய்க்கு மருந்தாகிய பார்வை.*

தலைமகன், தலைமகள் குறிப்பை அவள் நோக்கினால் அறிந்தது. *மை உண்ணல் - மை தீட்டுதல். நோய் தரும் பார்வை - அவள் மனத்திலுள்ள காமக் குறிப்பினை வெளிப்படுத்தும் பார்வை. மருந்தாகிய பார்வை - தலைவனைப் பார்க்கின்ற அன்புப் பார்வை.* **(க)**

1092 கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

*கண் களவு கொள்ளும் சிறு நோக்கம் - இவள் கண்கள் யான் காணுமல் என்னைக் கள்ளத்தனமாய்ப் பார்க்கும் சிறிய பார்வையானது, காமத்தில் செம்பாகம் அன்று பெரிது - மெய்யுறு புணர்ச்சியில் சரிபாதியன்று; அதைவிடப் பெரிது.*

இதுவுமது. *தான் பார்த்தபோது நாணித் தலைகுனிந்தும், தான் பார்க்காதபோது தன்னை உற்றுப்பார்த்ததால் களவு கொள்ளுமென்றும், அது சிறிது நேரம் நிகழ்வதால் சிறு நோக்கமென்றும் கூறினன். அவள் தனது குறிப்புக்கு உளப்பட்டபோது நிகழ்வதாகலின் இனிப் புணர்ச்சி கட்டாயம் என்பான் செம்பாகம் அன்று பெரிது என்ருன் - செம்பாகம் - சரிபாதி.* (உ)

1093 நோக்கினு ணேக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

*நோக்கினள் - நான் பார்க்காதபோது என்னை அன்போடு பார்த்தாள், நோக்கி இறைஞ்சினள் - பார்த்து ஒன்றனை உட்கொண்டு அதனல் வெட்கித் தலைகுனிந்தாள், அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர் - அக்குறிப்பு எங்கள் இருவரிடத்தும் தோன்றிய அன்பாகிய பயிர் வளர அப்பயிரில் அவள் ஊற்றிய நீரானது.*

இதுவுமது. *இது நோக்கினுலும், நாணினுலும் அறிந்தது. அஃது - புணர்ச்சி குறித்தது.* (ந)

1094 யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

*யான் நோக்கும் காலை நிலன் நோக்கும் - நான் அவளைப் பார்க்கும்போது அவள் என்னைப் பாராது தலை குனிந்து நிலத்தைப் பார்ப்பாள், நோக்காக்கால் தான்*

நோக்கி மெல்லநகும் - அதைபறிந்து, நான் அவளைப் பாராவிடின் அவள் என்னைப் பார்த்து உள்ளுக்குள் மகிழ் வாள். இம்மகிழ்ச்சியால் புணர்தற் குறிப்பு இனிது விளங்கும். (ச)

1095 குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் - நேராக என்னைக் குறித்துப் பாராததேயல்லாமல், ஒருகண் சிறக் கணித்தாள்போல நகும் - ஒரு கண்ணைச் சுருங்கினாற் போலப் பார்த்து மகிழ்வாள்.

இதுவுமது. சிறங்கணித்தல் என்பது வலித்தல் விகாரம். இனி இவளை அடைதல் துணிவென்பதாம். (ரு)

1096 உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும்.

உறாதவர்போல் சொலினும் - அயலார்போல கடுஞ் சொல் சொன்னாராயினும், செறார் சொல் ஒல்லை உணரப் படும் - பகைமைக்குண மில்லாதவர் சொல் பயன்தரத் தக்கது என்பதை விரைவில் அறியப்படும்.

தோழி சேட்படுத்தபோது அவள் குறிப்பறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது. சேட்படுத்தல் - தலைமகளை அணுகவிடாமல் அவனைத் தடுத்தல். கடுஞ்சொல்- இங்கு காவல் மிகுதியுடையது வராதீர் என்பதுபோன்ற சொல். தன்குறை முடிக்கக் கருதியே சேட்படுக்கின்றமை அறிந்து கூறியது. (சு)

1097 செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

செறாச் சிறு சொல்லும் - பின் இன்பந்தரும், முதலில் இன்பந்தராத கடுஞ் சொல்லும், செற்றார் போல் நோக்

கும் - வெளிக்குப் பகைவர் போன்ற வெகுளிப் பார்வை யும், உறார் போன்று உற்றார் குறிப்பு - நொதுமலர் போன்று அன்பராயினாரது குறிப்பாகும். உள்ளொன்று குறியாமையால் இவற்றிற்கு அஞ்சவேண்டாமென்பதாம். இதுவுமது. (எ)

1098 அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

யான் நோக்கப் பசையினள் பைய நகும் - நான் வருந்தி நோக்கியபோது அதற்கிரங்கி மெல்ல மகிழா நின்றாள், அசை இயற்கு ஆண்டு ஓர் ஏர் உண்டு - ஆகையால், அசையும் இயல்பினை யுடையவளுக்கு அந்நகையில் ஓர் நன்மைக் குறிப்பு உண்டு.

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலை மகன் கூறியது. பசை - இரக்கம். (அ)

1099 ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதல் - முன் அறியாதார்போல ஒருவரை ஒருவர் பொதுப் பார்வை பார்த்தல், காதலார் கண்ணே உள - காதலரிடமே உள்ளன.

தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது. மதியுடம்படுதல் - காதலர் கருத்துக்குத் தானும் உடம் படுதல். (கூ)

1100 கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்
என்ன பயனு மில. [கள்

கண்ணொடு கண்இணை நோக்கு ஒக்கின்-காதலர் இரு வருள், ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் பார்வையில் ஒத்திருக்குமாயின், வாய்ச் சொற்கள் என்ன பயனும்

இல-அவர் வாயிலிருந்து வரும் சொற்கள் ஒருபயனும் உடையவை யல்ல.

இதுவுமது. இணை - இரண்டு. நோக்கொத்தல்-காதல் நோக்கின வாதல். (ய)

## 111 புணர்ச்சிமகிழ்தல்

குறிப்பறிந்து புணர்ந்த தலைவன் அப்புணர்ச்சி இன்பத்தை மகிழ்ந்து கூறுதல்.

1101 கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்-கண்டும் கேட்டும் உண்டும் மோந்தும் தொட்டும் இன்புறும் ஐம்புல இன்பமும், ஒண்டொடி கண்ணே உள-இவ்வொள்ளிய வளையல்களை உடையவளிடமே யுள்ளன.

இயற்கைப் புணர்ச்சியின் முடிவில் சொல்லியது. இயற்கைப் புணர்ச்சி-முதற்கூட்டம். வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பொருள்களால் நுகரப்படும் ஐவகை இன்பமும் ஒருகாலத்தே இவளிடமே நுகரப்பட்டதென மகிழ்ந்தனன். (க)

1102 பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.

பிணிக்கு மருந்து பிற-நோய்க்கு மருந்து பிறி தொன்று, அணி இழை தன் நோய்க்குத் தானே மருந்து-இவ்வணி இழையாள் தன்நோய்க்கு மருந்தும் தானே ஆயினாள்.

இடந்தலைப் பாட்டின்கண் சொல்லியது. இடந்தலைப் பாடு-மறுநாட் கூட்டம். இயற்கைப் புணர்ச்சியை நினைந்து

முன் வருத்தினதால் நோய் என்றும், இன்று தனியாகக் கண்டு கூடி அவ்வருத்தம் தீர்ந்தாளுகையின் மருந்து என்றும் கூறினன். இப்பிணியும் எளிய மருந்தால் தீரப்பெற்றிலேம் என்பதால் மன் ஒழியிசை. (உ)

1103 தாம்வீழ்வார் மென்றேட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு.

*தாம் வீழ்வார் மென்தோள் துயிலின்-தம்மால் விரும்பப்படும் மகளிர் தோள்மேல் துயிலும் துயிலைக் காட்டிலும், தாமரைக் கண்ணன் உலகு இனிது கொல் - தாமரைக் கண்ணன் உலகின்கண் மிகுதியான இன்பம் உண்டோ? இல்லை.*

பேரின்பத்திற் குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இவ்வாறுதல் தகாதென்ற பார்ப்பானுக்குச் சொல்லியது. *தாமரைக் கண்ணானுலகு-முகவுரை பார்க்க. மனைவியோடு கூடிவாழும் இல்லற இன்பத்தை விட, மனைவியைப் பிரிந்து அடைவதாக நீங்கள் கூறும் தாமரைக் கண்ணானுலகின் கண் மிகுதியான இன்பம் உண்டோ என அயலார்கொள்கையை மறுத்துக்கூறியது. மென்றோள் துயில்-புணர்ச்சியின்பம்.* (ஙு)

1104 நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

*நீங்கின் தெறும் குறுகுங்கால் தண் என்னும் தீ-தன்னைவிட்டு நீங்கினால் சுடும், தன்னை நெருங்கினால் குளிரும் இத்தன்மை வாய்ந்த நெருப்பை, இவள் யாண்டுப் பெற்றாள்-இவள் எவ்விடத்தில் பெற்றாள்?*

பாங்கற் கூட்டத்தின் முடிவில் சொல்லியது. *பாங்கற் கூட்டம் - பாங்கன் உடம்பாடு பெற்றுத் தலைவன் தலைவியைக் கூடுங் கூட்டம். தன் காமத்தீ அவளால் வெளிப்படுதலால், அவள் தந்தாளாகக் கூறினன்.* (ச)

1105 வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

*தோடு ஆர் கதுப்பினாள் தோள்-பூவையணிந்த கூந்தலை யுடையவள் தோள்கள், வேட்ட பொழுதின் அவை அவை போலும்-விரும்பிய பொருள்களைப் பெறாது அவற்றை விரும்பிய போதெல்லாம் அப்பொருள்கள் நினைவுக்கு வந்து இன்பஞ் செய்யுமாறுபோல் இன்பஞ் செய்யும்.*

தோழியிற் கூட்டத்தின் முடிவில் சொல்லியது. *தோழியிற் கூட்டம்-தோழியின் உடம்பாடு பெற்றுக் கூடுங் கூட்டம். தோடு-பூவிதழ்; பூவை யுணர்த்திற்று. வேட்டல்-விரும்புதல்.* (ரு)

1106 உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

*உறுதோறு உயிர் தளிர்ப்பத் தீண்டலால் - தம்மைச் சேருந் தோறும் வாடிய என்னுயிர் தழைக்கும்படி தீண்டுதலால், பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன-இப் பேதைக்குத் தோள்கள் அமிழ்தினால் செய்யப்பட்டவையாகும். அமிழ்து-உயிரை வளர்க்கும் மருந்து.* இதுவுமது. (சா)

1107 தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா வரிவை முயக்கு.

*அம்மா அரிவை முயக்கு-அழகிய பொன்னிறமுடைய அரிவையின் புணர்ச்சியானது, தம் இல் இருந்து தமது பாத்து உண்டற்று-தமது வீட்டிலிருந்து தமது பொருளை இல்லாதார்க்குப் பங்கிட்டுக் கொடுத்து உண்டாற் போலும்.*

*இவளை நீ மணந்து கொண்டு இல்லறம் நடத்த வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.*

உவமை பழந்தமிழரின் தனிப் பண்பாட்டுக்குச் சான்றாகும். (எ)

1108 வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

வளி இடை போழப் படா முயக்கு - காற்றினால் இடையறுக்கப் படாத புணர்ச்சியானது, வீழும் இருவர்க்கு இனிதே - ஒருவரையொருவர் விரும்பும் இருவர்க்கு இனிதேயாம்.

இருவர்க்கும் இடையே காற்று நுழையாதபடி இரண்டறத் தழுவிய புணர்ச்சி. இருவரில்லை; ஒன்றாயினேம் என்றது. ஒத்த அன்புடைய நமக்கு ஒருபொழுதும் நீங்காத முயக்கமே இனிது என மணஞ் செய்து கொள்ள வேண்டிய தோழிக்குச் சொல்லியது. (அ)

1109 ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

ஊடல் உணர்த்தல் புணர்தல் இவை - புணர்ச்சியின்பம் மிகும்பொருட்டு ஊடுதலும், ஊடல் நீங்குதலும் பின்கூடுதலும் என்னும் இவை யன்றோ? காமம் கூடியார் பெற்ற பயன் - மணந்துகொண்டு இடையறாத இன்பம் எய்தியவர் பெற்ற பயன்கள்.

ஊடல் உணர்தல் புணர்தல் என்னும் இவையன்றோ மணஞ்செய்து கொண்டவர்கள் பெற்ற பயன்கள் எனவரைவு கடாய தோழிக்கு, ஈருடல் ஓருயிரான எமக்கு அப் பயன்கள் வேண்டாவென வரைந்தடையும் பயன்களை தலைவன் இகழ்ந்து கூறியது. வரைவு கடாதல் - மணஞ்செய்து கொள்ள வேண்டுதல். வரைதல் - மணத்தல். (கூ)

1110 அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

சேயிழை மாட்டுச் செறிதோறும் காமம் - சிவந்த அணிகளை யுடையவளைப் புணரப் புணரக் காதலானது, அறிதோறு அறியாமை கண்டற்று - கற்று அறிய அறிய முன்னிருந்த அறியாமையைக் கண்டதுபோலும்.

தலைமகன் தன் நிறையா இன்பத்தைக் கூறியது. ஆல் - அசை. (ய)

## 112 நலம்புனைந்துரைத்தல்

தலைமகன் தலைமகளின் வடிவழகைச் சிறப்பித்துச் சொல்லியது.

1111 நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்.

அனிச்சமே வாழி - அனிச்சப் பூவே! நீ வாழ்வாயாக; நல் நீரை - மென்மையால் நீ எல்லாப் பூக்களினும் நல்ல இயற்கையை உடையாய், யாம் வீழ்பவள் நின்னினும் மெல் நீரள் - எம்மால் விரும்பப்படுபவள் உன்னைக் காட்டிலும் மெல்லிய இயற்கையை உடையாள்.

இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது. இனி, 'நானே மெல்லியன்' என்னும் செருக்கினை ஒழிவாயாக என்பதாம். (க)

1112 மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

நெஞ்சே - நெஞ்சமே! இவள் கண் பலர் காணும் பூ ஒக்கும் என்று - இவள் கண்களைப் பலராலும் பார்க்கப் படும் மலர்கள் ஒக்கும் என்று நினைத்து, மலர் காணின்

மையாத்தி - நீ பலவகை மலர்களைக் கண்டால் மயங்கா நின்றாய்; உன் அறிவிருந்தவா றென்ன!

இது இடந்தலைப்பாடு. இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைமகள் கண்களைக் காணப்பெறாது, அக்கண்களை யொக்கும் மலர்களைக் கண்டவிடத் தெல்லாம் அம் மலர்களிடம் அன்பு செலுத்தி வந்தான். இடந்தலைப் பாட்டில் தனியாகக் கண்டானாகையால் அம் மலர்கள் ஒவ்வாமை கருதி ஒப்புமை கருதிய நெஞ்சை இகழ்ந்து கூறினான். (உ)

1113 முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

வேய்த்தோள் அவட்கு-மூங்கில் போலும் தோளினை உடையவளுக்கு, மேனி முறி - நிறம் தளிர் போன்றது; முறுவல் முத்தம் - பல் முத்துப் போன்றது; நாற்றம் வெறி - இயற்கை மணம் நறுமணமாக இருக்கும்; உண்கண் வேல் - மையுண்ட கண் வேல் போன்றது.

நின்னால் கருதப்பட்டாளை அறியேன் என்ற தோழிக்குத் தலைமகன் கூறியது. தலைவியின் அடையாளங் கூறினான். (௩)

1114 காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று.

குவளை - குவளைப் பூக்கள், காணின் - காணும் ஆற்றலுடைனவாயின், மாண் இழை கண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும் - மாட்சிமைப்பட்ட அணிகளை உடையவளது கண்களை யாம் ஒவ்வேம் என்று கருதி நாணத்தினால் தலைகுனிந்து நிலத்தைப் பார்க்கும்.

பாங்கற் கூட்டத்துச் செல்வான் கூறியது. நாணும் ஆற்றலும், நாணும் இன்மையால் இறுமாந்து வானை நோக்குகின்றன என்பது குறிப்பு. (ச)

1115 அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

*அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள் - இவளுடைய மென்மை கருதாது அனிச்சப்பூவைக் காம்பு நீக்காது கூந்தலில் சூடினாள்; நுசுப்பிற்கு நல்ல பறை படா- இனி இவள் இடைக்கு நல்ல பறைகள் ஒலிக்க மாட்டா..*

பகற்குறிக் கண் பூவணி கண்டு சொல்லியது. *பகல் குறி - பகலில் தலைமகள் குறித்த இடத்தில் தலைமகன் சென்று கூடுதல். காம்புகளின் சுமை தாங்காது இடுப்பு முறியும்; முறிந்தால் அதற்குச் செத்தாற்குரிய சாப்பறை ஒலிக்கும் என்பதாம். 'நல்ல பறை படா' எனவே சாப் பறை படும் என்பதாம்.* (ரு)

1116 மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

*மீன் - வானத்திலுள்ள மீன்கள், மதியும் மடந்தை முகனும் அறியா - மதிக்கும் எம் மடந்தை முகத்திற்கும் வேறுபாடு காணமாட்டாமல், பதியின் கலங்கிய - தம் நிலையினின்றும் கலங்கித் திரிகின்றன.*

இரவுக் குறிக்கண் மதி கண்டு சொல்லியது. இருமதி *கண்டு மீன்கள் நிலைகலங்கின.* (சு)

1117 அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

*அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப் போல - முன் குறைந்த கலை நிறைந்த ஒளிர்மதிக்குப் போல, மாதர் முகத்து மறு உண்டோ - இம்மாதர் முகத்தில் களங்கம் உண்டோ ?*

இதுவுமது. *முகம் தேய்தலும் வளர்தலும் மறு இன்மையும்பற்றி மதியொடு வேறுபாடறியலாமாயிருக்க,*

அம்மீன்கள் அறிந்தில என இகழ்ந்தவாறு. அறுவாய் - அற்ற, குறைந்த இடம். வாய் - இடம். (எ)

1118 மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

மதி வாழி - மதியே! வாழ்வாயாக; மாதர் முகம் போல் ஒளிவிட வல்லையேல் காதலை - யான் மகிழும்படி இம்மாதர் முகம்போல ஒளிவீச வல்லையாயின் நீயும் என் காதலை உடையையாவாய்.

இதுவுமது. மறுவுடைமையின் ஒளி வீச மாட்டாய்; மாட்டாமையின் என்னால் காதலிக்கவும் படாய் என்பதாம். (அ)

1119 மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

மதி-மதியே! மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்-இம்மலர் போலும் கண்களை உடையவளது முகத்தை நீ ஒத்திருக்க வேண்டுவாயாயின், பலர் காணத் தோன்றல்-நீ பலர் காணத் தோன்றற்க; நான் காணும் படியாக மட்டும் தோன்றுவாயாக.

இதுவுமது. முகத்தின் அழகு முழுதுங்கண்டின்புற்றானாகலின் பலர் காணத் தோன்றல் என்றான். (கூ)

1120 அனிச்சமு மன்னத்தின் றூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

அனிச்சமும் அன்னத்தின் தூவியும்-உலகத்தாரால் மென்மைக் கெடுத்துக் காட்டப்படும் அனிச்சப் பூவும் அன்னப் பறவையின் சிறகுமாகிய இரண்டும், மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் - இம்மாதரின் அடிக்கு நெருஞ்சி முட்போல வருத்தஞ் செய்யும்.

உடன்போக் குரைத்த தோழிக்குச் சொல்லியது. இத் தன்மையான அடி கூரிய கற்களையுடைய சுடுசுரத்தை எப்படிக் கடக்குமென மறுத்தது. உடன்போக்கு-தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு தன்னூர் செல்லுதல். (ம)

## 113 காதற்சிறப்புரைத்தல்

*தலைமகனும் தலைமகளும் தத்தம் காதல் மிகுதியைக் கூறுதல்.*

1121 பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

*பணி மொழி வால் எயிறு ஊறிய நீர் - மென்மையான மொழியினை உடையவளது வெண்மையான பல்லில் ஊறிய நீரானது, பாலொடு தேன் கலந்தற்று-பாலுடன் தேனைக் கலந்த சுவை போலும். தலைமகன் கூற்று.* (க)

1122 உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

*மடந்தையொடு எம்மிடை நட்பு-இம்மடந்தையோடு எம்மிடம் உண்டாகிய நட்பு, உடம்பொடு உயிரிடை என்ன அன்ன-உடம்போடு உயிரிடம் உண்டாகிய நட்பு எத்தகையனவோ அத்தகையன.*

*உடம்பொடு உயிர்க்கு, மடந்தையொடு எமக்கு என்க. தலைவன் பிரிவைக் கண்டு தலைவி அஞ்சியபோது* தலைவன் கூறியது. (உ)

1123 கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

*கருமணியில் பாவாய் நீ போதாய்-என் கண்ணின் கருமணியில் உறையும் பாவாய்! நீ அவ்விடம் விட்டுப்*

போவாயாக; யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை - எம்மால் விரும்பப்பட்ட அழகிய நெற்றியை உடையவளுக்கு இருக்க இடம் இல்லை.

இடந்தலைப் பாட்டில் தலைமகள் நீங்கும்போது தலைமகன் சொல்லியது. இவளைக் காணுதிருக்க என்ருல் முடியாதாகையால் இவள் எப்போதும் என் கண்ணினுள்ளேயே இருப்பாள்; உன்னேடொருங்கிருக்க இடம் போதாமையால் உன்னிலும் சிறந்த இவட்கு அவ்விடத்தை விட்டு நீ போவாயாக என்பதாம். பாவை - கண்ணுக்குள் பார்த்தால் தெரியும் பார்ப்பவர் உருவம்.

1124 வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள் - ஆராய்ந்த அணியை உடையவள் என்னுடன் புணரும்போது என் உயிருக்கு உடம்புடன் கூடி வாழ்வது போல்கின்ருள்; நீங்கும் இடத்து அதற்குச் சாதல் அன்னள் - என்னை விட்டுப் பிரியும்போது அவ்வுயிருக்கு உடம்பைவிட்டு நீங்குதல் போல்கின்ருள். புணர்ந்து நீங்குவோன் சொல்லியது. (௪)

1125 உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னெள்ளமர்க் கண்ணள் குணம்.

ஒள் அமர்க் கண்ணள் குணம் யான் மறப்பின் உள்ளுவன் - ஒளி பொருந்திய அமர் செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை நான் மறந்தேனுயின் நினைப்பேன்; மறப்பு அறியேன் - ஆனுல், மறத்தலறியேன்; ஆகையால், நினைத்தலையும் அறியேன்.

ஒருவழித் தணந்து வந்த தலைமகன், நீர் பிரிந்தபோது எம்மை நினைத்தீரோ என்ற தோழிக்குச் சொல்லியது. தணத்தல் - பிரிதல். ஒருவழித்தணத்தல் - இடை

விடாது இன்பம் நுகர்வான் தலைமகளைப் பிரிந்து சில நாள் தலைமறைவா யிருத்தல். குணங்கள் - நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு. 1083-ம் குறளுரை பார்க்க. இனித் தலைமகள் கூற்று. (ரு)

1126 கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

எங் காதலவர் கண் உள்ளில் போகார் - எமது காதலர் என் கண்ணின்றும் வெளியே போகமாட்டார்; இமைப் பின் பருவரார் - யாம் அறியாது இமைத்தேமாயின் அதனால் வருந்தவும் மாட்டார்; நுண்ணியர்-ஆதலால், அவர் காணப்படாத நுண்ணியர்.

ஒருவழித் தணந்தபோது தலைமகனைத் தோழி இயற்பழிப்பாள் என்று அஞ்சித் தோழி கேட்பத் தன்னுள்ளே சொல்லியது. இயற் பழித்தல் - தலைமகன் குணத்தைப் பழித்தல். இடைவிடாத நினைவால் எப்போதும் முன்னே தோன்றலின் கண்ணுள்ளிற் போகாரென்றும், இமைத்த போதும் அகத்தோற்றம் நிற்றலின் இமைப்பில் பருவரார் என்றும் கூறினள். பருவரல் - வருந்துதல். (சு)

1127 கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

காதலவர் கண் உள்ளாராக - காதலர் எங்கண்ணினுள் எப்போதும் இருக்கின்றாராதலால், கரப்பாக்கு அறிந்து கண்ணும் எழுதேம் - அவர் மறைதலை அறிந்து அவ்வளவு காலமும் மையினால் கண்ணும் எழுத மாட்டோம்.

இதுவுமது. கரப்பாக்கு - கரத்தல்; தொழிற்பெயர். யான் எப்போதும் இடைவிடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று எண்ணுதல் என்னை என்பது கருத்து. (எ)

1128 நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

*காதவலர் நெஞ்சத்தாராக - காதலர் எமது நெஞ்சில் எப்போதும் இருக்கின்றாராதலால், வேபாக்கு அறிந்து வெய்து உண்டல் அஞ்சுதும் - அவர் சுடுதலை அறிந்து உண்ணும்போது சூடுள்ளதாக உண்ணுதற்கு அஞ்சுகிறோம்.*

இதுவுமது. *வேபாக்கு - தொழிற் பெயர். எப்பொழுதும் என் நெஞ்சின் கண் இருப்பவரைப் பிரிந்தாரென்று எண்ணுவது என்ன என்பது கருத்து.* (அ)

1129 இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
ஏதில ரேன்னுமிவ் வூர்.

*இமைப்பின் கரப்பாக்கு அறிவல் - என் கண் இமைக்குமாயின் அதனுள்ளிருக்கின்ற என் காதலர் மறைதலை அறிந்து இமையேன்; அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர் - அவ்வளவிற்கே எனக்குத் துயிலா நோய் செய்து பிரிந்தார், அன்பிலர் என்று பழி கூறும் இவ்வூர்.*

வரைவிடைவைத்துப் பிரிந்தபோது, தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தபோது தலைமகள் இயற்பட மொழிந்தது. *வரைவு இடை வைத்துப் பிரிதல்-மணம் செய்துகொள்ள உடன்பட்ட பின் பிரிதல். இயற்பட மொழிதல்-தலைவன் தன்மையைப் புகழ்தல். தன் கருத்தறியாமை பற்றித் தோழியை இவ்வூர் என்றாள். ஒரு பொழுதும் பிரியாதாரைப் பிரிந்தாரென்று பழிக்காதே என்பதாம்.* (கூ)

1130 உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரேன்னுமிவ் வூர்.

*என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர்-காதலர் எப்போதும் என் நெஞ்சினுள்ளே மகிழ்ந்துறைவர்; இவ்*

வூர் இகந்து உறைவர் ஏதிலர் என்னும்-அதனை யறியாது இவ்வூர் என்னைப் பிரிந்துறைகின்றார், அன்பில்லாதவர் என்று கூறும்.

இதுவுமது. உவந்துறைவர் என அன்புடைமை கூறினாள். பிரியாமையும், அன்பு முடையாரை இலரெனப் பழிக்காதே என்பதாம். (ய)

## 114 நாணுத்துறவுரைத்தல்

காதலர் இருவரும் தாம் நாணைத் துறந்தமையைத் தோழிக்குக் கூறுதல்.

1131 காம முழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி.

காமம் உழந்து வருந்தினார்க்கு-இன்பம் நுகர்ந்து பின் அது பெறாமல் வருந்தினவர்க்கு, ஏமம் மடல் அல்லது வலி இல்லை-காப்பாகிய மடல்மாவைத் தவிர வலியாவது வேறு இல்லை. ஆகவே, நானும் அது செய்வேன் என்பதாம்.

சேட்படுக்கப்பட்டு ஆற்றாஅய தலைமகன் சொல்லியது. சேட்படுத்தல்-தலைமகளை அணுகவிடாது தோழி தலைமகனை விலக்குதல்.

மடலேறுதலாவது-தலைமகளை அடைய முடியாமல் தோழி மறுத்தால் தலைமகன் மடலேறுவேன் எனக் கூறுவன். "மடன்மாக் கூறும் இடனுமாருண்டே" (தொல்-களவு 11) என்பது இலக்கணம். அதற்கும் அவள் உடம்படாளாயினும், தோழியுடம்பட்டுக் களவொழுக்க மொழுகி மணக்கக் கருதினால், பெற்றோர் தலைவியைக் கொடுக்க மறுத்தாலும் மடலேறுவேன் எனக் கூறுதலே யன்றி மடலேறுவான். "ஏறிய மடற்றிறம்" (தொல்-

அகத் 51) என்பது இலக்கணம். அதாவது பெற்ஞேர் களவொழுக்கத்தைக் கருதாமலும், தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்குமாக அறத்தொடு நில்லாமலும் மணக் கக் காலந்தாழ்த்து வரினும், இற் செறிப்பால் தலைவியை எதிர்ப்பட்டுக் கூட முடியாவிடினும் தலைவன் அலர் எழுப்புவதற்காகத் தலைவியின் உருவத்தைப் பனையோலை யில் எழுதிக் குதிரைமேல் ஏறிக் கொண்டு பலருமறியத் தலைவியின் ஊர்த் தெருவழியே செல்வான். அதுகண்ட ஊரார் கூடிப் பேசத் தொடங்குவர். அவ்வலருக் கஞ்சிய பெற்ஞேர் அவனுக்கே தம் மகளை மணமுடிப்பர் என்ப தாம். இது செய்யுள் வழக்கு. மடல்மா - மடலைத் தாங் கிச் செல்லும் குதிரை. மடல்-பனையோலை. மா-குதிரை.

நற்பண்பில்லாத எவரோ ஒருசிலரிடை நடந்துவந்த இத்தீய ஒழுக்கத்தை, தமிழர் ஒழுக்க நூல் செய்யப் புகுந்த தொல்காப்பியர் தகாக்காமம் என விலக்கியுள் ளார். அடுத்த குறளும் இது நாணுடைமைக்கேற்ற செய லல்ல எனக் கூறுதல் காண்க. பிற்காலக் கோவை நூலார் இதை ஓர் ஒழுக்கமெனவே கொள்ளலாயினர். அறத்தொடு நிற்றல்-உள்ளதைக் கூறுதல். இற்செறித் தல்-தலைவியை வெளிவிடாமல் வீட்டினுள் வைத்துக்காத் தல். அலர்-ஊரார் பேசும் பழிச்சொல். மடலேறுதல் தகாச் செயல். நீ என்னை விலக்கினுல் நான் அதைச் செய் தாவது இவளைப் பெறுவேன் எனத் தலைமகன் தனது ஆற் ருமை தோன்றக் கூறியது. (க)

1132 நோனு வுடம்பு முயிரு மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து.

நாணினை நீக்கி நிறுத்து - மடலேறுவதை விலக்குவ தாகிய நாணத்தை நீக்கி நிறுத்திவிட்டு, நோனு உடம்பும் உயிரும் மடலேறும்-முன் நுகர்ந்த இன்பத்தைப் பெருத தால் உண்டான வருத்தத்தைப் பொருத உடம்பும் உயி ரும் மடன்மாவின் மீது ஏறக் கருதுகின்றன.

நீக்கி நிறுத்து - நீக்கிவிட்டு. அறிவு நிறை (அடக்கம்) முதலியன நீங்கவும் நாண் நீங்காது நின்றது. அதுவும் இப்பொழுது நீங்கிற்றென்பான் உடம்பும் உயிரும் என்ருன். உடம்பும் உயிரும் தம்முள் நீங்காமைப் பொருட்டு மடலேறும் என்றது - தோழி தன் ஆற்ருமை யறிந்து குறை நேர்தலை நோக்கி. குறை நேர்தல்-குறை தீர்த்தல். நாணுடைய நமக்கு அது முடியாதேன மடல் விலக்கலுற்ற தோழிக்குச் சொல்லியது. (உ)

1133 நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடை
காமுற்ரு ரேறு மடல். [யேன்

நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் - நாணமும் மிகுந்த ஆண்மையும் முன்பு உடையவனு யிருந்தேன்; இன்று காமுற்ருர் ஏறும் மடல் உடையேன் - இப்போது காமமிகுந்தவர் ஏறும் மடலை உடையவனுயிருக்கிறேன்.

நாணேயன்றி நல்லாண்மையும் உடைமையால் மடலேறுதல் முடியாதேன்ற தோழிக்குச் சொல்லியது. நாண் - இழிவான செய்தலை விலக்குவது. ஆண்மை-ஒன்றற்கும் தளராது நிற்றல். அவை முன்புள்ளன; இன்றுள்ளது மடலே யாகலின் விரைவில் ஏறுவேன் என்பதாம். (ங)

1134 காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யேன்னும் புணை.

நாணொடு நல்லாண்மை என்னும் புணை - நாணம், மிகுந்த ஆண்மை என்னும் புணைகளை, காமக் கடும்புனல் உய்க்குமே - காமமாகிய பெரிய வெள்ளம் என்னை விட்டுப் பிரித்துக் கொண்டு போகின்றது.

நாணும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அவ்வெள்ளத்தால் அவை நீங்குவனவல்ல என்ற தோழிக்குச் சொல்லியது. அப்புனலுக்கு அவை புணையாகா; அதனுல் அவை நீங்கும் என்பதாம். (ச)

1135 தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

தொடலைக் குறுந்தொடி - மாலைபோலத் தொடரும் சிறிய வளையல்களை உடையாள். மாலை உழக்கும் துயர் மடலொடு தந்தாள் - மாலைப் பொழுதில் உறும் துன்பத்தையும், மடன்மாவையும் இப்போது எனக்குத் தந்தாள்; முன் இவற்றை அறியேன்.

இவ்வாற்றுண்மையும் மடலும் நமக்கு எவ்வாறு வந்தன என்ற தோழிக்குச் சொல்லியது. மாலையில் மிகுதலின் மாலை உழக்கும் என்றும், மடலும் காமத்தால் வந்ததாகலின் அவள் தந்தாள் என்றுங் கூறினான். அவளுக்குச் சொல்லி இவற்றை நீக்குக என்பது கருத்து. தொடலை - மாலை. (ரு)

1136 மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

பேதைக்கு என் கண் படல் ஒல்லா - நின் பேதையை நினைத்து என் கண்கள் தூங்குவதைப் பொருந்தா; யாமத்தும் மடலூர்தல் மன்ற உள்ளுவன் - ஆகையால், எல்லோரும் உறங்கும் நடு இரவிலும் நான் தூங்காதிருந்து மடலூர்தலையே நினைப்பேன்.

இன்று மடலூரும் பொழுது கழிந்தது என்ற தோழிக்குக் கூறியது. இப்போதே என் குறை முடிப்பாய்; நாளைக்கெனத் தவணை வேண்டாம் என்பதாம். (சு)

1137 கடலன்ன காம முழந்து மடலேறுப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

கடல் அன்ன காமம் உழந்தும் - கடலைப் போன்ற மிகுந்த காமத்தால் வருந்தியும், மடல் ஏறுப் பெண்ணின் - மடலேறுமல் பொறுத்திருக்கும் பெண் பிறப்பைக் காட்டிலும், பெருந்தக்கது இல் - மிகுந்த தகுதியையுடைய பிறப்பு வேறு இல்லை.

பேதைக்கு என் கண் படல் ஒல்லா எனவே, அறிவிலராய மகளிரைவிட அறிவுடையராய ஆடவரன்றே ஆற்றி யிருக்கவேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. *ஆணாகப் பிறந்தும் எனக்கு அவ்வடக்கம் இல்லையென்பதை நீ அறியவில்லை போலும் என்பதாம்.* இனித் தலைமகள் கூற்று. (எ)

1138 நிறையரியர் மன்னளிய ரென்னாது காமம்
மறையிறந்து மன்று படும்.

*நிறை அரியர் மன் அளியர் என்னாது - இவர் நிறை இல்லாதவர், மிகவும் அன்பு செய்யத் தக்கவர் என்றெண்ணிப் பாராது, காமம் மறை இறந்து மன்றுபடும் - மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படுவதாயிற்று.*

காப்புச் சிறைமிக்கு காமம் பெருகியபோது சொல்லியது. *காப்புச்சிறை - காவல். மன்று என்றது - தந்தை தன்னையரை. தன்னை - அண்ணன். காமமிகுதியால் நிறையழிந்துவிட்டது; இனியும் காலந்தாழ்க்கக் கூடாதென்பது குறிப்பு. உலகத்துப் பெண்களின் காமத்தியல்பு கூறுவான் போன்று தன்காமம் பெருகிய வாறும்; இனி அறத்தொடு நிற்க வேண்டும் என்பதும் குறிப்பால் கூறியது.* (அ)

1139 அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்
மறுகின் மறுகு மருண்டு.

*எல்லாரும் அறிகிலார் என்று - என்னை யொழிந்த யாரும் தன்னை அறியவில்லை என்று நினைத்து, என் காமம் மறுகில் மருண்டு மறுகும் - என் காமமானது இவ்வூர்த் தெருக்களில் மயங்கித் திரிகின்றது.*

இதுவுமது. *மயங்குதல் - அம்பலாதல். மறுகுதல் - அலராதல். களவொழுக்கத்தை ஊரினர் வெளிப்படக்*

கூறாது முணுமுணுப்பது அம்பல்; வெளிப்படக் கூறுவது-அலர். அம்பலும் அலரும் ஆயிற்று. இனி அறத்தொடு நிற்கவேண்டும் என்பதாம். (கூ)

1140 யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

*யாம் பட்ட தாம் படா ஆறு - யாம் உற்ற நோய்களைத் தாம் உறாமையால், அறிவில்லார் யாம் கண்ணில் காண நகுப - அறிவில்லாதவர்கள் யாம் கண்ணால் காணுமாறு என்னைக் கண்டு சிரிக்கின்றனர்.*

சேவிலிக்கு அறத்தோடு நின்று, யான் நிற்குமாறென்ன என்று நகையாடிய தோழியோடு புலந்து தலைமகள் தன்னுள்ளே சோல்லியது. *யான் நிற்குமாறென்ன - நான் எவ்வாறு சொல்லட்டும். நகையாடுதல் - விளையாட்டுப் பேசுதல். புலத்தல் - மனம் வேறுபடுதல்.* (ய)

## 115 அலரறிவுறுத்தல்

*களவொழுக்கத்தைப் பற்றி ஊரார் பேசுதலைத் தலைமகன் முதலியோர் கூறுதல்.*

1141 அலரேழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

*அலர் எழ ஆர் உயிர் நிற்கும் - எம் இருவர்க்குமுள்ள காதலன்பு ஊரின்கண் அலராயெழுதலினால் எனது அரிய உயிர் நிலைபெற்றிருக்கிறது; அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் - என்னுயிர் நிற்பதை நல்ல வேளையாக ஊரிலுள்ள பலரும் அறியமாட்டார்கள். அறிந்தால் அலர் தூற்றார். அதனால், என்னுயிர் போம் என்பது கருத்து.*

அல்ல குறிப்பட்ட பின்னொருநாள் வந்த தலைமகனைத் தோழி அலர் அறிவுறுத்து வரைவு கடாய வழி தலைமகன் சொல்லியது. அல்ல குறிப்படுதல் - குறி அல்லபடுதல், குறிபிழைத்தல். அதாவது - தோழியும் தலைவியும் குறிப்பிட்ட இடத்தே சென்று கூடும் தலைமகன் புனலொலித்தல், புள்ளெழுப்பல் முதலியன செய்வான். அஃதறிந்து தலைமகள் அங்கு செல்வாள். தானாகவே காய்கனி விழுந்து தண்ணீர் ஒலித்தாலும், தானாகவே பறவைகள் பறந்து சென்றாலும் தலைமகள் சென்று பார்த்துத் தலைமகனைக் காணாமையால் வருந்திப் பூவையோ, இலையையோ பறித்துப் போட்டுச் செல்வாள். பின் தலைவன் வந்து பார்த்து அவ்வாறே செல்வான். அல்ல குறிப்படுதல் - தாம் குறித்ததல்லாத வேறு வகையில் குறியுண்டாதல். தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை முதலியவற்றால் தலைவி வர முடியாமையும், ஏதோ காரணத்தால் தலைவன் வர முடியாமையும் குறி இடையீடு எனப்படும். வரைவு கடாய வழி - மணம் செய்து கொள்ளும்படி கேட்டபோது. பாக்கியம் - இயற்கை நிகழ்ச்சி. (க)

1142 மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரேமக் கீந்ததிவ் வூர்.

மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது - மலர் போலும் கண்ணையுடையவளை நான் அடைய முடியாத அருமையை அறியாமல், இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது— இவ்வூர் அலர் எமக்கு உதவியது.

இதுவுமது. அருமை - அல்லகுறிப் பாட்டாலும், இடையீடுகளாலும் (1141) ஆயது. அலர் அவளை அடைவதற்குத் துணையாவதால் ஈந்தென்றான். (உ)

1143 உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

ஊர் அறிந்த கௌவை உறாதோ - எங்களுக்குக் கூட்டம் உண்மையை இவ்வூர் அறிதலால் உண்டான

அலரானது எமக்குக் கேட்காதோ? அதனைப் பெறாது பெற்று அன்ன நீர்த்து - அது கேட்ட என் மனம், அக் கூட்டத்தைப் பெறாமலிருந்தும் பெற்றபோதுண்டாகும் இன்பம் போலும் இன்பம் உடையது.

இதுவுமது. 'அலர் எழ ஆருயிர் நிற்கும்' 1141 என்பது கொண்டு இவ்வாறு கூறினான். (௩)

1144 கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

காமம் கவ்வையால் கவ்விது - என் காமம் இவ்வூர் எடுக்கின்ற அலரினால் அலர்தலை யுடையது, அது இன்றேல் தன்மை இழந்து தவ்வென்னும் - அவ்வலர் இல்லையாயின் தன் இயல்பையிழந்து சுருங்கிவிடும்.

இதுவுமது. அலர்தல் - மேன்மேல் மிகுதல். கவ்வை உடையது கவ்விது. இயல்பு - இன்பம் பயத்தல். தவ் என்னும் என்பது குறிப்பிடைச் சொல். (௪)

1145 களித்தோறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று-கள்ளுண்பார்க்கு களிக்குந்தோறும் கள்ளுண்டல் இன்பந் தருவது போலும், காமம் வெளிப்படும் தோறும் இனிது-காமம் அலராகுந்தோறும் எனக்கு இனிதாக இருக்கின்றது.

இதுவுமது. களித்தல்-கள் வெறியால் இன்புறுதல். வேட்கப்பட்டற்று என்பது குறைந்து நின்றது. விருப்ப மிகுதியால் அலரும் இன்பம் செய்கின்றது என்பதாம்.

1146 கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகோண் டற்று.

கண்டது ஒரு நாள்-நான் காதலரைக் கண்டது ஒரு நாளே; அலர் திங்களைப் பாம்பு கொண்டற்று-அதனாலா

கிய அலர் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போல ஊரெங்கும் பரவியது.

இடையீடுகளாலும், அல்ல குறியாலும் (1141), தலைமகனை அடையப் பெறாத தலைமகள், அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறுத்தியது.

*சிறைப்புறத்தானாக - சொல் கேட்கும் படியான மறைவிடத்தில் இருக்க. மன் உம்-அசை. காணுதலின் றியும் அலர்பரக்கின்ற இவ் வொழுக்கம் இனியாகாது வரைந்துகொள்ள வேண்டுமென்பதாம். திங்களினிடத் துள்ள களங்கத்தை மான், முயல் என்றும், ஆலமரத் தின் கீழ் அம்மாயி நூல் நூற்கிறாள் என்றும் கூறும் வழக்குப்போல, ஞாயிறு, திங்கள், நிலம் இவற்றின் சுற்று தலால் ஞாயிறு, திங்கள்மீது படும் நிழலைப் பாம்பு தீண்டு தல் என்னும் வழக்குப் பற்றிக் கூறினார். (சு)*

1147 ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல்
　　நீராக நீளுமிந் நோய்.

*இந்நோய் - இக் காமநோயாகிய பயிர், ஊரவர் கௌவை எருவாக - ஊரார் கூறும் அலர் எருவாகவும், அன்னை சொல் நீராக நீளும்-அதுகேட்டு அன்னைகூறு கின்ற கடுஞ் சொல் நீராகவும் வளருகின்றது.*

*வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்த தோழி, ஊரவர் அலரும், அன்னை சொல்லும் நோக்கி ஆற்றல் வேண்டுமெனச் சொன்னபோது தலைமகள் சொல்லியது. அது கேட்டுத் தலைவன் மணத்தல் பயன். கௌவை-அலர். (எ)*

1148 நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
　　காம நுதுப்பே மெனல்.

*கௌவையால் காமம் நுதுப்பேம் எனல் - ஊரார் கூறும் அலரினால் நாம் காமத்தை அவிப்போம் என்று கருதுதல், நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்று - நெய்*

யினால் நெருப்பை அவிப்போம் என்று கருதுவதனோ டொக்கும்.

இதுவுமது. வளர்தற்குக் காரணமாகிய அலரால் அவிக்க முடியாதென்பதாம். (அ)

1149 அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

அஞ்சல் ஓம்பு என்றார் பலர் நாண நீத்தக்கடை - தம்மை எதிர்ப்பட்டபோது, 'நின்னைப் பிரியேன்; அஞ்சுதலை ஒழிவாயாக' என்ற தலைவரே இன்று கண்டார் பலரும் நாணும் வகை எம்மை விட்டு நீங்கியபின், அலர் நாண ஒல்வதோ-ஊரார் கூறும் அலருக்கு நாம் நாணக் கூடுமோ? கூடாது.

வரைவிடை வைத்துப் பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகள், தலைவன் சிறைப்புறத்தா னாதலறிந்து, அலரஞ்சி ஆற்றவேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது. கண்டார் நாணும் நிலைமையை உடைய நாம் நாணுதல் எங்ஙனம் என்பதாம். (கூ)

1150 தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடுக்கும் - உடன் போக்குக்குத் துணை செய்தல் கருதி யாம்முன்பே விரும்பும் அலரை இவ்வூர் தானே எடுக்கின்றது; காதலர் தாம் வேண்டின் நல்குவர் - இனி எம்காதலரும் யாம் விரும்பினால் அவ்வுடன் போக்கை எளிதில் ஒப்புக்கொள்வர்.

தலைமகன் சிறைப்புறத்தா னாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் அலரறிவுறுத்து, தலைமகன் உடன் போக்கை விரும்பும்படி சொல்லியது. உடன் போக்கு - தலைமகள் தலைமகனுடன் அவனூர்க்குப் போதல். அதாவது தலைமகளைத் தன்னூர்க் கழைத்துச் செல்லுதல். (ய)

களவியல் முற்றிற்று

# 2 கற்பியல் (18)

*கற்பாவது-களவொழுக்க மொழுகிய காதலர் மணம் செய்துகொண்டு இல்வாழ்க்கை நடத்துதல். அது பிரிவு (116), ஆற்றுமை (117-126), விதுப்பு (127-129), புலவி (130-133) என நான்கு வகைப்படும். அந்நான்கு வகையினுள் உலகியலை ஒட்டி, வாழ்க்கை நுணுக்கங்கள் முழுவதும் சுவைபடப் புனைந்துரைத்தலை அறிந்து இன்புறற்பாலது.*

## 116 பிரிவாற்றுமை

*தலைவன் பிரிவு குறித்துத் தலைவி வருந்துதல்.*

1151 செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

*செல்லாமல் உண்டேல் எனக்கு உரை - நீ எம்மை விட்டுப் பிரியாமை உண்டாயின் அதை எனக்குச் சொல், மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை-அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்துவருதலைச் சொல்வையாயின் அதனை அப்பொழுது உயிர் வாழ்வார்க்குச் சொல்.*

பிரிந்துபோய் விரைவில் வருவன் என்ற தலைமகனுக்குத் தோழி சொல்லியது. *தான் அவள் என்னும் வேற்றுமை இன்மையால் தலைமகளை ஒழித்து எனக்கு என்ருள். அது மட்டும் ஆற்றியிராள்; பிரிந்தபொழுதே இறந்துவிடுவாள் என்பதாம். செலவழுங்குவித்தல் பயன். அழுங்குவித்தல்-நிறுத்துதல்.* (க)

1152 இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

*அவர் பார்வல் இன்கண் உடைத்து-அன்று களவுக் காலத்தில் நம் பின்னின்று அவர் பார்த்த பார்வை*

புணர்ச்சி குறித்தமையான் நமக்கு இன்ப முடையதா யிருந்தது ; புணர்வு பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்து- இன்று அவர் புணர்ச்சி பிரிவர் என்று அஞ்சும் அச்சத் தினை உடையதாயிருக்கிறது.

பிரிவைத் தலைமகன் குறிப்பால் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அழுங்குவித்தல் பயன். (உ)

1153 அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

அறிவுடையார் கண்ணும் - பிரியேன் என்ற தஞ் சொல்லும், நம் பிரிவாற்றாமையும் அறிந்த காதலரிடத் தும், ஓரிடத்துப் பிரிவு உண்மையால்-ஒவ்வொரு கால் பிரிவு உண்டாதலால், தேற்றம் அரிது-அவர் முகமலர்ந்து இனிய கூறுதல் பற்றி நம்மிடம் அன்புடையவர் என்று தெளிதல் அரிதாயிருக்கிறது. அரோ-அசை. இதுவுமது.

1154 அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின்-எதிர்ப்பட்ட அன்றே தலையளி செய்து, 'நின்னைப் பிரியேன் ; அஞ்சா திரு' என்று கூறியவரே எம்மை விட்டுப் பிரிவாராயின், தெளித்த சொல் தேறியார்க்குக் குற்றம் உண்டோ - அவர்க்கன்றி, அவர் தெளிவித்த சொல்லை மெய்யென்று தெளிந்தவர்க்குக் குற்ற முண்டோ ?

இதுவுமது. தேறியார் எனத் தன்னைப் பிறர்போல் கூறினாள். சொல்லும் செயலும் ஒவ்வாமைக் குற்றம் அவர்க்கு வாராமல் செலவை நிறுத்து என்பது கருத்து. தலையளி செய்தல் - முகமலர்ந்து இனியன கூறல். (ச)

1155 ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

*ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் - என்னுயிரைப் பிரியாமல் காப்பாயாயின் என் உயிரை ஆள அமைந்தவரது பிரிவைத் தடுப்பாயாக; மற்று அவர் நீங்கின் புணர்வு அரிது-தடுப்பவரில்லாமல் அவர் பிரிவாராயின் என் உயிர் நீங்கும்; நீங்கிஞல் பின் அவரைக் கூடுதல் எனக்கு அரிதாகிவிடும். என் உயிர் நீங்காதிருக்க அவர் செலவைத் தடுப்பா யென்பது கருத்து.* இதுவுமது. (ரு)

1156 பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னும் நசை.

*அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணர் ஆயின் - நம் விருப்பத்தை யறிந்த தலைவரே நம் முன்னின்று தம் பிரிவை உணர்த்தும் அருளற்றவராயின், நல்குவர் என்னும் நசை அரிது - அத்தன்மையார் பின்பு நம் ஆற்றுமை யறிந்து வந்து அன்பு செய்வார் என்னும் ஆசை வீணுனதாகும்.*

தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. *கூடியிருந்தே அன்பின்றிப் பிரிய வெண்ணுபவர் பிரிந்துபோய் நம்மை நினைத்து வருதல் எங்ஙனம் என்பதாம்.* (சா)

1157 துறைவன் றுறந்தமை தூற்றுகோன் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

*துறைவன் துறந்தமை - தலைவன் என்னை விட்டுப் பிரிந்ததை, முன்கை இறை இறவா நின்ற வளை தூற்றுகொல் - என் முன் கையில் தங்குமிடத்திலிருந்து கழலும் வளையல்களே எனக்கு அறிவிக்குமே; அவனுணர்த்த உணர்ந்து வந்து நீ அறிவிக்க வேண்டுமோ?*

இதுவுமது. *தலைவன் பிரிவைத் தடுத்துவந்து கூறாமல் நீயும் அவ்வளையல்கள் செய்தனவே செய்தாய் எனப் புலந்து கூறியது.* (எ)

1158 இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

*இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது - மகளிர்க்குத் தங் குறிப்பறியும் தோழியர் இல்லாத அயலூரில் வாழ்தல் துன்பந்தருவதாகும்; இனியார்ப் பிரிவு அதனினும் இன்னாது-தங்காதலரைப் பிரிவது அதைக் காட்டிலும் துன்பந் தருவதாகும்.*

இதுவுமது. *தலைவன் செலவை உடன்பட்டு வந்தமை பற்றி இனனில்லூர் என்றாள். உலகியல் கூறுவாள் போன்று தனக்கு அவ்விரு துன்பமும் உண்மை கூறிய வாறு.* (அ)

1159 தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

*தீ தொடின் சுடின் அல்லது-நெருப்பானது தன்னைத் தொட்டால் சுடுமே யல்லாது, காமநோய் போல விடின் சுடல் ஆற்றுமோ-காமநோயைப் போலத் தன்னை விட்டு நீங்கினால் சுடவல்லதோ?*

காமம் தீயே போன்று தான் நின்ற இடத்தைச் சுடு மாகலான் நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல் லியது. *தீயினும் கொடியதனை நான் எவ்வாறு ஆற்றுவேன் என்பதாம்.* (கூ)

1160 அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

*அரிது ஆற்றி - பிரிவுணர்த்திய போது, பிரிவு என்னும் பொறுத்தற்கரிய அதற்கு உடன்பட்டு, அல்லல்*

நோய் நீக்கி - பிரிவால்வருந் துன்பநோயை நீக்கி, பிரிவு ஆற்றி - பிரிந்தால் அப்பிரிவையும் பொறுத்துக்கொண்டு, பின் இருந்து வாழ்வார் பலர் - பின்னும் இருந்து உயிர் வாழும் மகளிர் உலகத்துப் பலராவர்.

தலைவியர் பலரும் பிரிவாற்றி யிருப்பர்; அது நீ செய்கின்றிலை என்ற தோழிக்குச் சொல்லியது. காதலிகள் இவை யெல்லாம் பொறுத்துப் பின்னும் இருந்து உயிர் வாழ்தல் இல்லை யென்பது குறிப்பு. (ய)

## 117 படர்மெலிந்திரங்கல்

படரால் மெலிந்து இரங்குதல். பிரிவாற்றாளாய தலைமகள், தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின் அந்நினைவால் மெலிந்து இரங்குதல். படர் - வருத்தம், துன்பம். தனிப்படர் மிகுதி (120) என்பது - பிரிவுத் துன்பம் தலைவனிடத்தின்றி, தலைவி தான் மட்டும் உறுவதாகக் கூறுதல்.

1161 மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
　　ஊற்றுநீர் போல மிகும்.

நோயை யான் மறைப்பேன் - காமநோயைப் பிறர் அறிதற்கு நாணி யான் அதனை மறைப்பேன்; இஃதோ இறைப்பவர்க்கு ஊற்று நீர் போல மிகும் - அந்நோய் நீர் இறைப்பவர்க்கு ஊற்று நீர் ஊறுவது போல மிகுகின்றது.

காமநோயை வெளிப்படுத்தல் நின் நாணுக்குத் தகாதென்ற தோழிக்குச் சொல்லியது. மறைத்தலால் பயனென் என்பதால் மன் ஒழியிசை. (க)

1162 கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

இந் நோயைக் கரத்தலும் ஆற்றேன் - இக்காம நோயை யான் மறைக்கவும் வலியிலேன்; நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத்தரும் - நோய் செய்த காதலர்க்கு இதைச் சொல்வதும் எனக்கு நாணத்தைத் தருகிறது; இனி என்ன செய்வேன்!

இங்குள்ளோர் அறியாமல் மறைத்தல், அங்குள்ளோர் அறியத் தூது விடுதல் என்னும் இரண்டனுள் ஒன்று செய்ய வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. அங்குள்ளோர் - தலைவர். தூது விட்டால் இன்னும் இருக்கிறேன் என்பது பெறப்படும் என்னும்கருத்தால் நாணுத் தரும் என்றாள். (உ)

1163 காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து.

காமமும் நாணும் - காமநோயும் அதைச் செய்தவர்க்குச் சொல்ல வொட்டாத நாணமும், நோனா என் உடம்பின் அகத்து - அவற்றைச் சுமக்க மாட்டாத என் உடம்பினிடத்து, உயிர் காவாத் தூங்கும் - உயிரைக் காவடித் தண்டாகக் கொண்டு அதன் இருமுனைகளிலும் தொங்குகின்றன.

இதுவுமது. தூது விடவும், மறுக்கவும் செய்யவல்ல காமமும் நாணும் ஒரு நிகராய் வருத்துகின்றன. நான் அவற்றுள் ஒன்றன்கண் நிற்கமாட்டாமையின் உயிராகிய தண்டு ஒடிந்துவிடும் என்பதாம். (௩)

1164 காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில்.

காமக் கடல் உண்டு - எனக்குக் காமமாகிய கடல் தான் உள்ளது; அது நீந்தும் ஏமப்புணை இல் - அதைக் கடக்கும் காவலாகிய புணை இல்லை.

தலைவியர் காமக் கடலிற் படார்; படினும் அதனை ஏற்ற புணையால் கடப்பர் என்ற தோழிக்குச் சொல்லியது. தூதுவிட்டு இதற்குப் புணையாயினுமில்லை என்பது கருத்து. மன் உம்-அசை. (ச)

1165 துப்பி னெவனாவர் மற்கொ லுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

நட்பினுள் துயர் வரவு ஆற்றுபவர்-இன்பஞ் செய்தற் குரிய நட்பின் கண்ணே துன்ப வரவைச் செய்பவர், துப்பின் எவனாவர் கொல்-துன்பஞ் செய்தற்குரிய பகைமையின் கண் என்ன செய்வாரோ?

தூது விடாமை நோக்கித் தோழியோடு புலந்து சொல்லியது. துன்பந் துடைப்பவளாயிருந்தும் அது செய்தாயில்லை யெனப் புலந்து, துன்பஞ் செய்தாளாக்கியும், பிறளாக்கியும் கூறினள். அப்பகைமை எம்மிடம் இன்மையின் அவர் செய்வதும் அறிந்திலேம் என்பதால் மன் ஒழியிசை. துப்பு-பகை. (ரு)

1166 இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

காமம் இன்பம் கடல்-காமத்தினால் வரும் இன்பம் கடல் போலப் பெரிது; மற்று அஃது அடுங்கால் துன்பம் அதனில் பெரிது-இனி அது பிரிவால் வருத்தும் போது வருந் துன்பம் அக்கடலினும் பெரிது.

இன்பமுற்றார் துன்பமுறுதல் உலகியல் என்ற தோழிக்குச் சொல்லியது. பெற்ற இன்பத்தளவாயின் ஆற்றலாம். இது அதைவிடப் பெரிது என்பது கருத்து. (சு)

1167 காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன் - காமமாகிய பெரிய கடலை நீந்தியும் அதற்குக் கரையைக்

காணேன்; யாமத்தும் யானே உளேன்-நடு இரவிலும் நான் ஒருத்தியே தனித்து இருக்கின்றேன்.

காமக்கடல் நிறையே புணையாக நீந்தப்படும் என்ற தோழிக்குச் சொல்லியது. நீ துணையாயினும் இல்லை என்பது குறிப்பு. (எ)

1168 மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

இரா அளித்து-இரவு அன்புடையதே; மன் உயிரெல்லாம் துயிற்றி என் அல்லது துணை இல்லை-அது உலகத்து நிலை பெற்ற உயிர்களை யெல்லாம் தூங்கச் செய்து என்னை யல்லது வேறு துணையுடையதாக இல்லை.

இரவின் கொடுமை சொல்லியது. துணையோடுள்ள உயிர்களை யெல்லாம் விட்டுத் துணையற்ற என்னையே துணையாகக் கொள்ளுதலின் அறிவற்றது என்பாள் அளித்து என்றாள். இகழ்ச்சிக் குறிப்பு. (அ)

1169 கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நாள்
நெடிய கழியு மிரா.

இந்நாள் நெடிய கழியும் இரா - காதலரோடு இன்புற்றபோது குறியவாய், அவர் பிரிவாற்றாது துன்புறும் இந்நாளிலே நெடியவாய்ச் செல்கின்ற இரவுகள், கொடியார் கொடுமையில் தாம் கொடிய-என்னைப் பிரிந்து சென்ற அக் கொடியவரது கொடுமையைக் காட்டிலும். தாம் கொடுமை செய்கின்றன. இதுவுமது. (கூ)

1170 உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின் - மனம் போலக் காதலர் உள்ள இடத்திற்கு விரைந்து செல்லவல்லவையாயின், என் கண் வெள்ள நீர் நீந்தல-என்கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய நீரை நீந்தா.

நின் கண்கள் பேரழகு கெடுகின்றன வாகலின் அழாதே என்ற தோழிக்குச் சொல்லியது. நீர் - கண்ணீர். நீர்சிந்தி வருந்த வேண்டியதில்லை என்பது. சொல்லமாட்டாமையின் இனி வெள்ளநீர் நீந்தவேண்டியதுதான் என்பது பட நின்றமையான் மன் ஒழியிசை. (ய)

## 118 கண்விதுப்பழிதல்

கண்கள் தலைமகனைக் காணுதற்கு விரைதலால் வருந்துதல். விதுப்பு - விரைவு - அழிதல் - வருந்துதல். தலைவனைக் காண விரும்பி வருந்துதலைக் கண்மேலேற்றிக் கூறியது.

1171· கண்டாங் கலுழ்வ தேவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட - இத் தீராத நோயை யாம் அடைந்தது எம் கண்கள் காதலரை எமக்குக் காட்டியதால் அன்றோ? கண் தாம் கலுழ்வது எவன் கொல் - அன்று எமக்குக் காட்டிய கண்கள் இன்று எம்மைக் காட்டச் சொல்லி அழுவது எதற்காகவோ?

நின் கண்கள் அழுது தம் அழகை இழக்கின்றன; நீ ஆற்றவேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. அன்று காட்டியவை இன்றுந் தாமே காட்டாது யாங் காட்டுதல் எங்ஙனம் என்பதாம். கலுழ்தல் - அழுதல். (க)

1172 தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைதல் வுழப்ப தேவன்.

தெரிந்து உணரா நோக்கிய உண்கண் - பின் விளைவதை ஆராய்ந்து அறியாமல் அன்று காதலரைக் கண்டமையுண்ட கண்கள், பரிந்து உணராப் பைதல் உழைப்

பது எவன் - இன்று இத்துன்பம் நம்மால் வந்ததென உணராது துன்புறுவது எதற்காக?

இதுவுமது. விளைவது - பிரிந்தவர் வராமையால் துன்புறுதல். பின் வருவதறியாது ஒன்றைச் செய்தவர் வந்தபோது பொறுப்பதே கடமை என்பதாம். (உ)

1173 கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது - இக்கண்கள் முன்பு காதலரைத் தாமே விரைந்து நோக்கி, இப்போது தாமே அழுகின்ற இது, நகத்தக்கது உடைத்து - நம்மால் சிரிக்கத்தக்க இயல்பினை உடையது. இதுவுமது. (ங)

1174 பெயலாற்ரு நீருலந்த உண்கண் உயலாற்ரு
உய்விஞே யென்க ணிறுத்து.

உண்கண் - மையுண்ட கண்கள், உயலாற்ரு உய்வு இல் நோய் என்கண் நிறுத்து - நான் பிழைக்க முடியாதபடி ஒழிவில்லாத நோயை என்னிடம் நிறுத்தி, பெயல் ஆற்ரு நீர் உலந்த - தாமும் அழமுடியாதபடி நீர் வற்றின.

இதுவுமது. எனக்குத் துன்பஞ் செய்தலான் பின் தமக்குத் துன்பம் தாமே வந்த தென்பதாம். (ச)

1175 படலாற்ரு பைத லுழக்குங் கடலாற்ருக்
காமநோய் செய்தவென் கண்.

கடல் ஆற்ருக் காமநோய் செய்த என் கண் - எனக்குக் கடலினும் பெரிய காமநோயை உண்டாக்கிய என் கண்கள், படல் ஆற்ருப் பைதல் உழக்கும் - தூக்கமில்லாதனவாகித் துன்பத்தால் வருந்துகின்றன. இதுவுமது. (ரு)

1176 ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

எமக்கு இந்நோய் செய்த கண் தாம் இதன் பட்டது - எமக்கு இக்காம நோயை உண்டாக்கிய கண்கள் தாமும் தூங்காமல் அழநேர்ந்தது, ஓ இனிதே - மிகவும் இனிதாயிற்று.

இதுவுமது. ஓ - மிகுதி குறிக்கும் இடைச் சொல். அவற்ருல் வருத்த முற்ற எமக்கு அவ்வருத்தம் தீர்ந்தாற் போலும் என்பதாம். (கூ)

1177 உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

விழைந்து இழைந்து வேண்டி அவர்க் கண்ட கண் - விரும்பி உள் நெகிழ்ந்து விடாமல் அன்று காதலரைக் கண்ட கண்கள், உழந்து உழந்து உள்நீர் அறுக - இன்று தயிலில்லாத் துன்பத்தால் வருந்தி வருந்தித் தம்முள் இருக்கும் நீர் அற்றுப் போவதாக. இதுவுமது. (எ)

1178 பேணுது பெட்டா ருளர்மன்னே மற்றவர்
காணு தமைவில கண்.

பேணுது பெட்டார் உளர் - நெஞ்சினுல் விரும்பாது சொல்லினுல் விரும்பினவர் இங்கு இருக்கின்றனர்; மற்று அவர்க் காணுது கண் அமைவில - இருந்து பயனென்ன? அவரைக் காணுமல் கணகள் அமைதியுறல் இல்லை.

காதலர் பிரிந்து போயினுர் அல்லர்; அவர் ஈண்டுளர்; அவரைக் காணுமளவும் நீ ஆற்ற வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. முன்பிரியேன் என்று கூறினுராகலின் பெட்டார் என்ருள். மன் ஓ - அசை. (அ)

1179 வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

வாராக்கால் துஞ்சா-தலைவர் வாராதபோது அவர் வரவு பார்த்துத் தூங்கா; வரின் துஞ்சா - வந்தபோது அவர் பிரிவஞ்சித் தூங்கா; ஆயிடைக்கண் ஆர் அஞர் உற்றன-அவ்விரு வழியிலும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பம் உற்றன.

நீயும் ஆற்றி, நின் கண்களும் தூங்கவேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது. இனிக் கண்களுக்குத் துயில் ஒரு நாளும் இல்லை என்பதாம். (கூ)

1180 மறைபெற லூரார்க் கரிதன்று லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறை பெறல்-எம்மைப் போல அறையப்படும் பறையாகிய கண்ணினை யுடையார் தம் நெஞ்சில் மறைக்கப்படும் மறை பொருள்களை அறிதல், ஊரார்க்கு அரிதன்று - இவ்வூரார்க்கு எளிது.

காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. கொடுமை-குறித்த காலத்தே வாராமை. யான் மறைக்கவும் இவை வெளிப்படுகின்றன என்பதாம். (ய)

## 119 பசப்புறுபருவரல்

பசப்புறுவதனல் உண்டாகிய வருத்தம். பசப்பு - பிரிவாற்றாமையால் உண்டாவதோர் நிற வேறுபாடு; பசுமை நிறம். பருவரல்-வருத்தம். அவ்வருத்தத்தைத் தலைமகள் தோழிக்குச் சொல்வாள்.

1181 நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

*நயந்தவர்க்குநல்காமை நேர்ந்தேன்-என்னை விரும்பினவர்க்குப் பிரிவை உடம்பட்ட நான், பசந்த என் பண்புயார்க்கு உரைக்கோ-அது பொறாது நிறம் மாறுபட்ட என்னியல்பினை யாருக்குச் சொல்வேன்!*

முன் பிரிவுடம்பட்ட தலைமகள், அஃதாற்றாது பசந்த வழித் தன்னுள்ளே சொல்லியது. *பிற-அசை. 'பண்பியார்க் குரைக்கோ' எனத் தளை தட்டுதலான், குற்றியலிகரத்தைக் கெடுத்து, 'பண்ப்யார்க்' என நேர் நேர் - தேமாவாகக் கொள்க. யான் செய்து கொண்ட துன்பத்தினை இனி ஒருவர்க் குரைத்தலும் பழிப்பாகும் என்பதாம்.*

1182 அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

*பசப்பு-இப்பசப்பு நிறம், தந்தார் அவர் என்னும் தகையால் - என்னை உண்டாக்கினவர் அவர் என்னும் பெருமிதத்தினால், என் மேனிமேல் இவர்ந்து ஊரும் - என் உடம்பின் மேல் ஏறி ஊருகின்றது.*

ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பது படச் சொல்லியது. *கவலுதல் - வருந்துதல். இவர்தல்-மேலேறுதல். ஊர்தல்-செலுத்துதல். உடம்பின் மேல் பரவி உடம்பை உரிமையாக்கிக் கொண்டது என்பது கருத்து.* (உ)

1183 சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து.

*கைம்மாறாநோயும் பசலையும் தந்து-பிரிகின்றபோதே அவ்விரண்டற்கும் கைம்மாறாக இக்காம நோயினையும், பசலையையும் எனக்குத் தந்து, சாயலும் நாணும் அவர்*

கொண்டார்-என் மேனி யழகினையும், நாணினையும் அவர் கொண்டு போயினர்.

அழகும் நாணும் அழியாமல் நீ ஆற்றவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. நாணுக்கு நோயையும், அழகுக்குப் பசலையையும் தந்தாரெனக் கூட்டுக. எதிர் நிரனிறை. இனி அவர் தந்தாலல்லது அவையாகா, இவைபோகா என்பதாம். (ங)

1184 உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

யான் உள்ளுவன்-நான் எப்போதும் அவர் சொற்களையே நினைப்பேன்; உரைப்பது அவர் திறம்-நான் சொல்லுவதும் அவர் நற்றிறங்களையே; பசப்பு கள்ளம்-அப்படியிருக்க எனக்குப் பசப்பு வந்தது கள்ளத்தனமாக இருக்கிறது.

பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும், அவர் நற்றிறங்களையும் அறிவாயாகலின் நீட்டியாது வருவர் என்ற தோழிக்குச் சொல்லியது. மனமும் வாயும் அவரை மறவாதிருக்க அவ்விரண்டன் வழிப்பட்ட உடம்பின்கண் வந்தமையின் கள்ளம் என்றாள். பிற, ஒ, மன், ஆல்-அசை. (ச)

1185 உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

எம் காதலர் உவக்காண் செல்வார்-அன்றும் எங் காதலர் உங்கே செல்வாராக, என் மேனி பசப்பு ஊர்வது இவக்காண்-என் மேனி பசப்பூர்வது இங்கே யன்றோ? அத்தகையது இன்று வேறொன்றாகுமோ?

காதலர் பிரிந்து அணித்தா யிருக்கவும் ஆற்றுகின்றிலை என்ற தோழிக்குச் சொல்லியது. உவக்காண், இவக்காண் என்பன உங்கே இங்கே என்னும் பொருள்பட

நின்ற இடைச் சொற்கள். உங்கே-அண்மை குறித்தது. அவர் பிரிந்து அணித்தாகப் போனாரோ இல்லையோ? என் மேனி பசந்து விட்டது. அன்று போலவே இன்றும் அவர் செலவும் பசப்பினது வரவும் பகல் செல்ல இரவு வருவதுபோன்ற தென்பதை யறிந்தும் நீ அறியாதவள் போற் பேசுகின்ற தென்னை யென்பதாம். (ரு)

1186 விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல் - விளக்கினது மெலிவைப் பார்த்து நெருங்கி வரும் இருளே போல, கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு-தலைவனது முயக்கத்தின் மெலிவைப் பார்த்து நெருங்கி வரும் இப் பசலை.

இதுவுமது. தலைவன் என்னை இறுகத் தழுவாதிருக்கும் நேரம் பார்த்து வரும் பசப்பு, பிரிந்த விடத்து என் செய்யா தென்பதாம். (சா)

1187 புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கோள் வற்றே பசப்பு.

புல்லிக் கிடந்தேன் புடை பெயர்ந்தேன் - முன்னொரு நாள் காதலரைத் தழுவிக் கிடந்த நான் அறியாமல் சற்று விலகினேன்; அவ்வளவில் பசப்பு அள்ளிக் கொள்வற்று - அவ்வாறு புடை பெயர்ந்தேனோ இல்லையோ உடனே பசப்பு கையால் அள்ளிக் கொள்வது போல வந்து நிறைந்தது.

இதுவுமது. அப்புடை பெயர்ச்சிக் குள்ளாக அவ்வாறானது இப் பிரிவினால் என்னாகு மென்பதைச் சொல்ல வேண்டுமோ என்பதாம். (எ)

1188 பசந்தா ளிவளேன்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரேன்பா ரில்.

இவள் பசந்தாள் என்பது அல்லால் - இவள் ஆற்றியிராது பசலைநிற மடைந்தாள் என என்னைப் பழி கூறுவதல்லாமல், இவளை அவர் துறந்தார் என்பார் இல் - இவளை அவர் பிரிந்துபோயினர் என்று அவரைச் சொல்வார் ஒருவருமில்லை.

நீ இங்ஙனம் பசக்கற்பாலை அல்லை என்ற தோழிக்குச் சொல்லியது. என்பார் எனத் தோழியை வேறாகக் கூறினாள். (அ)

1189 பசக்கமற பட்டாங்கேன் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

நயப்பித்தார் நல் நிலையர் ஆவர் எனின் - என்னைப் பிரிவுக்கு உடம்படுத்தியவர் நல்ல நிலையினர் ஆவர் என்றால், என் மேனி பட்டாங்கு பசக்க - என் உடம்பு எவ்வாறேனும் பசப்பதாக.

இதுவுமது. நல் நிலையராதல் - நல்லவராதல். பட்டாங்கு பசக்க - உண்மையாகவே பசக்க. எனக்கு இந்நோயைத் தந்து சென்றவர் நல்லவரல்லர் எனப் புலந்து கூறியது. என் மேனி பசக்கினும் இப் பிரிவின் கொடுமையறியாத என்னை உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராக என்பது படநின்றமையின் மன் ஒழியிசை. (கூ)

1190 பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்று ரெனின்.

நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின் - அன்று குறை நயப்பித்துக் கூடியவர் இன்று அருளாமையை நட்டார் தூற்றாராயின், பசப்பு எனப் பேர் பெறுதல்

நன்றே - பசலை நிறம் உற்றாள் என்னும் பெயரைப் பெறுதல் எனக்கு நல்லதே.

தலைமகள் ஆற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்த வழி தலைமகள் இயற்பட மொழிந்தது. நட்டார் என்றது தோழியை. அவரை அருளிலர் என்றது, பசந்தாள் இவள் என்பதே நான் ஆற்றும் வழியாகும் என்பதாம். (ய)

## 120 தனிப்படர்மிகுதி

தனியாகிய படர்மிகுதி என விரியும். படர் மிகுதி தலைவனிடத்தின்றித் தலைமகள் தன்னிடமேயாதல் கூறுதல். படர் மிகுதி - துன்ப மிகுதி, பெருந்துன்பம்.

1191 தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் - தம்மால் காதலிக்கப்படும் தலைவரால் தம்மைக் காதலிக்கப் பெற்ற மகளிரே, காமத்துக் காழ் இல் கனி பெற்றார் - காமநுகர்ச்சியென்னும் விதையில்லாத கனியைப் பெற்றவராவர்.

காதலரும் உன்னிலும் ஆற்றாராய் விரைவில் வருவர்; நீ அவரோடு பேரின்பம் நுகர்வாய் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. காமத்து - அத்து வேண்டா வழிச்சாரியை. நங்காதலர் பிரிதலேயன்றிப் பின் வாராமையும் உடைமையின் அக்கனி யாம் பெற்றிலேம் என்பதாயிற்று. (க)

1192 வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி - தம்மை விரும்பும் மகளிர்க்கு அவரை விரும்பும் கணவர் காலத்தே

வந்து செய்யும் அன்பானது, வாழ்வார்க்கு வானம் பயந்தற்று - தன்னையே நோக்கி வாழ்வார்க்கு வானம் பருவ காலத்தே மழை பெய்தாற் போலும்.

இதுவுமது. நங்காதலர் நம்மை விரும்பாமையால், மழை பெய்யாது போனால் அதனால் வாழும் மக்கள் போல நாம் இறந்துபட வேண்டியதுதான் என்பதாம். (உ)

1193 வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

வீழுநர் வீழப் படுவார்க்கு - தாம் விரும்பும் கணவரால் விரும்பப்படும் மகளிர்க்கு, வாழுநம் என்னும் செருக்கு அமையுமே - காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து விரைவில் வருவார்; வந்தால் நாம் இன்புற்று வாழ்வோம் என்னும் செருக்கு உளதாமே.

இதுவுமது. நாம் அவரால் விரும்பப்படாமையால் நமக் கமைவது சாவுதான் என்பதாம். (ங)

1194 வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

வீழப்படுவார் - உலகத்தாரால் விரும்பப்படும் மகளிரும், தாம் வீழ்வார் வீழப்படார் எனின் கெழீஇயிலர் - தாம் விரும்புந் தலைவரால் விரும்பப்படார் எனின் தீமையுடையவரே யாவர்.

காதலரை இயற் பழித்தலை அஞ்சி அவர் அருளின்மை மறைத்த நீ நன்மனையாட்டி யாதலால், உலகத்தாரால் நன்கு மதிக்கப் படுவாய் என்ற தோழிக்குச் சொல்லியது. கெழீஇயன்மை - நன்மையின்மை. தீமையுடையேனுக்கு அந் நன்மதிப்பால் பயனில்லை என்பதாம். (ச)

1195 நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

நாம் காதல் கொண்டார் தாம் காதல் கொள்ளாக் கடை - நம்மால் காதலிக்கப்பட்டவர் தாமும் நம்மைக் காதலியா விடத்து, நமக்கு எவன் செய்ப - நமக்கு என்ன இன்பத்தைச் செய்வார்.

அவர்மேல் காதலுடைமையின் அவர் கருத்தறிந்து ஆற்றிஞய் என்ற தோழிக்குச் சொல்லியது. அக்காத லுடைமையால் நாம் பெற்றது துன்பமே என்பதாம். (ரு)

1196 ஒருதலையா னின்னுது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

காமம் ஒரு தலையான் இன்னுது - காமமானது ஓரிடத்தில் உண்டாயின் துன்பந்தருவதாகும்; காப் போல இரு தலையானும் இனிது - காவடியின் சுமையைப் போல இரண்டடித்திலும் உண்டாயின் இன்பந் தருவ தாகும்.

இதுவுமது. இரண்டிடம் - மகளிர், ஆடவர் என்னும் இரண்டிடம். என்னிடத்துண்டாகிய வேட்கை அவரிடத் தும் உண்டாயின் நான் இவ்வாறு துன்புறுதல் கூடுமோ என்பதாம். (சு)

1197 பருவரலும் பைதலுங் காணுன்கொல் காமன்
ஒருவர்க ணின்றேழுகு வான்.

ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன் - காமநுகர் தற்குரிய இருவரிடத்தும் ஒப்ப நில்லாமல் ஒருவரிடத்தே நின்று வருத்துகின்ற காமன், பருவரலும் பைதலும் காணுன் கொல் - அவ்விடத்துத் துன்ப மிகுதியையும் பசப்பு நோயையும் அறியானே?

இதுவுமது. பைதல் - பசப்பு நோய். காமன் ஈரிடத்தும் சிற்கின் இத்துன்பம் இல்லை என்பதாம். பெண்பாலை வருத்தும் ஆண்பால் காமத்தைக் 'காமன்' என ஆண்பாலாகவும், ஆண்பாலை வருத்தும் பெண்பால் காமத்தை 'அணங்கு' (918, 1081, 1082) எனப் பெண்பாலாகவும் கூறுதல் நூன்மரபு. (எ)

1198 வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

வீழ்வாரின் இன்சொல் பெறாது வாழ்வாரின் - தம்மால் விரும்பப்படும் காதலரிடமிருந்து வரும் இனிய சொற்களைப் பெறாது பிரிவாற்றி உயிர் வாழ்கின்ற மகளிர் போல, வன்கணார் உலகத்து இல் - கொடியவர் இவ்வுலகத்தில் இல்லை.

தலைமகனிட மிருந்து தூதுவரக் காணாது தலைமகள் சொல்லியது. யான் வன் கண்ணேன் ஆகையால் அதுவும் பெறாது உயிர் வாழ்கின்றேன் என்பதாம். (அ)

1199 நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

நசைஇயார் நல்கார் எனினும் - எம்மால் விரும்பப்பட்ட காதலர் எமக்கு அருளார் எனினும், அவர் மாட்டு இசையும் செவிக்கு இனிய - அவரிடத்திருந்து வரும் எவ்வகைச் சொல்லும் எம் செவிக்கு இனியவாம். அவர் வரவில்லை என்பதையாவது சொல்லிவிடக் கூடாதா என்பது கருத்து. இதுவுமது. (கூ)

1200 உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

உறார்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு - உன்னோடு உறவில்லாதவர்க்கு உனது மிகுந்த நோயைச்

சொல்லுகின்ற நெஞ்சே! வாழிய - நீ வாழ்வாயாக; கடலைச் செறாய் - அதைவிட்டு உனக்குத் துன்பந் தருகின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக.

தலை மகனிட மிருந்து தூதுவரப் பெறாது, தான் தூதுவிடக் கருதிய தலைமகள், நெஞ்சோடு சொல்லியது. உறவில்லாரிடம் உரைப்பதால் பயனில்லை என்பது கருத்து. (ம)

## 112 நினைந்தவர்புலம்பல்

தலைவனும் தலைவியும் முன்னாள் இன்பத்தினை எண்ணித் தனித்திருந்து வருந்துதல். புலம்பல் - தனித்திருத்தல். அது, அதனாலாய வருத்தத்தை உணர்த்திற்று.

1201 உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
　　கள்ளினுங் காம மினிது.

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலான் - முன்னைய இன்பத்தினைப் பிரிந்தபோது நினைத்தாலும் நீங்காத மிகுந்த களிப்பைத் தருதலால், கள்ளினும் காமம் இனிது - உண்ட போதல்லது மகிழ்ச்சி செய்யாத கள்ளைப் பார்க்கினும் காமம் இனியது.

தூது சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது. தன் தனிமையும், தலைமகளை மறவாமையும் கூறியவாறு.

1202 எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
　　நினைப்ப வருவதொன் றில்.

தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்றில்லை - தம்மால் விரும்பப் படுவாரைப் பிரிவின்கண் நினைத்தால் அந்நினைப்பார்க்கு அப்பிரிவால் வருவதோர் துன்பம்

இல்லை ; காமம் எனைத்து இனிது ஒன்றே காண் - ஆதலால், காமம் எவ்வகையிலும் இனிதொன்றேயாகும்.

இதுவுமது புணர்ந்த விடத்தும் பிரிந்த விடத்தும் ஒப்ப இனிதாகும். தானுற்றிய வகை கூறியவாறு. (உ)

1203 நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்.

தும்மல் சினைப்பது போன்று கெடும் - எனக்குத் தும்மல் உண்டாவது போன்று தோன்றி உடனே அடங்கிவிடுகிறது ; நினைப்பவர் போன்று நினையார்கொல் - ஆதலால், அவர் நம்மை நினைப்பவர் போலக் காட்டி உண்மையில் நினையாராதல் வேண்டும்.

தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது. சினைத்தல் - அரும்புதல், தோன்றுதல். தொலைவிலுள்ள சுற்றத்தார் நினைத்தால் தும்மல் வரும் என்னும் மகளிர் வழக்குப்பற்றிக் கூறியது. (௩)

1204 யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெங்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.

எம் நெஞ்சத்து அவர் ஓ உளரே-எம்முடைய நெஞ்சில் அவர் எப்போதும் உள்ளவரா யிருக்கின்றார் ; அவர் நெஞ்சத்து யாமும் உளேங் கொல் - அவ்வாறே அவருடைய நெஞ்சிலும் யாமும் உள்ளேம் ஆகின்றேமோ? அல்லது இல்லேமோ ?

இதுவுமது. அவர் நெஞ்சத்திருந்தும் வினை முடியாமையால் வரவில்லையோ, வினை முடிந்தும் நெஞ்சில் இல்லாததால் வரவில்லையோ என்பது கருத்து. ஓ - இடைவிடாமை உணர்த்திற்று. (௪)

1205 தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

*தம் நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் - தம் முடைய நெஞ்சில் யாம் சேராமல் காவல்கொண்ட தலைவர்; எம் நெஞ்சத்து ஓவா வரல் நாணார் கொல் - எமது நெஞ்சில் இடைவிடாது வந்து நிற்பதற்கு நாண மாட்டாரோ?*

இதுவுமது. ஒருவரைத் *தம்மிடம் வருவதற்கு ஒரு காலும் உடம்படாது, தாம் அவரிடம் பலகாலும் செல்லுதல் நாணிலார் செயலாகலின் நாணார் கொல் என்னுள்.* (ரு)

1206 மற்றியா னென்னுளேன் மன்னோ வவரோடியா
னுற்றநா ளுள்ள வுளேன்.

*யான் அவரொடு உற்ற நாள் உள்ள உளேன் - யான் அவரோடு புணர்ந்தநா ளின்பத்தை நினைத்தலால் இப்போது உயிர் வாழ்கிறேன்; மற்று யான் என்னு ளேன் - அஃதின்றேல், யான் வேறு எதனுல், உயிர் வாழ்கின்றேன்?*

*அவரோடு புணர்ந்த நாள் இன்பத்தை நினைந்து துன்புறுகின்றாய், அது மறத்தல் வேண்டும் என்ற* தோழிக்குச் சொல்லியது. *வேறும்உள. அவை பெற்றிலேன் என்பது பட நின்றமையின் மன் ஒழியிசை. அவை இரு வர் தூதும்.* (சா)

1207 மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள் ளினு முள்ளஞ் சுடும்.

*மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும் - முன் உண்டான புணர்ச்சி யின்பத்தை மறத்தலறியேனாகி, இப்போது நினைக்கவும் பிரிவு என் உள்ளத்தைச் சுடுகின் றது; மறப்பின் எவனாவன் - இங்ஙனம் பிரிவாற்றாத*

யான் அதை மறந்தால் இறவாமல் இருப்பது எதனால்? இதுவுமது. கொல் - அசை. முன்பாட்டில் போலவே மன்-ஒழியிசை. (எ)

1208 எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.

*எனைத்து நினைப்பினும் காயார் - நாம் எவ்வளவு நினைத்தாலும் அதற்கு வெகுளார்; காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ - காதலர் எமக்குச் செய்யும் இன்பம் அவ்வளவன்றோ?*

*இத்துன்ப மறிந்து வந்து காதலர் நினக்கு இன்பம் செய்வார் என்ற தோழிக்குச் சொல்லியது. வெகுளாமை-நினைதலுக் குடன்பட்டு நெஞ்சில் நிற்றல்.* (அ)

1209 விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

*வேறு அல்லம் என்பார் அளி இன்மை ஆற்ற நினைந்து - முன்பு நாமிருவரும் வேறல்லேம் என்று சொன்னவருடைய அருளின்மையை மிகவும் நினைந்து, என் இன்னுயிர் விளியும்-எனது இனிய உயிர் கழிகின்றது.*

*தலைமகனிடமிருந்து தூதுவரக் காணாது வருந்துகின்றாள், வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது. ஆற்றியிரு என வற்புறுத்தினாட்கு, என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று, அவரது அன்பின்மைக்கெனக் கூறியது.* (கூ)

1210 விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

*மதி வாழி - மதியே! வாழ்வாயாக; விடாது சென்றார்-என் நெஞ்சில் இடைவிடாது இருந்து விட்டுப் போனவர்; கண்ணினால் காணப் படாதி - கண்ணினால் காணும்படி நீ மறையாதிருப்பாயாக.*

மதி கண்டு கூறியது. சென்றுரை - ஐ - சாரியை. அவர் நின்னைக் கண்டால் என்னை நினைக்கவும் கூடுமாகையால் நீ இவ்வுதவி செய்வாய் என்பதாம். படுதல்-மறைதல். படாதி - மறையாதே. (ம)

## 122 கனவுநிலையுரைத்தல்

தலைவி தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லியது. இது, நனவின்கண் நினைவு மிகுதியால் கண்ட கனவு.

1211 காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு - என் காதலர் அனுப்பிய தூதினைக்கொண்டு என்னிடம் வந்த கனவுக்கு, யாது விருந்து செய்வேன்-யான் எவ்வகை விருந்து செய்வேன்!

தலைமகனிடமிருந்து கனவில் தூதுவரக் கண்டாள் சொல்லியது. கனவினுக்கியாது - குற்றியலிகரம் அலகு பெறவில்லை. (க)

1212 கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்.

கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின்-கெண்டை மீன் போன்ற மையுண்ட கண்கள் யான் வேண்டுவதற்கு இணங்கித் தூங்குமாயின், கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன்-கனவில் வருங் காதலருக்கு யான் பொறுத்திருக்கும் தன்மையை எடுத்துரைப்பேன்.

தூதுவிடக் கருதியாள் சொல்லியது. நானே நேரில் எடுத்துச் சொல்வேன் என்பதாம். கண்களும் துஞ்சா,

உரைத்தலுங் கூடா என்பதுபட நின்றமையின் மன் ஒழியிசை. உயல்-உயிர் வாழ்தல். (உ)

1213 நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டேன் னுயிர்.

நனவினால் நல்காதவரை-நனவில் வந்து முழு அன்பு செய்யாதாரை, கனவினால் காண்டலின் என் உயிர் உண்டு-யான் கனவின்கண் கண்ட காட்சியினால் என் உயிர் இருக்கின்றது.

ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவேன் எனச் சொல்லியது. கவலுதல் - வருந்துதல். அக் காட்சியாலே நான் ஆற்றுகின்றேன் ; நீ வருந்தாதே என்பதாம். (ஙு)

1214 கனவினா லுண்டாகுங் காம நனவினால்
நல்காரை நாடித் தரற்கு.

நனவினால் நல்காரை நாடித் தரற்கு - நனவில் வந்து அருள் செய்யாதவரை அவர் சென்ற விடத்தில் தேடிக் கொண்டுவந்து கனவு தருதலான், கனவினால் காமம் உண்டாகும் - அக் கனவினிடத்து எனக்கு இன்பம் உண்டாகிறது.

இதுவுமது. இயல்பாக அருளாதாரை அவர் சென்ற இடமறிந்து கொண்டு வந்து தந்த கனவால் தான் ஆற்றுவேன் என்பது. (ச)

1215 நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

நனவினால் கண்டதும் ஆங்கே இனிது-முன் நனவில் அவரைக் கண்டு நுகர்ந்த இன்பமும் அப்போது இனிதாயிற்று ; கனவுந்தான் கண்ட பொழுதே இனிது - கனவில் அவரைக் கண்டு நுகர்ந்த இன்பமும் அக்கண்டபொழுதே இனிதாயிற்று. ஆகவே, எனக்கு இரண்டும் ஒன்றே.

இதுவுமது. முன்னும் யான் பெற்றது இவ்வளவே; இன்னும் அது பெற்று ஆற்றுவேன் என்பதாம். (ரு)

1216 நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.

நனவு என ஒன்று இல்லையாயின் - நனவு என்று சொல்லப்படுகிற ஒரு கொடியோன் இல்லையாயின், கனவினான் காதலர் நீங்கலர் - கனவில் என்னை வந்து கூடிய காதலர் என்னைப் பிரியார்.

இதுவுமது. நனவு இடையே வந்து கனவைப் போக்கி அவரைப் பிரிவித்தது என்பது பட நின்றமையின் மன் ஒழியிசை. (சா)

1217 நனவினா னல்காக் கொடியார் கனவினால்
என்னெம்மைப் பீழிப் பது.

நனவினால் நல்காக் கொடியார் - நனவில் வந்து ஒரு நாளும் அருள் செய்யாத கொடியவர், கனவினால் என்னைப் பீழிப்பது என் - நாடோறும் கனவில் வந்து எம்மை வருத்துவது எது பற்றியோ?

விழித்தபோது காணாளாகிக் கனவில் கூட்டம் நிகழ்ந்து ஆற்றாளாய்ச் சொல்லியது. பீழித்தல்-வருத்துதல். (எ)

1218 துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து.

துஞ்சுங்கால் தோள்மேலராகி - என் உள்ளத்தில் உறையுங் காதலர் யான் தூங்கும் பொழுது என் தோள் மேல் இருப்பவராகி, விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்த ராவர் - யான் விழிக்கும் போது விரைந்துவந்து என் நெஞ்சில் இருப்பர்.

தான் ஆற்றுதற் பொருட்டுத் தலைமகனை இயற்பழித்த தோழிக்கு இயற்பட மொழிந்தது. ஒரு போதும் என்னை விட்டு நீங்காதவரைக் குறை கூறுதே என்பதாம். (அ)

1219 நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.

கனவினால் காதலர்க் காணாதவர்-கனவில் தம் காதலரைக் காணாத மகளிர், நனவினால் நல்காரை நோவர் - நனவில் வந்து அருளாத காதலரை நோவர்; கனவிலே காண்பாராயின் நோவார்.

இதுவுமது. இயற்பழித்தது பொறாது புலக்கின்றாளாகலின் அயலாள் போல் இவ்வாறு கூறினாள். (கூ)

1220 நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

இவ்வூரவர்-இவ்வூரிலுள்ளார், நனவினால் நம்நீத்தார் என்பர்-நனவில் நம்மைவிட்டுப் பிரிந்தாரென நம் காதலரைக் கொடுமை கூறுவர்; கனவினால் காணார் கொல் - அவர்கள் கனவில் நங்காதலர் நீங்காது வருதலைக் காணார் போலும்!

இதுவுமது. யான் அவன் என்னும் வேற்றுமை இல்லாதிருந்தும் தான் கண்டது காணாது அவரைக் கொடுமை கூறுகின்றதால் தோழியை அயலாள் போல இவ்வூர் என்றாள். (௰)

## 123 பொழுதுகண்டிரங்கல்

மாலைப் பொழுதினைக் கண்டு தலைவி இரங்குதல்.

1221 மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

பொழுது - பொழுதே! நீ மாலையோ அல்லை - நீ மாலையோ எனில், அல்லை; மணந்தார் உயிர் உண்ணும் வேலை-மணந்தவர்களின் உயிரை உண்ணும் கடலாவாய்; வாழி - நீ வாழ்வாயாக.

பொழுதோடு புலந்து சொல்லியது. வாழி - வாழமாட்டாய் என்பது குறிப்பு. சிறிது நேரம் நிற்கும் மாலையன்று; என்னை வருத்துதலால் கடல் போலப் பெருமையுடையாய் என்பதாம். (க)

1222 புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

மருள் மாலை வாழி - மயங்கிய மாலைப் பொழுதே நீ வாழ்வாயாக; புன் கண்ணை - நீயும் எம்மைப் போல ஒளியிழந்துள்ளாய்; நின் துணை எம் கேள்போல் வன் கண்ணதோ-உனது துணையும் எமது துணைபோல இரக்கமில்லாததோ?

தன் மனத் துன்பத்தை மாலைமே லிட்டுக் கூறியது. மயங்குதல் - பகலோ இரவோ என்று அறியமுடியாது கலத்தல். பகல் மறைய இரவு தோன்றும் நேரம். (உ)

1223 பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

பனி அரும்பிப் பைதல்கொள் மாலை - காதலர் எம்மைக் கூடிய நாளெல்லாம் என்முன் நடுக்கமெய்திப் பசந்து வந்த மாலை, துனி அரும்பித் துன்பம் வளர

வரும் - இந்நாள் நான் இறந்து படுமாறு துன்பம் மிகும்படி வளருகின்றது.

ஆற்ற வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. குளிர்ச்சி தோன்ற மயங்கி வரும் மாலை என்னும் நேர்பொருள், நடுக்கம், பசப்பு என்னும் இக் குறிப்புப் பொருள் தோன்ற நின்றது. துனி-உயிர் வாழ்வதற்கண் வெறுப்பு. யான் ஆற்றுமா றென்னை என்பது. (௩)

1224 காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

மாலை - காதலர் உள்ள போதெல்லாம் என் உயிர் தளிர்க்க வந்த மாலைப்பொழுது ; காதலர் இல்வழி - காதலர் இல்லாத பொழுது, கொலைக்களத்து ஏதிலர் போல வரும்-கொலைக் களத்தின்கண் கொலைஞர் வருவதுபோல வருகின்றது.

இதுவுமது. முன்னெல்லாம் எனக்கு இன்பஞ் செய்த மாலையும் இப்போது எனக்குத் துன்பஞ் செய்கின்றது. யான் ஆற்றுமா றென்னை என்பதாம். (௪)

1225 காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

காலையும் மாலையும் அவர் கூடிய நாட்போலாது இன்று வேறுபட்டு வருகின்றன ; அவற்றுள் : யான் காலைக்குச் செய்த நன்று என் - நான் காலைப்பொழுதுக்குச் செய்த நன்மை யாது? மாலைக்குச் செய்த பகை எவன்-நான் மாலைப் பொழுதுக்குச் செய்த தீமை யாது?

இதுவுமது. கூடியபோது பிரிவர் என்று அஞ்சப் பண்ணிய காலை அஃதொழிந்து, இப்போது இரவாகிய வெள்ளத்திற்குக் கரையாய் வருகின்றது என்னும் கருத்தால் நன்றென் கொல் என்றும், கூடியபோது இன்பஞ் செய்துவந்த மாலை இன்று அளவில்லாத துன்பஞ்

செய்கின்றது என்னும் கருத்தால் பகையெவன் கொல் என்றும் கூறினள். காலையாகிய கரையில்லையேல் மாலை வெள்ளத்தால் யான் ஒழிக்கப்படுவேன் என்பதாம். (ரு)

1226 மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

மணந்தார் அகலாத காலை - காதலர் என்னைவிட்டுப் பிரியாதிருந்த போது, மாலை நோய் செய்தல் அறிந்தது இலேன் - மாலைப்பொழுது எனக்குத் துன்பஞ் செய்தலை அறியப் பெற்றிலேன்.

இன்று இத்தன்மையாகின்ற நீ, அன்று அவர் பிரிவிற்கு உடம்பட்டது என்னை என்ற தோழிக்குச் சொல்லியது. இவ்வாறு வேறுபடுதலை அறியேன்; அறிந்திருப்பின் பிரிவுக்கு உடம்பட்டிருக்கேன் என்பதாம். (சு)

1227 காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

இந்நோய் - இக்காம நோயாகிய பூ, காலை அரும்பி - காலைப் பொழுதில் அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி - பகற் பொழுதெல்லாம் பேரரும்பாக முதிர்ந்து, மாலை மலரும் - மாலைப் பொழுதில் மலரும்.

மாலைப்பொழுதில் இத்தன்மையை ஆதற்குக் காரணம் என்னை யென்றாட்குச் சொல்லியது. துயிலெழுந்த பொழுதாகலின் அரும்பி என்றும், பொழுது செல்லச் செல்லப் பிரிவெண்ணி வருந்துதலின் போதாகி என்றும், மாலைவரப் பெரிதும் வருந்துதலின் மலரும் என்றும் கூறினள். (எ)

1228 அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

ஆயன் குழல் - முன்னெல்லாம் இனிதாய இடையன் புல்லாங்குழல், அழல் போலும் மாலைக்குத் தூது

ஆகி-இப்போது நெருப்புப் போலச் சுடுவதாகிய மாலைப் பொழுதுக்குத் தூதுமாகி, கொல்லும் படை - என்னைக் கொல்லும் கொலைக் கருவியும் ஆயிற்று.

இதுவுமது. தானே சுடவல்ல மாலை இத்துணையும் பெற்றால் என் செய்யாது என்பதாம். போலும் - அசை.

1229 பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

மதிமருண்டு மாலை படர்தரும்போது-கண்டார் மதி மயங்கும்படி மாலைப்பொழுது வரும்போது, பதி மருண்டு பைதல் உழக்கும் - இவ்வூரார் அனைவரும் மயங்கித் துன்பப் படுவர். இதுவுமது. பதி - இடவாகு பெயர். (கூ)

1230 பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

மாயா என் உயிர் - பிரிவைப் பொறுத்து இறந்து படாத எனது உயிர், பொருள்மாலை யாளரை உள்ளி மருள் மாலை மாயும் - பொருள் ஈட்டுதலையே இயல்பாக உடைய தலைவரை நினைந்து, மயக்கந்தரும் இம்மாலைப் பொழுதில் மாய்கின்றது.

இதுவுமது. குறித்த பருவம் கழியவும் பொருள் முடித்தலையே இயல்பாக உடையவர் சொல் தவறினர்: இனி நீ சொல்வதால் பயனில்லை என்பதாம். (ய)

## 124 உறுப்புநலனழிதல்

*தலைவியின் கண் முதலிய உறுப்புக்கள் அழகிழத்தல்.*

1231 சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி - இவ்வாற்றாமை நம்மிடத்தே நிற்க நெடுந்தொலைவு

சென்ற நம் காதலரை நீ நினைத்தழுதலால், கண் நறு மலர் நாணின - நின் கண்கள் ஒளியிழந்து, முன் தமக்கு நாணிய நறுமலர்களுக்குத் தாம் இப்போது நாணி விட்டன.

ஆற்றாமை மிகுதியால் வேறுபட்ட தலை மகளுக்குத் தோழி சொல்லியது. இவை கண்டார் அவரைக் கொடுமை கூறுவர்; நீ ஆற்றவேண்டுமென்பது கருத்து. (க)

1232 நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.

பசந்து பனிவாரும் கண்-பசப்பெய்தி நீர் வடிகின்ற நின் கண்கள், நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்-நம்மால் விரும்பப்பட்டவரது அருளாமையைப் பிறர்க்குச் சொல்லுகின்ற போலும்! இனி நீ ஆற்றல் வேண்டும் என்பதாம். இதுவுமது. (உ)

1233 தணந்தமை சால வறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.

மணந்த நாள் வீங்கிய தோள்-காதலரை மணந்த நாட்களில் இன்பமிகுதியால் பெருத்த நின் தோள்கள், தணந்தமை சால அறிவிப்ப போலும்-அவர் பிரிந்தமையை மிகவும் உணர்த்துகின்றனபோல மெலிகின்றன. இஃதறிந்தார் அவரைப் பழிப்பர் என்பதாம். இதுவுமது.

1234 பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

துணை நீங்கித் தொல்கவின் வாடிய தோள் பணை நீங்கி-துணைவரை நீங்கப்பெற்று அதனால் பழைய அழகை இழந்த தோள்கள் மெலிந்து, பைந்தொடி சோரும்-பசிய பொன்னால் செய்த வளையல்கள் கழலுகின்றன. இதுவுமது. பணை-பெருமை. (ச)

1235 கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

தொடியொடு தொல்கவின் வாடிய தோள்-வளையல்களும் கழன்று, பழைய அழகையும் இழந்த இத்தோள்கள், கொடியார் கொடுமை உரைக்கும் - கொடிய காதலரது கொடுமையைத் தாமே சொல்லுகின்றன, அயலார் சொல்லவேண்டியதில்லை. இதுவுமது. (ரு)

1236 தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து.

தொடியொடு தோள் நெகிழ - யான் ஆற்றவும் என் வழிப்படாது, வளையல்கள் கழலுமாறு தோள்கள் மெலிய, அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து நோவல் - நீ அவரைக் கொடியார் என்று கூறுதற்குப் பொறுக்காமல் வருந்துகின்றேன்.

தலைமகள் ஆற்றுதற் பொருட்டு இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது. (சா)

1237 பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

நெஞ்சே-நெஞ்சமே! கொடியார்க்கு என்வாடுதோள் பூசல் உரைத்து-நீ கொடியவராகிய காதலர்க்கு எனது மெலிகின்ற தோள்கள் ஊரில் உண்டாக்கிய அலரை உரைத்து, பாடு பெறுதியோ-அதனால், மேம்பாடு பெறுவாயோ?

இயற் பழிப்புப் பொறாது தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. பூசல்-பலரறிதல். நின் உரை கேட்டதும் அவர் வருவர்; வந்தால் இத்துன்பமெல்லாம் நீங்கும்; காலத்தினால் செய்த இவ்வுதவியால் நீ பெருமை பெறுவாய் என்னுங் கருத்தால், நெஞ்சே நீ பாடு பெறுவாய் என்றாள். (எ)

1238 முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

முயங்கிய கைகளை ஊக்க-அவளை இறுகத் தழுவிய கைகளை அவளுக்கு நோகுமென்று எண்ணி ஒரு நாள் சிறிது தளர்த்தவே, பைந்தொடிப் பேதை நுதல் பசந்தது-அப்போதே பசிய வளையல்களையுடைய பேதையின் நெற்றியானது பசலை நிறம் எய்தியது.

வினை முடித்து மீளலுற்ற தலைமகன் முன் நிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது. இனிக் கடிதில் செல்ல வேண்டுமென்பது கருத்து. (அ)

1239 முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

முயக்கிடைத் தண் வளி போழ-அவ்வாறு தழுவிய கைகளைத் தளர்த்தினதால், அத்தழுவிய என் கைகளுக்கும் அவளுக்கும் இடையே சிறு காற்று நுழையவே, பேதை பெருமழைக் கண் பசப்புற்ற-அவ்வளவு நுண்ணிய இடையீட்டையும் பொறுது பேதையின் பெரிய குளிர்ந்த கண்கள் பசப்புற்றன.

இதுவுமது. அத்தன்மையான கண்கள் மலையும் காடும் நாடுமாகிய இவ்விடையீடுகளை எவ்வாறு பொறுத்தனவோ? இடையீடு - இடைவெளி. தன்மை - மென்மை. (கூ)

1240 கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.

ஒள் நுதல் செய்தது கண்டு-ஒளிபொருந்திய நெற்றி பசந்தது கண்டு, கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்று - தண்வளி போழவந்த (1239) கண்ணின் பசலை துன்பமுற்றது.

இதுவுமது. நுதலோ கைகளைத் தளர்த்தப் பசந்தது; யானோ கைகளையும் தளர்த்தி, மெய்களும் நீங்கிக் காற்று இடையே செல்லுமளவும் பசந்திலேனெனத் தன் வன்மையும் நுதலின் மென்மையுங் கருதிக் கண் வெள்கிற்றென்பதாம். ஆகவே, கடிதிற் சேர்வோம் என்பது கருத்து. (ய)

## 125 நெஞ்சொடுகிளத்தல்

ஆற்றாமைமிக்க தலைவி தன் நெஞ்சொடு சொல்லுதல்.

1241 நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்[தோன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

நெஞ்சே-நெஞ்சமே! எவ்வ நோய் தீர்க்கும் மருந்து ஒன்று-தீராத இக்காம நோயைத் தீர்க்கும் ஒருமருந்தை, எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாயோ - யானறியும்படி, எப்படியாவது அறிந்து எனக்குச் சொல்ல மாட்டாயோ ?

தலைவி தன் ஆற்றாமை தீரும்வகை நாடியது. எவ்வம் - ஒன்றானும் தீராதது. (க)

1242 காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

என் நெஞ்சு வாழிய-என் நெஞ்சே! வாழ்வாயாக; அவர் காதல் இலராக நீ நோவது பேதைமை-அவர் நம்மிடம் காதல் இல்லாதவராயிருக்க, அவர் வரவு நோக்கி நீ வருந்துவது அறியாமையே.

தலைமகனைக் காணும் வேட்கை மிகுதியால் சொல்லியது. யாம் அவர்பால் சேறலே அறிவாகும் என்பதாம். (உ)

1243 இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில்.

நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என் - நெஞ்சே! இங்கு இருந்து நினைத்து வருந்துவது எதற்கு, பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல் - இத்துன்ப நோயை உண்டாக்கியவரிடம் நமக்காக இரங்கி நம்மிடம் வரும் நினைப்பு இல்லை.

இதுவுமது. நம்மீது அருளின்மையால் வாரார்; நாம் சேறலே தக்கதென்பதாம். (௩)

1244 கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

நெஞ்சே கண்ணும் கொளச்சேறி - நெஞ்சே! நீ அவர் பால் செல்லும்போது இக்கண்களையும் உடன் கொண்டு செல்வாயாக; இவை அவர்க்காணல் உற்று என்னைத் தின்னும் - இக்கண்கள் அவரைக் காணவிரும்பி நீ காட்டென்று என்னைத் தின்பனபோல வருத்துகின்றன. தான் சேறல்வேண்டுமென்பது கருத்து. இதுவுமது. (௪)

1245 செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர்.

நெஞ்சே - நெஞ்சமே; யாம் உற்றால் உறாதவர் - நாம் விரும்பினால் தாம் நம்மை விரும்பாத நம் காதலரை, செற்றார் எனக் கை விடல் உண்டோ - நம்மை வெறுத்தாரென்று கைவிடும் ஆற்றல் நமக்கு உண்டோ? இல்லை. இதுவுமது. அவர்பால் செல்வதே நமக்குத் தகுதி என்பதாம். (௫)

1246 கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு.

என் நெஞ்சு - என் நெஞ்சமே! கலந்து உணர்த்தும் காதலர் கண்டால் புலந்து உணராய் - நாம் அவரோடு

புலந்தால் அப்புலவியைக் கலவியாலே நீக்கவல்ல காதலரைக் கண்டால் பொய்யாகவேனும் ஒரு முறை புலந்து பின்னதனை நீங்கமாட்டாய்; பொய்க்காய்வு காய்தி - அதுவும் மாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியரென அவர் மீது பொய்க்காய்வு காய்கின்றாய்; இதில் பயனில்லையாதலால் அவரிடம் செல்லத் துணிவாயாக.

தலைமகன் கொடுமை நினைந்து செலவுடன் படாத நெஞ்சொடு கூறியது. காய்தல் - வெகுளல். (சா)

1247 காமம் விடுவென்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.

நல் நெஞ்சே - நல்ல நெஞ்சே! ஒன்று காமம் விடு - ஒன்று காமத்தை விடு; ஒன்று நாண்விடு - அல்லது நாணத்தை விடு; இவ்விரண்டு நானோ பொறேன் - ஒன்றற்கொன்று மறுதலையாய இவ்விரண்டையும் நான் பொறுக்கமாட்டேன். நாண் தடுத்தலின் அச்செலவொழிவாள் சொல்லியது. (எ)

1248 பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

என் நெஞ்சு - என் நெஞ்சே! அவர் பரிந்து நல்கார் என்று - அவர் வருத்தமுற்று வந்து அருள் செய்யார் என்று நினைத்து, பிரிந்தவர் பின் ஏங்கிச் செல்வாய் பேதை - நம்மைப் பிரிந்துபோன அவர் பின்னால் ஏங்கிச் செல்கின்றாய், நீ யாதுமறியாய். இதுவுமது. (அ)

1249 உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

என் நெஞ்சு - என் நெஞ்சே! காதலவர் உள்ளத்தாராக - காதலர் உன் உள்ளே யிருக்க, நீ உள்ளி யாருழைச் சேறி - நீ வெளியில் தேடிச் செல்வது யாரிடத்து?

இதுவுமது. உன்னுள்ளே இருப்பாரைப் புறத்தே தேடிச்செல்வது நகைப்புக் கிடமாகும் என்பதாம். (கூ)

1250 துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின்.

*துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா* - நம்மைச் சேராது நீங்கினவரை உள்ளத்தில் உடையேமாயின், *இன்னும் கவின் இழத்தும்* - முன்னிழந்ததேயல்லாமல் இன்னும் நமது அழகை இழப்போம்.

அவரை மறந்து ஆற்றல் வேண்டும் எனச் சொல்லியது. உடலழகேயன்றி நிறையும் இழப்பேம் என்பதாம். (ω)

## 126 நிறையழிதல்

*தலைமகள் மனத்தில் அடக்கவேண்டியவற்றை வேட்கை மிகுதியால் அடக்கமாட்டாது வெளிவிடுதல்.*

1251 காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

*நாணுத்தாழ் வீழ்த்த நிறை என்னும் கதவு* - நாணாகிய தாழினைக் கோத்த நிறை என்னும் கதவை, *காமக் கணிச்சி உடைக்கும்* - காமமாகிய கோடரி உடைத்துவிடும்; இனி அவை நிற்றலும் இல்லை. நான் ஆற்றலும் இல்லை.

நாணும் நிறையும் அழியாமல் ஆற்றவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. நாணுள்ளளவும் நிறையழியாதாகலின் அதைத் தாழாக்கியும்; அகத்துள்ளதைப் பிறர் கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், தாமாக நீங்காத அவ்விரண்டையும் ஒருங்கு நீக்குதலின் காம வேட்கையைக் கணிச்சியாக்கியும் கூறினாள். (க)

1252 காம மெனவொன்றோ கண்ணின்றெ னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

*காமம் என ஒன்று ஓ கண் இன்று - காமம் என்ற ஒன்று ஐயோ! கண்ணோட்டமில்லாததாக இருக்கின்றது. என் நெஞ்சத்தை யாமத்தும் தொழில் ஆளும் - அது என் நெஞ்சத்தை எல்லாரும் தொழிலொழியும் நடு இரவிலும் தொழில் கொள்கின்றது.*

நெஞ்சின் கண் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும் என்றாட்குச் சொல்லியது. *ஓ - இரக்கம்.* (உ)

1253 மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்.

*காமத்தை யான் மறைப்பேன் - இக்காமத்தை யான் என்னுள்ளே மறைக்கக் கருதுவேன், குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றிவிடும் - அது என் எண்ணத்தின்படி மறைந்து நிற்காமல் தும்மல்போல வெளிப்பட்டே விடுகின்றது.*

மகளிர் காமம் மறைக்கப்படும் என்றாட்குச் சொல்லியது. *தும்மல் அடங்காமை போல அடங்குகின்றதில்லை. என்பதாம். ஓ - இரக்கம்.* (௩)

1254 நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும்.

*யான் நிறையுடையேன் என்பேன் - இதுவரைக்கும் யான் என்னை நிறையுடையேன் என்று எண்ணியிருந்தேன்; என் காமம் மறை இறந்து மன்றுபடும் - ஆனால் இப்போது எனது காமம் தனது மறைவிடத்தைக் கடந்து அவையின்கண் வெளிப்படுகின்றது*

இதுவுமது. *மன்றுபடுதல் - பலருமறிதல். இனி என்னால் அடக்க முடியாதென்பதாம்.* (௪)

1255 செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று.

*செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை - தம்மைப் பிரிந்து சென்றார்பின் செல்லாத நிறையுடைமை, காம நோய் உற்றார் அறிவது ஒன்று அன்று - காமநோய் உற்றவரால் அறியப்படுவது ஒன்றன்று.*

நம்மை மறந்தாரை நாமும் மறந்துவிடுவோம் என்றாட்குச் சொல்லியது *பின் செல்லல் - இடைவிடாது நினைத்தல்.* (ரு)

1256 செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர்.

*செற்றவர்பின் சேறல் வேண்டி - என்னைவிட்டுச் சென்றவர் பின்னே யான் செல்வதை விரும்புதலால், என்னை உற்ற துயர் எற்று அளித்து - என்னை வந்தடைந்த துன்பமானது எத்தகையது! மிக நன்றாக யிருக்கிறது.*

இதுவுமது. *இக்காமநோய் நான் சொல்லவும் கேட்கவும் கூடியதன்று; மிகவும் கொடியதென்பதாம்.* (சா)

1357 நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

*பேணியார் காமத்தால் பெட்ப செயின் - நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்புவனவற்றைச் செய்தால், நாண் என ஒன்றோ அறியலாம் - நாணம் என்ற ஒன்றையும் அறியமாட்டோம்.*

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவால் கூடிய தலைமகள், நீ புலவாமைக்குக் காரணம் யாதென்றே தோழிக்குச் சொல்லியது. *பரத்தை இல் பிரிதல் - பரத்தை வீட்டுக்குச் செல்லல். பரத்தை - வரை*

வின் மகளிர். ஒரு சிலரிடை நடந்துவந்த இத்தீய ஒழுக்கத்தை ஊடலுக்குக் காரணமாக்குவது நூன்மரபு. நிறையழிவால் அறியாது கூடிய தன் குற்றத்தை நோக்கித் தோழியையும் உளப்படுத்தினாள். (எ)

1258 பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

நம் பெண்மை உடைக்கும் படை-நமது நிறையாகிய அரணை உடைக்கும் படையானது, பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோ - பல பொய்களில் வல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ?

இதுவுமது. பெண்மை - நிறை. தலைவன் வந்தால் புலந்து அவன் சொற்செயல்களால் புலவிநீங்கோமென்று இருந்தனவெல்லாம் ஒழிய, கலவியால் நாமே முந்தும் வகை வந்தான் என்பாள், 'பன்மாயக் கள்வன்' என்றாள். (அ)

1259 புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.

புலப்பல் எனச் சென்றேன்-அவர் வந்தால் பிணங்குவேன் என்று எண்ணிப் பிறிதோரிடம் சென்றேன், நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புல்லினேன்-அவ்வாறு சென்றும் எனது நெஞ்சம் நிறையில் நில்லாது அறைபோய் அவரோடு கலப்பதைக் கண்டு அவரைத் தழுவிக் கொண்டேன்.

இதுவுமது. நிறையில் நில்லாது - அடங்கியிராமல். அறைபோதல் - தன்னை விட்டு அவனைச் சேர்தல். புலத்தற்குக் காரணமாகிய நெஞ்சே கலத்தற்குக் காரணமாய் நிற்றலின் புலத்தல் முடியாதென்பதாம். (கூ)

1260 நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.

*நிணம் தீயில் இட்டு அன்ன நெஞ்சினார்க்கு-கொழுப்பைத் தீயிலிட்டால் அது உருகுமாறு போலத் தம் காதலரைக் கண்டால் நிறையழிந்துருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு, புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ - காதலர் தம்மை நெருங்கத் தாம் ஊடிப் பின் உணராது நிற்பேம் என்று கூறுதல் உண்டாகுமோ? ஆகாது. யான் அத்தன்மையேன் ஆகலின் என்னால் அவ்வாறு நிற்க முடியாதென்பதாம். இதுவுமது.* (ய)

## 127 அவர்வயின்விதும்பல்

*தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் காண்பதற்கு விரைதல். காண மிக்க ஆசை கொள்ளுதல். விதும்பல் - விரைதல்.*

1261 வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.

*அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த - அவர் நம்மை விட்டுப் பிரிந்து சென்ற நாட்களைச் சுவரில் குறியிட்டு அவற்றைத் தொட்டுத் தொட்டு எண்ணுவதால் என் விரல்கள் தேய்ந்துவிட்டன; கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற - அதுவேயன்றி, கண்களும் அவர் வரவைப் பார்த்துப் பார்த்து ஒளியிழந்து புல்லியவாயின. இவ்வாறாயும் அவர் வரவில்லை.*

தலைமகள் காண்டல் விதுப்பினால் சொல்லியது. *புல்லியவாதல் - கண் மங்கி நுண்ணிய பொருளைக் காணமாட்டாமை.* (க)

1262 இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து.

இலங்கு இழாய் - விளங்குகின்ற அணிகளை யுடைய வளே; இன்று மறப்பின்-காதலரை இன்று யான் மறப்பே னாயின், என் மென் தோள் காரிகை நீத்துக் கலம் கழி யும் - என் மெல்லிய தோள்கள் தம் அழகை நீக்கி வளை யல்களைக் கழலவிடும். ஆகவே, என்னால் மறக்க முடிய வில்லை என்பதாம்.

ஆற்றாமை மிகுதலின் எப்போதும் நினையாது சிறிது மறக்கவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது. (உ)

1263 உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார் - வெற்றியை விரும்பித் தமது ஊக்கமே துணையாகச் சென்றவர், வரல் நசைஇ இன்னும் உளேன்-திரும்பி வரு தலை விரும்பி இன்னும் யான் உயிருடன் இருக்கிறேன்.

இதுவுமது. அவ்விருப்பத்தால் உயிர் வாழ்கிறேன். அஃதில்லையாயின் இறந்துவிடுவேன் என்பதாம். (ந)

1264 கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகோ டேறுமென் னெஞ்சு.

பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி-நம்மைவிட்டுப் பிரிந்து போனவர் மிக்க காமத்துடன் நம்மிடம் வருதலை நினைந்து, என் நெஞ்சு கோடு கொடு ஏறும்-என் நெஞ்சம் மரக்கிளை மேல் ஏறிப் பார்க்கின்றது.

இதுவுமது. வினைவயிற் பிரியும்போது காம வின்பம் நோக்காமையும், வினை முடிந்ததும் அதையே நோக்குத லும் தலைமகனுக்கு இயல்பாகலின் கூடிய காமம் என்றாள். போனவர் வருகிறாரா என மரமேறிப் பார்த்தல் உலக வழக்கு. மிக விரைகின்றது என்பது கருத்து. (ச)

1265 காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு.

கொண்கனைக் கண்ணாரக் காண்க - எனது கணவனை யான் கண்ணாரக் காண்பேனாக; கண்டபின் என் மென் தோள் பசப்பு நீங்கும் - கண்ட பிறகு என் மெல்லிய தோள்களின் பசலை நிறம் தானே நீங்கிவிடும்.

தலைமகன் வரவு கூறி, ஆற்றுமல் பசக்கற் பாலையல்லை என்ற தோழிக்குச் சொல்லியது. கேட்பதால் நீங்காதென் பதாம். காணவேண்டும் என்பதுபட நின்றமையின் மன் ஒழியிசை. (ரு)

1266 வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட.

கொண்கன் ஒரு நாள் வருக - இவ்வளவு நாளாய் வராத என் கணவன் ஒரு நாள் வருவானாக; பைதல் நோயெல்லாம் கெடப் பருகுவன் - வந்தால், துன்பம் செய்கின்ற இந்நோய் அனைத்தும் கெட அவனை மெய்வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்தாலும் பருகுவேன் (1101). இதுவுமது. (சு)

1267 புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்
கண்ணன்ன கேளிர் வரின். [கொல்

கண் அன்ன கேளிர் வரின் - கண் போன்ற தலைவர் வருவாராயின், புலப்பேன் கொல் - அவர் வராது நீட்டித்தமைக்காகப் புலப்பேனோ? புல்லுவேன்கொல் - அல்லது அவரைக் கட்டித் தழுவிக் கொள்வேனோ? கலப்பேன் கொல் - அல்லது புலத்தல் புல்லுதல் என்னும் இரு செயல்களையும் ஒன்றுகக் கலப்பேனோ? யாது செய்வேன்?

இதுவுமது. புலவியும் புல்லலும் ஒரே நேரத்தில் கலவாமையின் கலப்பேன்கொல்லென்றாள். மூன்றையுஞ் செய்தல் கருத்தாகலின் விதுப்பாயிற்று. (எ)

1268 வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.

*வேந்தன் வினைகலந்து வென்றீக - வேந்தன் போர் செய்து வெல்வானாக; மனைகலந்து மாலைவிருந்து அயர்கம் - யானும் மனைவியுமாக மாலைப் பொழுதுக்கு விருந்து நடத்துவோமாக.*

வேந்தற்குற்றுழிப் பிரிந்த தலைவன், வினைமுடிவு நீட்டித்த விடத்துத் தலைவியை நினைந்து தன்னுள்ளே சொல்லியது. *உற்றுழிப் பிரிதல் - போர்த்துணையாகப் பிரிதல். மாலை விருந்து - தலைவி தலைவனை எதிர்கொள்ளுதல், அணி செய்தல் முதலியன.* (அ)

1269 ஒருநா ளேழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

*சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு - நெடுந்தொலைவு சென்ற தலைவர் திரும்பி வரும் நாளைக் குறித்து வருந்தும் மகளிர்க்கு, ஒரு நாள் எழுநாள்போல் செல்லும் - ஒருநாள் பலநாள்போல நெடிதாகச் செல்லும்.*

இதுவுமது. *ஏழ் - பன்மை குறித்தது. தலைமகள் வருத்தம் பிறர்மேல் வைத்துக் கூறியது.* (கூ)

1270 பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால்.

*உள்ளம் உடைந்து உக்கக்கால் - காதலி நம்பிரிவை ஆற்றாது உள்ளம் உடைந்து இறந்து போனால், பெறின் என் - நம்மை அவள் பெறக்கூடியவள் ஆனாலென்ன? பெற்றக்கால் என் - அல்லது பெற்றால்தான் என்ன? உறின் என் - அன்றி மெய்யுறக் கலந்தால்தான் பயனென்ன? இவை ஒன்றாலும் பயனில்லை. அதற்கு முன் யான் செல்ல வேண்டும் என்பது கருத்து.* இதுவுமது. (ய)

## 128 குறிப்பறிவுறுத்தல்

தலைவன் தலைவி தோழி ஆகிய மூவரும் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல்.

1271 கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

*கரப்பினும் - நீ சொல்லாது மறைத்தாயாயினும், ஒல்லா கைகடந்து - அதற்குடம்படாது உன்னை மீறி, நின் உண்கண் உரைக்கலுறுவது ஒன்று உண்டு - உன் மையுண்ட கண்கள் எனக்குச் சொல்லுவதான செய்தியொன்று இருக்கிறது; அதனை நீயே சொல்லுக.*

தலைமகன் பிரிவஞ்சிய தலைமகள் குறிப்பறிந்த தலைமகன் சொல்லியது. *தலைவனிடம் பிரிதற்குறிப்பு உளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாட்டைக் குறிப்பாலறிந்து அவட்குப் பிரியாமைக் குறிப்புணர்த்தியது.*

1272 கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

*கண் நிறைந்த காரிகை-என் கண் நிறைந்த அழகையும், காம்பு ஏர் தோள் பேதைக்கு - மூங்கில் போன்ற தோள்களையும் உடைய நின் தலைவிக்கு, பெண் நிறைந்த நீர்மை பெரிது - பெண்பாலரிடத்து நிறைந்த மடமை மற்றவரைக் காட்டிலும் மிகுந்திருக்கின்றது.*

நாணால் அவள் சொல்லாத போது தலைமகன் தோழிக்குச் சொல்லியது. *மடமை - மனத்திலுள்ளதை வெளி விடாமை.* (உ)

1273 மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

*மணியில் திகழ்தரு நூல்போல்-கோக்கப்பட்ட கண்ணாடி மணிகளுக்குள்ளே இருந்து புறத்தே தெரிகின்ற*

நூலைப்போல, மடந்தை அணியில் திகழ்வது ஒன்றுண்டு- உம்மடந்தையின் அழகுக்குள்ளே விளங்குவதாகிய ஒன்று உண்டு. அதை நான் அறியேன், நீ அறிந்து கூறவேண்டும் என்பது கருத்து. இதுவுமது. (௩)

1274 முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

முகை மொக்குள் உள்ளது நாற்றம் போல் - மலர் முகைக்குள் உள்ள புறத்தே மணக்காத மணம் போல, பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு - நின் பேதையின் புன்முறுவலுக்குள் புறத்துத் தெரியாத தோர் குறிப்பு உண்டு.

இதுவுமது. மலர் முகை - மலரும் பருவமுள்ள முகை. முகை பூவரும்பு. மொக்குள் - முதிர்ச்சியால் புடைத்த அரும்பு - பேரரும்பு. (௪)

1275 செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

செறி தொடி செய்து இறந்த கள்ளம் - நெருங்கிய வளையல்களை உடையாள் என்னிடம் இல்லாத தொன்றினை உட்கொண்டு, அதை என்னிடம் சொல்லாது மறைத்துப்போன குறிப்பு, உறு துயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து - எனது மிக்க துயரத்தைத் தீர்க்கும் மருந்தாவதொன்றினை உடையது.

இதுவுமது. உட்கொண்டது - பிரிவு. மறைத்தற் குறிப்பு - தானும் உடன்போக்கு உட்கொண்டது. மருந்து அப்பிரிவின்மையைத் தோழியால் தெளிவித்தல். நீ அது செய்தல் வேண்டும் என்பதாம். (௫)

1276 பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

*பெரிது ஆற்றிப் பெட்பக்கலத்தல் - காதலர் வந்து, தம் பிரிவினால் ஆகிய துன்பத்தினை மிகவும் ஆற்றி நாம் மகிழும்படி கலக்கின்ற கலவி, அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து - மேலும் அத்துன்பத்தினை அரிதாக ஆற்றியிருந்து அவரது அன்பின்மையை நினைக்குந் தன்மையை உடையது.*

தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அது தெளிவிக்கச் சென்ற தோழிக்கு அதனை அறிவுறுத்தியது. *ஆற்றுதல் - பொறுத்தல். பிரிதல் துன்பத்தை எல்லாம் பொறுத்துக் கொண்டு நாம் மகிழும்படி செய்வது, பின்னும் அப் பிரிவை நினைக்குந் தன்மையை உடையதென மறுத்துக் கூறியது.* (௬)

1277 தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

*தண்ணந் துறைவன் தணந்தமை - குளிர்ந்த துறையை யுடையவன் மெய்யால் கூடியிருந்தே மனத்தால் பிரிந்தமையை, நம்மினும்வளை முன்னம் உணர்ந்த- அவன் குறிப்பால் அதற்குரிய நம்மினும் இவ்வளையல்கள் முன்னே அறிந்தன.*

இதுவுமது. *நான் நன்கு அறிவதற்கு முன்னே என் தோள்கள் மெலிந்தன என்பாள், வளைகள் அறிந்தன என்றாள்.* (௭)

1278 நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

*எம் காதலர் நெருநற்றுச் சென்றார் - எமது காதலர் நேற்றுப் பிரிந்து போனார், யாமும் மேனி பசந்து எழு*

நாளேம் - ஆனால், அப்பிரிவுக்கு யாமும் மேனி பசப் புற்று ஏழுநா ளுடைய மாயினேம்.

இதுவுமது. நேற்றுச் செய்த அன்பினால் பிரிவு துணியப்பட்டதென்பாள் நேற்றுச் சென்றார் என்றும், ஐயத்தால் முன்பே மேனி பசந்ததென்பாள் மேனிபசந் தேழு நாளேம் என்றும் கூறினாள். காதலர் நேற்றுச் செல்லத் துணிந்தார்; ஆனால் என் மேனி பசப்புற்றுப் பல நாட்கள் ஆயின என்பதாம். ஏழ் - பல. (அ)

1279 தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

யான் தெளிவிக்கத் தெளியாது; தொடி நோக்கி - அவர் பிரிய நான் இங்கிருப்பின் இவை நில்லா என வளையல்களைப் பார்த்து, மென்தோளும் நோக்கி - அதற்கேதுவாக இவை மெலியுமெனத் தன் மெல்லிய தோள்களையும் பார்த்து, அடிநோக்கி - பின்பு, இவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காக்கவேண்டுமெனத் தன் அடிகளையும் பார்த்து, ஆண்டு அவள் செய்தது அஃது-அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்கா யிருந்தது. தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது. (கூ)

1280 பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

காமநோய் கண்ணினால் சொல்லி இரவு - மகளிர் தங் காம நோயினைத் தோழியர்க்கும் வாயினால் சொல்லாது. உடன் போதல் குறித்துக் கண்ணினால் தம் அடியினை நோக்கி இரத்தல், பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப - தமக்கியல்பாகிய பெண்மை மேலும் ஒரு பெண்மை உடைத்தென்று சொல்லுவர் அறிந்தோர்.

தலைமகன் தன் பிரிவின்மைக் குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது. (ய)

# 129 புணர்ச்சிவிதும்பல்

*தலைவனும் தலைவியும் புணர்ச்சி வேட்கையில் விரைதல்.*

1281 உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

*உள்ளக் களித்தலும்-நினைத்த அளவில் களிப்புறுதலும், காண மகிழ்தலும் - கண்ட அளவில் மகிழ்வெய்தலும், கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு-கள்ளுக்கு இல்லை காமத்திற்கு உண்டு.*

பிரிதற் குறிப்பினன் ஆகியானோடு நீ புலவாமைக்குக் காரணம் யாதென நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. *உண்டாலல்லது நினைத்தாலும் கண்டாலும் களிக்குந்தன்மை கள்ளுக்கு இல்லை; அத்தகைய காமமுடையாள் புலத்தல் எங்ஙனம் என்பதாம்.* (க)

1282 தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின்.

*காமம் பனைத் துணையும் நிறைய வரின்-மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிகுதியாக உண்டாயின்; தினைத் துணையும் ஊடாமை வேண்டும் - தங்காதலரோடு தினையளவும் ஊடாமல் இருக்கவேண்டும். ஊடின் வருத்த மிகு மெனப் பிறர்க்கு உறுதி கூறுவாள்போலத் தன் விதுப்புக் கூறியது. இதுவுமது.* (உ)

1283 பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண்.

*பேணாது பெட்பவே செய்யினும்-நம்மை விரும்பாது தம் மனம் விரும்பியனவே செய்வாராயினும், கொண்*

கனைக் காணாது கண் அமையல-அக்கணவனைக் காணாமல் என் கண்கள் அமைகின்றன இல்லை.

இதுவுமது. தன் விதுப்புக் கண்மே லேற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனோடு புலக்குமாறெங்ஙனம் என்பதாம். (௩)

1284 ஊடற்கட் சென்றேன்மற் றேழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

தோழி-தோழீ! ஊடற்கண் சென்றேன் - காதலரைக் காணாதபோது அவர் செய்தவற்றை நெஞ்சொடும் ஆராய்ந்து ஊடுதற்கண்ணே சென்றேன், என் நெஞ்சு அது மறந்து கூடற்கண் சென்றது-கண்டவுடன் என் நெஞ்சு அவ்வூடலை மறந்து அவரோடு கூடுதற்கண்ணே சென்றது.

இதுவுமது. நான் ஊடுதற்குச் சென்றேன்; அது கூடுதற்குச் சென்றது. நெஞ்சு அறை போனதால் ஊட முடியவில்லை என்பதாம். செலவால் பயனென் என்பது பட நின்றமையின் மன் ஒழியிசை. (௪)

1285 எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற்
பழிகாணேன் கண்ட விடத்து. [கோண்கன்

எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே போல்-முன்பெல்லாம் கண்டிருந்தும் மையெழுதுங் காலத்துக் கோலைக் காணமாட்டாத கண்களைப் போல, கொண்கன் பழி கண்ட விடத்துக் காணேன் - கணவன் தவற்றை, அவனைக் காணாத விடத்தெல்லாம் கண்டிருந்தும் அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன். என்னியல்பு இதுவாகலின் ஊட முடியாதென்பதாம். இதுவுமது. (௫)

1286 காணுங்காற் காணேன் றவறாய காணக்காற்
காணேன் றவறல் லவை.

காணுங்கால் தவறாய காணேன் - கணவனை யான் காணும்போது அவனிடம் தவறாயவற்றைக் காண்கின்றிலேன்; காணக்கால் தவறல்லவை காணேன் - அவனைக் காணாத பொழுது தவறல்லாத பிறவற்றைக் காண்கின்றிலேன். நான் முன் சொல்லிய தவறுகள் இப்போது காணாமையின் புலந்திலேனென்பதாம். இதுவுமது. (சு)

1287 உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தேன் புலந்து.

உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரே போல் - தம்மை இழுத்துக்கொண்டு போவதை அறிந்திருந்தும் ஓடுகின்ற நீரில் பாய்கின்றவரைப் போல, பொய்த்தல் அறிந்து புலந்து என் - புலத்தல் பொய்ப்படுவதை அறிந்தும் புலந்து பயனென்ன? பொய் படுதல் - புலப்பதால் பயனில்லையாதல். இதுவுமது. (எ)

1288 இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

கள்வ - வஞ்சகா! நின் மார்பு - எங்கட்கு நின் மார்பு, களித்தார்க்கு இளித்தக்க இன்னாசெயினும் கள்ளற்றே - தன்னை யுண்டு களித்தார்க்கு இழிவு தரத்தக்க துன்பந் தருவனவற்றைச் செய்தாலும் அவரால் மேன்மேல் விரும்பப்படும் கள்ளே போலும்.

தலைமகள் புணர்ச்சிவிதுப் பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது. அத்துன்பந் தருவன - நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைத்தரினும் எங்களால் மேன்மேல் விரும்பப் படுகின்றதென்பதாம்.

1289 மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

*காமம் மலரினும் மெல்லிது - காமவின்பம் மலரினும் மெல்லியதா யிருக்கும்; அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் - அங்ஙனம் மெல்லியதாதலை அறிந்து அதன் செவ்வி யைப் பெறுவார் உலகத்துச் சிலராவர்.*

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல் லியது. *செவ்வி - ஏற்றகாலம். காதற் குறிப்பும், காம வேட்கையும் காம நுகர்ச்சியும், இன்பமும் ஒருகாலத்தே ஒத்து நுகர்தற் குரியார் இருவர், அதற்கேற்ற இடமும் காலமும் கருவிகளும் பெற்றுக் கூடி நுகரவேண்டுதலின், அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் என்றும், அவற்றுள் யாதானும் ஒன்றினால் சிறிது வேறுபடினும் வாடுதலின் மலரினும் மெல்லிதென்றுங் கூறினான். உணர்ப்புவயின் வாரா ஊடல் - உணர்த்த உணராத ஊடல்.* (கூ)

1290 கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

*கண்ணில் துனித்தே - என் காதலி, முன்னொருநாள் புல்லல் விதுப்பினால் சென்ற என்னோடு தன் கண்ணால் மட்டும் ஊடி, புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினாள் - புணர்தலை என்னைப் பார்க்கிலும் தான் விரை தலால் அவ்வூடலையும் அப்பொழுதே மறந்து கூடிவிட் டாள். கண்ணால் மட்டும் ஊடல்-சொல்லாடாமல் கண் சிவத்தல்.* இதுவுமது. (ய)

## 130 நெஞ்சொடுபுலத்தல்

காரண முண்டாய விடத்தும், புலக்கக் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலுமாம்.

1291 அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மேவனெஞ்சே
நீயெமக் காகா தது.

நெஞ்சே-நெஞ்சே! அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் - நம் காதலருடைய நெஞ்சம் நம்மை நினையாது அவருக்காக நிற்பதைக்கண்டும், நீ எமக்கு ஆகாதது எவன்-நீ எமக்காக நிற்காமல் அவரை நினைப்பது யாது கருதி?

தலைமகன்கண் தவறுண்டாய வழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. அவர்க்காதல்-அவர் கருதியதற்கு உடம்படல். எமக்காகாத தென்றது - புலவிக்கு உடம்படாமையை. ஒரு செயலைத் தாமாக அறிந்து செய்யமாட்டாதவர் செய்வாரைக்கண்டாயினும் செய்வர்; நீ அதுவும் செய்கின்றாயில்லை யென்பதாம். (க)

1292 உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

என் நெஞ்சு - என் நெஞ்சே! உறாதவர்க் கண்ட கண்ணும் - நம்மிடம் அன்புறாதவரை உள்ளவா றறிந்த விடத்தும், செறாரென அவரைச் சேறி - நாம் சென்றால் வெகுளார் என்று நினைத்து அவரிடம் சேர்கின்றாய்; இதைக் காட்டிலும் ஓர் அறியாமை உண்டோ? பழமை பற்றி வெகுளாரென்று நீ கருதியது தவறு என்பதாம், இதுவுமது. (உ)

1293 கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

நஞ்சே - நெஞ்சே! நீபெட்டாங்கு அவர்பின் செலல் - என்னிடம் நில்லாமல் நீ விரும்பியவாறே அவரிடம் சொல்லுதற்குக் காரணம், கெட்டார்க்கு நட்டார் இல்லென்பதோ - கெட்டார்க்கு நண்பர் உலகத்தில் இல்லையென்னும் நினைவோ? உன் இயல்போ, சொல்?

இதுவுமது. என்னைவிட்டு அவரிடம் சேறல் நீ முன்பே பழகினது என்பாள் பெட்டாங்கு என்றும், தா னிதுபொழுது மானமிலளாகலின் கெட்டார்க் கென்றுங் கூறினாள். (௩)

1294 இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

நெஞ்சே - நெஞ்சே! துனி செய்து மற்றுத் துவ்வாய் - நீ அவரைக் கண்டதும் அவர் தவறு நோக்கி முன் புலந்து, அதனை அளவறிந்து பின் நுகரக் கருதமாட்டாய்; இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் - இனி அப்படிப் பட்டவைகளை நின்னுடன் எண்ணுபவர் யார்? யானது செய்யேன்.

இதுவுமது. முன்னெல்லாம் புலப்பதாக எண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின் இவ்வாறு கூறினாள்.

1295 பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

பெறாமை அஞ்சும் - காதலரைப் பெறாத போது புணர்ச்சி இல்லையே என்று அஞ்சி நிற்கும், பெறின் பிரிவு அஞ்சும் - பெற்றால் பிரிவாரோ என்று அஞ்சி நிற்கும், என் நெஞ்சு அறா இடும்பைத்து - ஆகையால், என் நெஞ்சம் இடையறாத துன்பத்தை உடையது.

வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது. வாயில் - தூது. (௫)

1296 தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
　　தினிய விருந்ததென் னெஞ்சு.

என் நெஞ்சு இருந்தது - என் நெஞ்சு காதலரைப் பிரிந்து இங்கிருப்பது, தனியே இருந்து நினைத்தக்கால் - காதலரைப் பிரிந்து தனியாக இருந்து அவர் கொடுமைகளை யான் இதனோடு நினைத்தால், என்னைத் தினிய -என்னைத் தின்பது போலத் துன்பம் செய்வதற்கே.

இதுவுமது. துன்பம் செய்வதற்கே இங்கிருப்பது எனக் கூட்டுக. எம்மிடம் அன்று இருந்தது எனக்குத் துன்பம் செய்வதற்கே யன்றி, அவர் தவறு நோக்கி அவரோடு புலத்தற்கன்று என்பதாம். (சு)

1297 நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
　　மாணா மடநெஞ்சிற் பட்டு.

அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சில் பட்டு - என்னை மறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத மாட்சிமையும் அறிவுமில்லாத என் நெஞ்சுடன் கூடி, நாணும் மறந்தேன் - என் உயிரினும் சிறந்த நாணத்தையும் மறந்துவிட்டேன். இதுவுமது. (எ)

1298 எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
　　முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

உயிர்க் காதல் நெஞ்சு - உயிர்மேல் காதலையுடைய என் நெஞ்சு, எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி - நம்மை இகழ்ந்து சென்றாரென்று நாமும் இகழ்வோமாயின் பின் நமக்கு இழிவாகுமென்று எண்ணி, அவர் திறம் உள்ளும்-அவர் திறத்தையே நினைக்கின்றது.

இதுவுமது. எள்ளுதல்-வாயில் மறுத்தல். இளிவு-பிரிவாற்றாமை, நாணும் நிறையும் இழத்தல் முதலியன. திறம்-வாயில் நேர்தலும், கூடலும். நேர்தல்-உடம்படல்.

1299 துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

*துன்பத்திற்கு-ஒருவர்க்குத் துன்பம் வந்தபோது அது நீக்குதற்கு, தாம் உடைய நெஞ்சம் துணை அல்வழி-தம்முடைய நெஞ்சம் தமக்குத் துணையாகாவிடத்து, துணையாவார் யாரே-வேறு துணையாவார் யார்? ஒருவருமில்லை.*

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது. *துன்பம் - உணர்த்த உணராமை. நெஞ்சம் துணையாகாமை-அன்பிலள் என்றது அவளைக் கூடற்கு விதும்பல். கியாரே-குற்றியலிகரம்.* (௯)

1300 தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

*தாம் உடைய நெஞ்சம் தமரல்வழி - தம்முடைய நெஞ்சம் தமக்கு உறவல்லாத விடத்து, ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம்-அயலார் உறவல்லாதார் ஆகுதல் எளிதன்றோ?*

இதுவுமது. *தஞ்சம் - எளிது. பிறளொருத்தியைக் காதலியென்று எண்ணி, என்னெஞ்சே என்னை வருத்துகின்றபோது அப்பிறள் புலக்கின்றது எளிது என்பதாம்.*

## 131 புலவி

*இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக்கருதியவழி, தலைவனும் தலைவியும் ஒருவரோடொருவர் புலத்தல். புலத்தல்-மன வேறுபாடு. புலவி, ஊடல் ஒருபொருட்சொற்கள்.*

1301 புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.

*அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம்-புலந்தால் காதலர் அடையும் துன்ப நோயை நாம் சிறிது*

காண்போம், புல்லாது இராப் புலத்தை—நீ அவரைத் தழுவாமல் இருந்து பிணங்குவாயாக.

வாயிலாகச் சென்ற தோழி, தலைமகள் வாயில் நேர்தற் பொருட்டு அவளோடு நகையாடிச் சொல்லியது. நேர்தல்-உடம்படுதல், இரா-இருந்து. தலைமகளது புலவிக் குறிப்புக் கண்டு அவளுடன் சேர்ந்து, நாமுற்ற வருத்தம் அவரும் சிறிது உற்றறிதல் வேண்டும் என நகையாடி உடம்படுத்தவாறு. பிணங்குதல்-புலத்தல். (க)

1302 உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

புலவி உப்பு அமைந்தற்று-புணர்ச்சி யின்பத்திற் கமைந்த புலவியின் அளவு, உண்பனவற்றை இன்சுவை தருதற்கமைந்த உப்பின் அளவு போன்றது; சிறிது நீளவிடல் அது மிக்கற்று-அப்பிணக்கைச் சிறிது நீட்டித்தல் அவ் வுப்பின் அளவு மிகுந்தாற் போலும்.

புலவியொழிந்து வாயில் நேரும் வகை தோழி சொல்லியது. நீளவிடல் - அளவறிந்து உணராது, கலவிமேலெழுந்த குறிப்பு நீங்கு மளவுஞ் செய்தல். உப்பு மிக்கவிடத்து உண்பது சுவையின்றாதல் போல, புலவி மிக்கவிடத்துக் கலவியின்ப மின்றாம் என்பது. (உ)

1303 அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் - தம்மை ஏற்றுக் கொள்ளாது புலந்த மகளிரை அப்புலவி நீக்கித் தழுவாது விடுதல், அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று - துன்புற்று வருந்தினவர்க்குப் பின்னுந் துன்ப நோய் செய்தாற் போலும்.

பரத்தைய ரிடத்து நின்றும் வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது. (௩)

1304 ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

*ஊடியவரை உணராமை-தம்மோடு ஊடிய மகளிரை ஊடல் தீர்த்துக் கூடாதிருத்தல், வாடிய வள்ளி முதல் அரிந்தற்று-நீரின்றி வாடிய கொடியை அடியிலே அறுத் தாற்போலும்.*

இதுவுமது. *முன்னமே ஊடுதற்குக் காரணமாகிப் பின்னும் ஊடல் தீர்த்துக் கூடாதது அழகிதன்று என்ப தாம்.* (௪)

1305 நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

*நலத்தகை நல்லவர்க்கு ஏர்-நற்குணங்களால் தகுதி யுடையராய தலைவர்க்கு அழகாவது, பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை-தம்முடைய பூப்போலும் கண்ணார் நெஞ்சில் நிகழும் புலவியேயாகும்.*

தலைமகளைப் புலவி நீக்கிக் கூடிய தலைமகன் தன் னுள்ளே சொல்லியது. *அழகு - இன்பந்தருதல். தானு கர்ந்த இன்பத்திற்கு ஏதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு.* (௫)

1306 துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

*துனியும் புலவியும் இல்லாயின்-முதிர்ந்த மனவேறு பாடாகிய துனியும், முதிராத (இளைய) மனவேறு பாடா கிய புலவியும் இல்லையாயின், காமம் கனியும் கருங்காயும் அற்று - காமமானது மிகமுதிர்ந்த பழமும் இளங்காயும் போலும்.*

இதுவுமது. *மிக முதிர்ந்த பழம் - அழுகிய பழம். புலவி - பொய்ச் சினம். துனி - புலவி நீட்டம்.* (௬)

1307 ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

*புணர்வது நீடுவது அன்று கொல் என்று - இப் புணர்ச்சி நீடிக்குமோ நீடிக்காதோ என்று எண்ணுவதால், ஊடலில் ஓர் துன்பம் உண்டு - இன்பத்திற்கு இன்றியமையாத ஊடலினிடத்தும் ஒரு துன்பம் உண்டு.*

இதுவுமது. *ஊடல் தீர்ந்து கூடின் அவ்வாறே அக் கூட்டத்தின் பின் ஊடலுங் கூடுமாகையால் துன்பம் உண்டு என்றான்.* (எ)

1308 நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

*நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லா வழி - இவர் நமக்காக வருந்தினர் என்று அவ்வருத்தத்தை உணரும் அன்புடைய காதலரை இல்லாதவிடத்து, நோதல் மற்று எவன் - ஒருவர் வருந்துவதனால் பயனென்ன?*

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தலைமகளோடு புலந்து சொல்லியது. *இவள் நம் காதலி அல்லள்; ஆதலால் இந்நோயறியாள்; நோயறியாதவளிடம் புலப்பதனால் பயனில்லை எனத் தன்னாற்றாமை உணர்த்தியவாறு.* (அ)

1309 நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

*நீரும் நிழலதே இனிது-உயிர் வாழ்வுக் கின்றியமையாத நீரும் நிழலினிடத் துள்ளதாயின் இனிதாகும்; புலவியும் வீழுநர் கண்ணே இனிது-அதுபோலக்கலவிக் கின்றியமையாத புலவியும் அன்புடையாரிடத் துள்ளதாயின் இனிதாகும்; அன்பில்லாரிடத்து இனிதாகாது.*

இதுவுமது. நிழற்கண் இருந்தநீர் குளிர்ச்சி மிக்கு விடாய் தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் - ஆற்றாமைக்கு நோதலும், கூடுதற்கண் வேட்கையும் உடையவர். இவளிடம் அவ்விரண்டும் இன்மையால் புலந்து பயனில்லை என்பதாம். (கூ)

1310 ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

ஊடல் உணங்க - ஊடலினால் தான் மெலியும்படி, விடுவாரோடு கூடுவேம் என்பது என் நெஞ்சம் அவா - விட்டிருப்பாரோடு கூடுவோமென்று நினைப்பது என் நெஞ்சத்தினது அவாவே; வேறில்லை. தான் என்றது நெஞ்சத்தை. இதுவுமது. (ω)

## 132 புலவி நுணுக்கம்

புலவியினது நுணுக்கம் எனவிரியும். தலைமகனும் தலைமகளும் இணைபிரியாது இருக்குமிடத்து, அவனிடம் புலத்தற்குக் காரணம் இல்லாதிருக்கவும், காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணம் உளதாக உட்கொண்டு, அதனை அவன்மே லேற்றித் தலைமகள் புலத்தல். இது அருமையாகத் தோன்றுமாகலின் நுணுக்கமாயிற்று.

1311 பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

பரத்த - பரத்தமை யுடையவனே, பெண்ணியலார் எல்லாரும் கண்ணில் பொது உண்பர் - நின்னைப் பெண்ணியல்பை உடைய எல்லாரும் தங் கண்களால் பொதுவாக நுகர்வர், நின்மார்பு நண்ணேன் - ஆகையால், அவர் மிச்சிலாகிய நின்மார்பினை நான் தீண்டேன்.

உலாப்போய் வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது. *உலா-ஊர்வலம். பள்ளி-படுக்கை. பொதுவுண்டல் - எல்லாரும் ஒருங்கு பார்த்தல். தான் நோக்கி இன்புற்றவாறே அவரும் நோக்கி இன்புறுவரென ஐயங்கொண்டு, அவர்பால் பொறாமை எய்துதலின் புலவி நுணுக்கமாயிற்று.* (க)

1312 ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

*ஊடி இருந்தேமாத் தும்மினார் - யான் தம்மோடு ஊடி உரையாடாது இருக்கக் காதலர் தும்மினார்; யாம் தம்மை நீடுவாழ்க என்பாக்கு அறிந்து-அவ்வூடல் நீங்கி யாம் அவரை 'நீடுவாழ்க' என்று உரையாடுவேம் எனக் கருதி வேண்டுமென்றே தும்மினார்.*

தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது. *தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலின் (1317) உரையாடல் வேண்டிற்று என்பதாம். இயல்பாக நிகழ்ந்த தும்மலைக் குறிப்பாக நிகழ்ந்ததாகக் கொள்ளலின் நுணுக்கமாயிற்று.* (உ)

1313 கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

*கோட்டுப்பூச் சூடினும்-இம்மருத நிலத்துப் பூ அல்லாத பிற நிலங்களில் மரக்கிளையிலுள்ள பூவை யான் சூடினாலும், ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் - நும்மால் காதலிக்கப்பட்ட இவ்விடத்திலுள்ள ஒருத்திக்கு இவ்வேற்றுப்பூ வணியைக் காட்டுவதற்காக அணிந்தீர் என்று வெகுளுவாள்.*

தலைமகள் புலவிக் குறிப்பினைக் கண்டு, நீவிர் கூடியொழுகவும் இது நிகழ்ந்ததற்குக் காரணம் யாதென்ற

தோழிக்குத் தலைமகன் சொல்லியது. மருதம் ஊடற் குரிய நிலம். (௩)

1314 யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

யாரினும் காதலம் என்றேனா-காதலுடையார் யாரினும் யாம் மிக்க காதலையுடையோம் என்னும் கருத்தால் யான், 'யாரினும் காதலம்' என்றேனாக, யாரினும் யாரினும் என்று ஊடினாள்-நின்தோழி அதனை,'என் காதலியர் பலருள்ளும் நின்னிடத்துக் காதலுடையேன், என்றேனாகக் கருதி, 'அம்மகளிர் யாரினும் என் மீது காதலுடையீர்' என்று ஊடினாள்.

இதுவுமது. யான் அன்பு மிகுதியால் சொன்னதைக் கருத்து வேறுபடக் கொண்டாள் என்பதாம். (௪)

1315 இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனா - காதல் மிகுதியால், 'இப்பிறப்பில் யாம் பிரியோம்' என்று சொன்னேனாக, கண்நிறை நீர் கொண்டனள்-மறுமையில் பிரிவேன் என்னும் குறிப்பினேனாகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீர் கொண்டாள். கண் கலங்கினாள்.

இதுவுமது. மறுமை - இறந்தபின் வாழ்வு. 818-ம் குறளுரை பார்க்க. எப்போதும் பிரியக் கூடாதென்பது கருத்து. (௫)

1316 உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்
புல்லாள் புலத்தக் கனள். [னைப்

உள்ளினேன் என்றேன் - பிரிந்த காலத்து உன்னை இடையிடையே நினைத்தேன் என்னும் கருத்தால், யான் 'உள்ளினேன் என்று கூறினேன், மற்று என் மறந்தீர்

என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள் - அதனை, மறந்திருந்ததால் தானே பின் நினைப்பது கூடும் என்று கருதி, என்னை மறந்துவிட்டீர் என்று சொல்லி, முன் தழுவுதற் கிருந்தவள் அதை விட்டு ஊடலானாள். மறந்திருப்பீர் என்றெண்ணிப் புலந்தாள் என்பதாம். இதுவுமது. (சு)

1317 வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

தும்மினேனாக வழுத்தினாள்-என்னுடன் ஊடியிருந்தவள், யான் தும்மினேனாக வாழ்த்தினாள், அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள்-அங்ஙனம் வாழ்த்தியதானே மீண்டும், நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யார் நினைத்ததால் தும்மினீர் என்று சொல்லிப் புலந்து அழுதாள்.

இதுவுமது. அன்புடையார் நினைத்தபோது, அந் நினைக்கப் பட்டவர்க்குத் தும்மல் தோன்று மென்பது மகளிர் வழக்கு. இல்லா வழக்கை உள்ள வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம். (எ)

1318 தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

தும்முச்செறுப்ப - எனக்குத் தும்மல் தோன்றிய போது, தும்மினால் யாருள்ளித் தும்மினீர் என்று புலத்தலை அஞ்சி, அத்தும்மலை அடக்கினேன்; நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள்-உம்முடைய காதல் மகளிர் உம்மை நினைத்தலை எம்மிடம் மறைக்கின்றீரோ என்று சொல்லி புலந்தழுதாள்.

இதுவுமது. செறுப்ப-அடக்க. செறுப்பவும். தும்மினால் குற்றம், ஒழியினுங் குற்றமானால் செய்வது யாது என்பதாம். (அ)

1319 தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று.

*தன்னை உணர்த்தினும் - இவ்வாறு ஊடிய தன்னை யான் பணிந்து வேண்டினும், பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர் என்று காயும்-பிறமகளிர்க்கும் அவரூடியபோது நீர் இவ்வாறுதானே பணிந்து உணர்த்தும் தன்மையை உடையராகுவீர் என்று சொல்லி வெகுளுவாள்.*

இதுவுமது. *அவள் என்மேலேற்றிய தவற்றை உடன் பட்டுப் பணிந்தேன். பணிய, அதுவும் புலத்தற் கேதுவாய் முடிந்தது; இனி அவளிடம் செய்யத் தகுவது யாது என்பதாம்.* (கூ)

1320 நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

*நினைத்து இருந்து நோக்கினும் - என் சொற்களும் செயல்களும்பற்றித் தான் வெகுளுதலான், அவற்றை ஒழிந்திருந்து, அவள் உறுப்புக்களின் ஒப்பற்ற அழகை நோக்கிக்கொண்டிருப்பினும், அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று காயும் - என்னுறுப்புக்களனைத்தை யும் நீர் நோக்கினீர், அவற்ற தொப்புமையால் எம்மக ளிரை நினைந்து என்று சொல்லி என்னை வெகுளு வாள்.*

இதுவுமது. *சும்மா இருத்தலும் குற்றமாயிற் றென் பதாம்.* இவ்வதிகாரத்தால் வள்ளுவரின் இல்வாழ்க்கை நுணுக்க ஆராய்ச்சித்திறன் இனிது புலப்படுகின்றது. (ய)

## 133 ஊடலுவகை

ஊடலால் கூடலின்பம் சிறத்தலின், அவ்வூடலைத் தலைவியும் தலைவனும் உவந்து விரும்புதல்.

1321 இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

*அவர்க்குத் தவறு இல்லையாயினும் - அவரிடத்திலே தவறில்லையாயினும், அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது-நமக்கு அவர் செய்கின்ற தலையளியே அவரோடு ஊடுதலை உண்டாக்க வல்லதாகின்றது.*

தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி, அங்ஙனம் நீ புலக்கின்ற தென்னை என்றாட்குத் தலைமகள் சொல்லியது. *தலையளி - முகமலர்ந் தினியன கூறல். யான்பெறும் இத்தலையளியைப் பிறரும் பெறுவரென்று எண்ணி, அது பொறாது ஊடல் நிகழ்ந்தது என்பதாம்.* (க)

1322 ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

*ஊடலில் தோன்றும் சிறு துனி - ஊடல் காரணமாக நம்மிடம் உண்டாகின்ற சிறிய வெறுப்பினால், நல்லளி வாடினும் பாடு பெறும் - காதலர் செய்யும் நல்ல தலையளி கொஞ்சம் குறையினும் பின்பு பெருமை தரும்.*

புலவாக்காலும் அத்தலையளி பெறலாமா யிருக்க அஃதிழந்து புலவியால் வருந்துவது என்னை யென்றாட்குத் தலைமகள் சொல்லியது. *ஊடல் நீங்கினால் அவ்வெறுப்பும் நீங்கும்; நீங்கின் தலைவர் அன்புசெய்து கூடுவரென்பதாம். துனி - வெறுப்பதுபோன்ற ஓர் உணர்ச்சி.* (உ)

1323 புலத்தலிற் புத்தேளு ருண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்ன ரகத்து.

நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்துப் புலத்தலின் - நிலத்தோடு நீர் கலந்தாற் போல ஒற்றுமையுடைய காதலரிடம் புலத்தலைக் காட்டிலும், புத்தேள் நாடு உண்டோ - வானுலகில் இன்பம் உண்டோ? இல்லை.

இதுவுமது. தண்ணீர் தான் நின்ற நிலத்தின் இயல்பாதல் போலக் காதலரும் தாங்கூடிய மகளிர் இயல்பினராவரென்பதாம். அப்புலவி பின்னே பேரின்பம் பயக்குமென்பாள், புத்தேள் நாடு உண்டோ என்றாள். இது வானுலகம் இன்பத்தின் இருப்பிடம் என்னும் அயலார் கூற்றைக்கொண்டு, இவ்வின்பத்திற்கு அது இணையாகாதென்றது. வானுலகம், முகவுரை பார்க்க. (௩)

1324 புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.

புல்லி விடாப் புலவியுள் - காதலரைத் தழுவிக்கொண்டு பின் விடாமைக்குக் காரணமான அப்புலவியில், என் உள்ளம் உடைக்கும் படை தோன்றும்-என் உள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம் உண்டாகும்.

அப்புலவி இனி எதனால் நீங்கும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. படைக்கலம்—தலைவனுடைய வணக்கமும் பணிமொழியும். அவற்றால் அப்புலவியுள்ளம் அழிதலால் அவற்றை உள்ளம் உடைக்கும் படை என்றாள். புலவி நீங்குந் திறங் கூறியவாறு. (௪)

1325 தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

தவறு இலராயினும்-ஆடவர் தம்மிடம் தவறிலராயினும், தாம் வீழ்வார் மென்றோள் அகறலின்-தவறுடையார் போல ஊடப்பட்டுத் தாம் விரும்பும் மகளிருடைய

மெல்லிய தோள்களைக் கூடப் பெறுதபோதும், ஆங்கு ஒன்று உடைத்து-அவர்க்கு அத் தன்மையதோர் இன்பம் பயத்தலுடையது.

தலைமகளை ஊடல் நீக்கிக் கூடிய தலைமகன் மிக்க உவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது. ஊடுதல் கூடலுக்குக் காரண மாதலால் இன்பம் உண்டு என்றான். ஊடலினாய இன்பம் அளவிறந்ததாகலின் கூறற்கரிய தென்பான் அத்தன்மைய தொன்றென்றான். தவறில்லாமல் ஊடியதும் எனக் கின்பமாயிற் றென்பதாம். (ரு)

1326 உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.

உணலினும் உண்டது அறல் இனிது-மேலும் உண்பதைக் காட்டிலும் முன்னுண்ட உணவு அறுதல் இன்பம் தரும்; காமம் புணர்தலின் ஊடல் இனிது-அது போலக் காமத்திற்கு மேலும் புணர்தலைக் காட்டிலும் முன்னைத் தவறுபற்றி ஊடுதல் இன்பந்தரும்.

இதுவுமது. பசித்துண்டால் மிகவுண்ணவும் இனிய சுவையும் ஆகும்; அதுபோல, அகன்று கூடினால் திரம்பாததும் பேரின்பமும் ஆகும் எனத் தன் பழக்கம்பற்றிக் கூறியவாறு. (சா)

1327 ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும்
கூடலிற் காணப் படும்.

ஊடலில் தோற்றவர் வென்றார்-காம நுகர்தற்குரிய இருவருள், ஊடலில் தோல்வியுற்றவரே வென்றவராவர்; அது கூடலில் காணப்படும்-அவ்வெற்றி அப்போது அறியப்படாதாயினும் பின் புணர்ச்சியின்போது அவரால் அறியப்படும்.

இதுவுமது. தோற்றவர்-ஊடல் நீங்கினவர். அவர் புணர்ச்சியின்போது பேரின்பம் எய்துதலின் வென்ற

வராயினர். யான் அப்போது தோற்றதால் இப்போது பேரின்பம் பெற்றேன் என்பதாம். மன் - ஆக்கம். (எ)

1328 ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றேன்றிய வுப்பு.

*நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு-இவள் நெற்றி வியர்க்கும்வகை இவளுடன் கூடி இப்பொழுது பெற்ற இன்பத்தை, ஊடிப் பெறுகுவங் கொல்லோ - இன்னுமொருதரம் இவள் ஊடி நாம் பெறக் கூடுமோ?*

இதுவுமது. *இன்பம்-கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் இன்பம் (1101). இனி அப்பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு.* (அ)

1329 ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

*ஒளியிழை ஊடுகமன்-ஒளி பொருந்திய அணிகளை உடையாள் இன்னும் எம்மோடு ஊடுவாளாக; யாம் இரப்ப இரா நீடுமகன் - அங்ஙனம் அவள் ஊடி நிற்பதற்கும், அவ் வூடலை உணர்த்துதற் பொருட்டு யாம் இரந்து நிற்பதற்கும் நேரம் பெறும் வகை இவ்விரவு விடியாது நீடுவதாகுக.*

இதுவுமது. *கூடலினும் உடலே போதுமென்பது. மன் - அச்சங் குறித்தது.* (கூ)

1330 ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

*காமத்திற்கு இன்பம் ஊடுதல் - காம நுகர்ச்சிக்கு இன்பமாவது காதலர் தம்முள் ஊடுதல்; அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின் - அவ்வூடுதலுக்கு இன்பமாவது*

அவ்வூடலை அளவறிந்து நீங்கித் தம்முள் கூடி முயங்குதல் கூடுமாயின் அம்முயக்கம்.

இதுவுமது. முயக்கம் - தழுவிக் கொள்ளுதல். முதிர்ந்த துனியாய விடத்துத் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாய விடத்துக் கலவி இன்பம் பயவாமை யானும், இரண்டிற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிதென்பது பற்றிக் 'கூடி முயங்கப் பெறின்' என்றான். அவ்விரண் டின்பமும் யான் பெற்றேன் என்பதாம். (ω)

இன்பத்துப்பால் முற்றிற்று

திருக்குறள் - குழந்தையுரை

முற்றிற்று

# பாட்டு முதற்குறிப் பகராதி

T. 2401